ஸ்ரீ

# பகவத்கீதை.

இது

மதத்திரய பகவத்கீதோபந்நியாச வித்வான்

ஸ்ரீமான் - சதாவதானி பண்டிட்

## டி. லக்ஷ்மணாசாரியார் அவர்களின்

உபந்நியாசங்களின் சுருக்க சகிதம்

சசிலேக பத்திரிகாதிபரும் வால்மீகிரத்னம் என்னும் கிரந்தகர்த்தாவும்

ஸ்ரீவால்மீகி ராமாயண வியாக்யாதா வாகும்

நடுப்பல்லி - சேஷாசாரியார் அவர்களால்

சென்னை

வாணீநிலய முத்திராக்ஷர சாலையில்

அச்சிட்டுப் பிரசுரிக்கப்பட்டது.

1914

Price Rs. 2-0-0. With V. P. P. Rs. 2-4-0.

## శశిలేఖ పత్రిక ప్రకటన.

శశిలేఖ అను పేరుగల తెనుగుపత్రిక వారమునకు రెండుసార్లు అనఁగా ప్రతిమంగళవారము, శుక్రవారము మాచే 19 సం॥ లనుండి ప్రచురింపఁబడుచున్నది. ఇంతమంచి తెనుగు వార్తాపత్రిక తెనుగుజిల్లాలలో లేదని వివేకు లనేకులు మెచ్చుకొనుచున్నారు. దీనిలో ఇంగ్లాండు పార్లమెంటులో మనదేశమునుగురించి జరుగు చర్చలు, కాంగ్రెస్సు, దీని కనుబంధముగ కొన్ని సంవత్సరములనుండి జరుగుచుండు మహాసంతల విషయములు, మనరాజధాని శాసననిర్మాణసభలో జరుగు ప్రశ్నలు, వానికి ఉత్తరములు, శాసనముల ఉత్పత్తినిగుఱించి శ్రీగవర్నరు మొదలగు మెంబర్లు చేయు ఉపన్యాసములు, జిల్లాసంఘముల చర్చలు, ఆయాఖండములలో జరుగుచుండు యుద్ధములు మొదలగువానితో సంబంధించిన టెలిగ్రాములు, ఆయాజిల్లాల స్థితిగతులను దెలుపు జాబులు, గ్రంథవిమర్శనలు, వ్యవసాయముతో సంబంధించిన విషయములు, హైకోర్టు, డిస్ట్రిక్టుకోర్టు మొదలగు న్యాయస్థానములలో పరిష్కరింపఁబడుచుండు ముఖ్యమయిన దావాలతీర్పులు, మొదలగు విషయలు ముద్రింపఁబడును.

దీనికి సం॥ చందా రు 6 లు, ఆరునెలలకు రు 3-0-0

---

## ఆర్యనీతిమతబోధగ్రంథములు.

వాల్మీకిరామాయణము ఆరుకాండలు యెడమవైపు పుటలలో శ్లోకములు, కుడివైపు పుటలలో ఆంధ్రతాత్పర్యముగ ముద్రింపబడినవి. కనుక, పారాయణమునకు, లేదా, కథను చదువుటకు అనుకూలముగ నుండును.

| | | |
|---|---|---|
| 1. | బాలకాండము | రు 1 - 3 - 0 |
| 2. | అయోధ్యాకాండము | 2 - 5 - 0 |
| 3. | అరణ్యకాండము | రు 1 - 3 - 0 |
| 4. | కిష్కింధకాండము | 1 - 3 - 0 |
| 5. | సుందరకాండము | రు 1 - 4 - 0 |
| 6. | యుద్ధకాండము | రు 2 - 5 - 0 |
| 7. | రామానుజభాష్యముపరికారము అర్థముగల భగవద్గీత | రు 0 - 10 - 0 |
| 8. | విరాటపర్వము | రు 2 - 4 - 0 |
| 9. | సభాపర్వము | రు 2 - 4 - 0 |
| 10. | రామకృష్ణ పరమహంసజీవితము, | |
| 610. | ఉపదేశవాక్యములు | 0 - 10 - 0 |
| 11. | వాల్మీకిరత్నములు | రు 1 - 7 - 0 |
| 12. | ఆంధ్రమహాభారతరత్నములు లఘుటీక సహా | రు 0 - 10 - 0 |
| 13. | రయితుపత్రిక 1వా. | 2 - 4 - 0 |
| 14. | రెండవ వాల్యూం | రు 2 - 4 - 0 |
| 15. | సుందరకాండ - వచనము | రు 0 - 10 - 0 |
| 16. | ఆత్మయెఱుక | రు 0 - 2 - 0 |

ఈధరలలో వి. పి. పోస్టుకర్చులు చేరియున్నవి. వీరికివ్రాసి తెప్పించుకొనవచ్చును.

గట్టుపల్లి - శేషాచార్యులు.

శశిలేఖా పత్రికాధిపతి, శ్లింబునాయకన్ వీథి 2 నెంబరు, జార్జిటవున్, మద్రాసు.

# பீடிகை.

யுகாந்தங்களில் பெரியபெரியயாகங்கள் தபங்கள்செய்து ஜனங்கள் மோக்ஷம்அடைந்துகொண்டு இருந்தனர். இந்தக் கலியுகத்தில் ஜனங்களுக்கு ஆயுள் புத்தி, மனோபாவங்கள் குறைந்திருத்தலினால் பகவந் நாமோச்சாரணதுவாரா மோக்ஷம் லபிக்கும் என்று சொல்லப்படுகிறது. மோக்ஷந்தருவதற்காக ஏற்பட்ட உபனிஷத்துக்கள், பிரம்மசூத்திரங்கள், பகவத்கீதை என்று சொல்லப்பட்டவைகளில் பகவத்கீதை சாதாரணமானவர்களுக்கும் சுபோதமாகும் விதமாய்க் கருணாநிதியாகும் கோபிகாவல்லவனால் செய்யப்பட்டது. இந்தப் பகவத்கிதைக்குச் சங்கர, ராமானுஜ மத்வாசாரியர்கள் பாஷியங்கள் எழுதினர். பிறகு ஒவ்வொரு மதத்திலே பிறந்த பெரியோர் உரைகளும் கருத்துக்களும் எழுதிப் பாஷ்யார்த்தத்தை வெளிப்படுத்தினர். இவ்வளவு கிரந்த சாமக்கிரி ஏற்படினும் தற்காலம் பதினைந்து வருஷங்களுக்கு கீழ்ப்பட்டுப் பகவத்கீதைஎன்ற பேரே சென்னைபுரியிலுள்ளவர்களுக்கு விசதமாகாதிருந்தது. சென்னைபுரிஜனங்களின் பாக்கியவசத்தால் சதாவதானியாகும் ஸ்ரீமான் பண்டிட் டி. லக்ஷ்மணாசாரியர் பதினைந்து வருஷமாகச் சென்னைபுரியில் அநேகஇடங்களில் மூன்று மதங்களின் பாஷ்யார்த்தங்களைத்தெரிவித்துக்கொண்டு பகவத்கீதையைப் பிரசங்கித்து ஸ்திரீகளுக்கு, வைசியர்களுக்கு சூத்திரர்களுக்குக் கூட இந்த ரகஸ்யார்த்தங்களைத் தெரிவித்தனர்.

பூர்வம் ஸ்ரீ. இராமானுஜாசாரியர் அவர்கள் திருமந்திரத்தைவெளிப்படுத்தினதுபோல இக்காலத்தில் ஸ்ரீ. லக்ஷ்மணாசாரியர் அவர்கள் கீதார்த்தத்தைச் சிங்காரமாக வெளிப்படுத்தினர். ஸ்ரீ. பண்டிதர் அவர்களின் கீதோபந்நியாசங்களை இருமுறை கேட்டு மனனஞ்செய்வதற்கு உபயோகப்படுதற்காகச் சிலசங்கதிகள் எழுதிவைத்துக்கொண்டு இச்சங்கதிகளை சிறுசிறு உபந்நியாசங்களாகச் சசிலேக பத்திரிகையில் பதிப்பித்தேன். இந்தப்பத்திரிகையை வாசித்த என் சகோதரிமணிகள் இந்தஉபந்நியாசங்களைச் சேர்த்து சிறு புத்தக உருவமாய்ப் பதிப்பிக்கின் மனனத்திற்கு உபயோகமாகுமென்று தெரிவித்ததால் இச்சிறுநூல் அச்சிடப்பட்டது. இதில் லோபமிருக்கின் அவைஎனதேயென்றும் குணமேதேனுமிருக்கின் அது ஸ்ரீமான்பண்டிதர் அவர்களதேஎன்றும் இந்தக்கிரந்தத்தை வாசித்தவர்கள் கிரகிக்கவேண்டியது.

இங்ஙனம்
பக்தாங்கிரிரேணு
கட்டுபல்லி-கரசம்மா.

శ్రీకృష్ణాయనమః

## శ్రీకృష్ణాష్టోత్తర.శతనామస్తోత్రమ్.

శ్రీకృష్ణః కమలానాథో వాసుదేవ స్సనాతనః । వసుదేవాత్మజః
పుణ్యో లీలామానుషవిగ్రహః ॥ శ్రీవత్సకౌస్తుభధరో యశోదావత్సలో
హరిః । చతుర్భుజాత్త చక్రాసిగదాశంఖాద్యుదాయుధః ॥ దేవకీనందన
శ్శ్రీశో నందగోపప్రియాత్మజః । యమునావేగసంహారీ బలభద్రప్రియా
నుజః ॥ పూతనాజీవితహర శ్శకటాసురభంజనః । నందవ్రజజనానందీ
సచ్చిదానందవిగ్రహః ॥ నవనీతవిలిప్తాంగో నవనీతనటోఽనఘః ।నవనీతన
వాహారో ముచికుందప్రసాదకః ॥షోడశస్త్రీసహస్రేశ స్త్రిభంగీ మధు
రాకృతిః । శుకవాగమృతాబ్ధీందుర్గోవిందో యోగినాంపతిః ॥ వత్సవాట
చరోఽనంతో ధేనుకాసురభంజనః। తృణీకృతతృణావర్తో యమళార్జునభం
జనః ॥ ఉత్తాలతాలభేత్తాచ తమాలశ్యామలాకృతిః । గోపగోపీశ్వరో
యోగీ కోటిసూర్య సమప్రభః ॥ ఇళాపతిః పరంజ్యోతి ర్యాదవేంద్రో
యదూద్వహః। వనమాలీ పీతవాసాః పారిజాతాపహారకః ॥ గోవర్ధనా
చలోద్ధర్తా గోపాలస్సర్వపాలకః । అజో నిరంజనః కామజనకః కంజలో
చనః ॥ మధుహా మథురానాథో ద్వారకానాయకో బలీ। బృందావనాం
తసంచారీ తులసీదామభూషణః ॥ శ్యమంతకమణేర్హర్తా నరనారాయణా
కృతిః । కుబ్జాకృష్ణాంబరధరో మాయీ పరమపూరుషః ॥ ముష్టికాసుర
చాణూరమల్ల యుద్ధవిశారదః। సంసారవైరీ కంసారి ర్మురారి ర్నరకాంత
కః॥ అనాదిబ్రహ్మచారీచ కృష్ణావ్యసనకర్శకః।శిశుపాలశిరశ్ఛేత్తా దుర్యో
ధనకులాంతకః ॥ విదురాక్రూరవరదో విశ్వరూపప్రదర్శకః । సత్యవా క్స
త్యసంకల్ప స్సత్యభామారతో జయీ॥ సుభద్రాపూర్వజో విష్ణు ర్భీష్మ
ముక్తిప్రదాయకః । జగద్గురు ర్జగన్నాథో వేణునాదవిశారదః ॥ వృషభా
సుర విధ్వంసీ బాణాసురకరాంతకః॥ యుధిష్ఠిరప్రతిష్ఠాతా బర్హి బర్హావతం
సకః ॥ పార్థసారథి రవ్యక్తో గీతామృతమహోదధిః । కాళీయఫణిమాణి
క్యరంజిత శ్రీపదాంబుజః ॥ దామోదరో యజ్ఞభోక్తా దానవేంద్రవినా
శకః । నారాయణః పరబ్రహ్మ పన్నగాశనవాహనః ॥ జలక్రీడాసమాస
క్త గోపీవస్త్రాపహారకః।పుణ్యశ్లోక స్తీర్థపాదో వేదవేద్యో దయానిధిః ॥

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



సర్వతీర్థాత్మక స్సర్వగ్రహరూపీ పరాత్పరః । ఏవం శ్రీకృష్ణదేవస్య నామ్నామష్టోత్తరంశతమ్ ॥ కృష్ణనామామృతంనామ పరమానందదాయకమ్ । అత్యుపద్రవదోషఘ్నం పరమాయుష్యవర్ధనమ్ ॥ ౨౨.

ఇతి శ్రీకృష్ణాష్టోత్తర శతనామావళి
స్సమాప్తా.

---

శ్రీకృష్ణపరమాత్మనేనమః.
శ్రీమద్గీతాభాష్య కాలక్షేపారంభే
స్వస్వసంప్రదాయానుసారేణ గురుపరంపరానుసంధాన
పూర్వక మనుసంధేయశ్లోకాః.

---

సమ్యఙ్న్యాయకలాపేన మహతా భారతేనచ । ఉపబృంహితవేదాయ నమోవ్యాసాయవిష్ణవే ॥ సారథ్యమర్జునస్యాదౌ కుర్వన్ గీతామృతం దదౌ । లోకత్రయోపకారాయ తస్మై కృష్ణాత్మనేనమః ॥ ప్రపన్నపారిజాతాయ వేత్రతోత్రైకపాణయే । జ్ఞానముద్రాయకృష్ణాయ గీతామృతదుహే నమః ॥కరకమల నిదర్శితాత్మముద్రః పరికలితోన్నత బర్హిబర్హచూడః।ఇతరకరగృహీతవేత్రతోత్రోమమహృదిసన్నిధిమాతనోతుశౌరిః॥ అగ్రేకృత్వాకమపిచరణం జానునైకేన తిష్ఠన్ । పశ్చాత్పార్థమ్ ప్రణయసజుషాచక్షుషావేక్షమాణః ॥ సవ్యేతోత్రం కరసరసిజేదక్షిణేజ్ఞానముద్రా మాబిభ్రాణో రథమధివసన్ పాతునస్సూతవేషః ॥ కృష్ణాంకమలపత్రాక్షం పుణ్యశ్రవణకీర్తనమ్ । వాసుదేవంజగద్యోనిం సౌమినారాయణంహరిమ్ ॥ కృష్ణాయయాదవేంద్రాయ జ్ఞానముద్రాయయోగినే । నాథాయ రుక్మిణీశాయ నమోవేదాంతవేదినే ॥ ౮.

---

శ్రీకృష్ణపరమాత్మనేనమః.
శ్రీ భగవద్గీతామాహాత్మ్యమ్.

గీతాశాస్త్రమిదంపుణ్యం యఃపఠేత్ ప్రయతఃపుమాన్ । విష్ణోః పదమవాప్నోతి భయశోకాదివర్జితః ॥ గీతాధ్యయనశీలస్య ప్రాణాయామపరస్యచ । నైవసంతిహిపాపాని పూర్వజన్మ కృతానిచ ॥ మలనిర్మో

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



చనంపుంసాం జలస్నానందినేదినే। సకృద్గీతాంభసిస్నానం సంసారమల నాశనమ్ ॥ గీతాసుగీతాకర్తవ్యా కిమన్యైశ్శాస్త్రసంగ్రహైః। యాస్వ యం పద్మనాభస్య ముఖపద్మాద్వినిస్సృతా ॥ భారతామృతసర్వస్వం విష్ణోర్వక్త్రాద్వినిస్సృతమ్। గీతాగంగోదకం పీత్వా పునర్జన్మనవిద్యతే ॥ సర్వోపనిషదోగావో దోగ్ధాగోపాలనందనః। పార్థోవత్సస్సుధీర్భోక్తా దుగ్ధం గీతామృతంమహత్ ॥ ఏకంశాస్త్రందేవకీపుత్రగీత మేకోదేవోదేవకీపుత్రఏవ। ఏకోమంత్రస్తస్యనామానియాని కర్మాప్యేకం తస్యదేవస్య సేవా ॥

శ్రీకృష్ణాయనమః

ఓమ్॥ అస్యశ్రీభగవద్గీతా మహామంత్రస్య ॥ భగవాన్వేదవ్యాస ఋషిః ॥ అనుష్టుప్ఛన్దః ॥ శ్రీకృష్ణపరమాత్మాదేవతా ॥ అశోచ్యానన్వశోచస్త్వం ప్రజ్ఞావాదాంశ్చభాషసే ఇతిబీజమ్ ॥ సర్వధర్మాన్ పరిత్యజ్య మామేకం శరణం వ్రజేతి శక్తిః ॥ అహంత్వాసర్వపాపేభ్యో మోక్షయిష్యామిమాశుచఇతికీలకమ్ ॥ నైనంఛిన్దన్తిశస్త్రాణి నైనందహతిపావక ఇత్యఙ్గుష్ఠాభ్యాంనమః ॥ నచైనం క్లేదయన్త్యాపో నశోషయతిమారుతఇతితర్జనీభ్యాంనమః ॥ అచ్ఛేద్యోఽయ మదాహ్యోఽయమక్లేద్యోఽశోష్య ఏవచేతిమధ్యమాభ్యాంనమః॥నిత్యస్సర్వగతఃస్థాణు రచలోఽయం సనాతనఇత్యనామికాభ్యాం నమః ॥ పశ్యమేపార్థరూపాణి శతశోఽథసహస్రశ ఇతికనిష్ఠికాభ్యాంనమః

ఇతి కరన్యాసః

అథ హృదయాదిన్యాసః

నైనంఛిన్దన్తిశస్త్రాణి నైనం దహతిపావకఇతిహృదయాయనమః॥ నచైనంక్లేదయన్త్యాపో నశోషయతిమారుత ఇతిశిరసేస్వాహా ॥ అచ్ఛేద్యోఽయమదాహ్యోఽయ మక్లేద్యోఽశోష్యఏవచేతిశిఖాయైవషట్॥ నిత్యస్సర్వగతఃస్థాణు రచలోఽయంసనాతనఇతి కవచాయహుమ్॥ పశ్యమేపార్థరూపాణి శతశోఽథసహస్రశ ఇతినేత్రత్రయాయవౌషట్ ॥ నానావిధాని దివ్యాని నానావర్ణాకృతీనిచే త్యస్త్రాయఫట్ ॥ శ్రీకృష్ణప్రీత్యర్థే పాఠే వినియోగః ॥

ஸ்ரீமான் பண்டிட் சதாவதானி

# திருவாதிலக்ஷ்மணாசாரியரின்

ஜீவசரித்திர சங்கிரகம்.

---

## தாய் தந்தையர்கள் ஜனனம்.

சற்றேறக்குறைய 20 வருஷங்களாய் சென்னைபுரியில் பகவத்கீதை, இராமாயணம், பாகவதம், பாரதம், அரிவம்சம், இத்யாதி கிரந்தங்களை பிரசங்கித்துக்கொண்டு பகவத்கீதா காலக்ஷேபங்கள் நடத்திக்கொண்டு மகாஜனங்களுக்கு நீதிமதம் வேதாந்தோபதேசம் செய்துகொண்டிருக்கும் ஸ்ரீமான் சதாவதானி பண்டிட் திருவாதி லக்ஷ்மணாசாரியர் அவர்கள் நளவருஷம் ஜேஷ்டமாசம் தஞ்சாவூர்க்கருகில் காவேரி தீரத்தில் ஸ்ரீபஞ்சநதி க்ஷேத்திரமான திருவாதியில் பிறந்தனர். சகலபுராண சாஸ்திர பாராயணரான ஸ்ரீகிருஷ்ணாசாரியர் இவர்க்குத்தந்தை. இவர் தாயின் பெயர்பாகிரதி அம்மை. அவள் பரமசாத்வி, ஸ்ரீகளுக்கு கிரந்தங்களில் அரிவிக்கப்பட்ட சத்குண சம்பத்தெல்லாம்.

## உபநயனம், விவாகம் வித்யாப்யாசம்.

இவளிடத்தில் உருக்கொண்டிருந்தன. ஸ்ரீபண்டிதருக்கு திருப்பதியில் ஸ்ரீவெங்கடேசுரனுடைய சந்நிதானத்தில் எட்டாம் வயதில் உபநயனம் ஒன்பதாம்வயதில் விவாகமும் நடந்தன. விவாக மான ஆறுமாதத்திற்கு பிறகு இவர்க்கு மாத்ருவியோகம் சம்பவித்தது. மத்வர்களில் சாதாரணமாய் சாஸ்திராப்யாசம் வழக்கம். வேதாத்யயனம் யேகதேசம். இவர் வம்சத்திற்கு உபாத்தியாய விருத்தியுண்டு. இந்த விருத்திக்கு உபயுக்தமான மந்திரபாகம் இவருக்குக் கற்றுக்கொடுத்து காவ்யாதிகளை படிப்பிப்பதற்கு இவரின் தந்தையார் தொடங்கினர். இவருடைய தமையனர் பெரியபண்டிதரா யிருந்தனர். நம் பண்டிதர்களுக்கு வேதாப்யாசம் பிடிக்காதென்றும் இவர் தமையனர் இவருடையதந்தைக்குத் தெரிவித்து நம் பண்டிதரை காவ்யாப்யாஸத்திற்கே கொண்டு போயினர். உபாத்தியாய விருத்திக்கு வேண்டியமந்திரங்கள் நம்பண்டிதற்கு செம்மையாய் வந்ததால்,

## வேதாத்தியயனம்

இவருடைய உபாத்தியாயர் இவர்க்கு வேதாத்தியயனம் செம்மையாய் வரும் ஆகையால் நிறுத்தாமல் இவருக்கு அத்தியயனம் படிப்பிக்க வேண்டுமென்றும் இவருடைய தந்தைக்கு தெரிவித்தனர். இந்த உபாத்தியாயருக்கு இவற்கு வேதம் முழுமையும் சொல்லி வைப்பதற்கு யோக்யதை யில்லை இவர்தந்தைக்கும் தமயனுக்கும் சாஸ்திர பரிசயமே அல்லாமல் அத்தியயனம் தெரியாது. இவ்வாறிருக்க ஒருதமிழ்ப்பிராமணன் அந்த ஊருக்கு சப்மாஜிஸ்டிரேட் ஆகவந்தான். இவன் தம்பி வேதத்தில் நிபுணன். கனுந்தம் அறிந்தவன். இவன் தமையனுடன் இந்த ஊருக்கு வந்து சேர்ந்தான். நம்பண்டிதரின் தந்தையின் அபிப்பிராயத்திற்குத் தக்கபடி இவற்கு அத்தியயனம் சொல்வதற்கு திடரென்று உபாத்தியாயர் லபித்தனர். இந்தசப்மாஜிஸ்டிரேட்டின் தம்பி முத்து கனபாட்டி. இந்த கிராமத்திலே இருப்பவருக்கு அத்தியயனம் சொல்லுவதற்கு கோரியிருந்தனர். இந்த சங்கதியைக்கேட்டு (150) பேர் அத்தியயனம் செய்வதற்கு வந்து சேர்ந்தனர். ஆறுமாதங்கள் அத்தியயனம் மிகுதியாக நடந்து கொண்டிருந்தது. நம்பண்டிதரை இவர் தந்தையார் அவ்விடம் அனுப்பாமல் போயினர். பின் இவர் தந்தையார் இவரை இந்த வேதபாடசாலையில் சேர்த்தனர். ஒரு இராத்திரி சுமார் மூன்றரை மணிக்கு உபாத்தியாயர் சந்தை சொல்லிக்கொண்டிருக்கையில் மேல் வாக்யம் அவருக்குப்புரியாமல் போயிற்று. இருட்டில் கிரந்தத்தைப்பார்த்தற்கு முடியாமல் உபாத்தியாயர் சிந்தித்திருக்கையில் நம்பண்டிதர் ஐந்து ஆறு முறையே சந்தை சொல்லிக்கொண்டவராயிருந்தும் உபாத்தியாயருக்குப்புரியாத "பிராணவைதவித்ராணி" என்ற வாக்யத்தை எடுத்துக்கொடுத்தனர். இதற்கு உபாத்தியாயர் மிகுந்த சந்தோஷப்பட்டு அந்த இருட்டில் வந்து நம்பண்டிதரை அணைத்துக்கொண்டு ஆனந்தக்கண்ணீர்விட்டு இவரின் தாரணசக்திக்கு மிகுதியும் ஆச்சரியப்பட்டனர். இந்த வாக்யம் நம்பண்டிதர், சொன்னபோது இவர்தந்தையார், அவ்விடத்திலேயே, இருந்தனர். அப்போது உபாத்தியாயர் சந்தோஷித்து நம்பண்டிதற்கு 150 பேர்களில்

## தனியாக அத்தியயனஞ் சொல்லுதல்

தகாதென்று இவரை அவர், வீட்டுக்கழைத்துக்கொண்டுபோய் தனியாய் அத்யயனஞ் சொல்லி, இவரின் ஜன்மாந்தர சமஸ்காரத்தால் நாலு ஐந்து சந்தைகளுக்கே இந்த பெரியவித்தை லபிக்கின்றதென்றும் இந்த அத்யயனம் நிமித்தமாத்திரமென்றும் சொல்லினர். பன்னிரண்டுவருஷங்களில் கற்றுக்கொள்ளவேண்டிய கனுந்தவித்தை

மூன்றரை வருஷங்களிலேயே எனின் இவரது 9, 10, 11, $12\frac{1}{2}$, வருஷங்களிலேயே இவற்கு சம்பூர்ணமாய் லபித்ததுஎனின், $12\frac{1}{2}$வருஷத்தில் இவற்கு கனந்தாத்யயனம் சம்பூர்ணமாய் லபித்தது. அந்தகாலத்தில் மத்யார்ஜ்ஜுன க்ஷேத்ரத்தில் இராஜகனபாட்டி எனும் பெரிய பண்டிதர் இருந்தனர். இவர் கனபாட்டிகளுக்கு அரசன் என்று சொல்லப்பட்டவராய் இவரை யொத்தகனபாட்டி பிரம்மஸ்ருஷ்டியிலேயே இல்லை யென்று சொல்லலாம். இவர் புதுக்கோட்டை ஸமஸ்தானத்தில் நவராத்திரிசபையில் வேதவித்யாபரீக்ஷகராக இருந்தனர். இவர் புதுக்கோட்டைக்குப்போய்க்கொண்டு திருவாதிக்கு வந்தனர். நம்பண்டிதரின் தந்தையார் இவரை அந்த பெரியபண்டிதரிடம் அழைத்துக்கொண்டு போயினர். இந்தப் பெரியபண்டிதர் நம்லக்ஷ்மணாசாரியரை வேதத்தில் பரீக்ஷித்தனர். இந்த ராஜகனபாட்டியின் தாயார் மீனம்பிகை, மைசூரில் ஆஸ்தானபண்டிதராயும் மகாபண்டிதராயிருந்த ராமசேஷ சாஸ்திரியார் அவர்களின்பெண். அத்யயனத்தில் இவருக்குள்ள பாண்டித்தியத்தில் இவருக்கு இணையில்லை இவர் குமாரியாரானகையால் இந்த மீனம்பிகை அம்மையாருக்கு அதிகமாக வேதத்தில்

## பெரியகனபாட்டி இவரை மெச்சிக்கொள்ளுதல்.

ஸ்ருதபாண்டித்தியம் லபித்திருந்தது. இவள் புத்திரனான இராஜ கனபாட்டி நம்லக்ஷ்மணாசாரியரின் பாண்டித்தியத்திற்கு மிகவும் சந்தோஷித்து தன்தாயை அழைத்து இவ்வாறு கூறினர். "அம்மா பிரபஞ்சத்தில் என்குமாரனுக்கு சமானமான கனபாட்டி இல்லை யென்று இருந்தாயே அந்தகர்வத்திற்கு இன்றைக்கு இங்கு பங்கமுண்டாயிற்று" என்று கூறினர். அந்த சொல்லைக்கேட்டு மீனம்பிகை அம்மை அதிக சந்தோஷித்து நம் இளைய லக்ஷ்மணாசாரியரை தழுவிக்கொண்டு சந்தோஷித்து வாழ்த்தினர். இராஜகனபாட்டி நம்பண்டிதரை புதுக்கோட்டை சபைக்கு அழைத்துக்கொண்டு போதற்குக்கோரினர். பரம பால்யராதலினால் இராஜ திருஷ்டிபடும் என்று பயப்பட்டு வரும் வருஷத்தில் அனுப்புகிறதாய் இவர் தந்தை இராஜகனபாட்டிக்கு சமாதானம் சொல்லி அனுப்பினர். மறு வருஷத்தில் எனின் பிரஜோத்பத்தி வருஷத்தில் இராஜகனபாட்டியார்வந்து நமது இளைய ஆசாரியரை புதுக்கோட்டை சபைக்கு அழைத்துக்கொண்டுபோயினர். புதுக்கோட்டையில்வந்த பண்டிதர்களை அரை மணி கால் மணி பரீக்ஷித்தல் வழக்கமாயினும் நம்லக்ஷ்மணாசாரியரை ஆறுநாள் பரீக்ஷித்தனர். இந்த பரிக்ஷையில் ஒருசங்கதியிலாயினும் தவராமல் பதில் கூறினர். இந்த பரிக்ஷைக்கு செங்கல்பட்டுஜில்லாவில் புள்ளப்பாக்கம் வேங்கடாசாரியரெனும் இருபத்தைந்து வருஷமுள்ள பெரியகனபாட்டியும் வந்திருந்தனர். இந்த புதுக்கோட்டையில் தானாதிகாரி மற்றும் சிலபண்டிதர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களானதையால்

இந்த வெங்கடாசாரியர் அவர்களைமிகவும் மெச்சிக்கொண்டு இவர்க்கே அதிகமாக மரியாதைசெய்தற்கு யெத்தனித்தனர். பின் இராஜகனபாட்டி பரீக்ஷை நடத்தினகாலத்தில் இந்த ஆசாரியார் ஒரு சங்கதியில் தவறிப்போயினர். ஆறுமுறை அவகாசம் கொடுத்தும் பதில்கூறமுடியாமற் போயினர். இவ்வாறு இவர் தவறின சங்கதியை நம்பண்டிதர் அனாயாசமாகத் தெரிவித்தனர்.

## புதுக்கோட்டை ஸமஸ்தானத்தில் பெரிய கௌரவம்.

அப்போது இராஜகனபாட்டி அவரது மூன்றாவது ஸ்தானத்தை நம்பண்டிதருக்குக்கொடுத்தனர். அவர் நாலாவது ஆயினர். இதற்கு யாவரும் சந்தோஷித்தனர். ஆயினபின்னால் சம்பாவனைக்கொடுத்தலில் இந்தவேங்கடாசாரியருக்கும் நம்லக்ஷ்மணாசாரியருக்கும் சரிசமானமாய் வெகுமதிகொடுத்தனர். புதுக்கோட்டை இராஜா தினம்தினம் சபையில் நடந்த விசேஷங்களை தன்பாரியைக்கு தெரிவித்துக் கொண்டிருந்தான். கடைசிநாள் இராஜகனபாட்டியைக் காட்டிலும் பெரியவன் யென்னப்பட்ட இந்த நம் பாலபண்டிதனுக்கு என்ன வெகுமானம் கொடுத்தீர்கள் என்று அரசன்மனைவி அரசனைக்கேட்டாள். எல்லாரைப்போலவே வெகுமானம் கொடுத்ததாக அரசன்

## அரசன் இராணி இவரை கௌரவித்தல்.

சொல்லுகையில் இராணி சிந்தித்து நம்லக்ஷ்மணாசாரியரை அழைப்பித்து இவற்குத்தோடா சால்வைகள் வஸ்திரங்கள் உபர்வாக வெகுமானம் கொடுத்தனர். இந்ததோடாவை இராஜா இராணி இருவரும் பிடித்துக்கொண்டு நம்ஆசாரியர்கையில் இட்டனர். பின் இராணி "உனக்குத்தாயார் இருக்கின்றாளா" என்று கேட்டனர். அதுவரையில் நம்ஆசாரியர் அவர்களுக்குத்தாய்காலமாயிருந்தும் இந்த சங்கதிதெரிவித்தற்கு ஆலஸ்யஞ் செய்தனர். இப்படிப்பட்ட ஆலஸ்யத்திற்கு காரணம் என்ன வென்று இராணியர் கேட்கையில் ஸ்ரீலக்ஷ்மணாசாரியர் இவ்வாறென்றனர். "என்னைப்பெற்றதாயார் காலமாயினும் போஷிக்கும் தாய் நீங்களிருக்கையில் இல்லை என்று சொல்வதற்கு வாய்எழவில்லை" என்று பதில் சொல்லினர். இவ்வாறு சமத்காரமாய் பதில் சொன்னதற்கு இராணியார் நம்பாலபண்டிதரை மிகுதியாயும் மெச்சிக்கொண்டனர். அதுமுதற்கொண்டு இவற்கு இந்த ஆஸ்தானத்தில்பிரதிவருஷம் வெகுமானம் நடந்துகொண்டிருந்தது.

## சாஸ்திராப்பியாசம்.

பின்காவ்யம் சம்பு, நாடகங்கள் வியாகரணம் தர்க்கம் வேதாந்தம் அந்தந்தவிஷயங்களை செம்மையாக அறிந்த பண்டிதர்களிடத்

தில் இவர் செம்மையாக அறிந்து கொண்டனர். இம்மாதிரியாக இவரது வித்தியாப்பியாசம் இருபத்தைந்து வயதில் முடிந்தது. கஞந்தம் கற்றுக்கொண்டபின் மற்றவர்களின் உபதேசமில்லாமல் அவரது புத்தி கூர்மையை உபயோகித்து வேதலக்ஷணத்தை உணர்ந்தனர். இவற்கு 22-ஆம் வருடமாகும் பிரமாதி வருஷத்தில் சென்னை வேத வேதாந்தவர்த்தினி சபையார் இவரை வேதம் வியாகர்ணம், அலங்கார சாஸ்திரத்தில் பரீக்ஷகராய் நியமித்தனர். அப்போது இந்த சபையில் இவரை பண்டிதர்கள் பரீக்ஷித்து இவற்கு புதுக்கோட்டையார் கொடுத்த தோட்டாவில் நவரத்னங்கள் பொதிந்த வீரகண்டாமணி சேர்த்து வெகுமானங் கொடுத்தனர்.

## வேதவேதாந்த சபா இவரை கௌரவித்தல்.

இந்தச்சபையில் சர். டி. முத்துசாமி அய்யர். மே. பி. செஞ்சல்ராவ், மே. டி. வெங்காசாமிராவ் முதலிய பெரியவர்கள் அநேகர் இருந்தனர். இந்த சபைக்கு வருதற்கு முன் இவருக்கு வேதத்தில் வர்ணக்கிரமம் என்னும் பாகம் தெரியாதிருந்தது, மாயவாரத்தில் ஒருவன் மாலதிமாதவ நாடகத்தை கொண்டுவந்து பாடம் சொல்ல வேண்டுமென்றுக் கேட்டுக்கொண்டான். இந்த புத்தகத்தை அவிழ்த்துப்பார்க்கையில் கடைசியில் இதில் நம்ஆசாரியருக்கு வேண்டிய வேதவர்ணக்கிரமம்சமக்கிரமாய் எழுதப்பட்டிருந்தது. இதை இவர் வாங்கிக்கொண்டு ஒருவாரத்தில் கண்டபாடம் செய்து வேத வேதாந்த சபைக்குவந்து இருவது பண்டிதர்களுக்கு பதில் கொடுத்து அவரை மெய்ப்பித்தனர். இந்த வேதவர்ணக்கிரம புத்தகத்தை ஈஸ்வரனே கொடுப்பித்து நம்பண்டிதருக்கு சகாயம்செய்தனர் என்று சொல்லலாம்.

## தஞ்சாவூர் சபையில் மரியாதை.

அந்த சமயத்திலேயே தஞ்சாவூரில் நடந்த ஸ்கந்தஷஷ்டி பண்டித சபையில் அலங்காரத்திலும் வேதத்திலும் பரீக்ஷகராய் இவர் நியமிக்கப்பட்டனர். அளிஞர் சிங்கராசாரியரென்னும் ஸ்ரீவைஷ்ணவ கனபாட்டி இந்த சபைக்கு வந்தனர். இவர் விர்த்தராயிருந்ததால் பால்யராகும் நம்ஆசாரியர் இவரை பரீக்ஷித்தல் கூடாதென்று அவ்விடத்திய வைஷ்ணவர்கள் விவாதம் ஏற்படுத்தினர். தஞ்சை அரசன் இதற்கு சம்மதிக்காமல் பால்யனைபரீக்ஷகன் வயதடைந்த வித்யார்த்தியை பரீக்ஷிக்கலாம் என்று தீர்மானித்தனன். இவர்க்கு கஞந்த மேவருமென்றும் வர்ணக்கிரமம் தெரியாதென்றும் இவரது வர்ணக்கிரமம் அங்கீகரித்தற்கு கூடாதென்றும் லக்ஷ்மணாசாரியர் கூறினர். அப்போது அந்த சபையிலிருந்த அய்யங்காரிகள் குத்திரம் செய்து

இந்த அய்யங்காருக்கு வர்ணக்கிரமம் வரும் என்றும் லக்ஷ்மணாசாரியருக்கே வர்ணக்கிரமம் தெரியாதென்றும் அரசனுக்குத்தெரிவித்தனர். ஆதலால் பண்டிதரெல்லாரும் சேர்ந்து நம்ஆசாரியரை வேதத்தில் பரீக்ஷித்தனர். எல்லாருக்கும் சமாதானம் கூறி மெய்ப்பித்தனர். பின் அந்த சிங்காராசாரியருக்கு வர்ணக்கிரமமே தெரியாதென்று ஸ்ரீவைஷ்ணவப் பண்டிதர்களே தீர்மானித்தனர். நம்லக்ஷ்மணாசாரியர் பாண்டித்தியத்தை மெச்சிக்கொண்டனர். நம்லக்ஷ்மணாசாரியரைப்போல மற்றொருவருக்கு போதப்படவில்லை. இந்த பண்டிதர்கள் நம்ஆசாரியருக்கு செர்டிபிகேட் எழுதிக்கொடுத்தனர். சபா அத்தியக்ஷர்கள் வர்ணக்கிரம தர்ப்பணத்தைப்பார்க்காமலே இந்த சபைக்கு வந்த சிங்காராசாரியரைக்கண்டித்தனர். இந்த சிங்காராசாரியர் இராஜ சபையில் வேதத்தில் அஷ்டாவதானம் செய்வதாகச் சொல்லினர். இந்த சங்கதியை அரசன் நம்பண்டிதரைக்கேழ்க்கையில் மொத்தத்தின் மேலும் சதாவதானம் செய்வதாக சொல்லினர். அப்போது இந்த பிரசம்சை நின்று போயிற்று.

## சதாவதானஞ் செய்தல்.

பின் நம்பண்டிதர்அவர்கள் நூற்றுவரை யேற்படுத்திக்கொண்டு சதாவதானஞ் செய்தற்குத் தொடங்கினர். இதுதவறுமல் நடந்தது. பின் கும்பகோணத்தில் ராய் பகதூர். டி கோபால் ராவ் அவர்கள் பி. யே. அக்ராசனாதிபதியாக இருந்த சபையிலும் திருவாதியில் சுவாமி சந்நிதியில் பெரிய வித்வத் சபையிலும் ஸ்ரீ லக்ஷ்மணாசாரியர் அவர்கள் சதாவதானஞ் செய்தனர். இந்த இரண்டு சபையாரும் பண்டிதர் அவர்களுக்கு பெரியசன்மானம் யோக்யதா பத்திரம் கொடுத்தனர்.

## ஸ்ரீ வானமாமலைசுவாமி இவரை கௌரவித்தல்.

மற்றொரு வருஷத்தில் நம்ஆசாரியர் அவர்கள் திருவல்லிக்கேணி வேதவேதாந்த சபைக்கு பரீக்ஷகராக வந்தனர். அப்போது தஞ்சாவூரில் பங்கப்பட்ட அ. சிங்காரசாரியர் அவர்கள் வந்து வேத வர்ணக்கிரமத்தில் தன்பக்கி சரியென்றும் லக்ஷ்மணாசாரியரின் பக்கிசரியல்லவென்றும்விவாதம் ஏர்ப்படுத்தினர். அப்போது. இந்தச் சபைக்குப் பிரசிடெண்டாகவிருந்த பாங்கி பெரிய சிங்காராசாரியர் அவர்கள் அந்த ஆசாரியரையும் நம்பண்டிதரையும் அப்போது திருவல்லிக்கேணிக்கு வந்திருந்த அத்யயனம் அறிந்தவர்களையும் வானமாமலை சுவாமியின் சந்நிதிக்கு அழைத்துக்கொண்டுபோயினர். இந்த சுவாமி அவர்கள் இவர்கள் இருவரையும்இ ந்த வேதக்கிரமத்தில் மூன்று நாட்கள் பரிக்ஷித்து அ-சிங்காராசாரியர் அவர்களுக்கு இந்த வர்ணக்

கிரம பத்ததியே தெரியா தென்றும் பரிஷ்காரமாகச்சொல்லி நம்ஆசாரியர் அவர்களை மிகவும் சிலாகித்தனர்.

## மூன்றும் முறை சதாவதானஞ் செய்தல்.

அப்பொழுதே திருவல்லிக்கேணியில் தவனோற்சவ பங்களாவில் திவான் பஹதூர் ரகுநாத ராவ் அவர்கள் அக்ராசனாதிபத்தியத்தின் கீழ் நம்லக்ஷ்மணாசாரியாரவர்கள் அதிவிசித்ரமாய்ச் சதாவதானம் நடத்தினர். இதற்கு மெச்சி இந்தச்சபையார்கள் ரூபாய் 1000, நவரத்ன தோடாக்கள் பஹுமானம் கொடுத்தனர். இந்த சதாவதான முறை ரயில்வே ஸ்டேஷனில் டிகட்மேஸ்டர் அந்தந்த அறையிலிருந்து அந்த ஊரின் டிக்கட்களை யெடுத்து அநாயாசமாகக் கொடுத்தல் போலிருந்ததென திவான் பஹதூர் ரகுநாதராயரவர்கள் உபந்யசித்தனர்.

## ஸ்திரீ புனர்விவாஹ கண்டனம்.

ஒருமுறை உத்ராதி மடத்து ஸ்வாமி புனர்விவாஹம் அஶாஸ்திரீயமென்று ஸ்தாபித்தற்குச் சென்னைபுரிக்கு வந்து இரண்டாயிரம் வித்வாம்சர்களின் சபைசேர்த்தனர். இந்தச்சபையில் இந்த வாதம் விசேஷமாகநடந்தது. ஒருநாளே நம்பண்டிதர் என்ன சொல்லினர் என்று விசாரிக்கவேண்டியபொழுது நம்ஆசாரியாவர்கள் 20, 30, மர் பண்டிதர்கள் இரண்டு மூன்று நாட்கள் செய்த உபந்யாசங்களை

## உத்ராதி மடத்து ஸ்வாமி இவரை கௌரவித்தல்.

கயிற்றில்மணிகோத்ததுபோல 6-மணிகளில் தெரிவித்தனர். இதற்கு ஸ்வாமிகள் மிகவும் சந்தோஷித்து இந்தச்சபை நடத்துகையில் இவரை தன்சந்நிதானத்திலேயே வைத்துக்கொண்டு கௌரவித்தனர். பின்னும் நம்ஆசாரியர் விதவாவிவாஹ கண்டனம் எனும் கிரந்தம் எழுதி ஸ்ரீஸ்வாமி அவர்களுக்குக்கொடுப்பித்தனர். இதற்குச்சந்தோஷித்து ஸ்வாமி அவர்கள் நம்ஆசார்யாவர்களுக்குப்பல்லக்கு கைகுட்டை, காதீபம், சத்ரம். சாமரம், அப்தாகிரி, பிருதுகள் கொடுப்பித்தனர். எனின் அவர்தரித்த காஷாயவஸ்திரம் ஒன்றுதவிர அவர்க்குள்ளபிருதுகள் அனைத்தையும் நம்லக்ஷ்மணாசார்யருக்கு கொடுப்பித்து இவர்களை விசேஷமாகக்கௌரவித்தனர். அப்பொழுது ஆசாரியரவர்களுக்கு வயது 25, வருஷங்கள்.

## திருவாதி ஸமஸ்கிருதபாடசாலை.

பின்னும் திருவாதியில் ஒரு சம்ஸ்கிருதபாடசாலை லோகல்பண்டுக்காரர்கள் விசாரணையிலிருந்தது. தகுந்த உபாத்தியாயர் இல்லாமல் இது க்ஷீணித்திருந்தது. அப்போது தஞ்சாவூர் கலக்டராயிருந்த மெ. இ. கிப்ஸன். நம்பண்டிதரவர்களின் போக்யதையைக்கேட்டு இவர்களை இந்தக்காலேஜுக்கு எட்மாஸ்டராய் நியமித்தனர். சம்பளம் ரூபாய்-40-இந்தப்பாடசாலையை பண்டிதரவர்கள் நன்றாய்ப் பரிபாலித்ததால் டிவிஷன் இன்ஸ்பெக்டர் மெ: மன்ரோ மிகவும் சந்தோஷித்தனர்.

## லார்ட் கானிமாரா கவர்னர் இவரைக் கௌரவித்தல்.

அந்தச்சந்தியிலே தானே சென்னபட்டணத்துக்கவர்னர் லார்ட்கானிமாரா தஞ்சாவூருக்குப் போயிருந்தபொழுது நம்பண்டிதர் அநேக சுலோகங்களெழுதி கவர்னரவர்களைச்சிலாகித்தனர். கவர்னரவர்கள் பண்டிதரவர்களின் பாண்டித்யத்தைக்குறித்து அரைமணி உபந்யசித்து இவரை நேத்ரஸ்தானமாக வைத்துக்காக்கவேண்டும் என்று கவர்னரவர்கள் கலக்டரவர்களுக்குச் சிபாரஸ்செய்தனர். பின், இவர்க்கு முன் திருவாதி பாடசாலை எட்மாஸ்டர் செய்த அபீலை அடித்துவிட்டு நம்பண்டிதருக்கு இந்தப்பாடசாலை எட்மாஸ்டர் வேலையை ஸ்திரமாகக்கொடுத்தனர். இந்தவிதமாக நம்பண்டிதரவர்களைக் கவர்னரவர்கள் உயர்வாகச்சன்மானித்தனர். இவரது பாண்டித்யவன்மைக்கு ஆச்சர்யப்பட்டனர்.

இந்தப் பாடசாலையில் உபாத்யாயராயிருந்தகாலத்தில் இவர்க்கு உத்யோகஸ்தரிடம் விசேஷபரிசயம் உண்டாயிற்று. பண்டிதரவர்கள் தமது பாண்டித்யத்தை உபயோகித்து ஹரிகதைசெய்யவேண்டுமென்று இவர்களை அந்த உத்யோகஸ்தர்கள் அனைவரும் புரோற்சாகம் செய்தனர். அதுமுதல் பண்டிதரவர்கள்.

## ஹரிகதைகள் செய்வது.

அப்போதிக்கப்போது வீட்டிலேயே ஹரிகதைகள் செய்துக் கொண்டிருந்தனர். அப்போது இவர்பிதா இருந்தனர். இவர்கதைகளைக்கேட்டு இவ்விதமாய்க் கதைகளைச்சொல்லும் சமத்காரத்தை விருத்திசெய்துக் கொள்ளவேண்டுமென்று நமதாசாரியரவர்களுக்குத்தரவு கொடுத்தனர். இந்தப்பாடசாலைத்தொழிலிலிருக்கும்போது பண்டிதரவர்களுக்கு பித்ருவியோகம் சம்பவித்தது. அச்சமயத்தில் மூன்றுமாதம் செலவுபெற்றுக்கொண்டு திருப்பதிக்குப்போய்

## சென்னை அடைதல்.

ஸ்வாமிதர்சனம் செய்துகொண்டு சென்னை வந்தனர். திருவல்லிக்கேணியில் புராணகாலக்ஷேபம் நடத்திவந்தனர். திருவல்லிக்கேணியிலிருந்த பெரியமனுஷர்கள் இவர்களை இவ்விடத்திலேயேயிருக்கவேண்டுமென்று மிகவும் கோரினதினுல் இவர் அப்போதைக்கப்போது செலவு வாங்கிக்கொண்டு பின் ராஜநாமாகொடுத்து திருவல்லிக்கேணியிலேயே ஸ்திரவாஸம் ஏற்படுத்திக் கொண்டனர். புராணகாலக்ஷேபஞ் சொல்லுதலில் இடை யிடையே கீதாஸ்லோகங்களுக்கு விசித்ரமாய்ப் பொருள் சொல்லுதற்குப் பலர் சந்தோஷித்து பிரத்தியேகமாய்க் கீதையை யுபன்யசிக்க வேண்டுமென்று கோரினர். இந்த விதமாகக் காலக்ஷேபம் சொல்லுதலில்,

## ஸ்ரீ வைஷ்ணவ கிரந்தங்களில் பரிசயம்.

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் அநுகூலமாயிருத்தற்கு இவர் த்ராவிட பிரபந்தங்களையும் பாஷ்யங்களையும் அப்யாசித்து உபந்யசித்துக் கொண்டுவந்தனர். ஆயினும் இந்த உபந்யாசம் அர்த்தவிசாரம் சாம்பிரதாயாநுகூலமாயிருக்குமோ இராதோ என்று சங்கித்திருக்கையில் ஒருநாள் இரவு 12, மணிக்குமுன் நம்மாழ்வார் பின் உடையவர் ஸ்வப்பனத்திற்காணப்பட்டு "நம்முடைய த்ராவிட பிரபந்தங்களை நீர் தைர்யமாய்ப் பிரவசனம் பண்ணலாம் நாம் பக்கத்தில் நின்று நடத்திவைப்போம்" என்று சொன்னதுபோல ஸ்வப்பனத்தில் நம்பண்டிதர்க்கு விசதமானது. அது முதல் இவர்க்கு த்ராவிடப்ரபந்தம் பாஷ்யங்களாதியாயுள்ள ஸம்ஸ்கிருதகிரந்தங்கள் அகங்கை நெல்லிக்கனிபோல அர்த்தமாகின்றன. இப்போது தென்கலை வடகலை ஸாம்பிரதாயங்கள் நம் லக்ஷ்மணாசார்யரவர்களுக்குத் தெரிந்ததுபோல ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகளுக்கும் தெரியவில்லையென்று செம்மையாய்ச்சொல்லலாம். உடையவரிடத்தில் பாஷ்யாதி கிரந்தங்களைப் பாடம் படித்ததுபோலவும் உடையவர் இவர்க்குப்பாடம் சொன்னதுபோலவும் இவர்க்கு புரிந்தது.

## சென்னை புரியிலும் இதர ஜில்லாக்களிலும் கீதா காலக்ஷேபஞ் செய்தல்.

சென்னைபுரியில் காலக்ஷேபங்கள் நடந்து கொண்டிருக்கும் காலத்திற்றனே அப்போதைக்கப்போது, பாலக்காடு, கள்ளிக்கோட்டைகளில் பகவத்கீதை காலக்ஷேபங்கள் கூறினர். அநேகர் சிஷ்யராய்

விலக்ஷணமர்யாதைகள் செய்தனர். தக்ஷிணதேசயாத்ரையில் ஸ்ரீரங்கத்திலிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் (10) மாதங்கள் இவர் வழியாக பகவத்கீதைகேட்டு மதாந்தார் எனும் ஈர்ஷ்யாதிகள் இன்றி நம் பண்டிதரவர்களை விசேஷமாய் கௌரவித்தனர். ராமநாதபுரம், ராமேஸ்வரத்தில் கீதை உபந்யாசங்கள் நடந்தன.

## சிருங்கேரிஸ்வாமி இவரைக் கௌரவித்தல்.

அப்போது சிருங்கேரி மடஸ்வாமிகள் ராமநாதபுரத்தில் நம் பண்டிதரவர்களைச் சந்தித்தனர். ஸ்ரீஸ்வாமியாரவர்கள் தம் சந்நதியில் நம் பண்டிதர் வழியாக கீதோபந்யாசங்கள் காலக்ஷேபங்கள் நடத்தினர். இவர் சொன்ன விசேஷார்த்தங்களைக்கேட்டுச் சந்தோஷித்து ஜகத்குரு சிருங்கேரி மடஸமஸ்தானம் எனும் விலாசத்துடன் ஒருபொன்தோடா உன்னதமான பவித்ரமோதிரம் உத்க்ருஷ்டமான சால்வைகள் அவரின் கையார அநுக்ரஹித்து பஹுமானம் கொடுப்பித்தனர். அநேகர் பண்டிதர்கள் பலத்திருக்கும் சபையில் நம் பண்டிதரவர்களைச்சிலாகித்து யுபன்யசித்து கீதை புராணங்கள், ஹரிகதைகள் கேட்டு ஆனந்தித்து விஷயந் தெரிந்துகொள்ள கோரினவர்கள் நம் லக்ஷ்மணாசாரிய ரவர்களிடத்திலேயே கேட்கவேண்டுமென்று மதாந்தரஸ்தர்கள் எனும் தூரபிமானம் விட்டு இவரைக் குருவாகக் கொள்ளவேண்டுமென்று இந்த சிருங்கேரிமடஸ்வாமிகள் உபந்யசித்தனர்.

## சிவகங்கை ஸ்வாமி இவரைக்கௌரவித்தல்.

சிவகங்கை மடஸ்வாமி அவர்வள் புதுச்சேரியில் சாதுர்மாஸ்யத்தில் இருந்தபொழுது நம் ஆசார்யரிடத்தில் ஸங்கிரஹமாய்க் கீதையை ஒருகாலக்ஷேபம் கேட்டு விசேஷமாய் மர்யாதை செய்து "இவர் கீதைக்குச் சொல்லும் அர்த்தமே சரியான அர்த்தம். இப்படிச்சொல்வோர் வேறொருவர் இல்லை யென்று பிரமாணம் செய்து சொல்லுகிறேன்." என்றனர்.

## ஸ்நேக மர்யாதைகள்.

இத்யாதி ஸன்மானங்கள் பண்டிதரவர்களுக்கு எவ்வளவெவ்வளவோ நடந்தன. பண்டிதரவர்களுக்கு ஆங்காங்கு சபைகளில் விசித்ராசதாவதாமணி, வித்வன்மணி, மஹாபாகவதாசார்யர், ஸலக்ஷணவர்ணாச்ரமகனபாடி, மதத்ரய பகவத்கீதோபந்யாஸ வித்வான், ஸரஸஸங்கீதவித்வத்வைதிக ஹரிகதாகதகஸிம்ஹம், எனும் பிருதுகள் ஸர்டிபிகேட்டுகள் கொடுத்திருக்கின்றனர்.

## பகவத்கீதைக்கு வாக்யை யெழுதுதல்

ஸ்ரீ பண்டிதரவர்கள் பகவத்கீதைக்கு (3) பாஷ்யங்கள் இவற்றை அநுசரித்து அநேக கிரந்தங்களிலுள்ள ரஹஸ்யார்த்தங்களை இவர் இப்போது உபந்யசித்துக்கொண்டிருப்பதுபோல, இதினும்பத்துமடங்கு உயர்வாயிருக்கத்தக்க பகவத்கீதோபந்யாஸ தர்ப்பணம் எனும் கிரந்தத்தை யெழுதி முடித்தனர்.

இது முத்திரிக்கையிலிருக்கிறது. பகவத் அநுக்ரஹத்தால் சீக்ரத்தில் தமிழ் தெலுங்கிலும் இந்த க்ரந்தம் அச்சிடப்படும். ஸ்ரீ பகவத்கீதை உபந்யசிப்பதில் இவ்வளவு பண்டிதர் நம் ராஜதானியில் மற்றொருவன் இல்லையென்று செம்மையாய்க்கூறலாகும். கவர்ன்மென்ட் அவர்கள் ஸ்ரீ நம் பண்டிதரவர்களுக்கு மஹாமஹோபாத்யாய இத்யாதி பிருதுகள் கொடுக்கவேண்டும். ஸ்ரீ அவர்கள் ஆயுராரோக்ய விருத்தி பெற்று இப்படிப்பட்ட காலக்ஷேபங்கள் நடத்திக் கொண்டிருக்கவேண்டுமென்று ஸ்ரீபார்த்தசாரதியை பிரார்த்தித்துக் கொண்டு இந்தச்சங்கிரஹ சரித்திரத்தை முடிக்கிறோம்.



ஶ்ரீ:

ஶ்ரீகிருஷ்ணாய பரப்ரம்மணே நம:.

# ஶ்ரீபகவத்கீதா

## ப்ராரம்பம்.

## முதல் அத்யாயம்

## அர்ஜுனவிஷாதயோகம்.

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚.

𑌧𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑌵𑌃 ।
𑌮𑌾𑌮𑌕𑌾𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌕𑌿𑌮𑌕𑍁𑌰𑍍𑌵𑌤 𑌸𑌂𑌜𑌯 ॥ ௧

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதாயுயுத்ஸவ:,
மாமகா: பாண்டவாஶ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய. ௧

ధర్మక్షేత్రే కురుక్షేత్రే సమవేతా యుయుత్సవః,
మామకాః పాణ్డవాశ్చైవ కిమకుర్వత సఞ్జయ. ౧

திருதராஷ்டிரன் சொல்லுதல்.

1. குருமகாராஜனால் ப்ரிபாலிக்கப்பட்டபடியால் குருக்ஷேத்ரமென்றும், பலயாகங்கள் நடந்தபடியால் தர்மக்ஷேத்ரமென்றும் புகழ்படைத்த அந்த ப்ரதேசத்தில் என்குமாரர்களும் பாண்டுபுத்ரர்களும் என்னசெய்தார்கள் என்று திருதராஷ்டிரன், பரம்பரையாகச் சாரதிவம்சத்திற் சேர்ந்த சஞ்சயனை வினவினான். (திருதராஷ்டிரன் யுத்தம் எவ்வாறு செய்தனர் என்பதற்குப் பிரதியாக என்னசெய்தார்கள் என்று கேட்டதால் புண்ய பூ ஸ்பர்சனத்தால் யுத்தத்தை நிறுத்தினரா என்று அபிப்ராயம்.)

ஶ்ரீபகவத்கீதை ௨ அத். ௧௧ ஶ்லோ, முதல், ௧௮ அத். ௬௬ ஶ்லோ, வரையுமே தத்வார்த்த உபதேசம் செய்யப்பட்டது. ஆயினும், பகவானைச் சேவிக்கையில் வாஹனத்தையு முடன்சேவிப்பதுபோல் இந்தச் சுலோகங்களின் பூர்வ உத்தர பாகங்க்ளிலிருக்கும் சுலோகங்களும் கூட அத்யயனம் செய்யத்தக்கவையாம். ௪ அத். ௮ ஶ்லோ, கூறியவகை துஷ்டசிக்ஷணம் சிஷ்டாக்ஷணம் செய்ய ப்ரதியுகந்தோறும் பகவான் அவதரித்துவரினும் கலியுகஜனங்களுக்கு ஆயுள், புத்தி, க்ராஹ்யசக்தி, ஶ்ரத்தை முதலியவை ஸ்வல்பமாகையால் அவன் இந்த

யுகத்தில் அவதரிக்க எண்ணவில்லை. ஆகையாற்றான் அவனுக்கு த்ரியுகன் என்று பெயர். என்பதால் மூன்றுயுகத்திலும் அவதரிப்பவன் என்று ப்ரஹ்லாதன் ஸ்ரீபாகவதத்தில் கூறினான். மற்றொருபொருள் ஆறுகுணங்களுள்ளவன். கலியுகத்தில் தன் அவதாரம் இல்லாமையால் தன் பிரதிநிதியாய் பகவத்கீதையை லோகோத்தாரணார்த்தம் ஸ்ரீகிருஷ்ணன் உபதேசிக்க உத்தேசித்தான். பாரதயுத்தத்திற்கு முன் ஒருநாள் துரியோதனனும் அருச்சுனனும் ஒரேகாலத்தில் தமக்கு உதவி வருதற்காக ஸ்ரீகிருஷ்ணன் திருமாளிகைக்குச் சென்றனர். ஸ்ரீகிருஷ்ணன் அப்போது துயில் பிரிதலைக் கண்டு துர்யோதனன் தன் கௌரவத்தைமதித்துத் தலைப்பக்கத்து உட்கார்ந் திருந்தனன். அருச்சுனன் ஸ்ரீகண்ணனது திருவடியைச் சேவிக்கும் பாக்கியம் தனக்குக்கிடைத்ததின் பொருட்டுப் பரமானந்தபரிதனாய்த் திருவடியின்பக்கம் உட்கார்ந்திருந்தனன். பிறகு ஸ்ரீகண்ணன் துயில் உணரத் துர்யோதனன் ஸ்வாமிக்குள்ள சமஸ்த பலத்தையும் தனக்குத் தரும்படி வேண்டினன். அருச்சுனன், நிராயுதனான ஸ்ரீகண்ணன் ஒருவன் இருத்தலே தமக்குச் சுபப்ரதமென்று எண்ணி அவனை விரும்பினான். ஸ்ரீகண்ணன், துர்யோதனனது கோரிக்கையை அங்கீகரித்து அவனை அனுப்பிவித்து விருதாகாலம்போக்கிச் செய்தற்குப் பதிலாக அருச்சுனனுக்குச் சாரத்யம் செய்வதற்குத் தீர்மானித்தான். இந்த யுத்தவிஷயத்தை அரசனாகும் திருதராஷ்டிரன் கேட்கையில் மந்திரியாகும் சஞ்சயன் கூறுவானாயினான். இந்தப் பகவத்கீதை கிருஷ்ணார்ச்சுனர்களின் ஸம்வாதமாதலால் ஸம்பாஷணையாகவே எழுதப்பட்டது.

ஸஞ்ஜய உவாச.

𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍀𑌕𑌂 𑌵𑍍𑌯𑍂𑌢𑌂 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌸𑍍𑌤𑌦𑌾 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑍁𑌪𑌸𑌙𑍍𑌗𑌮𑍍𑌯 𑌰𑌾𑌜𑌾 𑌵𑌚𑌨𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥ உ

த்ருஷ்ட்வாது பாண்டவானீகம் வ்யூடம் துர்யோதன ஸ்ததா,
ஆசார்ய முபஸங்கம்ய ராஜா வ்சந மப்ரவீத். உ

దృష్ట్వాతు పాణ్డవానీకం వ్యూఢం దుర్యోధన స్తదా,
ఆచార్య ముపసఙ్గమ్య రాజా వచన మబ్రవీత్. ౨

ஸஞ்ஜயன் கூறுதல்.

2. சஞ்ஜயன்—உன்குமாரனது ஸ்பர்ஸத்தால் பூ மாஹாரத்ம்யம் குறைந்துபோகவேண்டியதே. பஞ்சபாண்டவர்கள் சகாய்மிலராய்வருவர் என்று எண்ணின துர்யோதனன், ஏழு அக்ரோணி சைன்யத்துடன் வந்த பாண்டவர்களைக் கண்டு பயந்து ஆசாரியனாகும் துரோணாசாரியின் அருகு சென்று கீழ் தெரிவிக்கும் விதமாகக் கூறினான்.

𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌂 𑌪𑌾𑌣𑍍𑌡𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌾𑌚𑌾𑌰𑍍𑌯 𑌮𑌹𑌤𑍀𑌂 𑌚𑌮𑍂𑌮𑍍 ।
𑌵𑍍𑌯𑍂𑌢𑌾𑌂 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 𑌤𑌵 𑌶𑌿𑌷𑍍𑌯𑍇𑌣 𑌧𑍀𑌮𑌤𑌾 ॥ ௩

பஶ்யைதாம் பாண்டுபுத்ராணா மாசார்ய மஹதீம் சமூம்,
வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவ ஶிஷ்யேண தீமதா. ௩

పశ్యైతాం పాణ్డుపుత్రాణా మాచార్య మహతీం చమూమ్,
వ్యూఢాం ద్రుపదపుత్రేణ తవశిష్యేణ ధీమతా. ౩

3. ஆசார்ய, உமது சீடனும் புத்திமானுமாகிய துருபதமகாராஜ குமாரனால் வ்யூஹம் செய்யப்பட்ட பாண்டுகுமாரர்களின் இந்தப் பெரியசேனையை பாருங்கள். ("பாண்டுபுத்ராணமாசார்ய") என்பதால் பாண்டுபுத்ரர்களின் ஆசார்யனே என்று விறித்தலுமாகின்றது)

𑌅𑌤𑍍𑌰 𑌶𑍂𑌰𑌾 𑌮𑌹𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌾 𑌭𑍀𑌮𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 𑌸𑌮𑌾 𑌯𑍁𑌧𑌿 ।
𑌯𑍁𑌯𑍁𑌧𑌾𑌨𑍋 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 ॥ ௪

அத்ர ஶூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுந ஸமா யுதி,
யுயுதாநோ விராடஶ்ச த்ருபதஶ்ச மஹாரத: ௪

అత్ర శూరా మహేష్వాసా భీమార్జున సమా యుధి,
యుయుధానో విరాటశ్చ ద్రుపదశ్చ మహారథః. ౪

4. துருபத புத்ரனுக்காக என் இவ்வளவு பயமென்று துரோணசாரியன் கேட்கையில் அவ்விடமிருக்கும் (கள) வர் சமர்த்தரின் பெயர்களைத் துர்யோதனன் கூறுகின்றான். இவ்விடம் சூரர்களாய் பெரியவில்லைத் தாங்கியவராய் யுத்தத்தில் பீமார்ஜுனர்களுக்கு ஒப்பானவராகும் யுயுதானன் (இவன்மிக அதிகமாய் பலமுறை யுத்தம் செய்பவன்) விராடன், மஹாரதனும் துருபத மகாராஜன் (மஹாரதன் எனின் தன்னையும் சாரதியையும் குதிரைகளையும் காத்துக்கொண்டு தனுர்வித்யையில் பண்டிதனாய் பதினாயிரம் வில்லாளிகளுடன் போர் செய்பவன்.)

𑌧𑍃𑌷𑍍𑌟𑌕𑍇𑌤𑍁 𑌶𑍍𑌚𑍇𑌕𑌿𑌤𑌾𑌨𑌃 𑌕𑌾𑌶𑍀𑌰𑌾𑌜𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ।
𑌪𑍁𑌰𑍁𑌜𑌿 𑌤𑍍𑌕𑍁𑌨𑍍𑌤𑌿𑌭𑍋𑌜𑌶𑍍𑌚 𑌶𑍈𑌬𑍍𑌯𑌶𑍍𑌚 𑌨𑌰𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌃 ॥ ௫

த்ருஷ்டகேது ஶ்சேகிதாந: காஶீராஜஶ்ச வீர்யவாந்,
புருஜி த்குந்திபோஜஶ்ச ஶைப்யஶ்ச நரபுங்கவ:. ௫

ధృష్టకేతు శ్చేకితానః కాశీరాజశ్చ వీర్యవాన్,
పురుజి త్కున్తిభోజశ్చ శైబ్యశ్చ నరపుఙ్గవః. ౫

5. த்ருஷ்டகேது, சேகிதானன், பராக்ரமனாகும் காசிராஜன், புருஜித், குந்திபோஜன், புருஷசிரேஷ்டனாகும் சைப்யன்.

𑌯𑍁𑌧𑌾𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌵𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤 𑌉𑌤𑍍𑌤𑌮𑍌𑌜𑌾 𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 ॥

யுதா மந்யுஶ்ச விக்ராந்த உத்தமௌஜா ஶ்ச வீர்யவான்,
ஸௌபத்ரோ த்ரௌபதேயாஶ்ச ஸர்வஏவ மஹாரதா:. ௬

యుధామన్యుశ్చ విక్రాన్త ఉత్తమౌజాశ్చ వీర్యవాన్,
సౌభద్రో ద్రౌపదేయాశ్చ సర్వఏవ మహారథాః. ౬

6. பராக்ரமசாலியாகும் யுதாமன்யு, வீர்யமுள்ள உத்தமௌஜஸ், சுபத்ரகுமாரன். (சுபத்ரகுமாரன் என்பதால் புருஷோத்தமனுக்கும் கிருஷ்ணனின் ஆப்தபந்து என்று அறியப்படுகிறது) திரௌபதிகுமாரர்கள் (இவ்வாறு கூறுதலால் நினைத்தமாத்ரத்தில் மஹாபாபத்தைப் போக்கவல்ல பஞ்சகன்யரில் ஒருத்தி ஆதலால் அவளுடைய குமாரர் வெற்றியடையத்தக்கவர் என்பது தாத்பர்யம்) இவர்களனைவரும் மஹாரதரே.

அஸ்மாகந்து விஶிஷ்டா யே தாந்நிபோத த்விஜோத்தம ।
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்தம் தாந்ப்ரவீமி தே ॥ ௭

அஸ்மாகந்து விஶிஷ்டா யே தா ந்நிபோத த்விஜோத்தம,
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்தம் தா ந்ப்ரவீ மிதே. ௭

అస్మాకంతు విశిష్టా యే తా న్నిబోధ ద్విజోత్తమ,
నాయకా మమ సైన్యస్య సంజ్ఞార్థం తా న్బ్రవీ మితే. ౭

7. (நம் பக்க லிருப்பவர்களை நீ கவனிக்கவில்லையா என்று துரோணாசார்யன் கேட்கையில் துர்யோதன னிவ்வாறு விடைகூறினன்.) நம்மில் உத்கிருஷ்டராய் என் சைன்யத்திற்குநாயகராய் உள்ளவர்களை உமக்குத் தெரிவிக்க (எனின் நானறிவேன் உமக்கரிவிக்க) கூறுகின்றேன். ஓ பிராம்மணோத்தமனே! அவர்களைக் கேள்.

பவாந்பீஷ்மஶ்ச கர்ணஶ்ச க்ருபஶ்ச ஸமிதிஞ்ஜய: ।
அஶ்வத்தாமா விகர்ணஶ்ச ஸௌமதத்திஸ்ததைவ ச ॥ ௮

பவா ந்பீஷ்மஶ்ச கர்ணஶ்ச க்ருபஶ்ச ஸமிதிஞ்ஜய:,
அஶ்வத்தாமா விகர்ணஶ்ச ஸௌமதத்தி ஸ்ததைவச. ௮

భవా న్భీష్మశ్చ కర్ణశ్చ కృపశ్చ సమితిఞ్జయః,
అశ్వత్థామా వికర్ణశ్చ సౌమదత్తి స్తథైవచ. ౮

8. நீங்கள் பீஷ்மாச்சாரியன், கர்ணன், யுத்தத்தில் ஜயசீலனாகும் கிருபாசார்யன், அஶ்வத்தாமன், விகர்ணன், அவ்வாறே சோமதத்தன் குமாரனும்.

அந்யே ச பஹவ ஶூரா மதர்த்தே த்யக்தஜீவிதா: ।
நாநாஶஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே யுத்தவிஶாரதா: ॥ ௯

அந்யேச பஹவ ஶ்ஶூரா மதர்த்தே த்யக்த ஜீவிதா:,
நாநா ஶஸ்த்ர ப்ரஹரணா ஸ்ஸர்வே யுத்த விஶாரதா:. ௯

అన్యేచ బహవ శ్శూరా మదర్థే త్యక్త జీవితాః,
నానా శస్త్ర ప్రహరణా స్సర్వే యుద్ధ విశారదాః. ౯

9. அநேகங்களான சஸ்த்ராஸ்த்ரங்களைப் பெற்று அனைவரும் யுத்தசமர்த்தரா யிருக்கின்றனர். அநேகர் இதர சூரர்கள் என்பொருட்டு உயிர்விட வந்திருக்கின்றனர். (எனின் அவ்வளவு சிரத்தையுட னிருக்கின்றனர் என்பதாம்.)

(துர்யோதனனுக்கு மேல் தெரிவித்தவரிடம் யுத்தத்திற்குமுன் நல்ல அபிப்ராய மிருந்தது. யுத்தசமயத்தில் வேறாய் அவரிடத்து அபிப்ராயம் உண்டாயிற்று. இவ்விரண்டபிப்ராயங்கள் தெரிவிக்கப்படுகின்றன.)

நீ (துரோணன்) பிராம்மணோத்தமன் பிர்ம்மபலம், க்ஷத்ரியபலம், உனக்குப் பூர்த்தியாக இருக்கின்றன. இவ்வகைப்பட்ட நீ எனக்கு துணையாக இருக்கின்றனை.

பீஷ்மன், தான் ராஜ்யார்ஹனாயினும் தன் தந்தையின் சுகத்தைக்கருதி ராஜ்யாபிலாஷையை விட்டு விவாகஞ் செய்துகொள்வதில்லை யென்று ப்ரதிஞ்ஞை செய்து தன் தந்தையி னிரண்டாவது மனைவியின் புத்ரனுக்கே ராஜ்யத்தைத் தருவதாக வாக்தத்தஞ் செய்து தந்தைக்கு விவாகஞ் செய்வித்து ஆனந்தபரிதனாகிய தந்தையால் ஸ்வச்சந்தமாணம் அதாவது நினைத்தபோது மரணமடைய வரம்பெற்றவன். இப்படிப்பட்டவன் எனககுத் துணையானவன்.

கர்ணன் இவன் இறப்பதற்கெண்ணி இந்திரன் கர்ணகுண்டலங்களையும் கவசத்தையும் யாசிக்க எண்ணினன். தன்புத்திரனுக்கு இவ்வகை விபத்து நேரப்போகிறதென்று அறிந்து சூர்யன் கர்ணனுக்குப் ப்ரத்யக்ஷமாய் உன்னை யாசிப்பவனுக்கு கவசகுண்டலங்களைக் கொடாதே யென்று கூறினன். அதற்கு இந்தமஹாத்மா கவசம்கொடுக்கின் யுத்தத்தில் முன்பே இறப்பன். கொடாதிருப்பேனல் யாசித்து விபலமனோரதனாய்ச் செல்லும் அவனுடன் என்னுயிரும் போம் என்னச் சூரியன் ஆயின் உன் ப்ராணரக்ஷணத்தின்பொருட்டு ஏதேனும் ஸாதனம் கொடுக்கும்படி வேண்டுக என்று கூறிப்போயினன். கர்ணன் அவ்வாறே தன்னை யாசித்த இந்திரனுக்கு கவசகுண்டலங்களைத் தந்து அவனிடமிருந்து எவ்வகையராயினும் ஒருவனை ஒருமுறையில் சொல்லத்தக்க சக்தியெனும் ஆயுதத்தைப்பெற்றனன். இவ்வகைப்பட்ட கர்ணன் எனக்குத் துணைவன்.

கிருபாசாரி, அச்வத்தாமன் துரோணாசாரியரை யொத்தவர்களே. விகர்ணன் மஹாநீதிமான், ஜயத்ரதன் (எங்குச்செல்லினும் செயிக்கத்தக்கவன்.) இவன் திரௌபதியை மோஹித்து ரதத்தில் வைத்துக்கொண்டு செல்கையில் பீமார்ச்சுனர் இவனைப் பங்கப்படுத்தினர். இவன் கையா லிவனைக் கொல்லாது விடுத்தனர். (இவன் திருதராட்டிரன் குமரி துச்சலையின் நாயகன்) பிறகு இவன் சிவனை யெண்ணித் தவமியற்றி பாண்டவர்களை வெல்ல வரம் பெற்றனன். இவன் எனக்குத் துணைவன்.

അപര്യാപ്തം തദസ്മാകം ബലം ഭീഷ്മാഭിരക്ഷിതം ।
പര്യാപ്തം ത്വിദമേതേഷാം ബലം ഭീമാഭിരക്ഷിതം ॥ ൧൦

அபர்யாப்தம் த தஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம்;
பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம். ௧0

అపర్యాప్తం తదస్మాకం బలం భీష్మాభిరక్షితమ్,
పర్యాప్తం త్విదమేతేషాం బలం భీమాభిరక్షితమ్. ౧౦.

10. பீஷ்மனால் ரக்ஷிக்கப்பட்ட சைந்யம் செம்மையாய் யுத்தஞ்செய்யத் தக்கது. பீமனால் ரக்ஷிக்கப்பட்ட பாண்டவசேனைக்கு அவ்வளவு வலிமையில்லை (என்று துர்யோதனன் சொல்லுகையில் துரோணன் இப்படிப்பட்டவ ரிருக்கையில் பயமேனெனில் இவர்களிடத் திப்போது தனக்குத் தோன்றும் லோபங்களைத் துர்யோதனன் கூறுகின்றான்.)

நீ (துரோணன்) உன்னைக் கொல்ல வரம் பெற்ற சாத்தகியுடன் யுத்தஞ்செய்ய த யாராயிருக்கின்றாய். அதுவன்றியும் என்போஷணையி லிருந்து அருச்சுநனுக்குச் சமானமானவறில்லையென்று வரங்கொடுத்து வித்யாதானஞ்செய்த துரோஹமுள்ளவன். எனக்கு உதவிசெய்யத்தக்க ஏகலவனை விரலைப் போக்கடித்தவன். த்விஜோத்தமனாகையால் நிமந்த்ரணத்திற்கு அருகனேயன்றி நீ யுத்தத்திற் கருகனல்லன்.

பீஷ்மன் பஞ்சபாண்டவர்களைக் கொல்வேனெனும் பக்ஷபாதியான சேனாதிபதியா யிருக்கின்றானாகையால் அவனால் என்னபலன். கர்ண னிந்திரனால் சக்தியைப்பெற்றும் அது சமயத்தில் உபயோகமாகாதென்று சாபத்தையுமடைந்திருக்கின்றான். ஆகையால் சக்தியிருப்பதால் என்னபயன். கிருபாசாரியன் துரோணாசாரியனைப்போல் பிராம்மணன் அச்வத்தாமனுக்குப் பிரம்மசிரஸ்ஸென்னு மாயுதத்தின் உபசம்மாரம் தெரியாது. அருச்சுநனுக்கு மிஞ்சிப்போகக்கூடாதென்னும் அபிப்பிராயத்தால் புத்ரனாயினும் நீ (துரோணன்) இதை அவனுக்கு உபதேசிக்கவில்லை. ஆகையால் அவனால் என்னபயன். விகர்ணன் இவ்வளவு நீதிமான் ஆகையால் எனக்கு அதிகதீமையேநேரும். ஜயத்திரதன் பாண்டவர்களை வெல்ல தபம் ஆசரிக்கையில் சிவன் மெச்சி வரங்கொடுக்க ப்ரத்யக்ஷமாகத் தருக்கி யெழுந்திராமலிருந்தான். ஆகையால் குரூரமரணத்தை யுத்தத்தில் அடைவாயென்று சிவன்சபித்தனர். இப்படிப்பட்டவன் எனக்கு என்ன உதவியாவான். மற்ற அரசர்கள், இவர்களனைவரும் ஒருங்கு கூடின் சூரரேயன்றி தனித்தனி யுத்தஞ்செய்யவலிமைபெற்றவர்களல்லர். அவர்கள் என்பொருட்டுப் பிராணங்களைவிட இருக்கின்றனர். (எனின் சர்வசித்தமா யிருக்கின்றனர் என்பது பாவம்) ஆகையால் இவர்களால் பிரயோஜனம் இராது. இவ்வாறாகையால் பீஷ்மனால் ரக்ஷிக்கப்பட்ட இந்த நமதுசைன்யம் ஜயத்தை அடையாது. பீமனால் ரக்ஷிக்கப்பட்ட இந்த அவர்களின் சேனைக்கு வெற்றி உண்டாகும்.

பீமனை பீஷ்மனுக்கு எதிரியாக எண்ண பீமன் அரசனா? அவ்வாறாயினும் தருமராஜனில்லையா? இவனென்ன சேனாதிபனா? அவ்வாறாயினும் சாத்தகியைக்காட்டிலுஞதா? அன்றிச் சூரனா? அவ்வாறாயினும் அர்ச்சுனனைக்காட்டிலு

ஞதா? அன்றிச் சமர்த்தஞ? அவ்வாருயினும் கிருஷ்ணனேக்கூடுருணதா எனின் இவர்களிருவரும் பிரதிஞ்ஞைசெய்திருக்கின்றனர். அதாவது பீஷ்மன் பாண்டவர்கள் ஐவரையும் கொல்லேனென்பது பீமனது பிரதிஞ்ஞை கௌரவர் நூற்றுவரையும் அவனே கொல்வன்என்பது. ஆகையாற்றுன் இவர்களிருவரைப்பற்றித் துர்யோதனன் பீஷ்மாபிரக்ஷிதம் பீமாபிரக்ஷிதம் என்றுன்.)

𑌅𑌯𑌨𑍇𑌷𑍁 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌯𑌥𑌾𑌭𑌾𑌗𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ।
𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌰𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍁 𑌭𑌵𑌨𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌹𑌿 ॥ ௧௧

அயநேஷு ச ஸர்வேஷு யதாபாக மவஸ்திதா:,
பீஷ்ம மேவா பிரக்ஷந்து பவந்த ஸ்ஸர்வஏவ ஹி. ௧௧

అయనేషుచ సర్వేషు యథాభాగ మవస్థితాః,
భీష్మ మేవాభిరక్షన్తు భవన్త స్సర్వఏవ హి. ౧౧

11. எல்லாவழிகளிலும் நீங்கள் எல்லாரும் உங்கள் உங்கள் பிரதேசங்களில் அசையாமலிருந்து பீஷ்மனை ரக்ஷிக்கவும். (பீஷ்மனை யேன் காக்கவேண்டுமெனின் பாண்டவர்கள் சஸ்திரங்களிவன்மீது பிரயோகிக்கினும் அவர்களின் க்ஷேமத்தைக் கோரின இவன் பதில் சஸ்திரங்கள் அவர்கள் மீது பிரயோகஞ்செய்யான். ஆகையால் அவரில் சிறப்பான் என்பது பாவம்.)

𑌤𑌸𑍍𑌯 𑌸𑌞𑍍𑌜𑌨𑌯𑌨𑍍𑌹𑌰𑍍𑌷𑌂 𑌕𑍁𑌰𑍁𑌵𑍃𑌦𑍍𑌧𑌃 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ।
𑌸𑌿𑌂𑌹𑌨𑌾𑌦𑌂 𑌵𑌿𑌨𑌦𑍍𑌯𑍋𑌚𑍍𑌚𑍈𑌃 𑌶𑌙𑍍𑌖𑌂 𑌦𑌧𑍍𑌮𑍌 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑌾𑌨𑍍 ॥

தஸ்ய ஸஞ்ஜநய ந்ஹர்ஷம் குருவ்ருத்த: பிதாமஹ:,
ஸிம்ஹநாதம் விநத்யோச்சைஶ்ஶங்கம் தத்மௌப்ரதாபவாந். ௧௨

తస్యసంజనయ న్హర్షం కురువృద్ధః పితామహః,
సింహనాదం వినద్యోచ్చై శ్శంఖం దధ్మౌప్రతాపవాన్. ౧౨

12. தன்னிடம் சம்சயம் உண்டாயிற்றென்று தெரிந்துக்கொண்டு பராக்ரமசாலியும், பிதாமஹனும், குருவம்சத்தவனும், ஆகிய பீஷ்மன் துர்யோதனனுக்கு உற்சாகத்தை உண்டாக்கிக்கொண்டு உயர்ந்த கோஷத்துடன் சிங்காதஞ்செய்து சங்கத்தைப் பூரித்தான்.

𑌤𑌤𑌃 𑌶𑌙𑍍𑌖𑌾𑌶𑍍𑌚 𑌭𑍇𑌰𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌣𑌵𑌾𑌨𑌕𑌗𑍋𑌮𑍁𑌖𑌾𑌃 ।
𑌸𑌹𑌸𑍈𑌵𑌾𑌭𑍍𑌯𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤 𑌸 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍁𑌮𑍁𑌲𑍋𑌽𑌭𑌵𑌤𑍍 ॥

தத ஶ்ஶங்காஶ்ச பேர்யஶ்ச பணவாநக கோமுகா:,
ஸஹஸைவா ப்பஹந்யந்த ஸ ஶப்த ஸ்துமுலோபவத். ௧௩

తత శ్శంఖాశ్చ భేర్యశ్చ పణవానక గోముఖాః,
సహసైవా భ్యహన్యన్త స శబ్ద స్తుములో౽భవత్. ౧౩

13. பிறகு சங்கநாத முதலநேகவாத்யங்கள் ஒரேதடவையில் கோஷிக்கப்பட்டு அந்த வொலி யெங்கும் வியாபித்தது.

𑌤𑌤𑌶𑍍𑌶𑍍𑌵𑍇𑌤𑍈𑌰𑍍𑌹𑌯𑍈𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌮𑌹𑌤𑌿 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌨𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 |
𑌮𑌾𑌧𑌵𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌶𑍍𑌚𑍈𑌵 𑌦𑌿𑌵𑍍𑌯𑍌 𑌶𑌙𑍍𑌖𑍌 𑌪𑍍𑌰𑌦𑌧𑍍𑌮𑌤𑍁𑌃 ‖

தத ஶ்வேதைர்ஹயை ர்யுக்தே மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ,
மாதவ: பாண்டவஶ்சைவ திவ்யௌ ஶங்கௌ ப்ரதத்மது:. கச

తత శ్శ్వేతై ర్హయై ర్యుక్తే మహతి స్యన్దనే స్థితౌ,
మాధవః పాణ్డవశ్చైవ దివ్యౌ శంఖౌ ప్రదధ్మతుః. ౧౪

14. (அந்தப் பக்கத்தவர் செய்தி யென்னவாயிற்றெண திருதராஷ்டிரன் வினவுகையில் சஞ்ஜயன் அந்தச்சங்கதியைத்தெரிவிக்கலானான்.) பிறகு வெள்ளைக்குதிரைகள் கட்டின மஹாரதத்திலிருந்த கிருஷ்ணார்ச்சுனர்கள் தங்கள் திவ்ய சங்கங்களிரண்டையும் பூரித்தனர்.

(திவ்யசங்கங்கள் என்பதால் இதரசங்கங்களைக்காட்டிலும் இவை சிரேஷ்டதரங்களென்று பாவம். ப்ரதத்மது: என்றபோது ப்ர உபயோகித்ததால் இவர்களது சங்கத்வனியில் விசேஷம் அறியப்படுகிறது.) இந்தச்சுலோகத்தில் ரதம் சரீரமாகவும், வெள்ளைக்குதிரைகள் சுத்தேந்திரியங்களாகவும், கிருஷ்ணார்ச்சுனர்கள் பரமாத்மா ஜீவாத்மாக்களாகவும், சங்கங்களைப்பூரித்தல் ஞானசாதனங்களை யோசித்தலாகவும், த்வனி ஏற்படுகின்றது. இந்தச்சுலோகத்திற்கே பகவத்கீதையில் கிருஷ்ணன்ஆசாரியனாய் அருக்சுனன் சிஷ்யனுக்விருந்து ஸர்வோத்கிருஷ்டமான வேதப்ரமாணமாகும் பிரணவார்த்தத்தை செம்மையாய்ப்பேசினானொன்று பொருள் படுகின்றது.

𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌂 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑌂 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯𑌃 |
𑌪𑍌𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌦𑌧𑍍𑌮𑍌 𑌮𑌹𑌾𑌶𑌙𑍍𑌖𑌂 𑌭𑍀𑌮𑌕𑌰𑍍𑌮𑌾 𑌵𑍃𑌕𑍋𑌦𑌰𑌃 ‖ கரு

பாஞ்சஜந்யம் ஹ்ருஷீகேஶோ தேவதத்தம் தனஞ்ஜய:,
பௌண்ட்ரம் தத்மௌ மஹாஶங்கம் பீமகர்மா வ்ருகோதர:. கரு

పాఞ్చజన్యం హృషీకేశో దేవదత్తం ధనఞ్జయః,
పౌణ్డ్రం దధ్మౌ మహాశఙ్ఖం భీమకర్మా వృకోదరః. ౧౫

15. (இவர்களின் பெரிய சங்கங்களின் பெயர்களைக்கூறும்படி அரசன் கேட்கையில் சாரதிகூறுகிறான்.) கிருஷ்ணன் பாஞ்சசன்யத்தையும் இதற்கிப் பெயர் எவ்வாறு வந்ததெனில் கிருஷ்ணன் தன்குருபுத்ரனை அபகரித்த பஞ்சகன் எனும் ராக்ஷஸனைக்கொன்று அவன்சல்யத்தை சங்கமாகச்செய்து கொண்டனனாதலாலிப்பெயரிதற்குவந்தது.) அருச்சுனன் தேவதத்தத்தையும் (ராக்ஷஸர்களை வெல்வதற்காக இந்திரன் முதலான முக்கோடி தேவர்களால்

கொடுக்கப்பட்டதாகையால் இதற்கிப்பெயர் வாய்த்தது) பயங்கரமான வியாபாரமுடைய பீமசேனன் பௌண்ட்ரமென்னும் மஹாசங்கத்தையும் (மஹாசங்க மென்றதால் பெரிய தென்று பாவம். இவன் ஸர்வபக்ஷகன் எனும் விருகம் எனும் அக்னியை வயிற்றில் பெற்றிருக்கின்றான். ஆகையால் இவன்சங்கம் மஹாசங்கம் எனப்பட்டது)

𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑌯𑌂 𑌰𑌾𑌜𑌾 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌪𑍁𑌤𑍍𑌰𑍋 𑌯𑍁𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌰𑌃 ।
𑌨𑌕𑍁𑌲𑌃 𑌸𑌹𑌦𑍇𑌵𑌶𑍍𑌚 𑌸𑍁𑌘𑍋𑌷𑌮𑌣𑌿𑌪𑍁𑌷𑍍𑌪𑌕𑍌 ॥ ௧௬

அநந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிர:,
நகுல ஸ்ஸஹதேவஸ்ச ஸுகோஷமணிபுஷ்பகௌ. ௧௬

అనన్తవిజయం రాజా కున్తీపుత్రో యుధిష్ఠిరః,
నకుల స్సహదేవశ్చ సుఘోషమణిపుష్పకౌ. ౧౬

16. குந்தி புத்ரனான தருமராஜன் அநந்த விஜயமெனும் சங்கத்தையும் (அநந்த விஜயமெனின் எப்போதும் வெற்றியைத்தெரிவிப்பது) நகுல ஸஹாதேவர்கள் ஸுகோஷமணிபுஷ்பகங்களையும் (ஸுகோஷம் = இனியஓசையுள்ளது. மணி புஷ்பகம் = இளையனாகிய சகாதேவன் விநோதமாய் மணிகளாலும் புஷ்பங்களாலும் தன் சங்கத்தை அலங்கரித்துக் கொண்டனன் என்று பாவம்.)

𑌕𑌾𑌶𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌮𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌃 𑌶𑌿𑌖𑌣𑍍𑌡𑍀 𑌚 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 ।
𑌧𑍃𑌷𑍍𑌟𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑍋 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌸𑌾𑌤𑍍𑌯𑌕𑌿𑌶𑍍𑌚𑌾𑌪𑌰𑌾𑌜𑌿𑌤𑌃 ॥ ௧௭

காஸ்யஸ்ச பரமேஷ்வாஸ ஸ்ஸிகண்டீச மஹாரத:,
த்ருஷ்டத்யும்நோ விராடஸ்ச ஸாத்யகிஸ்சா பராஜித:. ௧௭

కాశ్యశ్చ పరమేష్వాస శ్శిఖణ్డీచ మహారథః,
ధృష్టద్యుమ్నో విరాటశ్చ సాత్యకిశ్చాపరాజితః. ౧౭

17. உத்கிருஷ்டமான வில்லையுடைய காசி அரசன், மஹாரதனான சிகண்டி, திருஷ்டத்யும்நன், விராடன், அபஜயமடையாத சாத்தகி.

𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌪𑌤𑍇 ।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍁𑌃 𑌶𑌙𑍍𑌖𑌾𑌨𑍍𑌦𑌧𑍍𑌮𑍁𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍃𑌥𑌕𑍍 ॥

த்ருபதோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வஸ: ப்ருதிவீபதே,
ஸௌபத்ரஸ்ச மஹாபாஹு ஸ்ஸங்காந்தத்மு:ப்ருதக்ப்ருதக். ௧௮

ద్రుపదో ద్రౌపదేయాశ్చ సర్వశః పృథివీపతే,
సౌభద్రశ్చ మహాబాహు శ్శంఖాన్దధ్ముః పృథక్పృథక్. ౧౮

18. துருபதன் திரௌபதிகுமாரர்கள் மஹாபாஹுவான சுபத்ரைகுமாரன். அனைவரும் வெவ்வேறாக (எனின் துர்யோதனனதியர் அனைவரும் சேர்ந்து ஒரு

புறமாக சங்கநாதஞ்செய்தனர் என்பது) தங்கள் தங்கள் சங்கங்களைப்பூரித்தனர். ஓ ப்ருதிவீபதீ ! (ப்ருதிவீபதி என்று விளி வேற்றுமையால், யதேச்சமான பூமியைப்பெற்றிருந்தும் நீ அப்பொழுது அவர்களுக்கு (பாண்டவர்களுக்கு) பாகித்துக்கொடாமையாலன்றோ இந்த விபத்து நேரிட்டதென்று எடுத்திடித்தல் அன்றியும் இவன் விருதுகள் இவ்வளவில் முடிவென்றும் பொருள் படுகின்றது.)

𑌸 𑌘𑍋𑌷𑍋 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌦𑌾𑌰𑌯𑌤𑍍 ।

𑌨𑌭𑌶𑍍𑌚 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂 𑌚𑍈𑌵 𑌤𑍁𑌮𑍁𑌲𑍋 𑌵𑍍𑌯𑌨𑍁𑌨𑌾𑌦𑌯𑌨𑍍 ॥ ௧௯

ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ருணும் ஹ்ருதயாநி வ்யதாரயத்,
நபஸ்ச ப்ருதிவீம்சைவ துமுலோ வ்ய நுநாதயந். ௧௯

స ఘోషో ధార్తరాష్ట్రాణాం హృదయాని వ్యదారయత్,
నభశ్చ పృథివీంచైవ తుములో వ్యనునాదయన్. ౧౯

19. (இந்தச்சத்தத்தைக்கேட்டு என்புத்ரர்களின் மனது எவ்வாறிருந்ததென்று திருதராஷ்டிரன் வினவினன். சஞ்ஜயன் இவ்வாறு கூறினன்.) அந்த உயர்ந்த சங்கநாதம் ஆகாசத்தையும் பூமியையும் ப்ரதித்வனிக்கச்செய்து உன் குமாரர்களின் மனதுகளைப் பேதிக்கசெய்தது. (பேதித்தல் எனின் பேதித்தால் எவ்வாறிருக்குமோ அவ்வாறிருக்குமெனல்.)

திரு—பாண்டவர் பயப்படவில்லையா ?

சஞ்—அப்போது ருஷிகேசனிவ்வாறு சங்கற்பித்தான். இந்தச்சமயம் தப்பினுல் யுத்தஞ்செய்தல். அது ஆயினபிறகு ராஜ்ய சுகத்தை அனுபவித்தல் ஏற்படும். வேதாந்தம் மனதிற்கெட்டாது. ஆகையால் கீதை உபதேசிக்க இதுவே சமயம் என்று ருஷிகேசன் எண்ணின மாத்திரத்தில் அருச்சுனனது மனம் வேறுபட்டு விஷாதத்தில் அமிழ்ந்தது.

𑌅𑌥 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍 𑌕𑌪𑌿𑌧𑍍𑌵𑌜𑌃 ।

𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌮𑍍𑌪𑌾𑌤𑍇 𑌧𑌨𑍁𑌰𑍁𑌦𑍍𑌯𑌮𑍍𑌯 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌃 ॥ ௨௦

அத வ்யவஸ்திதாந்த்ருஷ்ட்வா தார்த்தராஷ்ட்ருன் கபித்வஜ:,
ப்ரவ்ருத்தே ஶஸ்த்ரஸம்பாதே தநு ருத்யம்ய பாண்டவ:. ௨௦

అథ వ్యవస్థితాన్దృష్ట్వా ధార్తరాష్ట్రాన్ కపిధ్వజః,
ప్రవృత్తే శస్త్రసమ్పాతే ధనురుద్యమ్య పాణ్డవః. ౨౦

20. பிறகு சஸ்திரயுத்தம் தொடங்குகையில் கபித்வஜனுகும் அருச்சுநன் யுத்தஸன்னத்தராயிருக்கும் உன்குமாரர்களைப்பார்த்து வில்லையெடுத்துக்கொண்டு, ஓ அரசனே ! அப்போது கிருஷ்ணனை நோக்கி இவ்வாறு கூறினன்.

𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌂 𑌤𑌦𑌾 𑌵𑌾𑌕𑍍𑌯 𑌮𑌿𑌦 𑌮𑌾𑌹 𑌮𑌹𑍀𑌪𑌤𑍇 ।
𑌸𑍇𑌨𑌯𑍋 𑌰𑍁𑌭𑌯𑍋 𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌰𑌥𑌂 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯 𑌮𑍇𑌽𑌚𑍍𑌯𑍁𑌤 ॥

ஹ்ருஷீகேஶம் ததா வாக்ய மித மாஹ மஹீபதே,
ஸேநயோ ருபயோ ர்மத்யே ரதம் ஸ்தாபய மேச்யுத. ௨௧

హృషీకేశం తదా వాక్య మిద మాహ మహీపతే,
సేనయో రుభయో ర్మధ్యే రథం స్థాపయ మేఽచ్యుత. ౨౧

21. ஓ அச்யுதா! இரண்டுசேனைகளுக்கும் இடையில் என் ரதத்தை நிறுத்து. (இவ்வாறு இரண்டுசேனைகளுக்கும் இடையில் ரதத்தை நிறுத்தும்படி அதிகாரத்தைச் செலுத்தலினால் கிருஷ்ணனுக்குக்கோபம் வராதிருத்தற்பொருட்டு, அச்யுத = எனின் ஆச்ரித வாச்சல்யம் உள்ளவனே என்று இந்தச்சுலோகத்தில் அருச்சுநன் விளித்தான் என்றும், அன்றி ரதத்தைச் சேனைகளுக்கிடையில் நிறுத்தின் உன்குதிரைகள் நிற்குமா என்று கண்ணன் வினவுகையில் அச்யுதன் சலித்தலில்லாதவன் ஆதலால், நிறுத்த சமர்த்தன் என்று கூறியதாம்.

𑌯𑌾𑌵 𑌦𑍇𑌤𑌾 𑌨𑍍𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑍇𑌽𑌹𑌂 𑌯𑍋𑌦𑍍𑌧𑍁𑌕𑌾𑌮𑌾 𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 ।
𑌕𑍈𑌰𑍍𑌮𑌯𑌾 𑌸𑌹 𑌯𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯 𑌮𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌰𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌯𑌮𑍇 ॥ ௨௨

யாவ தேதா ந்நிரீக்ஷேஹம் யோத்துகாமா நவஸ்திதாந்,
கைர்மயா ஸஹ யோத்தவ்ய மஸ்மிந் ரணஸமுத்யமே. ௨௨

యావ దేతా న్నిరీక్షేఽహం యోద్ధుకామా నవస్థితాన్,
కైర్మయా సహ యోద్ధవ్య మస్మిన్ రణసముద్యమే. ౨౨

22. இப்போது நான் எவருடன் யுத்தஞ் செய்யவேண்டுமோ பார்க்கலாமென்று யுத்தஞ்செய்ய எண்ணி நிற்கின்ற இவர்களைப் பார்க்கிறேன்.

𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌮𑌾𑌨𑌾 𑌨𑌵𑍇𑌕𑍍𑌷𑍇𑌽𑌹𑌂 𑌯 𑌏𑌤𑍇𑌽𑌤𑍍𑌰 𑌸𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 ।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍇 𑌰𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑌵𑌃 ॥

யோத்ஸ்யமாநா நவேக்ஷேஹம் யஏதேத்ர ஸமாகதா:,
தார்த்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தே ர்யுத்தே ப்ரியசிகீர்ஷத:. ௨௩

యోత్స్యమానా నవేక్షేఽహం యఏతేఽత్ర సమాగతాః,
ధార్తరాష్ట్రస్య దుర్బుద్ధే ర్యుద్ధే ప్రియచికీర్షవః. ౨౩

23. துற்புத்தியான துர்யோதனனுக்கு யுத்தத்தில் நன்மைசெய்ய எண்ணி இவ்விடம் வந்துள்ளவர்கள் எவர்களோ அவர்களைப் பார்க்கிறேன். (துர்யோதனனுக்கு நன்மைசெய்ய வெண்ணி யென்பதால் என்னிடத்தில் பகைபாராட்டாமல் பலர் அவ்விடத்தில் இருக்கின்றனர் எனவும், பகையில்லாத அப்படிப் பட்டவர்களைக் கொல்லக்கூடாதென்பதும் கருத்து.)

𑌸𑌞𑍍𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚.

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌰𑌥𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥
𑌭𑍀𑌷𑍍𑌮𑌦𑍍𑌰𑍋𑌣𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌮𑌹𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌮𑍍 ।
𑌉𑌵𑌾𑌚 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌨𑍍 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾𑌨𑍍𑌕𑍁𑌰𑍂𑌨𑌿𑌤𑌿 ॥

ஏவ முக்தோ ஹ்ருஷீகேஶோ குடாகேஶேந பாரத,
ஸேநயோ ருபயோ ர்மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம். ௨௪
பீஷ்ம த்ரோண ப்ரமுகத ஸ்ஸர்வேஷாஞ் ச மஹீக்ஷிதாம்,
உவாச பார்த்த பஶ்யைதாந் ஸமவேதா ந்குரூநிதி. ௨௫

ఏవ ముక్తో హృషీకేశో గుడాకేశేన భారత,
సేనయో రుభయో ర్మధ్యే స్థాపయిత్వా రథోత్తమమ్. ౨౪
భీష్మ ద్రోణ ప్రముఖత స్సర్వేషాం చ మహీక్షితామ్,
ఉవాచ పార్థ పశ్యైతాన్ సమవేతా న్కురూనితి. ౨౫

ஸஞ்ஜயன் கூறுதல்.

**24-25.** ஓ பாரதா! குடாகேச னிவ்வாறு கூறுகையில் இருடிகேசன் பீஷ்மத்ரோணர்களுக்கும் அரசர்களனைவர்களுக்கும் எதிராக உத்தமமான ரதத்தை இரண்டுசேனைகளுக்கும் இடையில் நிறுத்தி ஓஅருச்சுனா கூடியிருக்கும் இந்தக் கௌரவர்களைப் பார் என்று கூறினான். (குடாகேசன் எனின் நித்ரையைச் சயித்தவன் எனின் சாகரூகன் என்பது பொருள். அன்றி செம்பட்டமயிர்களை யுடையவன் என்பதாம். இருடிகேசன் எனின் நல்ல தலைமயிர்களை யுடைய வன் என்பதாம்.)

𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌨𑍍𑌸𑍁𑌹𑍃𑌦𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 ।
𑌤𑌾𑌨𑍍𑌸𑌮𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌬𑌨𑍍𑌧𑍂𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 ॥

ஶ்வஶுரா ந்ஸுஹ்ருதஶ்சைவ ஸேநயோ ருபயோரபி,
தா ந்ஸமீக்ஷ்ய ஸகௌந்தேய ஸ்ஸர்வா ந்பந்தூநவஸ்திதாந்.

శ్వశురా న్సుహృదశ్చైవ సేనయో రుభయోరపి,
తా న్సమీక్ష్య సకౌన్తేయ స్సర్వా న్బన్ధూనవస్థితాన్.

**26.** அர்ச்சுநன் அவ்விடமிருந்த தந்தையரையும் (பலதந்தையர் எவ்வாறிருந் தனரெனின் தந்தைமுறையுள்ளவர்களையும் பாட்டன் மாரையும் ஆசார்யர்களையும், நல்லம்மான்களையும், அண்ணன் தம்பியரையும், புத்ர பௌத்ரர்களையும், மித்திரர்களையும்.)

**26½.** மாமன்மார்களையும், ஸுஹ்ருத்களையும், இரண்டுசேனைகளில் கண்டான் (சகுனிக்கும் சுஹ்ருத்துக்கும் உள்ள வேறுபாடு என்ன வெனில், முதலிற்

கூறியவன் பதிலுதவியெண்ணுபவன். இரண்டாவதவன் உபகாரத்தை யெண்ணாமலே இதத்தை யெண்ணுபவன்.)

க்ருபயா பரயா விஷ்டோ விஷீத ந்நித மப்ரவீத் ॥ உஎ½
க்ருபயா பரயா விஷ்டோ விஷீத ந்நித மப்ரவீத். உஎ½
కృపయా పరయా విష్టో విషీద న్నిద మబ్రవీత్,

27½. குந்திபுத்ரனாகிய அருச்சுநன் அவ்விடமிருந்த பந்துக்களைக் கண்டு அதிகதயாபரவசனாய் (இந்தத்தயைவிட முயலினும் நீங்காதது) என்று துக்கித் துக்கொண்டு இவ்வாறு கூறினான்.

அர்ஜுந உவாச.

த்ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம் ॥ உஅ
ஸீதந்தி மம காத்ராணி முகஞ்ச பரிஶுஷ்யதி ।
வேபதுஶ்ச ஶரீரே மே ரோமஹர்ஷஶ்ச ஜாயதே ॥ உகூ
காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே ।
நச ஶக்நோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மந: ॥ ௩0

த்ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம். உஅ
ஸீதந்தி மம காத்ராணி முகஞ்ச பரிஶுஷ்யதி,
வேபதுஶ்ச ஶரீரே மே ரோமஹர்ஷஶ்ச ஜாயதே. உகூ
காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தா த்வக்சைவ பரிதஹ்யதே.
நச ஶக்நோ ம்யவஸ்தாதும் ப்ரமதீவச மே மந:. ௩0

దృష్ట్వేమం స్వజనం కృష్ణ యుయుత్సుం సముపస్థితమ్. ౨౮
సీదన్తి మమ గాత్రాణి ముఖంచ పరిశుష్యతి,
వేపథుశ్చ శరీరే మే రోమహర్షశ్చ జాయతే. ౨౯
గాణ్డీవం స్రంసతే హస్తా త్త్వక్చైవ పరిదహ్యతే,
నచ శక్నో మ్యవస్థాతుం భ్రమతీవచ మే మనః. ౩౦

ஸஞ்ஜயன் கூறுதல்.

(28-மு-30-வரை) க்ருஷ்ணா! யுத்தத்திற்கு வந்த இந்தப் பந்துக்களைக் கண்டு என் சரீரத்தி னுறுப்புக்கள் சிதிலமாகின்றன. வா யுலருகிறது. என் உடம்பில் நடுக்கமும் உரோமாஞ்சமும் உண்டாகின்றன. காண்டீவம் கையிலிருந்து நழுவிப்போகின்றது. தேகத்தின் மேற்றோல் எரிகின்றது. நிற்க வலியில்லாதவன் ஆகின்றேன். என்மனம் பிரமையடைந்ததுபோ லிருக்கின்றது.

கிரு—நீ மஹாரதிகன் என்று எண்ணி நான் சாரதியாய் உன்னுடன் இந்த யுத்தத்திற்கு வந்தேன்.

𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾𑌨𑌿 𑌚 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌾𑌨𑌿 𑌕𑍇𑌶𑌵 ।
𑌨 𑌚 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑌾𑌹𑌵𑍇 ॥ ௩௧

நிமித்தானி ச பஶ்யாமி விபரீதானி கேஶவ,
நச ஶ்ரேயோ நுபஶ்யாமி ஹத்வா ஸ்வஜந மாஹவே. ௩௧

నిమిత్తాని చ పశ్యామి విపరీతాని కేశవ,
నచ శ్రేయోఽనుపశ్యామి హత్వా స్వజన మాహవే. ౩౧

31. அரு—கேசவா விபரீதமான சகுனங்கள் எனக்குத் தோற்றுகின்றன.

கிரு—அந்த அபசகுனங்கள் ப்ரதிபக்ஷத் தவருக்கென்று எண்ணுக.

அரு—(தந்தையைக் கொன்று மேலானகாரியம் செய்தேனென்று எவனும்எண்ணுன்) பந்துக்களை யுத்தத்திற் கொன்று நான் மேன்மையை விரும்பவில்லை.

𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍇 𑌵𑌿𑌜𑌯𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌨 𑌚 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 ।
𑌕𑌿𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑍇𑌨 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌕𑌿𑌂 𑌭𑍋𑌗𑍈𑌰𑍍𑌜𑍀𑌵𑌿𑌤𑍇𑌨 𑌵𑌾 ॥

ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண நச ராஜ்யம் ஸுகாநிச,
கிம் நோ ராஜ்யேந கோவிந்த கிம் போகை ர்ஜீவிதேநவா. ௩௨

న కాంక్షే విజయం కృష్ణ నచ రాజ్యం సుఖానిచ,
కిం నో రాజ్యేన గోవిన్ద కిం భోగై ర్జీవితేనవా. ౩౨

32. (கிரு—மேன்மை இல்லை என்கிருயே ஜயம் விசேஷமானதன்ருே.)

அரு—(நகாம் க்ஷேவிஜயம் என்பதால்) நான் ஜயத்தை விரும்பவில்லை. (இவ்வாறு உலகப்பொருள்) அன்றி (விஜயன் எனின் ஜயம் பெற்று வருகிறவன் எனும் உன் பெயர் போம் என்று கிருஷ்ணன் கூறுகையில்) அந்தப் பெயரையுங்கூட நான் விரும்பவில்லை (என்று மற்ருெருபாவம்)

கிரு—ராஜ்யம் லபிக்காது.

அரு—அதை நான் அபேக்ஷிக்கவில்லை.

(கிரு—ராஜ்யம் இல்லாவிடில் சுகம் கிட்டாது.)

அரு—சுகத்தை விரும்பவில்லை.

(கிரு—இவ்வாறு சுகமும் அதற்கேதுவான ராஜ்யமும் வேண்டாமென்பதற்கு நீ பித்தம் பிடித்தவனு என்ன ?)

அரு—எங்களுக்கு ராஜ்யத்தாலும் போகத்தாலும் என்னபயன்?

(கிரு—பிராண ரக்ஷணுர்த்தம் தனம் வேண்டாமா?)

அரு—ஜீவிப்பதால் என்னபயன் உண்டு ?

(கிரு—நீ கூறும் வார்த்தைகளனைத்தும் விஶ்வஸிக்கத்தக்கவை யன்று) (அருச்சுநன் இந்தச் சுலோகத்தில் கோவிந்த என்று விளித்தமையால் இந்திரியங்களுக்கு நியாமகனுதலால் உனக்கு என் மனந் தெரியாதா என்பது பாவம். கோவிந்தன் எனின் இந்திரியங்களுக்கு நியாமகன்.)

(கிரு—பஞ்சபாண்டவர்களுக்கும் நான் நிஷ்பக்ஷபாதியாயிருப்பவன். உனக்கு யுத்தம், ராஜ்யம், போகம் இவைகளில் இச்சையிலாதிருக்கினும் அவர்களுக்கு தவறுமல் இருக்குமாதலால் யுத்தத்தை விட்டுவிடுதல் எனக்குத் தக்கதன்று. (ந: - எங்களுக்கு) இந்தச்சுலோகத்தில் மேல் காட்டப்பட்ட சௌக்யங்கள் எங்களுக்கு வேண்டாமென்று அருச்சுநன் தெரிவித்தால் எங்கள் அனைவருடைய அபிப்ராயங்களும் ஒன்றே என்றுகருத்து.)

𑌯𑍇𑌷𑌾𑌮𑌰𑍍𑌥𑍇 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌤𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌭𑍋𑌗𑌾𑌃 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 ।
𑌤 𑌇𑌮𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌾𑌨𑌿 𑌚 ॥ ௩௩

யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகா ஸ்ஸுகாநிச,
இதமேவஸ்திதா யுத்தே ப்ராணாம் ஸ்த்யக்த்வா தநாநிச.  ௩௩

యేషామర్థే కాంక్షితం నో రాజ్యం భోగా స్సుఖానిచ,
తఇమేzవస్థితా యుద్ధే ప్రాణాం స్త్యక్త్వా ధనానిచ.  33

33. (கிரு—உங்களுக்கு ராஜ்யாபிலாஷை இல்லாதிருக்கினு மிருக்கலாம். பலசுகங்களுக்குக் காரணமான ராஜ்யம் வேண்டாமெனல் தக்கதன்று.)

அரு—எவர்களுக்காக நாங்கள் ராஜ்யம் போகம், சுகம் இவைகளை எண்ணக் கோரினேமோ, அவர்கள் இதோ யுத்தத்தில் ப்ராணங்களையும் தனங்களையும் விட்டு நிற்கின்றனர். (ப்ராணங்களைவிட்டு என்பதால் சாக நிச்சயித்து எனவும், தனங்களை விட்டு எனின் மரணசாசனமுத லிவற்றை யெழுதியும் வந்தனர் என்பது கருத்து) சாதாரணமாய் எவனேனும் தனம் வீடு முதலியவற்றை தன் பந்துக்களுடன் கலந்து அநுபவிப்பதற்கே எண்ணிச் சம்பாதிப்பான். அவ்வகை அன்புள்ள அவர்கள் இல்லாதிருப்பின் அவனுக்குச் சிறிதும் உற்சாக மிராது. இந்தக் கருத்தை அறிவிப்பதற்கே "யேஷாமர்தே காங்க்ஷிதம்" எனின் எவரின்பொருட்டு கோரப்பட்டிருக்கின்றதோ என்று அருச்சுநன் கூறினன்.

𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌪𑌿𑌤𑌰𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌃 ।
𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌃 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌃 𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌃 𑌸𑍍𑌯𑌾𑌲𑌾𑌃 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌸𑍍𑌤𑌥𑌾 ॥

ஆசார்யா: பிதர: புத்ரா ஸ்ததைவச பிதாமஹா:,
மாதுலா ஶ்வஶுரா: பௌத்ரா ஸ்யாலா ஸ்ஸம்பந்தின ஸ்ததா.  ௩௪

ఆచార్యాః పితరః పుత్రా స్తథైవచ పితామహాః,
మాతులా శ్శ్వశురాః పౌత్రా స్స్యాలా స్సమ్బన్ధిన స్తథా. 34

34 (கிரு—அவ்வளவு அன்புள்ளார் உனக்கும் அவ்விடம் எவர் இருக்கின்றனர்.)

அரு—ஆசார்யர், தந்தையர், பிள்ளைகள், பாட்டன்மார், அம்மான்கள், மாமன்மார், பேரன்மார், அத்தை புத்ரர்கள் அவ்வாறே சம்பந்திகள்.

𑌏𑌤𑌾𑌨𑍍𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌘𑍍𑌨𑌤𑍋𑌽𑌪𑌿 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 ।
𑌅𑌪𑌿 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑍋𑌃 𑌕𑌿𑌂 𑌨𑍁 𑌮𑌹𑍀𑌕𑍃𑌤𑍇 ॥

ஏதா ந்ந ஹந்துமிச்சாமி க்நதோபி மதுஸூதன,
அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: கிந்நு மஹீக்ருதே. ௩௫

ఏతాన్న హన్తుమిచ్ఛామి ఘ్నతోఽపి మధుసూదన,
అపి త్రైలోక్యరాజ్యస్య హేతోః కిన్ను మహీకృతే. ౩౫

35 (கிரு—உனக்குள்ள இந்த யோசனை அவருக்கில்லை யாகையால் அவர்கள் உன்னை யுத்தத்தில் வதைக்கத் தொடங்குவர். அதன்பிறகு நீ யுத்தத்தைத் தொடங்குவாய்.)

அரு—என்னை வதைக்கினும் நா னிவர்களைக் கொல்லேன்.

(கிரு—நீ யிவர்களைக் கொன்ருல் பூமிபாரங் குறையும்)

(மதுசூதன எனின் மதுவெனும் ராக்ஷசனைக் கொன்றவன் என்பதுபொருள். அருச்சுனன் இந்தச்சலோகத்தில் இவ்வாறு விறித்தமையால் மதுவெனும் ராக்ஷஸனைக் கொன்றவனுகையால் இவர்க ளனைவரையும் கொல்ல உனக்கே சக்தியுண்டென்பது கருத்து.) நெருப்பை தூண்டிவைத்தால் நன்ருய் எரியும். பாம்பை தூண்டுவிக்கின் அதற்கு ரோஷமுண்டாகும். அவ்வாறுவார்த்தைகள் மேன்மேலும் வளர்த்தலினுலே அருச்சுனனுக்கு வைராக்யம் திடப்படும். பின்பு கீதோபதேசம் செய்யவாருமென்று எண்ணிக் கண்ணன் அருச்சுனனுடன் இப்ரசங்கம் தொடங்கினன்.

(கிரு—பலவருஷங்கள் பிக்ஷை யெடுத்தீர்கள். இப்போது யுத்தஞ் செய்ய துணிந்து வந்தீர்கள். நானும் சாரதியாய் வந்தேன். இப்போது யுத்தஞ் செய்யேன் எனல் தக்கதன்று. என்தங்கையார் சுபத்ரை சுகத்திற்காயினும் யுத்தஞ் செய்க.)

அரு—திரைலோக்யாதிபத்யம் எனக்குக் கிடைப்பதாயினும் இவர்களைக் கொல்ல நினையேன். இனி இந்தபூமிக்காக யுத்தஞ்செய்து இவர்களைக் கொல்வேனு?

𑌨𑌿𑌹𑌤𑍍𑌯 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍𑌨𑌃 𑌕𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿 𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌪𑌾𑌪𑌮𑍇𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌦𑌸𑍍𑌮𑌾𑌨𑍍 𑌹𑌤𑍍𑌵𑍈𑌤𑌾𑌨𑌾𑌤𑌤𑌾𑌯𑌿𑌨𑌃 ॥
𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌰𑍍𑌹𑌾 𑌵𑌯𑌂 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍𑌸𑍍𑌵𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌾𑌨𑍍
𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 𑌹𑌿 𑌕𑌥𑌂 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 𑌸𑍍𑌯𑌾𑌮 𑌮𑌾𑌧𑌵 ॥ ௩௭

நிஹத்ய தார்த்தராஷ்ட்ருந்ந: கா ப்ரீதி ஸ்யாஜ்ஜநார்த்தன,
பாபமேவா ஶ்ரயே தஸ்மான் ஹத்வைதா நாததாயிந:. ௩௬
தஸ்மா ந்நார்ஹா வயம் ஹந்தும் தார்த்தராஷ்ட்ரு ந்ஸபாந்தவாந்,
ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகிந ஸ்யாம மாதவ. ௩௭

నిహత్య ధార్తరాష్ట్రాన్నః కా ప్రీతి స్స్యాజ్జనార్దన,
పాపమేవాశ్రయేదస్మాన్ హత్వైతా నాతతాయినః. 36

తస్మాన్నార్హా వయం హన్తుం ధార్తరాష్ట్రాన్ స్వబాన్ధవాన్,
స్వజనం హి కథం హత్వా సుఖిన స్స్యామ మాధవ. 37

• 36-37. (கிரு—பூமிகா என்று எளிதாகக் கூறினாய். உண்மையாய் இதனால் சுகம் உண்டா இல்லையா கூறு)

அரு—திருதராஷ்டிர புத்ரர்களைக் கொன்று நமக்கென்ன களிப்பு உண்டாகும்.

கிரு—நீ வருகவென்றால் வருதற்கும் போக என்றால் போதற்கும் நான் அவ்வளவு ஈனனென்று எண்ணினையா? ஜனார்த்தனன் எனின் பிரம்மாதிக ளுக்கு நியாமகன். (அருச்சுநன் இந்தச் சுலோகத்தில் இவ்வாறு விளித்ததால் ஸ்வாமீ உன்னை யாசிக்கின்றேனென்று கருத்து.)

கிரு—ராஜ்யம் கிடைக்கினும் சுகம் இல்லை என்றாய். நீ அவ்வாறு எண் ணுதற்குப் பித்தனா? (இதற்கு விடை 2-அத், 8 ச்லோகத்தில் கூறப்படும்.)

கிரு—இகத்திற்கில்லாவிட்டாலும் பரத்திற்காயினும் யுத்தஞ்செய்.

அரு—யுத்தம் ஹிம்சாரூபமா யிருத்தலினால் இதனால் பரலோகத்தினும் சுகம் உண்டாகாதென்று நம்புகிறேன்.

(கிரு—ஆததாயிகளைக் கொலைசெய்தால் பாபம் நேரிடாது. ஆததாயி கள் எனின்-வீடு முதலியவற்றில் நெருப்பிட்டவன், விஷமிட்டவன், சஸ்திர ங்களைக் கைக்கொண்டு கொல்லவந்தவன், தனத்தை அபஹரித்தவன், பூமியை யும் மனைவியரையும் அபஹரித்தவன், இவர்கள் ஆததாயிகள். இவைகளில் ஒவ் வொன்றைச் செய்தவனைக் கொல்லினும் பாபம் இல்லை. துர்யோதனாதிய ரிவ் வறுவகைப் பாபத்தினும் பூர்ணரா யிருக்கின்றனர். அரக்குமாளிகை கொ ளுத்தினர், பீமனுக்கு விஷமிட்டனர், சஸ்திரதாரிகளா யிருக்கின்றனர், உங்கள் ராஜ்யங்களையும் பொருள்களையும் அபஹரித்தனர், திரௌபதிக்குச் சபையில் மானபங்கம் உண்டாக்கினர். ஆகையா லிவ்வகை மஹாபாபிகளைக் கொன்றால் பாபம் இல்லை.)

அரு—பேராசையுள்ள இவர்களைக் கொன்றால் நமக்குப் பாபமேயுண்டா கும். (நீகூறியவண்ணம் இவர்களைக் கொல்லத்தொடங்கினும் நிர்த்தோஷ ராகிய பந்துக்களையும் கூட இவர்களுடன் கொல்லும்படியிருக்கும். ஆகையால் திருதராஷ்டிர புத்ரர்களை அவர்களின் பந்துக்களுடன் கொல்லுதல் நமக்குத் தக்கதன்று. ஸ்வஜனங்களைக் கொன்று நாம் எவ்வாறு சுகமடைவோம்? இத ற்கு விடை 2 அத், 32- சுலோகத்தில் கூறப்பட்டிருக்கிறது.)

கிரு—நீ யுத்தஞ்செய்து ராஜ்யம் சம்பாதிப்பாயாயின் என் தங்கை சுபத் ரை சுகமடைவாளல்லவா?

அரு—யுத்தஞ் செய்யாமலே நீ எண்ணின், ஐச்வர்யம் கொடுக்காயா? குசேலனுக்குக் கொடுக்கவில்லையா?

3

(கிரு—அவன் பிராம்மணன். யாசித்துச் சம்பாதித்தான். நீக்ஷத்ரியன் யுத்தஞ் செய்தே செல்வமடையவேண்டும்.) மாதவ என்றதால் லக்ஷ்மிபதி (இந்த ச்லோகத்தில் அருச்சுநன் மாதவ என்று விளித்ததால் நீர் லக்ஷ்மிக்கு நாயகன் ஆதலால் ஐச்வர்யத்தை லக்ஷ்மியின்மூலமாக எங்கட்கு கொடுப்பிக்கவல்லையென்பது கருத்து.) (ஆதலால் யுத்தஞ்செய்து சம்பாதிக்கும ராஜ்யம் எனக்கு வேண்டாம் என்று அருச்சுநன் அபிப்ராயப்பட்டான்.)

𑌯𑌦𑍍𑌯𑌪𑍍𑌯𑍇𑌤𑍇 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌲𑍋𑌭𑍋𑌪𑌹𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌦𑍍𑌰𑍋𑌹𑍇 𑌚 𑌪𑌾𑌤𑌕𑌮𑍍 ॥ ௩௮

யத்யப்யேதே ந பஶ்யந்தி லோபோபஹதசேதஸ:,
குலக்ஷயக்ருதந் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம். ௩௮

యద్యప్యేతే న పశ్యన్తి లోభోపహతచేతసః,
కులక్షయకృతం దోషం మిత్రద్రోహే చ పాతకమ్. ౩౮

38 (கிரு—பீஷ்ம துரோணாதிகள் தர்மசாஸ்திரமறியாதவர்களா? யுத்தம் வேண்டாமென்று உனக்குத் தோற்றியதுபோல அவர்களுக்குத் தோன்றவில்லையன்றோ?)

அரு—அவர்களுக்குத் தெரியினும் திருதராஷ்டிர புத்ரர்கள் திரவிய ஆசையால் மனதுகெட்டு குலக்ஷயத்தால் உண்டாகும் தோஷத்தையும், மித்ரத்ரோஹத்தால் உண்டாகும் பாதகத்தையும் ஆலோசிக்காமற் போயினர்.

கிரு—துர்யோதனாதிகளைப்போல பீஷ்ம துரோணாதிகளுக்கும் திரவிய ஆசையிருக்கின்றதா?

அரு—பீஷ்மத்ரோணர்கள், லோபோபஹதசேதஸர். ராஜ்யலோபத்தால் பீடிக்கப்பட்டமனதுள்ளவர்கள் (இப்படிப்பட்டவர்கள் துர்யோதனாதிகளே) பீஷ்மாதியர் அவர்களுக்குட்பட்டு லோபபீடிதனாகும் துர்யோதனனிடத்து பற்றுள்ளவர்களாகையால் அவனது உத்யோகத்திலிருந்து அவனுக்கு உதவிசெய்யவந்தனர் என்பது கருத்து. இவர்க ளனைவரும் இப்படிப்பட்டவராகையால் இவர்களுக்கு இந்தச்சமயததில் தர்மசாஸ்திர ரஹஸ்யம் தோன்றவில்லை (மனம் கெடும் வழி 2 அத் 62,63, ச்லோகத்தில் கூறப்படும்.)

𑌕𑌥𑌂 𑌨 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 𑌪𑌾𑌪𑌾𑌦𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍁𑌮𑍍 ।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ॥ ௩௯

கதம் ந ஜ்ஞேய மஸ்மாபி: பாபா தஸ்மா ந்நிவர்திதும்,
குலக்ஷயக்ருதந் தோஷம் ப்ரபஶ்யத்பி ர்ஜநார்த்தந. ௩௯

కథం న జ్ఞేయ మస్మాభిః పాపా దస్మా న్నివర్తితుమ్,
కులక్షయకృతం దోషం ప్రపశ్యద్భి ర్జనార్దన. ౩౯

39. கிரு—பீஷ்மாதிகளை யிவ்வாறு கூறுகின்றாய். நீ பூர்வம் அரண்யவாசம், அஞ்ஞாதவாசம் எப்போதுமுடியும் என்று காத்திருந்தாய். எனக்கு ராஜ்யம்

வேண்டாம் என்றாயா ? உனக்குமாத்ரம் ராஜ்யாபிலாஷை இல்லையா ? உம்பக்கம் வந்த அரசர்கள் ஆசையுள்ள உங்களிடத்தில் பற்றுள்ளவர்களா யிருந்திலரா?

அரு—(நாங்களிருவரும் ஆசைப்பட்டதும், யுத்தத்திற்கு வந்ததும் உண்மையே) ஆயினும், இந்தக்ஷேத்ரத்திலடியிட்டு இந்தப்பெரியவர்களைக் காணவே இந்தப் பாபகார்யத்தைச் செய்ய இஷ்டம் இல்லாமலிருக்கின்றது.

கிரு—உங்கள் குணமாத்ரம் மாறுதற்குக் காரணமென்ன ?

அரு—உன் சந்நிதான பலத்தால்.

(ஜநார்த்தன எனின் பக்தர்களுக்குப் புனர்ஜன்மம் இல்லாமற் செய்பவன். இந்தச் சுலோகத்தில் அருச்சுநன் இவ்வாறு விளித்தலினால் உன்னை ஆச்ரயித்தலினாலும், உன்பாதசேவையாலும் எங்களுக் கிந்த அபிப்ராயம் உண்டாயிற்றென்று கருத்து.)

𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌾𑌃 ।
𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌷𑍍𑌟𑍇 𑌕𑍁𑌲𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌭𑌿𑌭𑌵𑌤𑍍𑌯𑍁𑌤 ॥ ௪௦

குலக்ஷயே ப்ரணஶ்யந்தி குலதர்மா ஸ்ஸநாதநா:,
தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்ந மதர்மோபிபவத்யுத. ௪௦

కులక్షయే ప్రణశ్యన్తి కులధర్మాః సనాతనాః,
ధర్మే నష్టే కులం కృత్స్నమధర్మోఽభిభవత్యుత. ౪౦

40. கிரு—குலக்ஷயத்தால் உண்டாம் நஷ்டத்தைத் தெரிவியும்.

அரு—இந்த யுத்தத்தில் அநேகவீரர்கள் இறப்பர். ஆதலால் சாச்வதமா யிருக்கத்தகுந்த குலதர்மங்கள் நசிக்கும். குலதர்மம் எனின் அவரவர்களின் குடும்பதர்மங்கள். இதுநசித்தலால் குலத்தை அதர்மம் ஆக்ரமிக்கும்.

𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌭𑌿𑌭𑌵𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌷𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍁 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑌰𑍍𑌣𑌸𑌙𑍍𑌕𑌰𑌃 ॥

அதர்மாபிபவா த்க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய:,
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர:. ௪௧

అధర్మాభిభవా త్కృష్ణ ప్రదుష్యన్తి కులస్త్రియః,
స్త్రీషు దుష్టాసు వార్ష్ణేయ జాయతే వర్ణసఙ్కరః. ౪౧

41. கிரு—அதர்மம் ஆக்ரமித்தால் என்ன ?

அரு—அதர்மத்தால் ஸ்திரீகள் கெடுவர். ஸ்திரீகள் கெடுவார்கள் என்பது அவர்களைக் காத்து அத்தில் வைப்பதற்கு பர்த்தாக்க ளில்லாமையால் விபசாரிகள் ஆவர் என்பது. சாதாரணமாய் ஸ்திரீகள் பயத்தாலும், பரிஜனங்களிருப்பதாலும், பரபுருஷன் வருதற்கு அச்சப்படுவதாலும், பதிவிரதைகளா யிருக்கின்றனர் என்று ஒருகவி எழுதியிருக்கிறான். ஆகையால் இவ்வகைப்பாபத்தை ஸ்திரீகள் செய்வார்களென்று அருச்சுநன் கூறுகின்றான்.

கிரு—அந்தப் பெண்கள் கெடுவராயின் உனக்கென்ன நஷ்டம்.

அரு—வர்ணஸங்கரமாகும்.

கிரு—எந்தபந்துவுக்கோ என்று எண்ணிக்கொள். (அருச்சுநன் இந்தச்சுலோகத்தில் வார்ஷ்ணேய என்று விளித்தலினால் கிருஷ்ண உனது விருஷ்ணிவம்சத்திற்கு ஸங்கரமுண்டாயின் நீபொறுப்பாயா என்று கருத்து.)

𑌸𑌙𑍍𑌕𑌰𑍋 𑌨𑌰𑌕𑌾𑌯𑍈𑌵 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌕𑍁𑌲𑌸𑍍𑌯 𑌚 ।
𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌪𑌿𑌤𑌰𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌲𑍁𑌪𑍍𑌤𑌪𑌿𑌣𑍍𑌡𑍋𑌦𑌕𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ॥

ஸங்கரோ நரகாயைவ குலக்னாநாம் குலஸ்யச,
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோதகக்ரியா:. ௪௨

సఙ్కరో నరకాయైవ కులఘ్నానాం కులస్యచ,
పతన్తి పితరో హ్యేషాం లుప్తపిణ్డోదకక్రియాః. ౪౨

42. கிரு—நசித்தவர் குலமன்றோ பாழாகும்.

அரு—குலத்திற்குமாத்ரமன்று. குலத்தைக் கெடுத்தவனுக்கும் பாபமே.

கிரு—நரகம் அநுபவித்தால் என்ன ?

அரு—இவர்கள் பிதுர்க்கள் பிண்டோதகமின்றி சிராத்தாதி கிரியைகளின்றி அதோகதியடைவர். (புத்ரனாயினும் அசுசியுடனிருக்கின் அவன் கையிலுள்ள பதார்த்தத்தை பிதாவிரும்பாததைப்போல் பாபியாகும் புத்ரன் கைப்பிண்டம் பித்ருக்களுக்குச் சேராதென்று தருமசாஸ்திரம் கூறுகின்றது.)

𑌦𑍋𑌷𑍈𑌰𑍇𑌤𑍈𑌃 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍍𑌣𑌸𑌙𑍍𑌕𑌰𑌕𑌾𑌰𑌕𑍈𑌃 ।
𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌜𑌾𑌤𑌿𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌶𑍍𑌚 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌃 ॥ ௪௩

தோஷை ரேதை: குலக்னாநாம் வர்ணஸங்கரகாரகை:,
உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாஸ்ச ஶாஸ்வதா:. ௪௩

దోషైరేతైః కులఘ్నానాం వర్ణసఙ్కరకారకైః,
ఉత్సాద్యన్తే జాతిధర్మాః కులధర్మాశ్చ శాశ్వతాః. ౪౩

43. அரு—அந்தப் பாபிகளின் தோஷத்தால் சாச்வதமாகும் ஜாதிதர்மங்கள் குலதர்மங்கள் நாசமாகும்.

ஜாதிதர்மங்கள் எனின் பிராமணாதியர்முதலான சாதிதர்மங்கள். குலதர்மங்களெனின் ஒரு ஜாதியாயினும் வெவ்வேறு வீட்டுவழக்கங்கள்.

𑌉𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌨𑌰𑌕𑍇 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌵𑌾𑌸𑍋 𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 ॥ ௪௪

உத்ஸந்நகுலதர்மாணாம் மநுஷ்யாணாம் ஜநார்த்தன,
நரகே நியதம் வாஸோ பவதீ த்யநுஶுஶ்ரும. ௪௪

ఉత్సన్నకులధర్మాణాం మనుష్యాణాం జనార్దన,
నరకే నియతం వాసో భవతీ త్యనుశుశ్రుమ. ౪౪

**44.** அரு—தர்மங்களைக் கெடுத்த மனுஷர்களுக்கு நரகத்தில் நித்யவாஸம் கிடைக்கும்.

கிரு—நான் கேட்கக்கேட்க உனது பாண்டித்தியத்தை அத்யதிகமாக காட்டுகின்றாய்.

அரு—ஜனார்த்தனா! இவையெல்லாம் என்பாண்டித்யமன்று. பெரியவர்கள் கூறியதைக் கேட்டுக் கூறுகின்றேன்.

கிரு—உனக் கிந்தயோசனை முன்பே உண்டாகவில்லையென்று நான் ஆச்சர்யப்படுகிறேன்.

𑌅𑌹𑍋 𑌬𑌤 𑌮𑌹𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾 𑌵𑌯𑌮𑍍 ।
𑌯 𑌦𑍍𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍁𑌖𑌲𑍋𑌭𑍇𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨 𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌾𑌃 ॥

அஹோ பத மஹத்பாபம் கர்தும் வ்யவஸிதா வயம்,
ய த்ராஜ்யஸுகலோபேந ஹந்தும் ஸ்வஜன முத்யதா:. சரு

అహో బత మహత్పాపం కర్తుం వ్యవసితా వయమ్,
య ద్రాజ్యసుఖలోభేన హన్తుం స్వజన ముద్యతాః. ౪౫

**45.** ராஜ்யசுகத்தில் ஆசையால் பந்துக்களைக்கொல்ல முயன்று பெரியபாபத்தைச்செய்ய யத்னித்ததால் எனக்கும் ஆச்சர்யமாகின்றது. பத - ஐயோ! அருச்சுநன் இவ்வாறு கூறுதலால் பாண்டவர்கள் பீஷ்மத்ரோணாதிகளைக் கொல்லவந்தாரல்லவாஎனும் அபவாதத்திற்கு உள்ளானோமல்லவா என்று அருச்சுநன் எண்ணினன் என்று கருத்து.

𑌯𑌦𑌿 𑌮𑌾 𑌮𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑌾𑌰 𑌮𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑌯𑌃 ।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾 𑌰𑌣𑍇 𑌹𑌨𑍍𑌯𑍁 𑌸𑍍𑌤𑌨𑍍𑌮𑍇 𑌕𑍍𑌷𑍇𑌮𑌤𑌰𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

யதி மா மப்ரதீகார மஶஸ்த்ரம் ஶஸ்த்ர பாணய:,
தார்த்தராஷ்ட்ரா ரணே ஹந்யு ஸ்த ந்மே க்ஷேமதரம் பவேத். சசு

యది మా మప్రతీకార మశస్త్రం శస్త్రపాణయః,
ధార్తరాష్ట్రా రణే హన్యు స్తన్మే క్షేమతరం భవేత్.

**46.** கிரு—நீ சும்மாவிருப்பி னவர்கள் உன்னைக்கொல்வர்.

அரு—அவர்க ளவ்வாறு கொல்லுதல் எனக்கு க்ஷேமதரம். (போர்செய்து சிலரைக்கொன்று சாதல் க்ஷேமம். மற்றவர்களைக் கொல்லாமலே இறத்தல் க்ஷேமதரம் என்பது கருத்து.)

𑌸𑌞𑍍𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚.

𑌏𑌵 𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 𑌸𑍍𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇 𑌰𑌥𑍋𑌪𑌸𑍍𑌥 𑌉𑌪𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 ।
𑌵𑌿𑌸𑍃𑌜𑍍𑌯 𑌸𑌶𑌰𑌂 𑌚𑌾𑌪𑌂 𑌶𑍋𑌕𑌸𑌂𑌵𑌿𑌗𑍍𑌨𑌮𑌾𑌨𑌸𑌃 ॥ சஎ

எவ முக்த்வார்ஜுந ஸ்ஸங்க்யே ரதோபஸ்த உபாவிஶத்,
விஸ்ருஜ்ய ஸஶரஞ் சாபம் ஶோகஸம்விக்நமாநஸ:. சஎ

ఏవ ముక్త్వార్జున స్సంఖ్యే రథోపస్థ ఉపావిశత్,
విసృజ్య సశరం చాపం శోకసంవిగ్నమానసః. ౪౭

சஞ்ஜயன் கூறுதல்.

**47.** சஞ்ஜயன்—இந்த அத்யாயம் 32 ஶ்லோகங்களால் ஜீவித்திருத்தலால் பயன் என்னவென்று கூறி இப்போது அவர்களால் சாவசித்தமாக இருப்பதாகக் கூறி முடித்த அருச்சுநனுக்கு ஸ்வாமி ஏதோ கூறுவதற்குத் தொடங்குகையில் இதனை யறிந்துகொண்டு சஸ்திரமிருக்குந் துணையும் கிருஷ்ணன் தன்னைவிட்டு நீங்கான் என்று எண்ணி அர்ச்சுநன் சோகபீடிதமனதுள்ளவனாய் அம்பையும் வில்லையும் கீழேபோட்டுவிட்டு ரதி இருக்கவேண்டிய இடத்தை விடுத்து தேரினிடையில் மணமகன் உட்காருமிடத்தில் உட்கார்ந்திருந்தான்.

இவ்வாறு, உபநிஷத் ப்ரதிபாதகமும், பிரம்மவித்யா ப்ரதிபாதகமும்,
யோகசாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ச்சுன சம்வாதமுமாகிய
முதலத்யாயம் முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாய பரப்ரம்மணே நம:.

# ஸ்ரீ பகவத்கீதை

## ஸாங்கிய யோகம்.

## இரண்டாம் அத்யாயம்

𑌸𑌞𑍍𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚.

𑌤𑌂 𑌤𑌥𑌾 𑌕𑍃𑌪𑌯𑌾𑌵𑌿𑌷𑍍𑌟 𑌮𑌶𑍍𑌰𑍁𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌕𑍁𑌲𑍇𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ।
𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤 𑌮𑌿𑌦𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯 𑌮𑍁𑌵𑌾𑌚 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨𑌃 ॥ க

தம் ததா க்ருபயாவிஷ்ட மஶ்ருபூர்ணாகுலேக்ஷணம்,
விஷீதந்த மிதம் வாக்ய முவாச மதுஸூதந:. க

తం తథా కృపయావిష్ట మశ్రుపూర్ణాకులేక్షణమ్,
విషీదన్త మిదం వాక్య మువాచ మధుసూదనః. ౧

சஞ்ஜயன் கூறுதல்.

1. திருதராஷ்டிரன்—(அர்ச்சுநன் அம்பு விற்களைக் கீழேபோட்டுவிட்டு ரதத்தின் நடுவில் உட்கார்ந்திருந்தனன் என்று கூறினாய். அர்ச்சுநன் யுத்தத்தை விட்டுவிட்டானா ? சஞ்ஜயன்—(கிருஷ்ணனுக்கு யுத்தம் வேண்டாமென்று எண்ணம் உண்டாயினன்றோ உன்புத்ரர்களுக்கு க்ஷேமம் உண்டாகும்.) அர்ச்சுநனுக்குக் கருணையால் யுத்தம் வேண்டாமென்று எண்ணம் உதித்தது. கிருஷ்ணனுக்கு அந்தக்கிருபையா லிவர்களைக் கொல்லவேண்டுமென்று எண்ணமுண்டாயிற்று. ஆகையால் அருச்சுநனை நோக்கிக் கிருஷ்ணன் இவ்வாறு கூறினான்.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

𑌕𑍁𑌤 𑌸𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌶𑍍𑌮𑌲 𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌷𑌮𑍇 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌨𑌾𑌰𑍍𑌯𑌜𑍁𑌷𑍍𑌟 𑌮𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍍𑌯 𑌮𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌕𑌰 𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 ॥ உ

குத ஸ்த்வா கஶ்மல மிதம் விஷமே ஸமுபஸ்திதம்,
அநார்யஜுஷ்ட மஸ்வர்க்ய மகீர்த்திகா மர்ஜுந. உ

కుత స్త్వా కశ్మల మిదం విషమే సముపస్థితమ్,
అనార్యజుష్ట మస్వర్గ్య మకీర్తికర మర్జున. ౨

ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறுதல்.

2. கிரு—ஓஅர்ச்சுன! அல்பர்களால் ஆச்ரயிக்கப்பட்டதும், ஸ்வர்க்கவிரோதியும், அபகீர்த்திக்குக்காரணமானது மாகும் இந்தத் துக்கம் அகாலத்தில் ஏன் உனக்குச் சம்பவித்தது. (அர்ச்சுன-எனின், யோக்யன் என்றும், சாஸ்திரோக்தமாய் நடப்பவன் எனவும் கருத்து.) நமது மித்திரர்களும், பந்துக்களும் கஷ்டஸ்திதியிலிருக்கையில் உனக்கெவ்வாறு இவ்வகை இக்கட்டு உண்டாயிற்றென்று நாம் சமாதானம் சொல்லுதல்போல, அருச்சுநன் கிருஷ்ணனுக்குப் பந்துவும் நண்பனுமாதல் பற்றி சதாசார பிரவர்த்தகனுக்கும் உனக்கு ஏன் இவ்வகை துக்கம் உண்டாயிற்றென்று வினவினன். யுத்தப்பிராரம்பத்திற்கு முன்பே யுத்தம் வேண்டாமெனின் அது ஒத்தகாலமாகும். சூரனுகிய ஒருவன் யுத்தத்தில் புறங்கொடாமல் போராடவேண்டிய ஸமயத்தில் துக்கிப்பதால் கிருஷ்ணன் அகாலத்தில் என்றுன்.

𑌕𑍍𑌲𑍈𑌬𑍍𑌯𑌂 𑌮𑌾 𑌸𑍍𑌮 𑌗𑌮𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑍈𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑍍𑌯𑍁𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌂 𑌹𑍃𑌦𑌯𑌦𑍌𑌰𑍍𑌬𑌲𑍍𑌯𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ‖ ௩

க்லைப்யம் மாஸ்ம கம: பார்த்த நைதத்வ ய்யுபபத்யதே,
க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப. ௩

క్లైబ్యం మాస్మ గమః పార్థ నైతత్త్వ య్యుపపద్యతే,
క్షుద్రం హృదయదౌర్బల్యం త్యక్త్వోత్తిష్ఠ పరంతప. ౩

3. கிரு—ஓ அர்ச்சுன! தீனத்வத்தையடையாதே. உனக்கு இது தகாது. பரந்தபா, ஹீனமான அதைர்யத்தை விட்டு எழுந்திரு. (க்லைப்யம் எனின் தைரியமன்றி நபும்ஸகத்வம் என்று பொருள்.) இந்தச்சுலோகத்தில் கிருஷ்ணன் அதைர்யம்அடையாதே என்பதற்கு மாறுக்கலைப்யத்தையடையாதேஎன்றதால் நீ இதுவரையில் ஒருவருஷம் நபும்ஸகத்வமடைந்தனையே மீண்டும் அதனை விரும்பவேண்டாமென மைத்துன முறைமையால் கண்ணன் பரிஹஸித்தான் என்பது கருத்து. அதைர்யத்தைவிட்டு எழுந்திரு என்றவுடன் கிருஷ்ணன் தன்னை யுத்தம் செய்யாமல் எழுந்திரு என்கிறுனென்று அருச்சுநன் சந்தோஷித்தான். இந்தச் சுலோகத்தில் பரந்தப என்று கிருஷ்ணன் சம்போதித்ததால் சத்ருக்களைத் தபிக்கச்செய்யென்று ஒரு அர்த்தம். அன்றி 1-அத்,44, ச்லோகத்தில் குலதர்மங்களைச் செய்யாதிருப்பின் பாபம் என்று நீயேகூறினுய். உன் குலதர்மமாகும் யுத்தஞ்செப்கையில் பரமாத்மாவை இந்தக் கீழ்வகையை யெண்ணிச்செய்க என்று மற்றொருபொருள். 3-அத்-30 ச்லோ. ஆத்மஞான யுக்தமான மனஸ்ஸுடன் (ஸர்வேஶ்வரனை) என்னிடத்தில் கர்மங்கள் அனைத்தை

யும் அர்ப்பணஞ்செய்து (எனின் கர்மங்கள்அனைத்திற்கும் பகவானே கர்த்தா செய்விக்கிறவன் என்று எண்ணி) பலத்தைக் கருதாமல் கர்மங்களில் மமதையைவிட்டு துக்கஹிதனாய் யுத்தாதிகார்யங்களைச் செய்யக்கடவாய். 5-அத், 10 ச்லோ. ப்போல் கர்மங்களைப் பிரம ப்ரகிருதியில்வைத்து பலாசக்தியைவிட்டு எவன் கர்மத்தைச் செய்கின்றானோ அவனைத் தாமரையிலையினீர்போல (ப்ரகிருதிஸம்பந்த ஹேதுக்களான பாபங்கள்தீண்டா. 8-அத், 7-ச்லோ. ப்போல் ஆகையால் சர்வகாலத்திலும் என்னை ஸ்மரணைசெய். யுத்தஞ்செய். மனதையும், புத்தியையும் என்னிடம்வைப்பின் என்னையே யடைவாய். அதற்குச் சந்தேகமில்லை. பரந்தப என்பதற்கு முன்சொன்னபடி பொருள் கூறப்பட்டது.)

அரு—எனக்கிவ்வாறு போதித்து யுத்தஞ்செய் யென்பதற்கு உனக்கேன் இவ்வளவு அக்கரை.

(இந்த மூன்றாவது ச்லோகத்தில் கிருஷ்ணன் பார்த்தாயென்று விளித்தபடியால் என் அத்தையாகும் குந்திபுத்ரனாகையால் எனக்குன்விஷயத்தில் இவ்வளவு ச்ரத்தை என்பது கருத்து.)

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

𑌕𑌥𑌂 𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑌹𑌂 𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇 𑌦𑍍𑌰𑍋𑌣𑌂 𑌚 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 ।
𑌇𑌷𑍁𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌹𑌾𑌵𑌰𑌿𑌸𑍂𑌦𑌨 ॥ ௪

கதம் பீஷ்ம மஹம் ஸங்க்யே த்ரோணஞ்ச மதுஸூதந,
இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹா வரிஸூதந. ௪

కథం భీష్మ మహం సంఖ్యే ద్రోణంచ మధుసూదన,
ఇషుభిః ప్రతియోత్స్యామి పూజార్హా వరిసూదన. ౪

அருச்சுநன் கூறுதல்.

4. கிருஷ்ணன் இந்தவிதமாகப் போதித்ததால் யுத்தமே வேண்டாமென்று எண்ணியிருந்த அருச்சுனனுக்குப் பீஷ்மத்துரோணர்களைத் தவிர மற்றவர்களுடன் யுத்தஞ் செய்யலாம் என்று எண்ணி இவ்வாறு கூறினன்.

அரு— ஓ மதுஸூதனா!. அரிஸூதனா! பூஜிக்கத்தக்கவராகும் பீஷ்மத்ரோணர்களுடன் யுத்தத்தில் பாணங்களால் நான் எவ்வாறு எதிராக யுத்தஞ் செய்வேன்.

(அன்னபானாதிகள்கொடுத்துப் போஷித்தமையால் பீஷ்மனும் வித்யை போதித்ததால் துரோணனும் பூசிக்கத்தக்கவர். இவர்களைப் பூக்களால் பூசியாதிருத்தலேதவறாகவிருக்க இனி இவர்களைக் கொல்லுதல் பரமதப்பிதம் ஆகும் என்பதும் கருத்து.)

(இந்தச் சுலோகத்தில் மதுசூதன, அரிசூதன என்று இரண்டு விளிகள் இருப்பதற்குக் காரணம். அரிசூதன = சத்ருக்களைக் கொன்றவனே! (எந்தச்சத்ருவை?) மதுசூதன = மதுவெனும் ராக்ஷஸனை. மதுசூதனா மதுவைக் கொன்றவனே (எதனால்) அரிசூதனா = சக்ரத்தால். மதுசூதனனாகையால்

என்னையும் யுத்தத்திற்குப் பிரேரேபிக்கின்றாய். ஆயினும் நீ அரிசூதனன் = சத்ருவையே கொன்றவன். ஏன் எனின் நீ குருவாகும் சாந்தீபனேக்கொன்றாயா? ஆகையால் என் குருமார்முதலியவர்களை நான் எவ்வாறு கொல்வேன் என்பது கருத்து.)

(இந்த இரண்டு விளிகளால் அருச்சுநன் மனது கலக்கமுற்றிருக்கின்றதென்று தெரிகிறது. பட்டிகாவ்யமாகும் ராமாயணத்தில் சீதாவியோகத்தால், ஸுப்ரூ: = நல்ல புருவங்களையுடையாளே என்பதற்குப்பிரதியாய், சுப்ரு: = என்று தவருகப்ரயோகம் ராமன் செய்ததாக தெரிவித்திருக்கிறது. இதனல் இராமனின்மனத்துக்கம் தெரிகின்றது. அவ்வாறே அருச்சுநனுக்கும் மனசு கெட்டிருத்தலினுல் இந்தச்சிறு ச்லோகத்திலும் அரிசூதன மதுசூதன என்று இரண்டு பதங்கள் பிரயோகித்து குழறினனென்று (துக்கம் மனதில் பிரவேசித்தவர்களுக்கு பதச்சிருட்டி தவறுமென்பது சமாதானம்.) இந்தக் கீழ் சுலோகத்தில் ஒவ்வொரு பதப்ரயோகத்தாலும் ப்ரச்னேத்தரங்கள் ஏற்படுகின்றன. ஆதலால் முதலில் அவற்றையெழுதி பிறகு இந்தச்சுலோகப் பொருள் எழுதப்படும்.

குரூநஹத்வா ஹி மஹாநுபாவாந்
ஶ்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே ।
ஹத்வார்த்தகாமாம்ஸ்து குரூநிஹைவ
புஞ்ஜீய போகாந் ருதிரப்ரதிக்தாந் ॥ ௫

குரூநஹத்வா ஹி மஹாநுபாவாந்
ஶ்ரேயோபோக்தும் பைக்ஷமபீஹலோகே.
ஹத்வார்த்த காமாம்ஸ்து குரூநிஹைவ
புஞ்ஜீபபோகாந்ருதிரப்ரதிக்தாந். ௫

గురూనహత్వాహిమహానుభావాన్ శ్రేయోభోక్తుం భైక్షమపీహలోకే
హత్వార్థకామాంస్తు గురూనిహైవ భుఞ్జీయభోగాన్ రుధిరప్రదిగ్ధాన్. ౫

5. அரு—பீஷ்மத்ரோணர்களைக்கொல்லுதற்கு யோசிக்கிறேன்.

கிரு—பவிஷ்யத்வர்த்தமான காலங்களுக்கு சேனபதிகள் இவர்களே ஆகையால் இவர்களை முக்கியமாய் முன்னரே கொல்லவேண்டும்.

அரு—யுத்தமே வேண்டாம்.

கிரு—யுத்தத்தில் பகைவரால் சிறப்பாய்.

அரு—க-அத்.௩௨-சுலோகத்தில் உயிருடனிருப்பதில் என்னபயன் என்று முன்னமே கூறினேன்.

கிரு—அவ்வாறு எண்ணுதல் தவறு. அசு லக்ஷயோனிபேதங்களில் மனுஷதேஹம் துர்லபம். "சரீரமாத்யங்கலுதர்மசாதன" மென்பதால் சரீரத்தைக் காத்துக்கொள்ளவேண்டும். நீ யுத்தத்தை விட்டு என்ன செய்வாய்?

அரு—காட்டிற் சென்று திவ்ய நதிகளில் ஸ்நானஞ்செய்து தவசு, வேதாந்த விசாரஞ் செய்து காலங்கழிப்பேன்.

கிரு—அவ்வகைக்காரியங்களைச் செய்யச் சரீரம் வேண்டாமா?

அரு—வேண்டியதே.

கிரு—ஆகையால் யுத்தஞ்செய்.

அரு—ஜனங்களனைவரும் யுத்தஞ்செய்தே பிழைக்கின்றனரா? நானும் எனக்குள்ளவற்றால் சந்தோஷித்து யுத்தஞ்செய்யாமல் பிழைக்கிறேன்.

கிரு—உன் பிராண்சம்ரக்ஷணைக்கு என்ன இருக்கிறது?

அரு— பிக்ஷையெடுத்து ஜீவிக்கிறேன்.

கிரு—கௌரவமாயிராது.

அரு—இந்தலோகத்தில்தானே இந்த அகௌரவம் இந்த லோகசம்பந்தமானது.இது சாச்வதமில்லாதது. பிக்ஷையெடுத்தல் இவர்களைக் கொல்லுதலினும் சிரேஷ்டமானது.

கிரு—க்ஷத்ரியன் பரதிபக்ஷத்தவரின் வெற்றியைக் கோரக்கூடாது.

அரு—இவர்களைக்கொல்லாது விடின் ஆத்யந்தங்களாகும் தர்மமோக்ஷங்கள் லபிக்கா. அர்த்தகாமங்கள் மாத்ரம் லபிக்கும். இவையிரண்டும் நம்முடன் வரா.

கிரு—இந்தலோகத்தாயினும் சுகமுண்டா இல்லையா?

அரு—அந்தச்சுகமும் தோஷயுக்தமானது. இவர்களைக்கொன்று அடைதலால் ரக்தத்தால்கலந்ததாயிருக்கும். (மேலபிப்ராயம் இந்தச்சுலோகத்தின் கீழுள்ளபொருளால் அறிவிக்கப்பட்டது.)

அரு— மஹானுபாவர்களான என் குருமாரைக்கொல்லாது பிக்ஷ அன்னம் உண்ணுதலும் இந்த உலகத்தில் மேலாகும். (வைரமில்லாமல்) அர்த்தத்தைமாத்ரம் கோரிவந்த குருமார்களைக்கொன்று இவ்விடத்தில் ரத்தத்துடன் கலந்தபோகங்களை நான் அநுபவிக்கமாட்டேன். (இந்தச்சுலோகத்தில் "ஹிமஹாநுபாவான்" என்கையில், 'ஹி' புராணப்ரஸித்தமெனவும் அன்றிபீஷ்மதுரோணர்கள் பனியைப்போக்கும் சூர்யாக்னிகள்போல் ப்ரகாசிப்பவரென்பதும் கருத்து.)

நசைதத்வித்ம: கதரந்நோ கரீயோ
யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயு: ।
யானேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ்தே
அவஸ்திதா: ப்ரமுகே தார்த்தராஷ்ட்ரா: ॥ ௬

நசைதத்வித்ம: கதரந்நோகரீயோ
யத்வாஜயேம யதிவாநோஜயேயு:,
யாநேவஹத்வா நஜிஜீவிஷாமஸ்தே
வஸ்திதா: ப்ரமுகே தார்த்தராஷ்ட்ரா:. ௬

నచైతద్విద్మః కతరన్నో గరీయో యద్వా జయేమ యదివానో జయేయుః,
యానేవ హత్వా నజిజీవిషామస్తేఽవస్థితాః ప్రముఖే ధార్తరాష్ట్రాః.

6. கிரு—(யுத்தஞ்செய்யாவிடின் ஸ்வதர்மத்தைச் செய்யாதபாபம் உண்டாம்.)

அரு—யுத்தம் ஸ்வதர்மம் ஆதலினுல் நல்லது. அதில் ஹிம்சை இருத்தலினுல் தீது. பிக்ஷையெடுத்தல் ஹிம்சையில்லாதிருத்தலால் நன்று. பாதர்மமாதலால் தீது. இவ்விரண்டிலும் ஒவ்வொருபுண்யபாபங்கள் இருக்கின்றன. எதுசிரேஷ்டதரமானதோ கூறும்.

கிரு—இந்தத் தர்ம சந்தேஹம் தெரிந்துகொள்ளவோ ஈண்டுவந்தாய்.

அரு—யுத்தஞ்செய்கிறேன் வெற்றியடைவேனு?

(ஜெயிப்பாய்என்று கூறில் யுத்தம் காம்யகர்மமாய் பரிணமிக்குமென்று எண்ணி கிருஷ்ணன் நீயே யோசித்துக்கொள் என்றனன்.)

அரு—ஜெயித்தோமென்று கொள்ளினும் பயன் என்ன. இவர்களைக் கொன்றபின் பிராணமே நில்லாதே. இந்தச்சுலோகத்தில் "தார்த்தராஷ்ட்ரா:" என்பதால் துர்யோதனுதிகள் என்பது கருத்தன்று. ஏன்எனில் க-அத், ௩௬. சுலோகத்தில் அருச்சுனன் ஆததாயிகளைக் கொன்றபாபமென்று தெரிவித்தான் ஆதலால் பாபபீதியே யன்றிக் கொல்லத்தக்கவரென்று மாத்ரம் பொருள் ஏற்படுகின்றது. உ அத், ௪-சுலோ. இல், பீஷ்மத்ரோணர்களை எவ்வாறு கொல்வேனென்று கூறுதலினுல் திருதராஷ்டிரர் பீஷ்மத்ரோணர்களென்று அறிந்துக் கொள்ளுக. இந்த-௬-வது சுலோகத்தின் பாவத்தால் இந்தமேல் விஷயம் தெரிவிக்கப்பட்டது. (சுலோகப்பொருள்) நாம்ஜெயிப்போம். அன்றி நம்மை அவர்கள் ஜெயிப்பர் எனும் இரண்டில் எது நமக்கு மிக உயர்ந்தது என்பதை நாம் அறியோம். எவர்களைக்கொன்ருல் நாம் ஜீவிக்க எண்ணேமோ அந்தத்திருதராஷ்டிரபுத்ரர்களேசேனைகளுக்குமுன்னிற்கின்றனர்.)

𑌕𑌾𑌰𑍍𑌪𑌣𑍍𑌯𑌦𑍋𑌷𑍋𑌪𑌹𑌤 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃
𑌪𑍃𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑌚𑍇𑌤𑌾𑌃 ।
𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌤𑌨𑍍𑌮𑍇
𑌶𑌿𑌷𑍍𑌯𑌸𑍍𑌤𑍇𑌽𑌹𑌂 𑌶𑌾𑌧𑌿 𑌮𑌾𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌮𑍍 ॥ எ

கார்ப்பண்யதோஷோபஹத ஸ்வபாவ:
ப்ருச்சாமி த்வாம் தர்ம ஸம்மூட சேதா:,
யச்ச்ரேய ஸ்யா ந்நிஶ்சிதம் ப்ரூஹி தந்மே
ஶிஷ்யஸ்தே ஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம். எ

కార్పణ్యదోషోపహత స్వభావః
పృచ్ఛామి త్వాం ధర్మసమ్మూఢచేతాః,

యచ్ఛ్రేయ స్స్యా న్నిశ్చితం బ్రూహి తన్మే
శిష్యస్తేఽహం శాధి మాం త్వాం ప్రపన్నమ్.　　౭

7. கிரு—பிக்ஷையெடுத்தலா யுத்தஞ் செய்தலா சிலாக்கியமென்று என்னைவினவுகின்றாயே. நீ பெரியர்களிடம் அநேக யுத்திகளைத் தெரிந்து கொண்டவனன்றா. உனக்குத் தெரியாதா?

அரு—நான்கார்பண்யதோஷத்தால் என்ஸ்வபாவம் கெட்டு தர்மத்தில்ஸம்மோஹத்தையடைந்த மனவினால் உன்னை வினவுகின்றேன். எது மேலானதோ அதனை நிச்சயமாகக்கூறும். உனக்கு நான் சீடன். உன்னை ஆச்ரயித்த எனக்கு உபதேசஞ்செய். '(இந்தச்சுலோகத்தில் யுத்தமா பிக்ஷையா உயர்ந்ததென்று கேட்டமாத்திரையில் கிருஷ்ணன் பரமரஹஸ்யங்களை வெளியிட்டான். இதற்கு வேறொரு பொருள். கார்பண்யமென்றால் வேதாந்த விசாரங்கள் இல்லாதிருக்கை. ஸ்வபாவம் = ஜீவாத்மா, தர்மம் = ஈஸ்வரன். வேதாந்த விசாரமில்லாததால் ஜீவாத்மா, ஈஸ்வர விஷயத்தில் சம்சயமுள்ளதாயிருக்கின்றது. ஆகையால் பிரம்ம ஞானத்தை கூறும் என்பது கருத்து.

கிரு—சிஷ்யனால் கூறுகின்றேன்.

அரு—சிஷ்யஸ்தேஹம்.

கிரு—சிஷ்யர்களில் இரண்டுபேதங்களுண்டு. ஒருவன் குருவை சோதிக்கவெண்ணிவந்தவன். மற்றொருவன் உபதேசத்தை விரும்பினவன். அவ்விருவர்களில் நீ எப்படிப்பட்டவன்?

அரு—ப்ரபன்னம், (சாதாரணமாய் மிகுந்த அன்புள்ளவர்களை ஆஞ்ஞாபித்தலும் கொஞ்சம் அன்புள்ளவர்களுக்கு உபதேசித்தலும் உலக வழக்கமாக இருக்கிறது.) நான் மிகுந்த அன்புள்ளவன். என்னை ஆஞ்ஞாபிக்க, (இவ்வாறு தெரிவித்துக்கொண்டு அருச்சுநன் இந்தச்சுலோகத்தில் ஶாதி = சிக்ஷை செய் என்றான்.) (எல்லாவிஷயங்களையும் தெரிவி)

𑌨 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌮𑌾𑌪𑌨𑍁𑌦𑍍𑌯𑌾
𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑍋𑌕𑌮𑍁𑌚𑍍𑌛𑍋𑌷𑌣𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌮𑍍 |
𑌅𑌵𑌾𑌪𑍍𑌯 𑌭𑍂𑌮𑌾𑌵𑌸𑌪𑌤𑍍𑌨𑌮𑍃𑌦𑍍𑌧𑌂
𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌸𑍁𑌰𑌾𑌣𑌾𑌮𑌪𑌿 𑌚𑌾𑌧𑌿𑌪𑌤𑍍𑌯𑌮𑍍 ||　　அ

நஹிப்ரபஶ்யாமிமமாபநுத்யா
த்யச்சோகமுச்சோஷணமிந்த்ரியாணும்,
அவாப்ய பூமாவஸபத்நம்ருத்தம்
ராஜ்யம்ஸுராணுமபிசாதிபத்யம்.　　அ

నహిప్రపశ్యామిమమాపనుద్యా ద్యచ్ఛోకముచ్ఛోషణమిన్ద్రియాణామ్,
అవాప్యభూమావసపత్నమృద్ధం రాజ్యంసు రాణామపిచాధిపత్యమ్.　　౮

8. கிரு—வேதாந்தமேன்? ராஜ்யம் சம்பாதி.

அரு—எனக்குவேண்டாமென்றேனல்லவா?

கிரு— மனோ தௌர்பல்யத்தால் அவ்வாறு தோற்றும் உனக்கு லபிக்கப் போகிறது சாமான்யமான சாம்ராஜ்யமன்று. அகண்டல பூமண்டலாதிபத்யம். அதனை யோசித்துப்பார்த்தால் துக்கமுண்டாகாது.

அரு—பூமியில் பகைவரில்லாமல் சம்ருத்தமான ராஜ்யத்தை யடைந்தும் பிரயோஜனமிராது.

கிரு—ஸ்வர்க்க முண்டாகும்.

அரு—தேவேந்திரனாலும் அன்றி ப்ரம்ம லோகமாயினும் பிரயோஜன மில்லை. ஏன் எனில் இந்திரியங்களைச் சோஷிக்கச்செய்யும் இந்தச்சோகத்தைத் தீர்க்கத்தக்கது எதுவோ அது எனக்குத்தெரியாது. (எந்தச்சுகத்தை என் இந்திரியத்துடன் அநுபவிக்கவேண்டும். மனம் துக்கத்தில் இருப்பதால் எந்த இந்திரியங்களுக்கும் சுகம் உண்டாகாதென்று கருத்து. இவ்வாறு தலினால் வேதாந்தவிசாரமே இதற்குத் தக்கதென்று இதையே போதியும் என்று அருச்சுனன் கிருஷ்ணனுக்கு கூறி மாறு பேசாமல் இருந்தான்.)

ஸஞ்ஜய உவாச.

𑌏𑌵 𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌂 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑌃 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪𑌃 ।
𑌨 𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌬𑌭𑍂𑌵 𑌹 ॥ ௯

ஏவ முக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச: பரந்தப:,
ந யோத்ஸ்ய இதி கோவிந்த முக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ. ௯

ఏవ ముక్త్వా హృషీకేశం గుడాకేశః పరంతపః,
న యోత్స్య ఇతి గోవిన్ద ముక్త్వా తూష్ణీం బభూవ హ. ౯

ஸஞ்ஜயன் கூறுதல்.

9. சஞ்சயன்—சத்ருக்களைச் சங்கரிக்கத்தக்கவனான அருச்சுனன் ஹிருஷீகேசன் பிரேரணையால் கோவிந்தா யுத்தஞ் செய்யேன் என்றுகூறிச் சும்மாவிருந்தான். ஆச்சர்யம். இந்தச் சுலோகத்தில் கோவிந்தா எனும் விளியால் வேதங்களைப் போதிப்பவன் எனவும் பூபாரம் தீர்க்க வாக்தத்தம் செய்தவன் எனவும் பொருள். ஆகையாற்றான் கிருஷ்ணன் சகலவேதார்த்தங்களையு மிந்தக் கீதையில் வெளியிடப் போகிறான். பூபாரஹரணார்த்தமாக அருச்சுனனை யுத்தத்திற்குப் பிரேரணை செய்விக்கின்றான்.

𑌤 𑌮𑍁𑌵𑌾𑌚 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌃 𑌪𑍍𑌰𑌹𑌸 𑌨𑍍𑌨𑌿𑌵 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑍇𑌨𑌯𑍋 𑌰𑍁𑌭𑌯𑍋 𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤 𑌮𑌿𑌦𑌂 𑌵𑌚𑌃 ॥ ௧௦

த மூவாச ஹ்ருஷீகேச: ப்ரஹஸ ந்நிவ பாரத,
ஸேனயோ ருபயோ ர்மத்யே விஷீதந்த மிதம் வச:. ௧௦

త ముపాచ హృషీకేశః ప్రహస న్నివ భారత,
సేనయో రుభయో ర్మధ్యే విషీద న్త మిదం వచః.  ౧౦

10. சஞ்—ஓ திருதராஷ்டிரமஹாராஜா! இரண்டு சேனைகளுக்கும் இடையில் (தேகாத்மஸ்வரூப ஞானம் இல்லாமல்) துக்கப்படுகின்ற அந்த அருச்சுநனைப்பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் பரிஹஸிப்பவனைப் போல இவ்வாறு கூறினான். (இந்த ச்லோகத்தில் ப்ரஹஸன்னிவ—பரிஹாஸம் செய்பவனைப்போல என்னிருக்கிறது. இவ்விடத்தில், இவ, வாக்யாலங்கார மெனவும், ஆகையால் இந்த பதத்திற்குப் பொருள் கூறவேண்டுவதில்லை எனவும், இவ்வாறு இந்தப்பதத்தை விடுவதால் அருச்சுநன் மனம் யுத்தத்தில் மாறினதால் கிருஷ்ணன் சிரித்தான் எனவும் பாவப்படுகின்றது. அன்றி இந்த விஷயத்தை ஆசாரியன் சொல்வதுபோ லல்லாமல் பரிகாஸமாக வார்த்தையாடிக்கொண்டு கூறினன் என்று இராமாநுஜர் அபிப்ராயம். பரிகாஸம் ஏனெனில், அருச்சுநனுக்கு இன்னமும் பக்தி திடப்படவில்லை யென்று இவரது அபிப்ராயம். ஆபத்தில் ஈசனையும்கூட, வேண்டிக்கொள்வர். அவ்வளவில் ஸதா அவனுக்குத் தாஸனயிருப்பதற்குக் கோரார்கள். ஆகையால் அந்தப் பதத்தில் காட்டப்பட்டபக்தி நம்பத்தக்கதன்றென பாவம். 7 வது சுலோகத்தில், அருச்சுநன் தான் ப்ரபன்னன்என்று கூறினதால் அவனிடத்தில் சந்தேகித்தல் தகாதாகையால் சகல சாஸ்திரங்களையும் விருதா காலயாபனம் செய்பவரைப்போல போதித்தான் என்று ஒருகருத்து. சகல தத்வங்களையும் சோதித்த ஆசார்யன் சிஷ்யனுக்குப் போதிப்பதுபோல லீலையாய் உபதேசித்தானென்று மற்றொருபாவம். முதல் அத்யாயத்தின் 47-சுலோகங்கள், இரண்டாவதத்யாயத்தின் 10-ச்லோகங்கள், ஆக 57-ச்லோகங்கள் கீதைக்கு பீடிகையாக இருக்கின்றது. கீதாபிரஸக்திக்காகப் பீடிகை கூறப்பட்டது.

ஶ்ரீ ஭஗வாநுவாச.

அஶோச்யாநந்வஶோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஶ்ச பாஷஸே |
கதாஸூநகதாஸூம்ஶ்ச நாநுஶோசந்தி பண்டிதா: ||

அஶோச்யா நந்வஶோச ஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஶ்ச பாஷஸே,
கதாஸூ நகதாஸூம்ஶ்ச நாநுஶோசந்தி பண்டிதா:  கக

అశోచ్యా నన్వశోచ స్త్వం ప్రజ్ఞావాదాంశ్చ భాషసే,
గతాసూ నగతాసూంశ్చ నానుశోచ న్తి పణ్డితాః.  ౧౧

ஸ்ரீபகவான் கூறுதல்.

11. கிரு—நீ துக்கிக்கக் கூடாதவைகளின் (சரீரங்களை) ப் பற்றி துக்கப்பட்டாய். ஞான யுக்தங்களான (பிதுர்கள் பிண்டோதக கிரியைக ளில்லாமல் நரகத்தில் விழுவர்என்பது முதலான) வார்த்தைகளைக் கூறுகின்றாய். பண்டிதர்கள் (தேஹாத்மஸ்வரூப மறிந்தவர்கள்) ப்ராணம்போகாதவனது (ஆத்மாக்களை) ப்ராணம் நீங்கினவனது (தேகங்களை) குறித்துத் துக்கப்பட்டார்.

(கிருஷ்ணன் நீ 4-வது சுலோகத்தில் பீஷ்மத்ரோணர்களுக்காக துக்கப்பட்டது தகாதென்று கூறி அருச்சுநனைச் சிறிது இறக்குகிருன். ப்ரஜ்ஞாவாதாஞ்ச பாஷஸே—பண்டிதனது வார்த்தையைப் போலப் பேசுகிருய். அன்றிபுத்திக்குத் தோன்றியவிதமும், விவேகிகளுக்கு விரோதமாகவும் பேசுகிருய்.

அரு—இவ்வாறு துக்கித்தல் தவருமா?

கிரு—விஷயமறிந்தவன் தப்பென்றே பாவிப்பன். இந்தச் சுலோகத்தில் கதாஸூன்—செத்தவனைக் குறித்தென்று கூறப்பட்டுள்ளது. நாம் எவரை யாயினும் அழைத்தபொழுது உடனே அவர்கள் வந்தேனென்று பதில் இறுத்ததினுல் அவர்கள் வராவிடினும் வருவர் எனும் நிச்சயத்தினுல் வந்ததாகப் பாவித்து எதிர்பார்த்திருப்போம். அவ்வாறே செத்தவர்களை யென்பதால் இவர்கள் விரைவில் சாவார்கள் என்று கருத்து.

அரு—என்னைத் துக்கிக்கவேண்டாமென்ருய். மஹாநுபாவனுகிய வசிட்டன் புத்திரர்களுக்காகச் சோகப்படவில்லையா?

கிரு—துக்கித்தாலுந் துக்கப்படக்கூடாதென்று அவனுக்குத் தெரிந்தேயிருந்தது. நான் பிரம்ம மானத புத்ரனுயிருந்தும் உன்மாயையை அதிக்ரமிக்காமலிருக்கின்றே னல்லவா என்று வேதாந்த தத்வத்தை விசாரணை செய்து கொண்டே அவன் துக்கித்தான். ஆகையால் நீ அவனுக்கு ஒப்பென்று எண்ணுதை. (இந்த ச்லோகத்தில் "நானுஸோசந்திபண்டிதா:"—பண்டிதர்கள் துக்கியார் என்பதால் பண்டிதர்களல்லாதவர்கள் துக்கிப்பர் என்பது ஏற்படுகின்றது.) இவ்வாறு துக்கப்படினும் செத்தவர்களுக்கு விசனப்படுதல் சரி. இருப்பவர்களுக்குத் துக்கப்படுதல் எவ்வாறெனின், முழுதுமறியாதவரே போனவர்களுக்குத் துக்கிப்பர்கள். கொஞ்சமறிந்தவர்கள் செத்தவர்களுக்காகச் சிந்தித்து இனி சாதிப்பதில்லை யென்று எண்ணி பிழைத்திருப்பவர்களுக்காக அதாவது இனிஇந்தகுட்டி குழந்தைகளுக்குப் பிழைப்பு எவ்வகையென்று சிந்திப்பார்கள். பண்டிதனே எனின் சகலத்திற்கும் ஜகதீசனே கர்த்தாயென்று எண்ணித் துக்கியான். அருச்சுனன் மெற்காட்டப்பட்ட மூடரிருவரைப்போல 4 சுலோகங்களில் பீஷ்மாதியர்க்கும் 1-அத், 6 சுலோகத்தில் நாமெவ்வகைப் பிழைப்போ மென்று தமக்கும் துக்கித்தான். ஆகையாலிவன் பண்டிதனன்றென்று கருத்து.

அரு—அவ்வாருயின் துக்கிக்கக்கூடாதா?

கிரு—ஆத்மாவிற்கா சரீரத்திற்கா?

அரு—ஆத்மாவிற்காக.

(கிரு—அப்படியானுல்)

ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:।
ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம்॥ ௧௨

ந த்வேவா ஹம் ஜாதுனுஸம் ந த்வம் நேமே ஜனுதிபர்:.
ந யைவ நபவிஷ்யாம ஸ்ஸர்வே வய மத: பரம். ௧௨

న త్వేవాహం జాతు నాసం న త్వం నేమే జనాధిపాః,
న చైవ నభవిష్యామ స్సర్వే వయ మతః పరమ్.  ౧౨

12. நான் (பரமாத்மா) ஆக, நீ (ஜீவாத்மா) ஆக, இந்த ராஜாக்கள் (இதராத்மாக்கள்) ஆக, இவர்கள் இதற்குமுன் இல்லாமற் போகவில்லை. இனியும் நாம் எல்லோரும் இல்லாமற்போகோம். (நேற்றிருந்து இன்றைக்கு இல்லாமற் போயினும், இன்றைக்கு இல்லாமற்போய் நாளை உண்டாயினும் அது அநித்யமென்று கூறப்படும். இதற்கு முன்னிருந்து இனிமேல் இருக்கப்போதலினால் ஜீவாத்மா பரமாத்மாக்கள் நித்யமானவை ஆகையால் அவர்களுக்கு நாசமில்லையென்று கருத்து.)

அரு—அனைவரும் நித்யரானால் பரமாத்மாவிற்கும் ஜீவாத்மாவிற்கும் பேதம் என்ன? நான் ஏன் உனக்குச் சேஷன் ஆகவேண்டியது? (முதற்கவளத்திலேயே ஈ ஸம்பிராப்தமானால் புசிக்கக் கோரினவனது கதி யென்னவாகும்? அவ்வாறே அருச்சுநனுக்கு உபதேசாரம்பத்திலேயே உன்னளவு நான் என்கிற அஹங்காரபாவம் ஏற்பட்டால் கர்ம ஞான த்யான பக்திகள் எவ்வாறுண்டாகும். ஆகையால் நித்யத்தில் தவிர ஞானானந்தாதி விஷயத்தில் உங்களுக்கும் எனக்கும் மிகுந்தபேதம் இருக்கிறதென்று கிருஷ்ணன் தெரிவித்தான் "முகம் சந்த்ர:" (மதிமுகம்) என்ற மாத்திரையில் தன் மனைவியைக் கிரஹணம் பிடிக்குமென்று எண்ணமுண்டாகி அவளைமூலையில் ஒளித்துவைப்பவன் அவிவேகியல்லவா. நீங்கள் என்னைப்போல்பவர் ஆகீர் என்று தெரிவிப்பதற்கே இந்தச் சுலோகத்தில் நத்வம் என்று கூறப்பட்டது.

அரு—ஆத்மாவிற்காக துக்கிக்க வேலையின்றாயினும் சரீரத்திற்காயினும் துக்கிக்கலாகாதா?

𑌦𑍇𑌹𑌿𑌨𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌯𑌥𑌾 𑌦𑍇𑌹𑍇 𑌕𑍌𑌮𑌾𑌰𑌂 𑌯𑍌𑌵𑌨𑌂 𑌜𑌰𑌾।
𑌤𑌥𑌾 𑌦𑍇𑌹𑌾𑌨𑍍𑌤𑌰𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑍍𑌧𑍀𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰 𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿॥  ௧௩

தேஹினோஸ்மிந் யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா,
ததா தேஹாந்தரப்ராப்திர்தீர ஸ்தத்ர ந முஹ்யதி.  ௧௩

దేహినోఽస్మిన్ యథా దేహే కౌమారం యౌవనం జరా,
తథా దేహాన్తరప్రాప్తిర్ధీర స్తత్ర న ముహ్యతి.  ౧౩

13. கிரு— ஆத்மாவிற்கு இந்தத் தேஹத்தில் பால்ய யௌவன விருத்தாப்யம் எவ்வாறோ அவ்வாறே வேறு சரீரத்தைப் பொருந்துதலுமப்படியாகும். புத்திமான்கள் அந்த விஷயத்தால் பிரமியார்.

அரு—இதற்காயினு மிழிந்த சரீரம்வரின் துக்கமேயன்றோ?

கிரு—5-ச்லோகத்தால் பீஷ்மத்ரோணர்கள் மஹாநுபாவர்கள் என்று நீயே கூறினாய். இவர்களுக்கு நல்லசரீரமே வரும். கஜேந்திரனுக்கும் நளகூபர மணிக்ரீவர்களுக்கும் பூர்வஜன்மஸ்மிருதியிருந்ததால் தமது அஹங்காரம் நடக்

கையில் தமக்குலபித்த அந்தச்சரீரம் நல்லதேயென்று அவர்கள் சந்தோஷித்தனர். கள்வனால் தன் பொன்கடகம் கவரப்பட்டு ஒருமிடாய்பொட்ளத்தை அடைந்தகுழந்தை சந்தோஷித்ததைப்போல முன்னினைவு இல்லாதவர் தமக்கு லபித்த ஹீனசரீரத்திற்கே சந்தோஷிப்பர்.

அரு—இந்தவிஷயம் எனக்கேன் அறியப்படவில்லை.

கிரு—பண்டிதனுக்கே இந்தவிஷயம் தோன்றும்.

அரு—சரீராத்மாக்களுக்கில்லாவிடினும், எனக்காகத் துக்கமுண்டாகுமே.

𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌸𑍍𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌦𑌾𑌃 ।
𑌆𑌗𑌮𑌾𑌪𑌾𑌯𑌿𑌨𑍋𑌽𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑌸𑍍𑌵 𑌭𑌾𑌰𑌤 ॥ ௧௪

மாத்ராஸ்பர்ஶா ஸ்து கௌந்தேய ஶீதோஷ்ணஸுகது:கதா:,
ஆகமா பாயினோ நித்யா ஸ்தாம் ஸ்திதிக்ஷஸ்வ பாரத. ௧௪

మాత్రాస్పర్శా స్తు కౌన్తేయ శీతోష్ణసుఖదుఃఖదాః,
ఆగమాపాయినో౽నిత్యా స్తాం స్తితిక్షస్వ భారత. ౧౪

14. கிரு—(மமகாரம் நீங்கின்.மற்றவர்க்கும் உன்னையொத்தவர்க்கும் பேதமிராதென்று தெரிவிக்கின்றான்.)

(ஓ குந்திபுத்ரனே! சத்தஸ்பர்சரூப ரஸகந்தங்களெனும் விஷயங்களில் இந்திரிய சம்பந்தங்களே சீதோஷ்ணங்களையும் சுகதுக்கங்களையும் கொடுக்கின்றன. அந்த விஷயசம்பந்தங்கள் உத்பத்திநாசங்களுள்ளவை ஆதலால் அநித்யங்கள். ஓபாரதா! அவைகளைச் சகித்துக்கொள். இந்தசுலோகத்தில் ஆகமாபாயின: = போக்குவரவு உள்ளவை யென்பதால் நீ சொல்லாதிருக்கினும் பீஷ்மதுரோணர்கள் நெடுங்காலம் ஜீவித்திருக்காரென்று கருத்து.)

𑌯𑌂 𑌹𑌿 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌤𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍍𑌷𑌭 ।
𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌂 𑌧𑍀𑌰𑌂 𑌸𑍋𑌽𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 ॥ ௧௫

யம் ஹி நவ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப,
ஸமது:கஸுகம் தீரம் ஸோம்ருதத்வாய கல்பதே. ௧௫

యం హి నవ్యథయన్త్యేతే పురుషం పురుషర్షభ,
సమదుఃఖసుఖం ధీరం సో౽మృతత్వాయ కల్పతే. ౧౫

15. அரு—சேற்றில் காலிட்டு கழுகிக்கொண்டதுபோல யுத்தஞ்செய்து இவர்களைக்கொன்று மமகாரத்தை யேன் விடவேண்டும்.

கிரு—(இராஜசேவகன், சோராதிகளை தன்னையொத்தவரன்றோ யென்றும், அவர்களைப்பிடித்தல் கஷ்டமென்றெண்ணி தன்வீட்டிலேயே உட்கார்ந்திருந்தால் அவனுக்கு உயர்ந்த உத்யோகம் லபிக்காது. அவ்வாறே, ஸ்வகர்மமாகும் யுத்தத்தை நீவிட்டுவிடுவையாயின் உனக்குப்பெரியவன் எனும் புகழ் உண்டாகாது. பெருங்காரியஞ்செய்து அதிலுள்ள சுகதுக்கங்களைப் பொறுத்தல்வேண்டும்.) ஓ புருஷசிரேஷ்டனே! துக்கத்தையும் சுகத்தையும் ஒப்பாக எண்

ணி தைர்யயுக்தனாய் (தைர்யத்தால் அவச்யம்வரத்தக்க துக்கத்தைச் சுகத்தைப் போல் எண்ணி மோக்ஷசாதனமான தன்குலதர்மத்தை பலாபிஸந்தியில்லாமல் செய்துக்கொண்டிருக்கிற) எந்தபுருஷனை இவை (இந்தபாணங்களினடிகள் முதலாகிய குரூரஸ்பர்ஶங்கள்) துக்கிக்கச்செய்யாவோ அவனே நித்யாநந்தத்திற்கு தக்கவனாகின்றான் (2-அத், 11-ச்லோ. முதல் 15-ச்லோகங்கள்வரையில் உள்ள 5-ச்லோகங்கள் ஒருபெரியகட்டம். ஒருபேட்டி எனலாம்.

നാഽസതോ വിദ്യതേ ഭാവോ നാഽഭാവോ വിദ്യതേ സതഃ।
ഉഭയോരപി ദൃഷ്ടോഽന്തസ്ത്വനയോസ്തത്ത്വദർശിഭിഃ ॥

நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:,
உபயோ ரபி த்ருஷ்டோந்த ஸ்த்வநயோ ஸ்தத்வ தர்ஶிபி:. கசு

నాఽసతో విద్యతే భావో నాఽభావో విద్యతే సతః,
ఉభయో రపి దృష్టోఽన్త స్త్వనయో స్తత్త్వ దర్శిభిః. ౧౬

16. இல்லதற்கு உள்ளதில்லை. உள்ளதற்கு இல்லதில்லை. இவையிரண்டிற்கும் நிச்சயம் தத்வம் தெரிந்தவர்களால் அறியப்படுகின்றது.

த்வைதார்த்தம்.

அரு—2-அத், 4-ச்லோகத்தில் பீஷ்மத்ரோணர்களை நான் எவ்வாறுகொல்வேனென்று வினவினேன். அதற்கு ஆத்மாநித்யன்என்றும், சரீரம் அநித்யமென்றும், மமகாரம் நீங்கினகாலத்து துக்கம் உண்டாகாதென்றும் கூறினயாகையால் அந்த விஷயம் உண்மையென்று நம்பத்தகுந்ததாக இருக்கிறது. ஆயின், 1-அத், 44-சுலோகத்தில் நரகத்தில் நித்யவாசம் உண்டாகுமேஎன்று கேட்டேன். நீர் அதற்குச்சரியான சமாதானம் கூறவில்லையே. (இந்தச்சுலோகத்தில் பாவ: என்பதற்கு புண்யம் என்பது பொருள்.)

கிரு—கெட்டகாரியங்களுக்குப் புண்யம் இல்லை. நல்லகார்யங்களுக்குப் பாவம் இல்லை. (யுத்தம் ஸ்வதர்மம் ஆதலினால் நற்காரியம். இதனால் உனக்குப் பாவம் இல்லையென்று கருத்து.) நீ இப்பொழுது இந்தவிஷயத்தில் நம்பிக்கையடைந்தவனாய்ப் பிரவர்த்திக்கவேண்டும். தத்வஞானிகளைக்கேட்கின் அவர்கள் உனக்கு இந்தவிஷயத்தை உபதேசிப்பர்.

அத்வைதம்.

அரு—2-அத், 14-சுலோகத்தில் மாத்திராஸ்பர்சங்கள் (விஷயசம்பந்தம்) கூடாதென்றனையே. அதனைவிட எவ்வாறுசாத்யமாகும். இந்தச்சுலோகத்தில் பாவ: என்பதற்கு ஸ்திதியென்றுபொருள். இல்லதற்கு (மித்யாப்ரபஞ்சத்திற்கு) ஸ்திதியில்லை. உள்ளதற்கு (ஆத்மாவிற்கு) அபாவம் (இல்லாமற்போதல்) இல்லை.எனின் பீஷ்மத்ரோணர்கள் எனும் வஸ்துக்கள் உண்மையாக இருக்கின்றனவா? உன் அஞ்ஞானத்தினால் இருப்பதுபோலக் காணப்படுகின்றது. தூரத்திலிருக்கும் கிளிஞ்சலைக்கண்டு வெள்ளியெனப் பிராந்தியடைந்தவன் அதனைச் சமீபித்து வெள்ளிஅன்று என்று தெரிந்துகொண்டவுடனே, அவ்விடத்திலிரு

ந்த வெள்ளிபோய்விட்டதென்று துக்கிக்கத்தகுமா? அவ்வாறுதுக்கிப்பவன் வெறிகொண்டவன் அல்லவா? தீபமில்லாமையால் இருள்உண்டாதல் போல ஞானமின்மையால் நீ இவ்வாறு எண்ணுகின்றனை. உள்ளிருக்கும் பொருளாகிய பிரமத்தை யறிந்தாயாயின் மாத்ராஸ்பர்சங்கள் பாதிக்கும் என்று எண்ணுய்.

அரு—இந்தச்சங்கதி யெனக்கேன் காணப்படவில்லை.

கிரு—இந்தவிஷயம் மஹாத்மாக்களுக்குத் தெரியும். உனக்கிப்போது தெரியாது. விழித்துக்கொண்டவன்போலத் தூங்குகிறவனுக்குத் தெரியுமா?

விசிட்டாத்வைதம்.

(2-அத். 11-ச்லோகத்தில், சரீராத்மாக்களுக்காகத் துக்கமில்லையென்று கூறினதற்குக் காரணத்தைக் கிருஷ்ணன் கூறுகின்றான். அசத்வஸ்துவிற்கு (தேகத்திற்கு) சத்பாவம் (நித்யத்வம்) இல்லை. சத்வஸ்துவிற்கு (ஆத்மாவிற்கு) அபாவம் (அநித்யத்வம்) இல்லை. (ஆகையால் எவ்வளவு சாக்ரதையாகக் காப்பாற்றினும் நிலையாத சரீரத்திற்கும், கொன்றாலும் சாகாத ஆத்மாவிற்கும் வியசனப்படுதல் கூடாதென்று கருத்து.)

அரு—இந்தவிஷயத்தைக் கேட்டும் மீண்டும் துக்கம் உண்டாகின்றதே.

கிரு—இது உனக்கு இப்போது புலப்படாது.

(2-அத். 16-ச்லோகத்தில் ஆத்மாவிற்கு நாசமில்லையென்கிற வார்த்தையைக் கிருஷ்ணன் 17 ச்லோகத்தில் ஸ்திரமாக்குகிறான்.)

𑌅𑌵𑌿𑌨𑌾𑌶𑌿 𑌤𑍁 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍 ।
𑌵𑌿𑌨𑌾𑌶𑌮𑌵𑍍𑌯𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌨 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌤𑌿 ॥ ௧௭

அவிநாசி து தத்வித்தி யேந ஸர்வ மிதம் ததம்,
விநாச மவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித்கர்த்துமர்ஹதி. ௧௭

అవినాశి తు త ద్విద్ధి యేన సర్వ మిదం తతమ్,
వినాశ మవ్యయస్యాస్య న కశ్చి త్కర్తుమర్హతి. ౧౭

17. எதனால் இவைகளெல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவோ அதனை நாசமற்றதாக எண்ணுக. விகாரமில்லாத இதற்கு எவனும் விநாசத்தை உண்டாக்கத் தக்கவன் ஆகான்.

அத்வைதம்.

ஆத்மாவிற்கு ஏன் நாசமில்லையெனின், ஆத்மா அனைத்தினும் வியாபித்திருத்தலால் இதனை நாசஞ்செய்ய அசாத்யம். ஸர்வத்ர நிறைந்திருக்கும் ஆகாசத்தைப் போக்கடிக்கஎண்ணி ஓரிடத்தில் சுவர்வைக்கின் மற்றோரிடத்தில் ஆகாசம் இருக்கவே யிருக்கின்றதல்லவா?

விசிட்டாத்வைதம்.

ஆத்மா மிகச்சிறியது ஆகையால் கொல்லமுடியாது.

அரு—அணுவிற்கும் அணுவான பரமாத்மா அதனைக்கொல்லானா?

கிரு—அவனுக்கு அவ்வகை சக்தியிருப்பினும் அவனது சங்கல்பம் அவ்வாறில்லை. சிறியதாகையால் எவ்விடத்துமிருக்குமெனின் விசிட்டாத்வைதக் கொள்கை குற்றமாகும். எல்லாச்சரீரங்களிலும் (எனின் எவ்வளவு பெரிதாயினும் சிறியதாயினும் சம்பந்தப்படுதற்கு தக்கதென்பது கருத்து.)

த்வைதம்.

பரமாத்மாவிற்கு நாசமில்லை. அவன்முகோல்லாசத்திற்காக யுத்தஞ்செய்கவென்று, 17, 18, சுலோகங்களைச் சேர்த்து பாவம். 2-அத். 16-சுலோகத்தில் தேகத்திற்கு நித்யத்வம் இல்லையென்று கூறிய வார்த்தையை 18-சுலோகத்தில் கிருஷ்ணன் ஸ்திரப்படுத்துகிறான்.

𑌅𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤 𑌇𑌮𑍇 𑌦𑍇𑌹𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 𑌶𑌰𑍀𑌰𑌿𑌣𑌃 ।
𑌅𑌨𑌾𑌶𑌿𑌨𑍋𑌽𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌭𑌾𑌰𑌤 ॥ ௧௮

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா ஶரீரிண:,
அநாஶிநோப்ரமேபஸ்ய தஸ்மா த்யுத்யஸ்வ பாரத. ௧௮

అన్తవన్త ఇమే దేహా నిత్యస్యోక్తాః శరీరిణః,
అనాశినోఽప్రమేయస్య తస్మాద్యుధ్యస్వ భారత. ౧౮

18. நித்யனாய் நாசரஹிதனாய் பிரமேயம் (அதாவது வேறொருவனால் அறியத்தக்கதாகும் சடவஸ்து) அல்லவாகும் ஆத்மாவிற்குச்சம்பந்தப்பட்ட இந்தத்தேகங்கள் (வளரும் இயற்கையுடையன) நசிப்பனவாகக் கூறப்பட்டிருக்கின்றது. (நசித்தல் இரண்டுவகை, வஸ்துத: நாசம், ஒன்று நோய் முதலியவற்றால் நாசமுறுதல் மற்றொன்று.) பாரதா! ஆகையால் அவச்யம் நசிக்கும் தேஹத்தைக் குறித்தும் நசிக்காத ஆத்மாவைக் குறித்தும் சோகமில்லை. யுத்தம் செய். (இவ்விடத்தில் பாரதா என்று கிருஷ்ணன் அழைத்தலினால் நீ இவ்வகை வம்சத்தில் பிறந்தாயாகையால் யுத்தம் செய்யவேண்டியவன் என்றுகருத்து.)

𑌯 𑌏𑌨𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌶𑍍𑌚𑍈𑌨𑌂 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌹𑌤𑌮𑍍 ।
𑌉𑌭𑍌 𑌤𑍌 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑍋 𑌨𑌾𑌯𑌂 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 ॥

ய ஏநம் வேத்தி ஹந்தாரம் யஶ்சைநம் மந்யதே ஹதம்,
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹந்யதே. ௧௯

య ఏనం వేత్తి హన్తారం యశ్చైనం మన్యతే హతమ్,
ఉభౌ తౌ న విజానీతో నాయం హన్తి న హన్యతే. ౧౯

19. அரு—ஆத்மா நித்யன் என்று சொன்னால் உலக வியவஹாரத்திற்குப் பாதகமாயிருக்குமே. இந்தஉலகத்தில் கொலை செய்தவனை பெரிய குற்றம் செய்தவனாகப் பாவிக்கின்றார்களே. வியவஹாரப்பிரகாரம் சாஸ்திரத்தை மாற்றவேண்டுமோ? சாஸ்திரப்ரகாரம் வியவஹாரத்தை மாற்றவேண்டுமோ?

கிரு—சாஸ்திரமே பிரதானம். ஆத்மாவைக் கொல்லுகின்றவன் என்று நினைக்கிறவனெவனோ கொல்லப்பட்டதென்று நினைப்பவனெவனோ அவர்களிருவரும் ஞானமில்லாதவர்கள். ஆத்மா கொல்லவுமில்லை, கொல்லப்படவுமில்லை (சகலதர்மங்களுக்கும் காரணமாக விருக்கும் சரீரங்களைக் கொல்லுதலே குற்றமாகும். ஆகையால் இவைகளின் சரீரம் கொல்லப்பட்டதென்று கூறவேண்டும்.)

கங்கைகளா என்பதற்குப் பிரதியாக கங்கையாம் கோஷ: என்பதால் கங்கையின் சமீபமென்று பொருள்தருகின்றது. கங்காதீரத்தில் என்றபோது கங்கைக்குச் சிறிது தூரத்தில் என்றுவது பொருள்படும். அவ்வாறே இவன் கொல்லப்பட்டான் எனின் அவனது தேகம்கொல்லப்பட்டதென்று பொருள்.

அரு—இந்தவிஷயம் நீரே கூறுகின்றீரா?

கிரு—காடகோபநிஷத் கூறுகின்றது. (கசு-சுலோகம் உபநிஷத்வாக்யத்தையே பதங்களை மாற்றி கூறப்படுகிறது. ஏனெனின் வேதங்களுக்கு அநதிகாரிகளுக்குக்கூடப் பயன்படுதற்கு)

𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌾 𑌕𑌦𑌾𑌚𑌿
𑌨𑍍𑌨𑌾𑌯𑌂 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌭𑌵𑌿𑌤𑌾 𑌵𑌾 𑌨 𑌭𑍂𑌯𑌃 ।
𑌅𑌜𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍋𑌽𑌯𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑍋
𑌨 𑌹𑌨𑍍𑌯𑌤𑍇 𑌹𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑍇 𑌶𑌰𑍀𑌰𑍇 ॥ ௨0

நஜாயதே ம்ரியதே வா கதாசி ந்நாயம் பூத்வா பவிதாவா ந பூய:, அஜோ நித்ய ஶ்ஶாஶ்வதோ யம் புராணோ நஹந்யதே ஹந்யமானே [ஶரீரே. ௨0

నజాయతే మ్రియతే వా కదాచి
న్నాయం భూత్వా భవితా వా న భూయః,
అజో నిత్య శ్శాశ్వతో౽యం పురాణో
నహన్యతే హన్యమానే శరీరే. ౨౦

20. அரு—சேதனங்களான தேஹங்களில் காணப்படும் ஜநநமரணங்கள் ஆத்மாவிற்குச் சம்பந்திக்கா. ஆத்மாபிரமாதிகளின் தேஹத்தைப்போல ஒரு காலத்தில் (சிருஷ்டிகாலத்தில்) பிறந்து ஒரு காலத்தில் (பிரளயகாலத்தில்) நசிக்காது. ஆகையால் ஜன்மரஹிதனும் எக்காலத்தும் புதியவனே. தேஹம் கொல்லப்படினும் கொல்லப்படான். பிறத்தல், வளர்தல், பருத்தல், இறத்தல்களெனும் விகாரங்கள் இல்லாமையால் ஆத்மாநித்யன். இந்த விகாரங்களிருத்தலால் சரீரம் அநித்யம்.)

𑌵𑍇𑌦𑌾𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯 𑌏𑌨𑌮𑌜𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।
𑌕𑌥𑌂 𑌸 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌕𑌂 𑌘𑌾𑌤𑌯𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌕𑌮𑍍 ॥ ௨௧

வேதாவிநாசிநம் நித்யம் ய ஏந மஜமவ்யயம்,
கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம். உக
వేదావినాశినం నిత్యం య ఏన మజమవ్యయమ్,
కథం స పురుషః పార్థ కం ఘాతయతి హన్తి కమ్. ౨౧

21. அரு—(நாச மில்லாத ஆத்மாவை ஏன் நாசமுள்ளதாக எண்ணுகின்றனர்.?

கிரு—(ஸதாசாரியனிடம் கேட்காத குற்றத்தாலாம்)

பார்த்தா ! ஜந்மநாசங்கள் மாறுதலும் கிடையாதென்று இந்த ஆத்மாவை எவன்அறிகின்ருனே அந்தப்புருஷன் எவ்வாறு யாரைக் கொல்விப்பான், யாரைக்கொல்வான். (ஆத்மா ஸ்வரூபாபாவ மானதால், வேதாந்த விசாரமில்லாமையாலும், ஆத்மாநாத்ம ஸ்வரூபஞானமில்லாமையானும், வேதாந்தச்ரவணமில்லாமையாலும் இவ்வாறு விபரீதஞானம் உண்டாகின்றது.

വാസാംസി ജീർണ്ണാനി യഥാ വിഹായ
നവാനി ഗൃഹ്ണാതി നരോഽപരാണി ।
തഥാ ശരീരാണി വിഹായ ജീർണ്ണാ
ന്യന്യാനി സംയാതി നവാനി ദേഹീ ॥ ൨൨

வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா விஹாய நவாநி க்ருஹ்ணாதி நரோபராணி,
ததா சரீராணி விஹாய ஜீர்ணாந்யந்யாநி ஸம்யாதிநவாநிதேஹீ. உஉ
వాసాంసి జీర్ణాని యథా విహాయ నవాని గృహ్ణాతి నరోఽపరాణి,
తథా శరీరాణి విహాయ జీర్ణా న్యన్యాని సంయాతి నవాని దేహీ. ౨౨

22. (சரீர ஆத்மாக்களின் தத்வங்களை உன்னால் கேட்கப்படுகையில் இருப்பவனது நிஜபுத்தி அதற்குமேல் மாறிப்போகின்றது.)

கிரு—பீஷ்ம துரோணர்கள் விருத்தர்கள். அவர்களின் சரீரங்கள் வெகு நாட்பட்டவை. ஆகையால் அவர்கள் எந்தக்காரியத்தையும் திருடமாகச்செய்ய வல்லவர்களல்லர். மோக்ஷம் அடையும் வரையினும் புனர்ஜன்மங்கள் உண்டாய்க்கொண்டேயிருக்கும்.ஆகையால் இவர்களிந்த சிதிலமான சரீரத்தைவிட்டு புதிய சரீரத்தை அடைவர். ஒருவன் எவ்வாறு கிழிந்த வஸ்திரத்தைவிட்டு புதியவஸ்திரத்தைத்தரிக்கின்றனனே அவ்வாறே ஆத்மா பழைய சரீரத்தை விடுத்துப் புதியசரீரத்தை எடுக்கின்றது.

அரு—(21-சுலோகத்தில் சொல்லப்பட்டதுபோல ஆத்மா நிர்விகாரனாயினும் இந்தச் சரீரத்தை விட்டு வேறொரு சரீரத்தை அடைவதற்குள் விகாரத்தை அனுபவிப்பதுபோலக் காணப்படுகிறது.)

கிரு—ஒருவன் அழுக்கு வஸ்திரத்தை விட்டுப் புதிய வஸ்திரந்தரிக்கையில் அவனுக்கு ஒன்றும் மாறுதல் இல்லை யல்லவா,அவ்வாறே ஆத்மா எந்த விகாரத்தையும் அடையான். (இந்தச் சுலோகத்தில், நவாநி தேஹீ—என்றஇடத்தில்

இகரத்திற்கு ச்ரேஷ்டமானதென்று பொருள் படுகின்றது. ஆகையால் பீஷ்மத்ரோணர்களுக்கு மஹாஸௌக்யங்களுக்கு இடமாகும் ஸ்வர்க்கம் உண்டாகுமென்று கருத்து.) இவ்வகைச்சரீரங்கள் லபித்தலினால் இவர்கள் இந்தச் சரீரங்களை விட்டுவிடவேண்டுமென்று இஷ்டம் உடையவர்களாயிருக்கின்றனர்.

அரு—அவ்வாறாயினிவர்களிந்தச்சரீரங்களை ஏன்விடக்கூடாது.

கிரு—அவர்களே விடின் ஆத்மஹத்யாபாபம் சம்பவிக்கும்.

அரு—அந்நியர்களைக்கொல்லும்படிகூறி அவர்களால் செத்தால் நலமாகும்? அவ்வாறன்று! யுத்தத்தில் சாதல் சாஸ்த்ரீயமாணத்தை அடைதல் போலாம். ஆதலால் சிரேஷ்டமாகும்.

இந்தச்சுலோகத்தில் அபராணி—வேறேயென்று பொருள். சாதாரணமாய் நாம்யாரையாகிலும் ஸ்தோத்திரம் செய்கையில் "அவர்களின் புத்திக்களிப்பே வேறு" என்றபோது ஸ்தோத்திரம் செய்யப்பட்டவர்களின் கௌசலம் அதிகமென்றுபாவிப்போமல்லவா. அவ்வாறே அபராணியென்பதற்கு திவ்யசரீரம் அவர்களுக்குவரும் என்பது கருத்து.

கிரு—நீ இந்தக்காரியம் செய்தலினால் பீஷ்மத்ரோணர்களுக்கு மஹோபகாரியாவாய். ஆகையால் சண்டைசெய்.

அரு—யுத்தத்தினால் புதிய சரீரம் வருதற்குச் சம்பந்தம் என்ன? இந்தச் சரீரத்தைப் பிறர் தரல் வேண்டுமா? அல்லது சொந்தமாய்ச் சம்பாதிக்கலாமா?

கிரு—இந்தச்சரீரத்தை யீச்வரன் கொடுக்கவேண்டும். ஒரு குடும்பத்தலைவன், தன் மனைவிமக்களுக்கு வஸ்திரங்களை வாங்கித்தருதல்போல ஈச்வரன் ஆத்மாவிற்குக் கொடுத்தல்வேண்டும். தந்தையின் கட்டளையின்படி நடந்துகொண்டு பள்ளிக்கூடம் சென்று வாசித்துக்கொண்டிருக்கும் புத்ரனுக்குத் தந்தை நல்லவஸ்திரங்களைத்தயையுடன்கொடுப்பான். அவனது ஆஞ்ஞையை அசட்டைசெய்துகொண்டு கெட்டகார்யங்களைச்செய்யும் புத்ரனுக்கு மானரக்ஷணார்த்தத்தின் பொருட்டுமோதாம் வஸ்திராதிகள் கொடுக்கப்படும். அவ்வாறே பகவானின் கட்டளை வேதம். அதில் ஸ்வதர்மம்செய்யப்படவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் யுத்தஞ்செய். (இந்த இரண்டு அத்தியாயங்களின், 22- சுலோகங்களுக்கு, 18 சுலோகங்களுக்குச் சம்பந்தம் கற்பித்துப் பார்க்கையில் மேல் காட்டப்பட்ட அபிப்பிராயம் தெளிவாகும்.)

நைநம் ஛ிந்தந்தி ஶஸ்த்ராணி நைநம் தஹதி பாவக: ।
ந சைநம் க்லேதயம்த்யாபோ ந ஶோஷயதி மாருத: ॥

நைநம் சிந்தந்தி ஶஸ்த்ராணி நைநம் தஹதி பாவக:,
ந சைநம் க்லேதயம் த்யாபோ ந ஶோஷயதி மாருத:. உந

నైనం ఛిన్దన్తి శస్త్రాణి నైనం దహతి పావకః,
న చైనం క్లేదయం త్యాపో న శోషయతి మారుతః. ౨౩

23. அரு—என்பாணங்கள் பீஷ்மதுரோணர்களைப் பாதிக்காவா?
கிரு—பாதிக்கா.

அரு—என்பாணங்களவ்வளவு வலிவற்றனவா?

கிரு—உன்பாணங்கள் சக்தியால் ஜோபப்பட்டவை அல்ல? ஆத்மாவை சஸ்திரங்கள் சேதிக்கா. நெருப்புச்சுடாது. நீர்நனைக்காது. காற்று சோஷிக்கச் செய்யாது. (ஐந்தாம் பூதமாகிய ஆகாசத்தால் நாசம் இல்லையென்று அறிவிக்கப் படவில்லை. என்னெனின் ஆகாசத்திற்கு நாசம் செய்கிறகுணம்இல்லை யென்று உலகச்சொல்லல்லவா. இந்தப் பூதங்களுக்குச் சக்தி யிருக்குகினும் அவைக ளால் நாசம் அடைவதற்கு ஆத்மாவிற்கு சக்தியில்லை. ஈரவிறகு எரியாதிருக் கின் நெருப்புக்கென்ன தோஷம் உண்டு.

𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌯 𑌮𑌦𑌾𑌹𑍍𑌯𑍋𑌽𑌯 𑌮𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵𑌚 ।
𑌨𑌿𑌤𑍍𑌯 𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁 𑌰𑌚𑌲𑍋𑌽𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ॥ ௨௪

அச்சேத்யோய மதாஹ்யோய மக்லேத்யோ ஶோஷ்யஏவச,
நித்ய ஸ்ஸர்வகத: ஸ்தாணு ரசலோயம் ஸநாதந:. ௨௪

అచ్ఛేద్యోఽయ మదాహ్యోఽయ మక్లేద్యోఽశోష్య ఏవచ,
నిత్య స్సర్వగతః స్థాణు రచలోఽయం సనాతనః. ౨౪

24. அரு—இந்தபூதங்கள் என் இந்தஆத்மாவை நாசமடைவிக்கமாட்டா.

கிரு—இந்தஆத்மா, சேதிக்கவும், தகிக்கவும், நனைக்கவும், சோஷிக்கவும் அசாத்யமுடையது. என்னெனின் அதுநித்யம், ஸர்வவியாபி, ஸ்திரமானது, சலி க்காதது, எக்காலமும் இருப்பது. இவ்வாறுதலினால் கொல்லப்படாததாம்.

அத்வைதம்.

ஆத்மா எவ்விடத்தும் நிறைந்திருத்தலால் கொல்லப்படாது.

விசிஷ்டாத்வைதம்.

மிக்கசிறியதாதலால் கொல்லப்படாததாம். மிகுந்த ஸூக்ஷ்மசரீரங்களினும் செல்லுதற்குத்தக்கதாகும்.

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌯 𑌮𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑍋𑌽𑌯 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾 𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌨𑌾𑌨𑍁𑌶𑍋𑌚𑌿𑌤𑍁 𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥ ௨௫

அவ்யக்தோய மசிந்த்யோய மவிகார்யோய முச்யதே,
தஸ்மா தேவம் விதித்வைநம் நாநுஶோசிது மர்ஹஸி. ௨௫

అవ్యక్తోఽయ మచింత్యోఽయ మవికార్యోఽయ ముచ్యతే,
తస్మా దేవం విదిత్వైనం నానుశోచితు మర్హసి. ౨౫

25. கிரு—இந்தஆத்மா வ்யக்தமன்று. சிந்திப்பதற்கு அசாத்யம். எந்தவிகார மும் இல்லாததென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் இந்தவிதமான இந் த ஆத்மாவை தெரிந்துகொண்டு நீ துக்கிக்காமலிருக்கவேண்டும்.

அரு—புகையிருக்குமிடத்தில் நெருப்பிருக்குமென்று ஊகித்தல்போல இதை யூகிக்கக்கூடாதா.

கிரு—அக்னியை முன்னமே கண்டிருத்தலினால் ஊகிக்கிறோம். ஆத்மாவை யெப்போதும் கண்டிருக்கவில்லை. ஆகையால் இது இப்படிப்பட்டதென்று ஊகிக்காதே.

அரு—கண் காண்கிறதினால் உள்ளில் ஏதோ சக்தியிருக்கிறதென்று தெரிந்து கொள்வதுபோல ஆத்மாவைச் சிந்திக்கக்கூடாதா?

கிரு—ஆத்மாவிற்கு எந்தக்கார்யமும் இல்லை ஆகையால் சிந்திக்கஅசாத்யம்.

விசிஷ்டாத்வைதம்.

கொல்லப்படாதது.

த்வைதம்.

ஆத்மா நித்யமானது. எவ்விடத்துமிருப்பது. ஈச்வரனை யாச்ரயித்திருக்கும் அணுவாகும் பிரதிபிம்பம். நாசவிஷயத்தில் ஈச்வரனைப்போல நாசமில்லாதது. 21-சுலோகத்தில் தெரிவிக்கப்பட்ட ஆத்மாவை தெரிந்துக்கொள்ளாமல் துக்கமடைந்தாய். இனி துக்கத்தை விடுத்து யுத்தத்திற்கு வில்லையெடுத்துக்கொள்.

அத சைநம் நித்யஜாதம் நித்யம் வா மந்யஸே ம்ருதம் ।
ததாபி த்வம் மஹாபாஹோ நைநம் ஶோசிது மர்ஹஸி ॥

அத சைநம் நித்யஜாதம் நித்யம் வா மந்யஸே ம்ருதம்,
ததாபி த்வம் மஹாபாஹோ நைநம் ஶோசிது மர்ஹஸி. உகூ

అథ చైనం నిత్యజాతం నిత్యం వా మన్యసే మృతం,
తథాపి త్వం మహాబాహో నైనం శోచితు మర్హసి. ౨౬

26. அரு—அந்தக் காரியம் கஷ்டமாயிருக்கிறது.

கிரு—உன் அபிப்பிராயம் என்ன?

அரு—ஆத்மாவிற்கு ஜனனமரணாதிகள் இருப்பதாகத் தோன்றுகின்றது.

கிரு—நீ கேட்டபடி ஆத்மாவிற்கு சரீரத்துடன் மரணமிருப்பின் எப்போதாயினும் சாகும் ஆகையால் துக்கிக்க வேண்டியதில்லை. இந்தச்சரீரத்துடன் ஆத்மா நீங்குதலால் யமலோகத்தில் பயம்கூடஇராது. புண்யபாபங்கள் இந்த லோகத்திலேயே முடிந்துபோம். இவர்களைக்கொல்வதற்குப் பரலோகபயமேயில்லை. நீ ஆத்மா நித்தியமென்று நான் சொல்லுகிற பக்ஷத்தை நம்பின் தர்மயுத்தமாதலினால் பாபம் இல்லை யென்று சரிப்படுத்தவேண்டியிருக்கும். ஆத்மாவிற்கு நாசம் உளதெனும் உன் பக்ஷம் யுத்தம் செய்வதற்கே தடையில்லை யென்பதைத் தெரிவிக்கிறது. (இந்தச் சுலோகத்தில் மஹாபாஹோ என்பதால் அநேக யுத்தங்களில் செயம் பெற்றாய். இப்போ துனக்கேன் இந்தப் பயம் என்று கிருஷ்ணன் பரிஹஸித்தான் என்பது ஒரு கருத்து. மஹாபாஹு அல்லவா என்று தயையுடன் அழைத்ததாக மற்றொருபாவம். ஆத்மாநித்தியமெனவும் அநித்தியமெனவும் வாதித்து என்னை யுத்தஞ்செய் என்கிறாயே என்று அருச்சுநன் கேட்கையில் மஹாபாஹோ நீ யிருந்தாலன்றோ யுத்தத்தில் ஸ்வாரஸ்யமென்று மற்றொருகருத்து.)

கிரு—நித்யம் பிறந்துகொண்டும் நித்யம் இறந்துகொண்டிருக்கும் இந்தச் சரீரத்தையே ஆத்மாவென்று எண்ணுகின்றனையா? அவ்வாறாயினும் மஹா பாஹோ நீயிவ்வாறு துக்கித்தல் தக்கதன்று. இந்தச்சுலோகத்தின் பொருளே மேலே விவரமாகத் தெரிவிக்கப்பட்டது.

𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌧𑍍𑌰𑍁𑌵𑍋 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌚 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍇𑌽𑌰𑍍𑌥𑍇 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு ர்த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச,
தஸ்மா தபரிஹார்யா ர்தே நத்வம் ஶோசிது மர்ஹஸி.   உஎ

జాతస్య హి ధ్రువో మృత్యు ర్ధ్రువం జన్మ మృతస్య చ,
తస్మా దపరిహార్యే ర్థే నత్వం శోచితు మర్హసి.   ౨౭

27. கிரு—என்எனின் பிறந்தவனுக்கு இறப்பும், இறந்தவனுக்குப் பிறப்பும், நிச்சயம் ஆகையால் நீக்கக்கூடாத இந்தவிஷயமாக நீ துக்கித்தல் சரிஅன்று. (இந்தசுலோகம் மேற் சுலோகத்தின் விவரணம்.)

அரு—ஆத்மா அநித்யமென்று கூறினையல்லவா.

கிரு—இல்லை. எந்தபக்ஷத்தை அவலம்பிக்கினும் யுத்தம்செய்யவேண்டுமென்று ஏற்படுமென்று தெரிவித்தற் கவ்வாறு ஆத்மா அநித்யமென்று சம்மதித்தேன்.

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌨𑌿𑌧𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾 𑌪𑌰𑌿𑌦𑍇𑌵𑌨𑌾 ॥   உஅ

அவ்யக்தாதீனி பூதானி வ்யக்தமத்யானி பாரத,
அவ்யக்தநிதனாந்யேவ தத்ர கா பரிதேவனா.   உஅ

అవ్యక్తాదీని భూతాని వ్యక్తమధ్యాని భారత,
అవ్యక్తనిధనాన్యేవ తత్ర కా పరిదేవనా.   ౨౮

28. அரு—ஆத்மாநித்யமாயினும் சரீரசம்யோகத்தால் துக்கமடையாதா?

கிரு—மரணமென்றால் என்னவென்றுபாவித்தாய்?

ஓ-பாரதா, வஸ்துக்கள் எல்லாவற்றிற்கும் ஆதி (பூர்வாவஸ்தை) தெரியாது மத்யம்தெரியும் அந்தம் தெரியாது. இந்தவிஷயத்தின் பொருட்டுத் துக்கமேன்.

அத்வைதம்.

நாமரூபகார்யமான குடம் மண்ணிற்றன்றி அதிலேயே சேருதல்போல மாயையிற்றன்றி அதிலேயொடுங்கும். முத்துச்சிப்பியில் வெள்ளியெனும் பிராந்தியுண்டாகி மீண்டும் கெட்டதுபோலக்கெடும். இருக்கிறதென்று தோன்றுவதற்கு வெள்ளியெனும் ஒருபொருள் இருக்கவேண்டாமா எனின் அந்தவஸ்துவே பரப்பிரமம். பிரமமே அவ்யக்தம். இதிலிருந்து வ்யக்தம் மனசு.

### விசிஷ்டாத்வைதம்.

பஞ்சத்வம் என்றால்மரணம். பஞ்சபூதங்கள் தனித்தனி நீங்கிப்போகும். இந்தச்சரீரம் பந்தல்போல அநேகபொருள்களின் சேர்க்கையால் ஏற்படுகின்றதாகையால் சரீரத்திற்காக துக்கமேன்? பந்தலைப்பிரித்துப் போடுவதற்கு எவனேனும் துக்கப்படுவானா?

𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍇𑌨
𑌮𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌦𑍍𑌵𑌦𑌤𑌿 𑌤𑌥𑍈𑌵 𑌚𑌾𑌨𑍍𑌯𑌃 ।
𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌚𑍍𑌚𑍈𑌨𑌮𑌨𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿
𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌪𑍍𑌯𑍇𑌨𑌂 𑌵𑍇𑌦 𑌨 𑌚𑍈𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ॥ ௨௯

ஆஶ்சர்யவ த்பஶ்யதி கஶ்சிதேந மாஶ்சர்ய வத்வததி ததைவசாந்ய: ஆஶ்சர்யவச்சைந மந்ய: ஶ்ருணோதி ஶ்ருத்வா ப்யேநம் வேதந சைவ கஶ்சித். ௨௯

ఆశ్చర్యవ త్పశ్యతి కశ్చి దేన మాశ్చర్యవద్వదతి తథైవచాన్యః,
ఆశ్చర్యవచ్చైన మన్యః శృణోతి శ్రుత్వాప్యేనం వేదనచైవకశ్చిత్. ౨౯

29. அரு—1-அத், 11-சுலோகத்தில் துக்கித்தலினால் என்னை மூடன் என்றாய். எல்லாரும் துக்கிக்கவில்லையா?

கிரு—அவர்கள் அறியாதவர்கள்.

அரு—தெரிந்தவர்களும் துக்கிக்கவில்லையா?

கிரு—அவர்கள் கேட்டிருக்கின்றனரன்றி அவர்கள் அதை அநுபவிக்கவில்லை.

அரு—என்னையும் அப்படிப்பட்டவனாக பாவிப்பாய்.

கிரு—பாவிக்கவேண்டியதே.

அரு—என்மூடத்வத்திற்கு நீயே காரணபூதனாவாய்.

கிரு—அதிமேதாவியிடத்தில் வித்யைக்கிரகித்துத்தவறிப்போனால் தவறு மாணாக்கனதே. அவ்வாறே உன் மூடத்வத்திற்கு நான் காரணமன்று.

அரு—அவ்வாறாயின் என்மூடத்வத்திற்கு விசனமுண்டாகின்றது.

கிரு—துக்கப்படாதே, உன்மூடத்வத்தை அன்று விஷயம் பெரிது.

அரு—பெரிதா.

### விசிஷ்டாத்வைதம்.

கிரு—ஆச்சரியமான ரூபமுடைய இந்த ஆத்மாவையொருவன் (அநேகபிராணிகளில் மிகுந்ததவத்தால் பாபங்கள் நிவர்த்தியாய் புண்ணியம் விருத்தியடைந்தவன்) பார்க்கின்றான். ஆச்சர்யமான ஆத்மாவை மற்றொருவன் (வேறொருவனுக்கு) கூறுகின்றான். ஆச்சரியமான இந்தஆத்மாவை அப்படிப்பட்டவன் மற்றொருவன் கேட்கின்றான். கேட்டபிறகு இந்தஆத்மாவை (நிச்சயமாய்) யதாவாஸ்திதமாய் எவனும் தெரிந்து கொள்ளவில்லை.

அத்வைதம்.

ஆத்மாவைப்பார்ப்பவன் சொல்லுகிறவன் கேட்கிறவன் ஆச்சர்யவஸ்துவை ஒப்பவன். கேட்டவர்களிலே ஒரோவொருவன் அறிந்துகொள்ளுகிறான்.

த்வைதம்.

ஆத்மாவை, தெரிந்துக்கொண்டவன், சொன்னவன், கேட்டவன் துர்லபம்.

அரு—மிகுந்த சிரமப்பட்டுத் தத்வவிசாரஞ்செய்தால் செம்மையாய்த் தெரியுமா?

கிரு—சிறிதே தெரியும். கஶ்சித் = ஒருவன், தாமசனுக்குக்கேட்கினும் தெரியாது. தெரிந்தாலும் வேதவிருத்தமாய்த் தெரியும். ராஜஸனுக்கு சிறிதே தெரியம். சாத்விகனுக்கு யதாவஸ்தம் கொஞ்சமாய்த்தெரியும். ஆகையால் இந்தக்கடினமான விஷயத்திற்காகத் துக்கப்படாதே. உன் மூடத்வத்திற்கு நான் காரணமென்று என்னையும் நிந்திக்காதே.

𑌦𑍇𑌹𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌵𑌧𑍍𑌯𑍋𑌽𑌯𑌂 𑌦𑍇𑌹𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

தேஹீ நித்ய மவத்யோயம் தேஹே ஸர்வஸ்ய பாரத,
தஸ்மா த்ஸர்வாணி பூதானி ந த்வம் ஶோசிது மர்ஹஸி.  ௩0

దేహీ నిత్య మవధ్యోఽయం దేహే సర్వస్య భారత,
తస్మా త్సర్వాణి భూతాని న త్వం శోచితు మర్హసి.  30

30. கிரு—பாரதா! எல்லாசெந்துக்களின் தேகங்களிலும் (எனின்தேகங்கள்முழுதும் வதைக்கப்படினும்) ஆத்மா ஒருபோதும் கொல்லப்படான். ஆகையால் சர்வப்ராணிகளைக்குறித்தும் நீ துக்கப்படவேண்டாம்.

அத்வைதம்.

ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களுக்காக துக்கிக்காதே. ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்கள் கண்களுக்குக் காணப்பட்டவை ஆதலால் உன் சரீரம் அறிவிக்கப்பட்டது.

விசிஷ்டாத்வைதம்.

அரு—பீஷ்ம துரோணர்களின் ஆத்மாக்களுக்கு மாத்ரம் நாசமில்லையென்று எண்ணுகிறேன்.

கிரு—அவ்வாறன்று, எல்லாரின் ஆத்மாக்களும் நாசம் அடையா. ஆகையால் துக்கிக்கக்கூடாது.

𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌕𑌮𑍍𑌪𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ।
𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌦𑍍𑌧𑌿 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

ஸ்வதர்ம மபி சாவேக்ஷ்ய நவிகம்பிது மர்ஹஸி,
தர்ம்யாத்தி யுத்தாச்ச்ரேயோ ந்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே.  ௩௧

స్వధర్మ మపి చావేక్ష్య నవికంపితు మర్హసి,
ధర్మ్యాద్ధి యుద్ధాచ్ఛ్రేయోఽన్యత్ క్షత్రియస్య న విద్యతే.

**31.** அர்ச்சுனா! சரீர ஆத்மாக்களின் தத்வம் செம்மையாய் அறியப்பட்ட படியால் யோசனையில்லை யல்லவா?

அரு—நீ 2அத்,20-சுலோகத்தில் தெரிவித்தபடி ஆத்மாவிற்கு எந்த விகாரங்களும் இல்லையென்று தெரிந்தும் மீண்டும் 2-அத், 6-சுலோகத்தில் நான் கூறியபடி இவர்களைக் கொன்றபிறகு என் உயிர் எவ்வாறு நிற்குமென்று தோற்றுகிறது. ஆகையால் என்னால் யுத்தஞ் செய்யமுடியாமலிருக்கின்றது. (இவ்வாறு அருச்சுநன் கூறுகையில் இவனுக்கு அந்தக்கரண சுத்தி இல்லாமையாலே தன்போதம் மனதிற்கேறவில்லை யென்று எண்ணிக் கிருஷ்ணன் வேறுவழியாய் உபதேசிக்க எண்ணினான். அந்தக்கரணம் கண்ணாடி போல்வது. கண்ணாடிக்கு நம்முருவத்தைக்காட்டி அதிலிருந்து நமது உருவத்தை மீண்டும் பார்ப்பதுபோல, சாஸ்திரார்த்தங்களை அந்தக்கரணங்களுக்குக்காட்டி அதினால் சுத்தியடைந்த அந்தக்காரணங்களால் நாம் பிரயோஜகராகவேண்டியது. அழுக்கால் நிறைந்தகண்ணாடியினை துடைத்துப்பார்க்க வேண்டியதே யன்றி முகத்தைக்கண்ணாடியில் மோதினும் என்ன பயன். அவ்வாறே கிருஷ்ணன் அசுத்தாந்தக்கரணமுடைய அருச்சுநனை மனதிலுள்ள களங்கத்தைப்போக்க எண்ணினான். அவ்வாறெண்ணி அருச்சுனா! உன்குலம் ஆச்ரமம் தர்மங்களை யோசியாமலிருக்கின்றாய். சரீராத்மாக்களின் தத்வம் எவ்வாறிருக்கினும் இருக்க. உனக்கு ஸ்வதர்மம் செய்தல் கர்த்தவ்யமென்று இந்தச் சுலோகத்தில் தெரிவிக்கின்றான்.

கிரு—உன் ஸ்வதர்மத்தை (யாகத்தில் பசுவதைப்போல் யுத்தத்தில் பிராணிகளை வதைத்தல் க்ஷத்ரியனுக்கு ஸ்வதர்மம் என்பது.)யோசித்தும் நீ சலிக்காமல் இருத்தல் வேண்டும். க்ஷத்திரியனுக்குத் தர்மயுத்தத்தைக் காட்டிலும் உத்தமமானகாரியம் வேறொன்று இல்லை. 1–அத், 46–சுலோ. இல், எதிரிகளால் சாதல் க்ஷேமதரம் என்றாயே; 1-அத், 26–30, சுலோகங்களில் உன் தேகம் முழுதும் தபித்து நடுங்குகின்றது என்றாயே, அகார்யத்திற் கன்றோ அஞ்சவேண்டும். யுத்தம் ஸ்வதர்மம். (ஏன் எனின் அரசனுக்குச் செய்யத் தகுந்ததருமம். அன்றி, ஸ்வஸ்யதர்ம:– பகவானுடைய முகோல்லாஸகர்மம். ஒரு ராஜ உத்யோகஸ்தன் தான் செய்யவேண்டியகார்யத்தைவிட்டு தன்னிலும் உயர்ந்தவனுடைய காரியத்தைத்தான் செய்தேனென்று மேலதிகாரிக்குத் தெரிவிப்பானாயின் தன்கட்டளையில்லாமல் இந்தக்காரியத்தை செய்ததற்கு அவன் இவன் மீது கோபிப்பானேயன்றி அநுக்ரஹத்தைக்காட்டுவானா? அவ்வாறே வேறு காரியங்கள் உயர்ந்ததாக இருப்பினும் பகவத் ஆஜ்ஞை இல்லாமையால் அது செய்யத்தக்கதன்று. அவ்வகைத்தருமம் எவ்வகையிலும் ஸ்வதர்மம்போல் காக்காது. இதற்கனுகூலமாய், 18-அத், 45-வது சுலோகத்தில் ஸ்வகர்மம் செய்தவன் சித்தியை படைவன் என்று கூறப்பட்டிருக்கிறது. ஸ்வம் = எனின் தனம். எந்தத்தருமம் செய்யினும் தனம் விரயமாகும். இந்தத்தருமம்

அவ்வாறன்றி தனத்தைக்கொடுப்பதாக இருக்கின்றது. ஸ்வதர்மம் உன் குல தர்மமென்றும்பொருள். இது உன்ஸ்வதர்மமாதலினால் பாபமில்லை. தனவிரயமுமில்லை. செல்வமேவரும். பகவன்முகோல்லாசமுண்டாம். இதனால் சம்பாதிக்கும் தனத்தால் பலதர்மங்கள் செய்யலாம்.

அரு—நீ கூறியது உள்ளது. ஹிம்சைசெய்யவேண்டியிருக்கிறதல்லவா? (கிருஷ்ணன் இந்தச்சுலோகத்தில், அபி = ஆயினும், என்பதால் அதர்மமே ஆயினும் இது, சு, அ, தர்மமாக இருக்கிறது. யஜ்ஞத்தில் பசு ஹிம்சை செய்தாலும் பாபமாக பாவிக்கப்படாததுபோலவும் இராஜ சேவகன் ஒருகுற்றவாளியைக் கணக்கிற்கு அதிகப்படாமல் அடிகள்அடிக்கினும் அவன் அபராதியாக பாவிக்கப்படாததுபோலவும், இந்தக் கர்ம ஹிம்ஸாரூபமான பாபம் இராதென்றுகருத்து.)

அரு—நான் ஆஸ்திகனன்றோ, ஆயினும் என்னை மன்னித்து பந்து ஹிம்ஸை இல்லாத வேறொரு கருமம் ஏதேனும் கூறலாகாதா.

கிரு—நீ என்பந்துவாகவும், நண்பனாகவும் இருத்தலாலே உன் நலத்தைக் கோரியே இந்தக்கர்மத்தைக்கூறினேன். இதற்கு மிஞ்சிய கர்மமே இல்லை.

அரு—யுத்தம் செய்பவர்களனைவர்க்கும் மோக்ஷமே உண்டாமா?

கிரு—தர்மம் தவறாமல் யுத்தம் செய்பவர்களனைவர்க்கும் மோக்ஷமே.

அரு—க்ஷத்ரியனுக்கு யுத்தமே சிரேஷ்டமானதென்று உன் அபிப்பிராயமாயின் சந்தியாவந்தன யஜ்ஞாதிகள் செய்ய அக்கரையில்லையென்று தோற்றுகின்றது.

கிரு—ஒருவனை பிரஹஸ்பதியென்று புகழ்ந்த மாத்திரத்தில் மற்றவனை வைததாக கருத்தன்று. வருஷங்களிலுள்ள ஒவ்வொரு மாதங்களும் ஒன்றைக் காட்டிலுமொன்று சிரேஷ்டமானதென்று வர்ணிக்கப்படினும் பன்னிரண்டு மாதங்களும் உயர்ந்தனவே. அவ்வாறே யுத்தபிரசம்சைக்காக அவ்வாறு கூறப்பட்டது. சந்தியாதிகள்முக்கியமே. திரவ்யங்கள் செலவில்லாத இந்தச் சுவதர்மத்தைச்செய். (மேல்தெரிவிக்கப்பட்ட சுலோகாபிப்பிராயமே இவர்களின் பிரசங்கமாகத் தெரிவிக்கப்பட்டது.)

ய஦ூ௭ஹுயா செொவவநூம் ஸ்ரீ௯உாா உவாவூதடி ।
ஸுவிநஃ க்ஷத்ரியாஃ வாய௯ லஹவெ யுஜ ஶீதூஶடி ॥ ௩௨

யத்ருச்சயா சோபபந்நம் ஸ்வர்க்கத்வார மபாவ்ருதம்,
ஸுகிந: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்த மீத்ருஶம். ௩௨

యదృచ్ఛయా చోపపన్నం స్వర్గద్వార మపావృతమ్,
సుఖినః క్షత్రియాః పార్థ లభంతే యుద్ధ మీదృశమ్. ౩౨

32. அரு—யுத்தத்தில் ஜெயித்தாலன்றோ சௌக்யங்களை அனுபவிக்கக் கூடும். இறந்தாலும் என்னகதி உண்டாகும். இதுவன்றி யுத்தமேசம்பவிக்காமலிருந்தால் ஸ்வதர்மம் எவ்வாறு செய்யமுடியும்.

கிரு—பார்த்தா! யத்னமில்லாமல் நேரிட்ட யுத்தம் ஸ்வர்க்கத்திற்குத் திறந்துவைத்த வாயிலாகும். பாக்யவான்களாகிய அரசர்களுக்கே யிதுலபிக்கும் (ஜெயித்தால் விஜயமும், இறக்கின் ஸ்வர்க்கமும் லபிக்குமென்றுகருத்து.) இந் தச்சுலோகத்தில், அபாவிருதம் = என்றிருத்தலால் ஸ்வர்க்கம் மூடப்படாமல் இவர்கள் போதற்குத்தகுந்தபடி திறக்கப்பட்டிருக்கின்றதெனவும், அதற்குத்த டையில்லையென்றும் பொருள். யுத்தமே ஸ்வர்க்கத்வாரமாக இருக்கின்றது. அதுவும் திறக்கப்பட்டதாக இருக்கின்றது. அவ்விடத்திலுள்ளவர்கள் த்வாரத் தை மூடினும் இந்த யுத்தமென்கிற தர்மமே அந்த த்வாரத்தைத் திறப்பதற்கு ச் சித்தமாக் இருக்கின்றதென்றும் கருத்து.

யத்ருச்சயா என்பதால் பிரயத்னமில்லாமல் நேரிட்டயுத்தத்தைவிடாதே. யுத்தமேசம்பவிக்காம லிருந்தால் ஸ்வதர்மத்தை விட்டபாபம் நேரிடாதென்று கருத்து. இதற்குச்சம்மதமாக 18-அத், 43-வது சுலோகத்தில் யுத்தத்தில் புற ங்கொடுக்கக் கூடாதென்று கூறப்பட்டிருக்கிறது. இந்தச்சுலோகத்தில், சுகி ன:, என்பதால் யுத்தம் அடையப்பெற்றவர்கள் சுகமுள்ளவர்களென்று ஏற்ப டுகின்றது. யுத்தம் ஒரு சுககார்யமாவெனின் அந்தப்பதத்திற்குப் புண்ணிய வான்களென்று கருத்து. யுத்தத்தில் போர் புரிந்தவர்கள் ஸௌக்யத்தை யடைதலினால் சுகமுள்ளவர்களுக்கே யிவ்வகையுத்தம் நேரிடுமென்று கூறப் பட்டது.

பகவத் ஸங்கல்பத்வாரா நேரிட்ட இந்தச் சுவர்க்கத்வாரமாயுள்ள யுத்தத் தைச் செய்யென்று கருத்து. இந்தசுலோகத்தில், ஈத்ருசம் = இவ்வாறு எனின் பூஜிக்கத்தக்கவராகும் பீஷ்மத்ரோணர்களை பிரதிபக்ஷத்தவர்களாகக்கொண்ட இந்தயுத்தம் எவ்வாறு நன்மைசெய்யுமென்று அர்ச்சுனன் வினவினது போலவும், ஈத்ருசமபிஸ்வர்கத்வாரம் = இவ்வாறிருக்கினும் ஸ்வர்க்கத்வாரமே யென்று கிருஷ்ணன்கூறினது போலவும், இந்தப்பதங்களால் கருத்து ஏற் படுகின்றது.

அரு—அது எவ்வாறு சுவர்க்கத்வாரமாகும்.

கிரு—இவர்கள் ஆததாயிகளாகையால் இவர்களைக் கொல்லலாம்.

அரு—இம்சை செய்யக்கூடாதென்று தர்மசாஸ்திரம் தெரிவிக்கையில் ஆததாயிகளாயினும் ஆசாரியர்களைக் கொல்லவேயாகாது.

கிரு—குரு, பிராம்மண, பால, விருத்தர்களையுங்கூடகொல்லலாம் என்று யாஞ்ஞவல்கர் எழுதியிருக்கின்றனர்.

அரு—சாஸ்திரம் கொல்லலாமென்றதேயன்றி கொல்லவேண்டும் என்று கூறிலது. ஆதலால் கொல்லுதலும், கொலைசெய்யாமையும் எனதிஷ்டமே.

கிரு—நீ இவர்களைக்கொன்றேதீரவேண்டும். சுவதந்திரகாரியமாயின்உன் இச்சானுசாரமாய் விட்டுவிடலாம். எவ்வளவு ஆப்தனுயினும் பிரதிபக்ஷத்தில் உள்ளவனை யஜமானுடைய கார்யார்த்தமாகக் கொலைசெய்யவேண்டும்.

அரு—கொலைசெய்யக்கூடாது, கொலைசெய்யலாம் எனும் இரண்டும் சாஸ்திரத்தில் கூறப்பட்டவை ஆகையால், அஹிம்ஸாபரமோதர்மா எனும் விதியைப்பாராட்டக்கூடாதா?

கிரு—இவ்விரண்டில் சாமான்யவிதியைக் கைவிட்டு விசேஷவிதியைக் கைக்கொள்ளவேண்டும். ஆகையால் இவர்களைக்கொல்லவேண்டியதே (இந்த சுலோகத்திற்கு 12 விசித்ரார்த்தங்களுள்ளவென்று ஸ்ரீமான் ஆசார்யரவர்கள் தெரிவித்தனர்.

அரு—ஸ்வதர்மமாதலினால் க்ஷத்ரியனுக்குத் தர்மயுத்தமே ச்ரேய மென்றும், இதுவே சுவர்க்கத்திற்கு வாயிலாக விருக்குமென்றும் உன் அபிப்பிராய மாயின் நான் 1-அத். 36, 37, சுலோகங்களில் இவர்களைக் கொல்லக்கூடா தென்றபோது சும்மாவிருந்தாயே.

கிரு—உனக்குண்டான சித்தப்பிராந்தி எவ்வளவு தூரஞ்சென்று நிற்குமோ என்று பரீக்ஷிப்பதற்காகச் சும்மாவிருந்தேன். அதற்கென்ன? அதற்குச் சமாதானமிப்போது தெரிவித்தேன். யுத்தஞ்செய்.

அரு—யுத்தஞ்செய்ய எனக்கு மனம் பிறக்கவில்லை.

𑌅𑌥 𑌚𑍇𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌨 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 ।
𑌤𑌤𑌃 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥　௩௩

அதசேத் த்வம் தர்ம்ய மிமம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி,
தத ஸ்வதர்மம் கீர்த்திஞ்ச ஹித்வா பாப மவாப்ஸ்யஸி.　௩௩

అథచే త్త్వం ధర్మ్య మిమం సంగ్రామం న కరిష్యసి,
తత స్స్వధర్మం కీర్తించ హిత్వా పాప మవాప్స్యసి.　33

33. கிரு—யுத்தஞ்செய்யாதிருப்பின் உண்டாகும் தீமையைத்தெரிவிக்கின்றேன். தர்மயுக்தமான இந்தயுத்தத்தை நீ (அஜ்ஞானத்தால்) செய்யாது விட்டால் ஸ்வதர்மபலத்தையும் கீர்த்தியுடன் போக்கிக்கொள்ளுதலே அன்றி பாபத்தையும் அடைவாய்.

அரு—நான் 1-அத். 44-வது சுலோகத்தில் இவர்களைக் கொல்லுதல் மஹா பாபமென்று கூறினேன். நீ யுத்தம் செய்யாவிடின் பாபம் என்கின்றாய். பாபகார்யம்செய்பவன் நரகம் அநுபவிக்கவேண்டியிருக்கும். ஆதலால் நானிப்போது என்னசெய்வேன்.

𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑌥𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇𑌽𑌵𑍍𑌯𑌯𑌾𑌮𑍍 ।
𑌸𑌮𑍍𑌭𑌾𑌵𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑌰𑌣𑌾𑌦𑌤𑌿𑌰𑌿𑌚𑍍𑌯𑌤𑍇 ॥　௩௪

அகீர்த்திம் சாபி பூதானி கதயிஷ்யந்தி தேவ்யயாம்,
ஸம்பாவிதஸ்ய சாகீர்த்தி ர்மரணா ததிரிச்யதே.　௩௪

అకీర్తిం చాపి భూతాని కథయిష్యంతి తేzవ్యయామ్,
సంభావితస్య చాకీర్తి ర్మరణా దతిరిచ్యతే.　34

34. கிரு—ஸ்வதர்மம்செய் கீர்த்தியை யடைவாய்.

அரு—எனக்குக் கீர்த்தியால் காரியமில்லை.

கிரு—அபகீர்த்தியையடைவாய் (இந்தச்சுலோகத்தில் பூதானி என்பதால் பிராணிகளனைவரும் ஸ்திரீகளும்கூட உன் அபகீர்த்தியைக் கொண்டாடுவரென்று கருத்து.)

அரு—எனது அபகீர்த்திக்கு நான் சிந்திக்கேன்.

கிரு—அபகீர்த்தி மரணத்திற்கு மிஞ்சியது. இறத்தல் தற்காலத்தில் கஷ்டமாகவிருக்கும். அபகீர்த்தி யெக்காலமும் சகிக்கக்கூடாதகஷ்டமாகவிருக்கும்.

𑌭𑌯𑌾𑌦𑍍𑌰𑌣𑌾𑌦𑍁𑌪𑌰𑌤𑌂 𑌮𑌂𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 ।
𑌯𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌤𑍍𑌵𑌂 𑌬𑌹𑍁𑌮𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌲𑌾𑌘𑌵𑌮𑍍 ॥

பயாத்ரணாதுபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா:,
யேஷாஞ்ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம். ௩௫

భయాద్రణాదుపరతం మంస్యంతే త్వాం మహారథాః,
యేషాం చ త్వం బహుమతో భూత్వా యాస్యసి లాఘవమ్.

35. அரு—எனக்கு இவர்களிடத்துள்ள அன்பினால் யுத்தம் செய்யவில்லையென்கிற கீர்த்திமாத்திரம் ஏன் வரக்கூடாது.

கிரு—இந்தச்சமயம் முற்காலத்ததுபோன்றதன்று. நீ பயத்தால் ஓடிவிட்டாய் என்று எண்ணுவார்கள்.

அரு—அவ்வாறே ஜனங்கள் எண்ணினும் எனக்குச் சிந்தையில்லை. (இந்தச்சுலோகத்தில் லாகவம் என்றதால் உனக்குப்பின்னால் நிந்திப்பதற்கு நீசிந்தைசெய்யாதிருப்பினும் உன் எதிரிலேயே உன்னை அகௌரவப்படுத்துவரென்பது பொருள்.)

𑌅𑌵𑌾𑌚𑍍𑌯𑌵𑌾𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌬𑌹𑍂𑌨𑍍 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑌵𑌾𑌹𑌿𑌤𑌾𑌃 ।
𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌵 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌤𑌤𑍋 𑌦𑍁𑌃𑌖𑌤𑌰𑌂 𑌨𑍁 𑌕𑌿𑌮𑍍 ॥ ௩௬

அவாச்யவாதாம்ஶ்ச பஹூந்வதிஷ்யந்தி தவாஹிதா:,
நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோ து:கதரம் நு கிம். ௩௬

అవాచ్యవాదాంశ్చ బహూన్ వదిష్యన్తి తవాహితాః,
నిన్దన్తస్తవ సామర్థ్యం తతో దుఃఖతరం ను కిమ్. ౩౬

36. அரு—பீஷ்மத்ரோணர்கள் மாத்திரமேயல்லவா என்னை அகௌரவப்படுத்துவர். அவர்கள் பெரியர், அவர்களின் நிர்லக்ஷ்யபாவத்திற்கு நான் சகித்துக்கொள்ளுவேன்.

கிரு—துர்யோதனதுச்சாஸனாதிகளே உன்னை அலக்ஷ்யம்செய்வர்.

அரு—அவர்கள் எப்போதும் அவ்வாறு செய்யார். அவர்களுக்கு என்சமர்த்துத் தெரிந்தேயிருக்கிறதல்லவா ?

கிரு—உன்சாமர்த்திய மறிந்து அதனையே நிந்திப்பர். முக்கோடி தேவர்களின் சகாயத்தால் யுத்தத்தில் ஜெயித்தாயென்றும், இவன்வேடிக்கையாகயுத்தம் செய்தானன்றி உண்மையாகச்செய்யின் இவன் பாழாயிரானோ என்றும், உத்

தாகோக்ரஹணத்தில் நாங்கள் இவனைக்கொல்லவேண்டுமென்று எண்ணுமை யாலே யிவன்பிராணத்தை வைத்துக்கொண்டிருக்கின்றான் என்றும் இவ்வாறு பலவகையாக உன்சாமர்த்தியத்தையே நிந்திப்பார்கள்.

அரு—அவர்கள்வ்வாறே நிந்திக்கட்டும்.

கிரு—அவர்களின் வார்த்தைகளை நீசகிக்காய்.

அரு—சகிக்காமல் என்செய்வேனே.

கிரு—எவ்விதத்தினும் யுத்தம் நடக்கும். உனக்கும் எனக்கும் அபகீர்த்தி மாத்ரம் சம்பவிக்கும்.

அரு—அவர்கள் வைதமாத்திரத்தில் யுத்தஞ்செய்வேனா?

கிரு—விசேஷமாக வைதால் உனக்குக் கோபம் வராமலிராது. அவ்வள வே யல்லாமல் உன்தமயன் தர்மராஜன் உன்பராக்ரமத்தை அற்பமாக மதிக்கி னும் நீ அவனைக்கொல்ல யத்னிக்காமலிராய்.

ஹதொ வா பூாப்ஸ்ஸெ ஸ்ஹுஂ
ஜிகூா வா ஹொக்ஷஸெ ஊஹீஂ।
தஸ்ாா உ–த்திஷ்ஹ கௌஷெய
யு–ஊாய கூதநிஸ்ஹயஃ॥ ௩௭

ஹதோவா ப்ராப்ஸ்யஸே ஸ்வர்க்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம்,
தஸ்மா துத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருத நிஸ்சய:. ௩௭

హతో వా ప్రాప్స్యసే స్వర్గం జిత్వా వా భోక్ష్యసే మహీమ్,
తస్మా దుత్తిష్ఠ కౌన్తేయ యుద్ధాయ కృతనిశ్చయః. 37

37. அரு—அப்படியானால் என்னையிப்போது என்னசெய்யச்சொல்கிறாய்.

கிரு—யுத்தம்.

அரு—ஜயம் உண்டாமா.

கிரு—2-அத். 6-சுலோகத்தில் அந்தவிஷயம் எனக்குத் தெரியாதென் றேனே.

அரு—ஜெயம் தெரியாதிருப்பின் எவவாறு யுத்தம் செய்யமுடியும்.

கிரு—குந்திபுத்ரா! நீ கொல்லப்பட்டு சுவர்க்கத்தை யாயினும் அடைவாய். ஜெயித்து பூமியை (ராஜ்யசுகத்தை) அனுபவிப்பாய். ஆகையால் யுத்தஞ்செய்ய நிச்சயித்தவனாய் எழுந்திரு. (இந்தச்சுலோகத்தில் அபஜெயத்தை முன்னே தெரிவித்தலால் நானே யுத்தத்தில் கொல்லப்படுவேன் ஆயினும் பகவானுக்குப் பிரியமாகையால், ஸ்வதர்மம் ஆவச்யகமென்று எண்ணி யுத்தம் செய்யவேண்டு மென்று கருத்து.)

அரு—செத்தபிறகு வரும் சுவர்க்கமும், ஜெயித்தபிறகு லபிக்கும் ராஜ் யத்தை யொவ்வாதென்று இதுவரையிலும் கூறினேன்.

கிரு—நான் இப்போது கூறியது நீ முடியாதெனின் ஸ்வர்க்கமன்று. அது மோக்ஷம். (சுவர்க்கம் எனும் பதத்திற்குத் துக்கமில்லாமலும் குறைவில்லாமலும்

சுகமாயிருப்பதென்று பொருள். இவ்வாறிருக்குமிடம் மோக்ஷமேயல்லவா பாகவதத்தில் சுவர்க்கார்த்தமாக சௌனகாதியர் ஆயிரம் வருஷங்கள் யாகஞ் செய்தார்களென்று கூறப்படுகிறது. அப்படிப்பட்டமஹான்கள் அசாச்வதமாகும் இந்தத்தரித்ரஸ்வர்க்கத்தைக்கோரியிருப்பாரா? ஆகையால் சுவர்க்கமென்பதற்கு மோக்ஷமென்றுகருத்து. செத்தபிறகு இதனை யடைவாயென்பது பொருள்.)

அரு—நீ முதலில் ஸ்வர்க்கமென்று கூறி நான் வினவின பின் அதனைச் சரிப்படுத்தி வேறுபொருள்கூறினாய். சுவர்க்க கரமா என்பதற்குப்பதில் சுக கரமா என்று இருக்கக்கூடாதா.

கிரு—வேதம் ஆயிரம் தாய்தந்தையரினும் பிரஜைகளிடத்தில் அதிக ஆசையுள்ளது. தம் பிள்ளைகளின் குணங்களுக்குத் தகுந்தவார்த்தைகளைக் கூறி தாய் தந்தையரவர்களைத் தங்கள் வழிக்குத் திருப்பிக்கொள்ளுதல்போலவே தம்பிரவிருத்திகருமம் செய்பவனுக்கு எனின் பலேச்சையுள்ளவனுக்கு இந்த சுவர்க்கமென்றும், நிவர்த்திகர்மம் செய்பவனுக்கு அதாவது பலேச்சையில்லாதவனுக்கு அந்த மோக்ஷமென்றும் பொருள்படும்படி சுவர்க்கமெனும் ஒரேபதத்தைப் பிரயோகித்தது. நீ யெந்தச் சுவர்க்கத்தைக் கோருகின்றாய்.

அரு—நான், ரம்பை அமிர்த முதலிய உள்ள சுவர்க்கத்தைக்கோரேன். புனராவர்த்த மில்லாத (மீளாத) மோக்ஷத்தைக் கோருகிறேன்.

கிரு—அப்படியாயின் யுத்தத்திற் கெழுந்திரு.

அரு—என்விஷயமாய் உனக்கேன் இவ்வளவு அக்கரை.?

கிரு—என் அத்தைகுமாரனாதலினால் (கௌந்தேய என்பதால் இந்தப் பொருள் தோன்றுகின்றது.)

𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇 𑌸𑌮𑍇 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑍌 𑌜𑌯𑌾𑌜𑌯𑍌 ।
𑌤𑌤𑍋 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌨𑍈𑌵𑌂 𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥

ஸுகது:கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ,
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாப மவாப்ஸ்யஸி. ௩௮

సుఖదుఃఖే సమే కృత్వా లాభాలాభౌ జయాజయౌ,
తతో యుద్ధాయ యుజ్యస్వ నైవం పాప మవాప్స్యసి. ౩౮

38. அரு—பீஷ்ம துரோணர்களைக்கொல்லின் பாபமில்லையென்று உன்வாயார் ஒரு முறைதிருடமாகக்கூறு.

கிரு—நான் சொன்னபடி செய்யின்பாபம் வரவேவராது. சுகதுக்கங்களையும், லாபநஷ்டங்களையும், ஜயாபஜயங்களையும் சமமாகப் பாவித்து எனின் பலத்தையெண்ணாமல் யுத்தத்தைத் தொடங்கு. இவ்வகைச்செய்யின் பாபத்தை (சம்சாரத்தை அடையாய்.) இந்தச்சுலோகத்தில் ஸமேகிருத்வா என்பதால் மேற்தெரிவித்த சுகதுக்காதித்வந்தங்களை, மா = லக்ஷ்மீஸமேதனாகும் பரமாத்மாவினிடத்திலிருத்தி யுத்தம் செய்யின் பாபமில்லையென்றுகருத்து.

அரு—பாபமிராதல்லவா என்று சந்தேஹத்துடன் நம்புகிறேன். இவ்வி டத்தில் (ந) எனும் பிரயோகத்தால் புருஷதர்மத்தை அவலம்பித்து அதைர் யத்தை விடுத்து தைரியத்தை அவலம்பித்து யுத்தஞ்செய்யென்று கருத்து.

அரு—பாபம் நேருமென்று பயமாகவேயிருக்கிறது.

கிரு—பாபம்உண்டாகாது மோக்ஷமேகிடைக்கும். இவ்விடத்தில் பாபம் = எனின் பரபிரம்மம் என்றுபொருள். இந்தப்பதத்தைப்பிரிக்கின் ப-|-அபம், என்று ஆகும். ப = ஈச்வரன், அப = தனக்கு மேலீச்வரனில்லாதவன். (இப் படிப்பட்ட வனையடையலாகும்) என்று பொருள்.

7-அத். 7-சுலோகத்தில் ஓதனஞ்ஜயா! என்னைக்காட்டிலும் வேறான மிகு ந்த யுத்கிருஷ்டமான வஸ்துவில்லை. இவைகளெல்லாம் கயிற்றிலுள்ள முத்துக் களைப்போல என்னிடத்தில் கோக்கப்பட்டிருக்கிறது. 8-அத். 16-சுலோ. அருச் சுனா! பிரம்மலோகபர்யந்தம் மற்றலோகங்களுக்குச் சென்றவர்களுக்குப் புன ர்ஜன்மம் உண்டாகும். கௌந்தேயா! என்னையடைந்தபிறகு மாத்ரம் புனர் ஜன்மம் உண்டாகாது எனும் பகவானின் சொல்லின்படிமோக்ஷம்உண்டாம்.

ஏஷா தே஽பிஹிதா ஸாங்க்யே
புத்திர்யோகே த்விமாம் ஶ்ருணு ।
புத்த்யா யுக்தோ யயா பார்த்த
கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி ॥ ௩௯

ஏஷா தேபிஹிதா ஸாங்க்யே புத்திர்யோகெ த்விமாம் ஶ்ருணு, புத்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி. ௩௯

ఏషా తేఽభిహితా సాంఖ్యే బుద్ధి ర్యోగే త్విమాం శృణు,
బుద్ధ్యా యుక్తో యయా పార్థ కర్మబన్ధం ప్రహాస్యసి. ౩౯

39. கிரு—சுகதுக்கங்களைப்பகவானுக்குச் சமர்ப்பித்துச் சுவதர்மம் செய் நீ ஆஸ்திகனே யன்றோ, இந்தத்தர்மத்தைச் செய்யாதிருப்பின் பாபம் உண்டா மென்று தெரிந்துகொள்.

அரு—யுத்தத்தால் இஹபரங்களில் கஷ்டமென்று எண்ணுகின்றேன்.

கிரு—30-சுலோகததில் கூறியதுபோலச் செய்யின் இம்மை மருமையா லும் சுபம் உண்டாகும்.

அரு—நான் யுத்தத்தில் செத்தால் வேதாந்தச்ரவணம் இல்லாமல் என் ஜன்மம் விபலமாகும். ஆகையால் எனக்குத் தத்வோபதேசம் செய்யவேண்டும்.

கிரு—2அத், 11-சுலோகம் முதல் 20-சுலோகங்களால் ஞானமார்க்கம் உப தேசித்தேன். அந்தக்கரணசுத்தி யில்லாமையால் அதுவுன்புத்திக்கு எட்டவி ல்லை. ஆதலால் கர்மயோகத்தை உபதேசிக்கிறேன்.

அரு—கர்மயோகபலம்,தாராபுத்ராதிசம்பத்துகளை அநுபவித்தலால்முடிந் துபோம். 1-அத், 32-சுலோகத்தில் இதுவரையிலுமே இவர்களைக்கொல்ல இ ஷ்டமில்லையென்று கூறினேன். எனக்குச் சிரேயமாகும் அதனைத்தெரிவியும்.

கிரு—நீ 1-அத், 35-சுலோகத்தில் த்ரைலோக்யாதி பத்யத்தையும், 2-அத், 8-சுலோகத்தில் பிரம்மேந்திராதிபத்தையும்கூட வேண்டாமென்றாய். இச்செய்தி யெனக்குத் தெரிந்தேயிருக்கிறது. நான் கூறப்போகிறது அப்படிப்பட்ட (காம்ய) பிரவர்த்திகர்மம் அன்று. மோக்ஷத்திற்கு ஞானம் இருத்தல்வேண்டும், ஞானோபயோகமான கர்மமார்கத்தை கூறுகின்றேன். கர்மத்தால் அந்தக்கரண சுத்தியடைந்து கர்மத்தில் அபிருசியுடைய புத்தியுண்டாம். அதனால் சம்சாரபந்தம் முழுதும் அறுந்துபோம். 47-சுலோகத்தில் சொல்லப்படுகிறதுபோல கர்மத்திலன்றிப் பலத்தில் அதிகாரமிராது. இது ஞானத்திற்குப் படியாய் இருக்கும்.

𑌨𑍇𑌹𑌾𑌭𑌿𑌕𑍍𑌰𑌮𑌨𑌾𑌶𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌾𑌯𑍋 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌮𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌤𑍍𑌰𑌾𑌯𑌤𑍇 𑌮𑌹𑌤𑍋 𑌭𑌯𑌾𑌤𑍍 ॥ ௪௦

நேஹாபிக்ரமநாஶோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே,
ஸ்வல்ப மப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத். ௪௦

నేహాభిక్రమనాశోఽస్తి ప్రత్యవాయో న విద్యతే,
స్వల్ప మప్యస్య ధర్మస్య త్రాయతే మహతో భయాత్. ౪౦

40. அரு—ஞானம் எளிதானது. கர்மம் கஷ்டமானது. கிருஷி கடைவரைசெய்யவேண்டியது போல இதனைச் சாந்தமாகச்செய்து தீரவேண்டும். பத்யம்தவறின் ரோகி கஷ்டப்படுவதுபோல மந்திரதந்திர லோபாதிகள்நேரின் துன்பப்படவேண்டி யிருக்கும்.

கிரு—நான் சொல்லும் கர்மம் முடிக்கவேண்டியதில்லை. தவறினும் பாதிக்காது. தொடங்கிவிட்டு விடினும் மேன்மையே.

அரு—அவ்வாறு முடிவினைப் பெறுதகர்மம் பெரும்பலத்தை யெவ்வாறுதரும்.

கிரு—வீர்யத்துடனுள்ள ஸ்வல்பமருந்து பெரியவியாதியைப் போக்குவதுபோல நிவிருத்திகர்மம் ஸ்வல்பகர்மமாயினும் காப்பாற்றும். பலத்தையெண்ணிச் செய்யினும் நியதிகள் இருத்தல் வேண்டும். பங்காயிருக்கும் வேலைக்காரரிடம் வேலை நன்றாகச் செய்யவில்லையென்று கோபிக்கலாம். சினேகத்தால் சிறிது விசிறினவனை இன்னும் விசிறவில்லையென்று கோபிக்கும் வழக்கமில்லை யல்லவா. அவ்வாறே ஸ்வல்பமாயினும் நிவிருத்திகர்மத்தால் ஈச்வரன் திருப்தியடைவான். ஆகையால் யுத்தஞ்செய்.

𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍇𑌕𑍇𑌹 𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 ।
𑌬𑌹𑍁𑌶𑌾𑌖𑌾 𑌹𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌾𑌶𑍍𑌚 𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

வ்யவஸாயாத்மிகா புத்தி ரேகேஹ குருநந்தந,
பஹுஶாகா ஹ்யநந்தா ஶ்ச புத்தயோவ்யவஸாயிநாம். ௪௧

వ్యవసాయాత్మికా బుద్ధి రేకేహ కురునన్దన,
బహుశాఖా హ్యనన్తా శ్చ బుద్ధయోఽవ్యవసాయినామ్. ౪౧

விசிஷ்டாத்வைதம்.

41. அரு—கர்மம் பந்தஹேதுவென்பதால் சந்தேஹமாயிருக்கிறது. பிரவிருத்தி கருமத்தில் மாத்திரம் என்னதப்புகிறது.

கிரு—நிவர்த்தி கர்மமேபெரிது. இதில் ஆத்மஞானம் கலந்திருக்கிறது. ஆகையால் அகங்கார மமகாரங்களிரா. பலத்தில் எண்ணமிருது. பகவன் முகோல்லாசத்திற்கே செய்யவேண்டியிருக்கும். இந்தக்கர்மம் செய்கிறவன் 5-அத். 14–15. சுலோ. இந்தலோகத்திற்கு கர்த்திருத்வத்தைநோக்கியும், கர்மங்களைநோக்கியும்,கர்மபலங்களின் சம்பந்தங்களைநோக்கியும்,கர்மவச்யனை நோக்கியும் ஆத்மாசிருஷ்டிக்கப் படவில்லை. ஸ்வபாவம்,(பிரகிருதி சம்பந்தத்தால் பிரந்தவாசனை) காரணமாகின்றது. ஸ்வதந்திரனுன ஆத்மா ஒருவனது பாபத்தையேனும் புண்ணியத்தையேனும் கிரகிக்கான்.ஞான விரோதியான பூர்வகர்மத்தால்ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது. அதனுல் பிராணிகள் மோஹத்தை அடைகின்றனர் எனும் சங்கதி தெரிந்திருக்கலாம். ஆகையால், பிரகிருதியால் கெடுதியடைந்த ஆத்மாவை அதிலிருந்து சுத்தப்படுத்தற்காக 7-அத்.14-வது சுலோகப்ரகாரம் பகவானைப் பிரபத்திசெய்யச் சமர்த்தனுயிருப்பன். இவனது புத்திமோக்ஷத்தில் ஏகபுத்தியாயிருக்கும். பிரவிருத்திகர்மஞ் செய்தவனுக்கு நிஜாத்மஸ்வரூபஞானமில்லாமல் ஸ்வர்கபத்ர பசுவாதிபலங்கள் பலவற்றை அநுசரித்தலால் இவற்றின் கோரிக்கைகளுக்கு அந்தம்இல்லை. பிரதானபலம் ஒன்றை அநுசரித்து இதரபலங்களென்னும் கிளைகளும் பலஉண்டு. (கடைக்காரனுக்கு ஒரு மூட்டை அரிசி யெடுத்துக்கொடுத்தல் மிகவும் சுலபம். சில்லரைசாமான்கள் கொடுப்பது மிகவும் கஷ்டமன்றே. அவ்வாறே பகவான் நிவர்த்திகர்மங்களுக்குப் பலமாகும் மோக்ஷத்தை அநாயாசமாய் கொடுப்பன்.

த்வைதம்.

பிரவிருத்திகர்மஞ் செய்பவர்களுக்கு பலகோரிக்கைகளிருத்தலால் அவர்கள் விரும்பிய பலங்களைத்தந்து சந்தோஷிக்கச்செய்தல் கஷ்டம். பிராமாண்யருக்கு நான் சொன்னது சரியாகும். அப்ரமாணிகருக்கு விருத்தமாகவிருக்கும்.

மேற் சொன்னபடி தெரிந்துகொண்டவர்கள் பகவானுடைய ஆஞ்ஞையை கடக்கக்கூடாதென்று எண்ணுவர். இவற்றை நோக்கி சோதிக்காதவர்கள் அவ்வாறு எண்ணார்கள்.

அத்வைதம்.

அரு—60-புத்திகள் இருக்கையில் கர்மஞானங்களெனும் இரண்டுதானு முக்கியம்.?

கிரு—கர்மஞானம் உண்டாதற்கும், மற்ற வேறு புத்திகளைத்தள்ளி விடுதற்கல்லவா கீதோபதேசம் ?

அரு—அந்தப்புத்திகள் எவர்க்கு.

கிரு—அவ்யவசாயிகளுக்கு = பிரமாணஞானரஹிதருக்கு, கர்மஞானங்களிரண்டாயினும் பலம் ஒன்றே.

அரு—பெரும் பலங்களுடையகர்மஞானங்கள் என்னுலாகுமா ?

கிரு—குருநந்தனு! நீ பிறந்தவம்சத்தால் உனக்கொன்றும் குறைவில்லை. 36,40,41,சுலோகங்களில் நிவர்த்தி கருமஸ்தோத்திரம் செய்யப்பட்டது.

அரு—பிரவிருத்திகர்மத்தின் பாதகத்தைத் தெரிவியும்.

𑌯𑌾𑌮𑌿𑌮𑌾𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌿𑌤𑌾𑌂 𑌵𑌾𑌚𑌂 𑌪𑍍𑌰𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 ।
𑌵𑍇𑌦𑌵𑌾𑌦𑌰𑌤𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑌾𑌨𑍍𑌯𑌦𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌵𑌾𑌦𑌿𑌨𑌃 ॥ ௪௨
𑌕𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌪𑌰𑌾 𑌜𑌨𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌾𑌮𑍍 ।
𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌬𑌹𑍁𑌳𑌾𑌂 𑌭𑍋𑌗𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 ॥ ௪௩
𑌭𑍋𑌗𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌯𑌾𑌪𑌹𑍃𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ।
𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌮𑌾𑌧𑍌 𑌨 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥ ௪௪

யா மிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஸ்சித:,
வேதவாதரதா: பார்த்த நாந்ய தஸ்தீதி வாதிந:. ௪௨
காமாத்மாந ஸ்வர்க்கபரா ஜந்மகர்மபலப்ரதாம்,
க்ரியாவிசேஷபஹுளாம் போகைஸ்வர்யகதிம் ப்ரதி. ௪௩
போகைஸ்வர்யப்ரஸக்தாநாம் தயாபஹ்ருதசேதஸாம்,
வ்யவஸாயாத்மிகா புத்தி ஸ்ஸமாதௌ ந விதீயதே. ௪௪

యామిమాం పుష్పితాం వాచం ప్రవద న్త్యవిపశ్చితః,
వేదవాదరతాః పార్థ నాన్య ద స్తీతి వాదినః. ౪౨
కామాత్మాన స్స్వర్గపరా జన్మకర్మఫలప్రదామ్,
క్రియావిశేషబహుళాం భోగైశ్వర్యగతిం ప్రతి. ౪౩
భోగైశ్వర్యప్రసక్తానాం తయాపహృతచేతసామ్,
వ్యవసాయాత్మికా బుద్ధి స్సమాధౌ న విధీయతే. ౪౪

42, 43, 44, இந்தச் சுலோகங்களில் பிரவர்த்தி கர்மமும் அதனைச்செய்பவரும் நிந்திக்கப்பட்டனர்.

கிரு—பார்த்தா! அபண்டிதர் (அல்பஞானிகள்) வேதத்திலிருக்கும் சுவர்க்காதிபல வாதங்களுக்காசைப்பட்டு(சுவர்க்காதி பதங்களுக்காயினும் அதிகமான) வேறுபலங்களில்லையென்று வாதித்துக்கொண்டு காம்யவிஷயங்களில் மனதை வைத்துச் சுவர்க்கமேபரமமான பலமென்று எண்ணி ஜன்மம் கர்மம் எனும் பலங்களை (அடிக்கடி) கொடுப்பதும், அபரிமிதமான கிரியைகள் நிறைந்திருக்கினும் (தத்வஞானமில்லாத) சுவர்க்காதி போகசம்பத்தை பிரதிபாதிக்கின்றனவென்றும் புஷ்பமே பலமாகக்கொண்ட (பலமில்லாமல் புஷ்பத்துடன் முடிகின்ற விருக்ஷம்போல) சாச்வதமான மோக்ஷபலமில்லாமல் மேலுக்கு மனோஹரமான சொற்களைக்கூறுகின்றனர். அந்தச்சொற்களால் மனம் மோசமடைந்து போகைச்வர்யங்களில் ஆசை கொண்டிருப்பவருக்கு சமாதி (மனசு)

இல் நிச்சயஞானம் உண்டாகாது. (இந்தச்சுலோகத்தில் அவிபச்சித: = அபண்டிதன், என்பதற்குப்பதிலாக உடையவர் அல்பஞானிகள் என்று பொருள் கூறினர். ஏன் எனின் இவர்வேதம் ஓதி அதிலுள்ளபொருளைக் கிரகித்து அதிலுள்ள சிலகாம்யகர்மங்களைச் செய்தலினால் இவர்களைக் கேவலம் மூடர் என்னல்கூடாதெனவும், வேதார்த்தங்களை அவர்கள் செம்மையாகத்தெரிந்து கொள்ளாததினால் இவர்கள் அல்பஞானிகளென்பது இவர் அபிப்பிராயம். வி = விசேஷமாய், சித் = சித்தத்தில், அபசி = வேதாந்தவிசாரம் செய்யாதவர்கள். என்று பதப்பொருள்.

த்வைதம்.

42-சுலோகத்தில், வேதவாதாதா: = வேதத்திற்தெரியும் மேற்பொருளை அறிபவர்.

அத்வைதம்.

வாக்யங்களைமாத்ரம் பார்க்கின்றவர்கள் தாத்பர்யம் அறியாதவர்கள். இந்தச்சுலோகத்தில், புஷ்பிதாம் = பூத்ததுபோல சோபிக்கின்றது என்றுகூறினரே. புஷ்பத்தில்மாத்ரம் சுகமில்லையா எனின் புஷ்பத்தால் ஸ்வல்பகால சுகமேயன்றி வாடிப்போனபிறகு கெட்டமணம் உண்டாகும். அவ்வாறே சுவர்க்க சுகம் ஸ்வல்பகாலம். புண்யம் க்ஷீணித்தவுடன் மனுஷ்ய லோகத்தில் விழவேண்டியதே. இப்படிப்பட்ட அசாச்வத ஸ்தானம் சுவர்க்கம்.

அரு—பிறந்து மிறந்து மிருத்தலால் என்ன நஷ்டம் ? இந்தக்கர்மம் செய்யக்கூடாதா.

கிரு—பலகர்மங்கள் செய்யவேண்டியிருப்பதால் மிகுந்தசிரமம் உண்டாகும்.

அரு—இந்தக்கிரியைகள் என் கூறப்பட்டன ?

கிரு—பி-ஏ-செய்வதால் மனுஷ்யனுக்கு புத்தி உயர்வதுபோல யஞ்ஞத்தால் ஆத்மாவிற்கு சக்தி மிஞ்சும். இந்த அல்பஞானிகள் கூறும் வார்த்தைகளைக்கேட்கக்கூடாது. 39-சுலோகத்தில் கூறியதுபோல நிவர்த்திகர்மம் செய்யின் மோக்ஷம் உண்டாம்.

த்ரைகுண்யவிஷயா வேதா
நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந ।
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ
நிர்யோகக்ஷேம ஆத்மவாந் ॥ சரு

த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந,
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந். சரு

త్రైగుణ్యవిషయా వేదా నిస్త్రైగుణ్యో భవార్జున,
నిర్ద్వన్ద్వో నిత్యసత్త్వస్థో నిర్యోగక్షేమ ఆత్మవాన్. ४५

45. அரு—பிரவர்த்திகருமம் குற்றமானால் வேதம் என் கூறியது ?

த்வைதம்.

கிரு—வேதங்கள் திரிகுணசம்பந்தத்தைத் தெரிவிக்கும்.

அத்வைதம்.

மூன்று பிராக்ருதசம்சாரத்தைத் தெரிவிக்கும்.

விசிஷ்டாத்வைதம்.

வேதம் ஆயிரம் தாய்மார்களினும் அதிகவாச்சல்ய முடையது. சாத்விக, ராஜஸ, தாமஸரெனும் மூன்றுவகுப்பினருக்குத் தக்கபடி சொல்லுகிறது.

அரு—நான் எந்தெந்தக் குணத்தைக் கிரஹிக்கவேண்டும்?

கிரு—எதுவும் வேண்டாம். த்வந்தமும்கூடாது.

அரு—யோகக்ஷேமங்கள் எவ்வாறுநடக்கும்?

கிரு—அதைவிட்டுவிடு.

அரு—பெண்டு பிள்ளைகளின் கதி என்ன?

கிரு—6-அத். 22-சுலோகத்தில் சொன்னபடி ஆத்மஞானியாயிரு. அந்தப்பாரம் ஈச்வரனுடையது. கோபுரத்தைத்தாங்குவது போலிருக்கும் பிரதிமைகள் உண்மையாக அதனைத்தாங்கவில்லை யல்லவா. இவ்வாறே அவிவேகி தன் குடும்பத்தைத்தானே ரக்ஷிப்பதாக நினைத்துக்கொண்டிருப்பான்.

𑌯𑌾𑌵𑌾𑌨𑌰𑍍𑌥 𑌉𑌦𑌪𑌾𑌨𑍇 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌸𑌂𑌪𑍍𑌲𑍁𑌤𑍋𑌦𑌕𑍇 ।

𑌤𑌾𑌵𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌃 ॥

யாவ நர்த்த உதபானே ஸர்வத ஸ்ஸம்ப்லுதோதகே,

தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:. ௪௬

యావానర్థ ఉదపానే సర్వత స్సంప్లుతోదకే,

తావాన్ సర్వేషు వేదేషు బ్రాహ్మణస్య విజానతః, ౪౬

46. அரு—வேதத்தில் சொல்லப்பட்டவைகளை யெவ்வாறுவிடலாகும்?

கிரு—நிகண்டில் திருடன் என்று பேரிருக்கின்றது ஆகையால் அது ஒரு கார்யமென்று செய்யக்கூடுமோ?

விசிஷ்டாத்வைதம்.

எவ்வாறு எந்தபக்கத்திலும் ஜலம்சுரக்கும் தடாகத்தில் எவ்வளவுவேண்டியதோ அவ்வளவே ஜலம் கிரகிக்கப்படுமோ அவ்வாறே ஆத்மஞானமுள்ள பிராம்மணனுக்கு எவ்வளவு உபாதேயமோ அவ்வளவு (பலரஹிதமான கர்மமாத்ரம்) வேதத்திலிருந்து கிரஹிக்கப்படவேண்டும்.

த்வைதம்.

அரு—பிரவிருத்தி நிவிருத்திகர்மங்களில் ஒவ்வொருகுண மிருக்கின்றது. ஆகையால் இரண்டும் சரியென்று தோன்றுகின்றது.

கிரு—அவ்வாறன்று, நிவிருத்திகர்மத்தில் கர்மஞானங்களிரண்டும் சேர்ந்திருக்கின்றன. பிரவிருத்திகர்மம் கிணறு; நிவர்த்திகர்மம் சமுத்திரமாயிருக்கிறது. சமுத்ரத்தில் செய்யும்கார்யம் கிணற்றில் நடவாது. கிணற்றில் செய்யும் கார்யம் கடலில்நடக்கும் அல்லவா.

பிரவிருத்திகர்மவான் சுவர்க்கமாத்திரம் அனுபவிப்பான். நிவர்த்திகர்மவான்எண்ணின லோகம் அனைத்திற்கும் போகக்கூடும். பி-ஏ-பி-எல், பாஸ் செய்தவன் எந்தஇடத்திலும் வாதிக்கலாம். பிளீடருக்கு அவ்வாறு கூடாதல்லவா. (இந்தக்காரணங்களால் நிவர்த்திகர்மங்களின் பெருந்தன்மை வெளிப்படுகிறது.)

𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇 𑌮𑌾 𑌫𑌲𑍇𑌷𑍁 𑌕𑌦𑌾𑌚𑌨 ।
𑌮𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌭𑍂𑌰𑍍𑌮𑌾 𑌤𑍇 𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 ॥௪௭

கர்மண்யேவாதிகாரஸ்தே மாபலேஷு கதாசந,
மா கர்மபலஹேதுர்பூர்மாதே ஸங்கஸ்த்வகர்மணி. ௪௭

కర్మణ్యేవాధికారస్తే మాఫలేషు కదాచన,
మా కర్మఫలహేతుర్భూర్మా తే సఙ్గస్త్వకర్మణి. ౪౭

விசிஷ்டாத்வைதம்.

47. இரு—உனக்குக் கர்மத்தில்மாத்ரம் அதிகார மிருக்கவேண்டும். பலத்தில் ஒருகாலத்தும் ஆசைப்படக்கூடாது. (எனின் ஆத்மா கர்த்தாஅல்ல. பலத்தை அனுபவிப்பதுமன்று. இந்த இரண்டும் பிரகிருதிசம்பந்தமான சரீரத்திற்கே சம்பந்தமென்று தெரிந்துகொள்ளவேண்டும்.) கர்மங்களை (சாஸ்திரவிஹித கர்மங்களை) நீக்குதலில் உனக்கு ஆசக்திகூடாது.

த்வைதம்.

கர்மம்செய்யும் விஷயத்தில் பலத்தைக்கோராமல் (எனின் அபேக்ஷித்துச் செய்யாதேயென்று பாவம்.)

அத்வைதம்.

கர்மம்பலத்திற்கு ஹேதுவாகையால் (அபேக்ஷிக்காதேயென்று கருத்து) இந்தச்சுலோகத்தில்,தே = உனக்குஎன்பதால் ஆஸ்திகனுகிய உனக்கும் என்று பொருள். இப்படிப்பட்ட நீ கர்மம்செய்யச்சொல்லுகின்றார், என்றே செய்யவேண்டும். பலங்கொடுப்பவன் ஈச்வரன். நாம் செய்யும்கர்மத்திற்குப் பலம் லபிக்கவேண்டுமென்று நாம் கோரக்கூடாது.

𑌯𑍋𑌗𑌸𑍍𑌥𑌃 𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌙𑍍𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ।
𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌸𑍍𑌸𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌸𑌮𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

யோகஸ்த: குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய,
ஸித்யஸித்யோஸ்ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே. ௪௮

యోగస్థః కురు కర్మాణి సఙ్గం త్యక్త్వా ధనఞ్జయ,
సిద్ధ్యసిద్ధ్యోస్సమో భూత్వా సమత్వం యోగ ఉచ్యతే. ౪౮

48. அரு—கர்மத்தில் இவ்வளவு நிபந்தனையானுல் என்னுல் ஆகாதென்றும், கர்மம் விட்டுவிடவேண்டுமென்றும் தோன்றுகிறது.

கிரு—தனஞ்சயா! அஹங்கார மமகாரங்களை விட்டு யோகத்தில்நின்று யுத்தாதிகர்மங்களைச்செய்.

அரு—பலம் கோராவிட்டால் கார்யம் சித்திக்குமா?

கிரு—சித்தித்தாலும் சித்திக்காவிட்டாலும் அந்தப்பாரத்தை யென்மீது போடு.

அரு—யோகம் என்றால் என்ன?

கிரு—சித்தி அசித்திகளில் சமமாயிருத்தலே யோகம் எனப்படும். ஆகையால் அஹங்கார மமகாரங்களையும் பலத்தையும் விட்டு கர்மத்தைச்செய்.

𑌦𑍂𑌰𑍇𑌣 𑌹𑍍𑌯𑌵𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌶𑌰𑌣𑌮𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛 𑌕𑍃𑌪𑌣𑌾𑌃 𑌫𑌲𑌹𑍇𑌤𑌵𑌃 ॥ ௪௯

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகா த்தனஞ்ஜய,
புத்தௌ ஶரணமந்விச்ச க்ருபணா: பல ஹேதவ:. ௪௯

దూరేణ హ్యవరం కర్మ బుద్ధియోగా ద్ధనంజయ,
బుద్ధౌ శరణ మన్విచ్ఛ కృపణాః ఫల హేతవః. ౪౯

49. அரு—2-அத், 40-சுலோகத்தில், கர்மம் சிறிதுசெய்தாலும் போதுமென்று நீ சொல்லுகையில் எளிதென்று எண்ணினேன். இப்போது கடினமென்று தோன்றுகின்றது. ஆகையால் எளிதாகும் பிரவர்த்திகர்மம் செய்கிறேன்.

கிரு—(அந்தக்கர்மம்கூடாது) தனஞ்சயா ஞானயோகம்(எனின் பிரதான பலத்தைவிடுதலும், அவாந்தரபலம் சித்திக்கினும், இல்லாவிடினும் சுகதுக்கங்கள் இல்லாமலிருத்தலும் எனும் புத்தியுடன்கூடின கர்மத்தை பார்க்கிலும் (அவ்வாறாகாத) கர்மம் முழுதும் குற்றமானது.

அரு—உன்புத்தி எதில் சேர்க்கவேண்டும்?

கிரு—ஞானபூர்வ கர்மத்தையே சரணமாய்த்தேடு. 4-அத், 23-சுலோகத்தில்,ஆத்மா ஞானத்தில் ஸ்திரபுத்திஉண்டாகி மற்றவைகளில் ஆசையை விட்டுவிடவேண்டுமென்று பலத்தையெண்ணிக் கர்மங்களைச் செய்பவர்கள் நித்ய சம்சாரிகளாவாரென்று கூறப்பட்டது.

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌜𑌹𑌾𑌤𑍀𑌹 𑌉𑌭𑍇 𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌯𑍋𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌕𑍌𑌶𑌲𑌮𑍍 ॥

புத்தியுக்தோ ஜஹாதீ ஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே,
தஸ்மா த்யோகாய யுஜ்யஸ்ய யோக: கர்மஸு கௌஶலம். ௫௦

బుద్ధియుక్తో జహాతీహ ఉభే సుకృతదుష్కృతే,
తస్మా ద్యోగాయ యుజ్యస్వ యోగః కర్మసు కౌశలమ్. ౫౦

50. அரு—மனம் சரிப்படுமா?

கிரு— அதை செயிக்கவேண்டும்.

அரு—என்னுலாமா? (இந்தச்சுலோகத்தில் தனஞ்ஜய என்று விளித்ததனுல், யுத்தத்தில் சத்ருக்களை ஜெயிப்பேன், தனம் சம்பாதிப்பேன், அதன் மேல் உட்கார்ந்திருப்பேன் என்ருயே. அப்படிப்பட்ட சூரனுக்கு மனதைவெல்ல சக்தியில்லையா என்று கருத்து.) பிரம்மஞானி புண்யபாபங்களை விட்டு நிரஞ்சன ஞனபரப்பிரம்மத்தைச்சேருவன் என்று முண்டகோப நிஷத் சாக்ஷிகூறுகின்றது. இந்தப்பொருள் கூறப்படுகிறது.

கிரு—ஞானபூர்வகர்ம யுக்தன் கோரிக்கைகளையும், புண்யபாபங்களையும் இரண்டையும் விட்டுவிடுகிருன். ஆகையால் அவ்வகை ஞான யோகத்தின் பொருட்டு முயற்சிசெய்.

அரு—(கர்மங்களைச்செய்யலாம். இவ்வாறு பகுத்துச்செய்தல் கஷ்டம். சரீரத்துடன் பிரயாசைப்படுதல் எளிது. மனதைத்திருத்துதல் கடினம்.)

கிரு—கர்மங்கள் செய்கையில் மேற்கூறியஞானம் சேருதலே சாமர்த்தியம்ஆகும். ஆகையால், கஷ்டப்பட்டுப் புத்தியை வசப்படுத்திக்கொளல்வேண்டும்.

𑌕𑌰𑍍𑌮𑌜𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌹𑌿 𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।
𑌜𑌨𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌪𑌦𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ॥ ௫௧

கர்மஜம் புத்தி யுக்தாஹி பலம் த்யக்த்வா மநீஷிண:,
ஜந்மபந்தவிநிர்முக்தா: பதம் கச்ச ந்த்யநாமயம். ௫௧

కర్మజం బుద్ధియుక్తా హి ఫలం త్యక్త్వా మనీషిణః,
జన్మబంధవినిర్ముక్తాః పదం గచ్ఛంత్యనామయమ్. ౫౧

51. அரு—கதம் பீஷ்மம் என்று தோன்றுமே என்செய்வேன்? கர்மத்தை விரும்பினுல் யுத்தம் செய்யவேண்டிவரும். கர்மம்செய்யாதிருக்கின் அந்தக்கரண சுத்தி உண்டாகாது. ஞானம் உண்டாகாது. கிருஷ்ண! போகட்டும், இவ்வாறு கஷ்டப்பட்டுக் கர்மம் செய்தால் பலமுண்டாமா?

கிரு—(நான் சொன்னபடி செய்யின் உண்டாம்.) ஞானயோகயுக்தரான புத்திமான்கள் கர்மத்தால் உண்டாம் பயனைவிட்டு ஜன்மபந்தத்திலிருந்து விடப்பட்டுதுக்காஹிதமானபதத்தை (மோக்ஷத்தை அடைகின்றனர். 4-அத். 6-சுலோகத்தில் சொன்னபடி அப்ராக்ருதமான பகவானையும் ஜன்மகர்மங்களையும் யறிந்தவன் மீண்டும் ஜன்மத்தையடையான். என்னையே அடைவான்.

அரு—உன்ஜன்மகர்மங்கள் எனக்குத்தெரிந்தேயிருக்கின்றதே எனக்கேன் மோக்ஷம் உண்டாகவில்லை?

கிரு—சரீரத்தை விட்டபிறகன்றே அந்தப்பதவிலபிக்கும்.

𑌯𑌦𑌾 𑌤𑍇 𑌮𑍋𑌹𑌕𑌲𑌿𑌲𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌦𑌾 𑌗𑌨𑍍𑌤𑌾𑌸𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑍇𑌦𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍁𑌤𑌸𑍍𑌯 𑌚 ।

யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி,
ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச. ௫௨

యదా తే మోహకలిలం బుద్ధి ర్వ్యతితరిష్యతి,
తదా గన్తాసి నిర్వేదం శ్రోతవ్యస్య శ్రుతస్య చ. ౫౨

52. அரு—கர்மமேன் செய்யவேண்டும்?

கிரு—அந்தக்கரண சுத்தியின் பொருட்டு.

அரு—எவ்வளவு காலம் செய்யவேண்டும்.

கிரு—அந்தக்கரணசுத்தியுண்டாம் வரையில்.

அரு—அந்தக்கரணசுத்தியானது எவ்வாறு தெரியும்?

கிரு—எல்லாவிஷயங்களிலும் வைராக்கியம் உண்டாதலே இதற்கடையாளம்.

விசிஷ்டாத்வைதம்.

அரு—சித்தி அசித்திகளில் சமமாயிருந்து கர்மம் செய்யமுடியாது.

கிரு—அந்தக்கர்மம்செய்யவேண்டியதே. அப்பொழுதுதான் அந்தக்கரண சுத்தியுண்டாம்.

அரு—அந்தக்கரணசுத்தியில்லாதவனுக்கு இந்தக்கர்மம் செய்தல் அருமை. நீ சொன்னபடி இந்தக்கர்மம்செய்தால் அந்தக்கரண சுத்தியாயினதென்றேயெண்ணவேண்டும். அப்போது கர்மம் அநவசரம் ஆகும்.

கிரு—அவ்வாறன்று, (தொடக்கத்தில் அசுத்தமனசுடனே கர்மங்களைச் செய்து எனக்கர்ப்பணஞ்செய்.) நீ இவ்வாறு செய்துகொண்டிருப்பின் என் சொற்களில் நம்பிக்கைபெற்று இருக்கின்றாய் என்று எண்ணிக்கருணைசெய்து அந்த மனதை நான் திருத்துவேன்.

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌵𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌾 𑌤𑍇 𑌯𑌦𑌾 𑌸𑍍𑌥𑌾𑌸𑍍𑌯𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌾 ।
𑌸𑌮𑌾𑌧𑌾𑌵𑌚𑌲𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌤𑌦𑌾 𑌯𑍋𑌗𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 ॥ ௫௩

ஶ்ருதிவிப்ரதிபன்னா தே யதா ஸ்தாஸ்யதி நிஶ்சலா,
ஸமாதா வசலா புத்தி ஸ்ததா யோக மவாப்ஸ்யஸி. ௫௩

శ్రుతివిప్రతిపన్నా తే యదా స్థాస్యతి నిశ్చలా,
సమాధా వచలా బుద్ధి స్తదా యోగ మవాప్స్యసి. ౫౩

53. அரு—வைராக்கிய முண்டாயிற்றென்று எவ்வாறு தெரிந்து கொள்ளலாம்?

விசிஷ்டாத்வைதம்.

என்னால் கேள்விப்படுதலால் விசேஷமாய்த் தெரிந்துகொள்ளப்பட்டதாய் ஒரு விதமாயிருக்கும். உனது அறிவு மனதில் எப்பொழுது நிலைத்திருக்கின்றதோ அப்போது.

த்வைதம்.

வேதவாக்யங்கள் பலவிதங்களாக இருக்கும். அவைகளைச்சந்தேகிக்காமல் பரப்ரம்மத்தில் எக்காலத்து நிற்பானோ அப்போது கர்மயோக பலம் உண்டானது போலும்.

அத்வைதம்.

ஐக்கியமானபோது கர்மஞானபலம் லபித்தது போலும்.

அரு—51-சுலோகத்தில் கூறியதுபோல கர்மஞ்செய்தால் அவ்வளவு பெரியஸ்திதிக்குவருவேனு?

கிரு—என்னுல் கேட்கப்படுதலால் உனக்கு விசேஷபுத்தி உண்டாயிற்று.

அரு—மற்றேன் அந்த ஸ்திதிக்குவரவில்லை.

கிரு—மவுனம் செய்யாமையால் புத்திசலிக்கிறது. அவ்வாறு செய்து உன் புத்தி நிலைத்தால் ஆத்மஞானம் உண்டாம். (2-அத். 51-சுலோகத்தில் பெரும் பயனையும், 53-சுலோகத்தில் மோக்ஷத்தையும் அத்வைத ரீத்யா ஐக்யத்தையும் கிருஷ்ணன் தெரிவிக்கையில் அருச்சுனனுக்கு ஞானத்தில் ஆசை உண்டாகி ஞானியின் லக்ஷணத்தைக் கூறுமென்று கேட்கிருன்.)

அர்ஜுந உவாச.

𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌕𑌾 𑌭𑌾𑌷𑌾 𑌸𑌮𑌾𑌧𑌿𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌕𑍇𑌶𑌵 ।
𑌸𑍍𑌥𑌿𑌤𑌧𑍀𑌃 𑌕𑌿𑌂 𑌪𑍍𑌰𑌭𑌾𑌷𑍇𑌤 𑌕𑌿𑌮𑌾𑌸𑍀𑌤 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤 𑌕𑌿𑌮𑍍 ॥ ௫௪

ஸ்திதப்ராஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேஶவ,
ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கி மாஸீத வ்ரஜேத கிம். ௫௪

స్థితప్రజ్ఞస్య కా భాషా సమాధిస్థస్య కేశవ,
స్థితధీః కిం ప్రభాషేత కి మాసీత వ్రజేత కిమ్. ౫౪

அர்ஜுனன் கூறுதல்.

54. அரு—கேசவா! சமாதியிலிருந்து சலிக்காத ஞானமுள்ளவனுக்கு லக்ஷணம் என்ன? அஞ்ஞானி யெவ்வாறு பேசுவான்? எப்படியுட்காருவான் எவ்வாறு மற்றகார்யங்களை நடத்துவான்? த்வைதாத்வைதரீத்யா சமாதியிலிருக்கும்யோகி லக்ஷணம் கேட்கப்பட்டதெனவும், விசிஷ்டாத்வைதரீத்யா மனதை சுவாதீனப்படுத்திக்கொண்ட பண்டிதனுடைய இலக்கணம் என்னவென்று கேட்டதெனவும், சமாதி'யவஸ்தைக் கீழேயே அறிவிக்கப்பட்டதெனவும் பொருள்.

ஸ்ரீபகவாநுவாச.

𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿 𑌯𑌦𑌾 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑌨𑍋𑌗𑌤𑌾𑌨𑍍 ।
𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑌦𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த்த மநோகதாந்,
ஆத்மந்யேவாத்மனா துஷ்ட: ஸ்திதப்ராஜ்ஞ ஸ்ததோச்யதே. ௫௫

ప్రజహాతి యదా కామాన్ సర్వాన్ పార్థ మనోగతాన్,
ఆత్మన్యేవాత్మనా తుష్టః స్థితప్రజ్ఞ స్తదోచ్యతే. ౫౫

ஸ்ரீபகவான் கூறுதல்.

55. கிரு—பார்த்தா? எவன் தன் ஆத்மாவில் தானே மனதைத்திருப்திசெய்து கோரிக்கைகள் முழுதும் விடுவானோ அவன் அப்பொழுது ஸ்திரஞானம் உள்ளவன் என்று கூறப்படுவன். (ராகத்தை ஆசை) விட்டுவிட்டா லிந்த நிலைக்குவருவான்.

𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍍𑌵𑌨𑍁𑌦𑍍𑌵𑌿𑌗𑍍𑌨𑌮𑌨𑌾𑌃 𑌸𑍁𑌖𑍇𑌷𑍁 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃 ।
𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌧𑍀𑌰𑍍𑌮𑍁𑌨𑌿𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௫௬

து:கே ஷ்வநுத்விக்நமநா ஸுகேஷு விகதஸ்ப்ருஹ:,
வீதராகபயக்ரோத: ஸ்திததீ ர்முனிருச்யதே. ௫௬

దుఃఖే ష్వనుద్విగ్నమనా స్సుఖేషు విగతస్పృహః,
వీతరాగభయక్రోధః స్థితధీ ర్మునిరుచ్యతే. ౫౬

56. துக்கங்கள் நேரிடுங்காலத்தில் துக்கப்படாதமனம் உள்ளவனும், சுக விஷயங்களில் ஆசையில்லாமலும், ராகம் பயம், க்ரோதமில்லாத முனி ஸ்திரஞானம் உள்ளவனென்று கூறப்படுவன்.

அத்வைதம்.

(இது வியவஹாரதசை. 6-அத். 25-சுலோகத்தில் சொல்லப்பட்டது போல மெல்ல மனதை வசப்படுத்தவேண்டும்.)

𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌾𑌨𑌭𑌿𑌸𑍍𑌨𑍇𑌹𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍 ।
𑌨𑌾𑌭𑌿𑌨𑌨𑍍𑌦𑌤𑌿 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥ ௫௭

ய ஸ்ஸர்வத்ராநபிஸ்நேஹ ஸ்தத்தத்ப்ராப்ய ஶுபாஶுபம்,
நாபிநந்ததி நத்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா. ௫௭

య స్సర్వత్రానభిస్నేహ స్తత్తత్ప్రాప్య శుభాశుభమ్,
నాభినన్దతి న ద్వేష్టి తస్య ప్రజ్ఞా ప్రతిష్ఠితా. ౫౭

57. (கிரு—சிநேகத்தால் துக்கம் உண்டாம். ஃஅதனைவிடு.)

அரு—அதுவிடுமோ?

கிரு—எவன் எதிலும் ஆசையற்றவனாக, அந்தந்தசுபங்களையும் அசுபங்களையும் அடைந்தபோது ஆமோதிக்காமல் த்வேஷிக்காமல் இருப்பானோ அவனது ஞானம் ஸ்திரம். (ஆகையால் அதிகஸ்நேஹம் கூடாது.)

𑌯𑌦𑌾 𑌸𑌂𑌹𑌰𑌤𑍇 𑌚𑌾𑌯𑌂 𑌕𑍂𑌰𑍍𑌮𑍋𑌽𑌙𑍍𑌗𑌾𑌨𑍀𑌵 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோங்காநீவ ஸர்வஶ:,
இந்த்ரியா ணீந்த்ரியார்தேப்ய ஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா. ௫௮

యదా సంహరతే చాయం కూర్మోఙ్గానీవ సర్వశః,
ఇన్ద్రియాణీన్ద్రియార్థేభ్య స్తస్య ప్రజ్ఞా ప్రతిష్ఠితా. ౫౮

58. கிரு—எப்போதானுல் புருஷன், ஆமை தன்உறுப்புக்களைப் பயம் உண்டாங்காலத்தில் ஒடுக்கிக்கொள்வதுபோல விஷயங்களில் வியாபித்திருக்கிற இந்திரியங்களை இந்திரியவிஷயங்களிலிருந்து நிவர்த்திக்கும்படி செய்வானே அப்போது அவனதுஞானம் ஸ்திரம். பிள்ளைகள் கெட்டுப்போவதற்குப் பெரியவர்கள் கற்பிக்கவேண்டுமெவசரமில்லை. அதுபோல, இந்திரியங்கள் கெட்ட வழிகளில்செல்ல ஆயத்தமாகவே யிருக்கும். குதிரைகள் புல்மேயப்போதல் போல இந்திரியங்கள் விஷயங்களை அநுபவிக்கக் கோரும். அவைகளை நிரோதிக்கவேண்டும்.

த்வைதம். அத்வைதம்.

அபரோக்ஷஞானி சங்கதி கூறப்பட்டது.

விசிஷ்டாத்வைதம்.

பண்டிதன் என்ன செய்யவேண்டுமெனின், 58-சுலோகத்தைப்போல் ஆத்மஞானம் தன்னிலேயே உண்டாகும்.

மனம், ஒருகுமாரனுகக் கூறப்படுகிருன். இவன் இந்திரியங்களென்னும் கெட்டசிநேகருடன்கூடிக் கெட்டிருக்கின்ருன். முதலில் அந்தத்துஷ்ட சிநேகராகும் இந்திரியங்களைத் தூரவிலக்கவேண்டும். பின் கெட்டிருக்கிற மனதிற்கு அந்தக்கெட்ட இந்திரியங்களிலிருக்கும் ஆசையைப் போக்கவேண்டும். மனதை யேன்திருத்தவேண்டுமெனின், தன் சிநேகராகும் பாலர்கள் வாராமையால், பையல் வெளியில்செல்ல சாமர்த்தியனல்லருயினும், அவர்கள்வரவில்லையென்று சிந்தித்துக்கொண்டே யிருப்பன். ஆதலினுலும் தீமைஉண்டாம். அவ்வாறே, இந்திரியங்களின் சம்பந்தம் இல்லாமற்செய்யினும், மனது மாத்ரம் சிந்தையடைந்திருக்கும். ஆதலால், அந்தமனதைத்திருத்தவேண்டும். 3-அத், 6-சுலோகத்தில் எந்தமூடாத்மா கர்மேந்திரியங்களை நடக்கவிட்டு மனதால் விஷயங்களை ஸ்மரிக்கின்ருனே அவன்மித்யான ஆசாரமுள்ளவன்

என்று கூறப்பட்டதாகையால் முக்யமாய் மனதை நிக்ரஹிக்கவேண்டும். பலநாட்களாகப் பாராத தனது நண்பனைக்கண்டவுடனே பையலுக்கு முன்னைய நண்பு எப்போதை யதுபோல உண்டாம். ஆதலால். அவர்கள் மீண்டும் காணப்படாதஇடத்தில் இந்தப்பையலை வைக்கவேண்டும். அவனுக்கு ஏதேனும் சத்கிரந்தங்களைப் படிப்பித்து முன்னைய பழக்கத்தைப் போக்கடிக்கவேண்டும். இவ்வாறுசெய்யி னிந்தப்பையல் புத்தியுள்ளவனுய் மீண்டும் எப்பொழுதும் அந்தத் துஷ்டர்களுடன் சேரான். சுகமடைவான். இவ்வாறே மனதைத்திருத்திய பிறகு, ராகம், பயம், குரோதம், இவைகளை சுவாசனையாகப் போக்கடித்தல்வேண்டும். இவ்வாறு செய்யின் மனம் சரிப்பட்டு ஆத்மாவிலே திருப்தி யடைந்ததாகும்.

இந்த மனதையே பெண்குழந்தையாகக் கூறுகின்றனர். பெண்பிள்ளை தாய்வீட்டில்பிறந்து வளர்ந்து புருஷன்வீட்டிற்குப் போகவேண்டியிருக்கிறது.

அவ்வாறே மனம் இருதயத்தில் பிறந்து பரமாத்மாவில் லயிக்கவேண்டியிருக்கிறது. இதற்காகவே தோழிப்பிள்ளைகளாகும் இந்திரியங்களுடன் சேரவொட்டாமல்செய்து பிள்ளைகளின்மனதை தமதுவீட்டில் உள்ள பிள்ளைகளிடத்துள்ள ஆசையை நீக்கச்செய்து, மாமியார்வீட்டுக்கு அனுப்பி தந்தையும் சிலநாட்களவ்விடத்தில் வசித்துத் தம்வீட்டினும் மாமியார்வீடு சுதந்தரமானதென்று அவளுக்குப் போதித்து இவ்விடத்திய வாசனையைப் போக்குகையில் பின் அவள் மாமியார்வீட்டில் பழக்கமடைந்து பின்னால் தன்னை யெப்போதாயினும் வரும்படி அழைக்கினும் எனக்கு வீட்டுக்காரியங்களைப் பார்ப்பதிலேயே சரிப்பட்டுப்போகிறது. ஆகையால் எனக்கு இப்போது வரச்சரிப்படாதென்று தடையில்லாமல் சொல்வாளல்லவா? அவ்வாறே பிள்ளைகளாகும் இந்திரியங்களைச் சேரவொட்டாமற்செய்து அதிகஸ்நேகம் இல்லாமல் மனதைத்திருத்தி ராகபயக்குரோதங்களை சுவாசனையுடன் போக்கின் ஆத்மாவில் மனம் நிலைக்கும்.

𑌵𑌿𑌷𑌯𑌾 𑌵𑌿𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌨𑌿𑌰𑌾𑌹𑌾𑌰𑌸𑍍𑌯 𑌦𑍇𑌹𑌿𑌨𑌃 ।
𑌰𑌸𑌵𑌰𑍍𑌜𑌂 𑌰𑌸𑍋𑌽𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥

விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந:,
ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே. ௫௯

విషయా వినివర్తన్తే నిరాహారస్య దేహినః,
రసవర్జం రసోఽప్యస్య పరం దృష్ట్వా నివర్తతే. ౫౯

59. அரு—இந்திரியங்களை யெவ்வாறு ஜெயிக்கக்கூடும்?

கிரு—6-அத். 16-சுலோகத்தில், அதிகமாய்ச் சாப்பிடுகிறவனுக்கும், முழுதும் புசிக்காதவனுக்கும் யோகம் சித்திக்காதென்று கூறப்படும். ஆகையால் ஆஹாரத்தைக் குறைக்கவேண்டும். ரோகிக்குத் தின்னவலிமையில்லாவிடினும் பதார்த்தங்களை அனுபவித்தற்குமாத்ரம் ஆசையிருக்கும். அவ்வாறே ஆகாரத்தைக் குறைக்கினும் விஷயங்களிலுள்ள போக இச்சைநீங்காது. ஆகையால் விஷயங்களிலுள்ள போக்யபுத்தியை விடவேண்டும்.

அரு—ஆசை யெவ்வாறுநீங்கும்?

கிரு—பரமாத்ம தரிசனத்தினால்.

𑌯𑌤𑌤𑍋 𑌹𑍍𑌯𑌪𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌮𑌾𑌥𑍀𑌨𑌿 𑌹𑌰𑌨𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌸𑌭𑌂 𑌮𑌨𑌃 ॥ ௬௦

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித:,
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:. ௬௦

యతతో హ్యపి కౌన్తేయ పురుషస్య విపశ్చితః,
ఇన్ద్రియాణి ప్రమాథీని హరన్తి ప్రసభం మనః. ౬౦

60. அரு—மனதைமாத்ரம் ஜெயித்தால் போதாதா? அதே அல்லவா பந்த காரணம்?

கிரு—குந்திபுத்ரா! ஞானம் உள்ளபுருஷன் (இந்திரியங்களை வெல்லுதற்கு) பிரயத்னஞ் செய்யினும் வலுத்த இந்திரியங்கள் மனதை பலாத்காரமாய்க்கெடுக்கும். ஆகையால் இந்திரியங்களுங்கூட வசப்படவேண்டும்.

அரு—அப்படிச்செய்தற்கு என்னால் ஆகுமா?

𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌯𑍁𑌕𑍍𑌤 𑌆𑌸𑍀𑌤 𑌮𑌤𑍍𑌪𑌰𑌃 ।
𑌵𑌶𑍇 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥

தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:,
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா. ௬௧

తాని సర్వాణి సంయమ్య యుక్త ఆసీత మత్పరః,
వశే హి యస్యేంద్రియాణి తస్య ప్రజ్ఞా ప్రతిష్ఠితా. ౬౧

61. கிரு—இந்திரியங்கள் அனைத்தும் (என்னிடம்) நிறுத்தி, என்னையே பிரதானமாய் ஆச்ரயித்து இருக்கவேண்டும். இந்திரியங்கள் எவனுக்கு வச்யமோ அவனுக்கு அவனது ஞானம் ஸ்திரம்.

(இவ்வாறு இந்திரியங்களை வெல்லமுயன்று அசுத்தமனதை பகவானுக்குச் சமர்ப்பித்தால் அவன் திருத்துவன்.) விளக்கு வந்தவுடனே இருள் நீங்கும். இருளை முன்பு போக்கிப் பிறகு விளக்கை கொண்டுவருதற்குச்சாத்யமில்லை யல்லவா? சுத்தமான மனத்துடன் ஈஸ்வரனைத் தியானிப்பதற்கு முதல் முதல் சரிப்படாது. சிலகாலம் அசுத்தமான மனதுடனே ஈஸ்வரனைத் தியானித்திருந்தால் காலக்கிரமத்தில் ஈஸ்வரனுக்குக் கருணை உண்டாகி இந்த அசுத்தமான மனதைச்சரிப்படுத்தி இதனைச்சுத்தப்படுத்துவான் என்று கருத்து.

2-அத். 61-சுலோகத்தில் கூறியவண்ணம் மனதைப்பகவானிடம் நிருத்தி இந்திரியங்களை வசமாகப் பெற்றுக்கொள்ளாவிடின் உண்டாம் அநர்த்தங்கள் இங்கு கீழ்த்தெரிவிக்கப்படுகின்றன.

𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍋 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌪𑍁𑌂𑌸𑌃 𑌸𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑍇𑌷𑍂𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌸𑌙𑍍𑌗𑌾𑌤𑍍𑌸𑌞𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌕𑌾𑌮𑌃 𑌕𑌾𑌮𑌾𑌤𑍍𑌕𑍍𑌰𑍋𑌧𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 ॥ ௬௨
𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌸𑌮𑍍𑌮𑍋𑌹𑌃 𑌸𑌮𑍍𑌮𑍋𑌹𑌾𑌤𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌵𑌿𑌭𑍍𑌰𑌮𑌃 ।
𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌭𑍍𑌰𑌂𑌶𑌾𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌨𑌾𑌶𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌨𑌾𑌶𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 ॥

த்யாயதோ விஷயாந் பும்ஸ ஸ்ஸங்கஸ் தேஷூபஜாயதே.
ஸங்கா த்ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோபிஜாயதே. ௬௨
க்ரோதா த்பவதி ஸம்மோஹ ஸ்ஸம்மோஹா த்ஸ்ம்ருதிவிப்ரம:,
ஸ்ம்ருதி ப்ரம்ஸா த்புத்திநாஸோ புத்திநாஸா த்ப்ராணஸ்யதி. ௬௩

ధ్యాయతో విషయాన్ పుంస స్సఙ్గ స్తేషూపజాయతే,
సంగా త్సంజాయతే కామః కామాత్క్రోధోఽభిజాయతే. ௬௨
క్రోధా ద్భవతి సమ్మోహ స్సమ్మోహాత్స్మృతివిభ్రమః,
స్మృతిభ్రంశా ద్బుద్ధినాశో బుద్ధినాశా త్ప్రణశ్యతి. ௬௩

62-63. இரு—புருஷன் சப்தாதி விஷயங்களைச் சந்திக்கையில் அவற்றில் ஆசை (பிடித்தல்) உண்டாகின்றது. ஆகையால் காமம் (இச்சை) உண்டாகின்றது. இச்சைபூர்த்தி ஆகாதபொழுது கோபம் உண்டாகின்றது. கோபத்தால் மோஹம்(கார்யாகார்யவிவேகங்களில்லாமை)மோஹத்தால் சாஸ்திரஞானம் தப்புகிறது. (தான் தொடங்கின இந்திரிய ஜயம் முதலாகிய யத்னங்களை மறந்து போகின்றான்.) ஸ்மிருதி தவறுதலால் புத்தி (ஆத்ம ஞானார்த்தமான பிரயத்னம்) கெடுகின்றது. புத்தி கெடுதலால் புருஷன் நசித்துப்போகிறான். (மீண்டும் சமுசார சாகரத்தில் மூழ்கிப்போகிறான்.) இந்த மேற்கூறப்பட்ட விஷயத்யானமே இவ்வளவு கேட்டிற்கும் காரணமாகிறது. நாம் எந்த வஸ்துவையாயினும் பார்த்தபோது அவ்வளவில் அதைமறக்கவேண்டும் அவ்வாறு செய்யாமல் அந்த வஸ்துவினுடைய அதிசயத்தை யெண்ணத் தொடங்கவே விஷயத்யானம் எனப்படும். இவ்வாறு அந்தவிஷயங்களைச் செம்மையாய் நினைத்தலினால் அதில் ஆசை தப்பாமல் உண்டாகும். அந்த ஆசையை அவ்வாறே மனதில் வைத்தால் அதுவே காமம் ஆகும். (ஆசைக்கும்) காமத்திற்கும் தாரதம்யம் என்னவெனின், சங்கம்ஆசைக்குத் தொடக்கநிலை. காமம் முதிர்ந்தநிலை. சங்கத்தை விவேகத்தால் திருப்பலாகும். காமம்உள்ளவனுக்கு விவேகம் முழுதும் இல்லாதொழியும். ஆகையால் எவ்விதஹானி நேரிடினும், அந்தவிஷயத்தை அனுபவிக்கவேண்டுமென்று நிச்சயமாய் எண்ணியிருக்கும் அந்தக் காமியினுடையமனம் மீளுதல் அருமை. இவ்வளவு திருடமனதுடன் தான் எண்ணினவிஷயத்தை அனுபவிக்க யத்தனிக்கையில் அதுலபிக்காவிடின் குரோதம் உண்டாகும். (த்வைதாத்வைதங்களில் இந்தக்ரோதம் கார்யத்தைக் கெடுத்தவனிடத்து உண்டாமென்று தெரிவிக்கப்பட்டது. விசிஷ்டாத்வைதத்தில் கார்யத்தைக் கெடுத்த வனிடத்தில் கோபம் உண்டாதலால் அவ்வளவு பிழையில்லை. பின்னும் நிராபராதிகளிடத்திற் கூடக்கோபம் உண்டாமென்று கூறப்பட்டது. இந்தச்சங்கதி லோகசாதாரணமேயன்றோ. நமக்குக்கோபம் உண்டாம்பொழுது நம்முடன் பேசவந்தவர்களையும் திரஸ்கரிப்போம். அன்றிக்கோபத்துடனிருப்பவரிடத்தில் பேசவெறுப்போம். ஸ்ரீராமனும் சீதாவியோகத்தில் உண்டான கோபத்திற்காக அபராதஞ் செய்யாததிரிலோகங்களைச்சங்கரிப்பதாகச்சொல்லினன். ஆயினும் ஸ்ரீராமன் பகவானாகையால் ஸ்திரீயிடம் அதிக சங்கம் உடையவனது கதி இவ்வாறாகுமென்று காட்டுவதற்கு அவ்வாறு கோபித்தானென்று தெரிதல் வேண்டும்.) தன்மனோரத மீடேறாத இவனுக்கு அகார்யத்தை(என்பது எவ்வகைப் பட்ட செய்யக்கூடாத கார்யத்தையேனும்) செய்யவேண்டும் என்று தோற்றும். இவ்வாறு தோற்றுதல் மோஹம் எனப்

படும். இவ்வாறு கார்யாகார்யவிவேசன மில்லாத இவனுக்குஅறிவின் விப்ரமம் உண்டாம். எனின் சாஸ்திரஜ்ஞான மில்லாமற்போம். மறதி உண்டாம். ஜீவ ஹிம்சை செய்பவன் தான் மீண்டும் அதிகாரிகளால் கொல்லப்படுவன் என்று அறிந்தே யிருப்பன். ஆயினும் அந்தக்குரோதசமயத்தில் அவன் அந்தவிஷயத் தில் மறதியடைந்திருப்பன். இந்தவிஷயம் புத்திமான் மறப்பானு என்றபோது புத்தியும் கெடும். இவ்வாறு புத்தி கெட்டுத் தீயகார்யத்தைச் செய்தலால் ஆத் மநாசம் உண்டாம்.) 2-அத். 12-சுலோகத்தில், ஆத்மாநித்யமென்று கூறியி ருக்கிறதே இதற்கு எவ்வாறு நாசம் உண்டாம் எனின், கும்பீபாகாதி நரகங் களை அநுபவித்தலால் நாசமடையும். ஆகையால் எவர்களும் சர்வாநர்த்தங் களுக்கு முதற் காரணமாகும் விஷயத்யானத்தைச் செய்யாதிருத்தல்வேண்டும். இந்திரியங்கள் பலவந்தங்களாகையால் இவைகளை அடுக்குதல் கஷ்டமானகார்ய மாயிருக்கும். ஆதலால் 61-சுலோகத்தில் சொன்னதுபோல மனம் பகவத்யா னத்தால் சர்வதோஷங்கள் நீங்கி நிர்மலமானபோது அதற்கு இந்திரியங்களி டத்தில் ஆசை நிவர்த்தியாகும். மனம் ஆசைகளைவிட்டபோது இந்திரியங்கள் அவனுக்கு வசமாயிருக்கும். அப்படிப்பட்டவனுக்கு ஆத்மதர்சனம் எளிதாய்க் கூடும்.ஆகையால் கெடுதிக்குக்காரணம் விஷயத்யானம். பிழைக்கக்காரணம் பக வத்யானம். இந்தவிஷயங்களை முமுக்ஷுக்கள் . கவனிக்கவேண்டும்.

இந்த 2-அத். 62-63-சுலோகங்களை, ஸ்ரீமான் லக்ஷ்மணாசார்யர் அவர்கள் காலண்டர் சுலோகமென்று சொல்லும் வழக்கமுண்டு. ஏன் எனின் ஒவ்வொ ருவரும் காலையிலெழுந்து தேதிகளைத் திருப்புவர்அல்லவா. இந்தச்சுலோ கங்களை ஒவ்வொருகாகிதங்களில் பெரிய எழுத்துக்களால் எழுதி காலண்டரு க்குப்பக்கத்தில்வைத்து நாடோறும் உதயத்தில்வாசித்து அநுசந்தானஞ்செய்து இந்தச் சுலோகத்தில் தெரிவிக்கப்பட்ட விஷயங்களை எண்ணத்திலிருத்தி மேன்மையடைதற்கு முயலவேண்டும்.

𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌶𑍍𑌚𑌰𑌨𑍍 ।
𑌆𑌤𑍍𑌮𑌵𑌶𑍍𑌯𑍈𑌰𑍍𑌵𑌿𑌧𑍇𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ௬௪

ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்ரியைஶ்சரந்,
ஆத்மவஶ்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி. ௬௪

రాగద్వేషవియుక్తైస్తు విషయా నింద్రియైశ్చరన్,
ఆత్మవశ్యై ర్విధేయాత్మా ప్రసాద మధిగచ్ఛతి. ౬౪

64. அரு—பகவான் விஷயங்களை அனுபவிக்கஅன்றோ இந்திரியங்களைக் கொடுத்தது. நீர் விஷயத்யானமே கூடாதென்கிறீரே.

த்வைதாத்வைதம்.

திரு—ராகத்வேஷங்களைவிட்டு மனதை வசப்படுத்திக்கொண்டு தனக்கு வசப்பட்ட இந்திரியங்களுடன் விஷயங்களைஅனுபவித்தால் சலியாமை யுண் டாகும்.

விசிஷ்டாத்வைதம்.

விஷயங்களைத் திரஸ்கரிக்கவேண்டும். அதினால் மனோநிர்மலம்உண்டாம்.

𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍇 𑌸𑌰𑍍𑌵𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌂 𑌹𑌾𑌨𑌿𑌰𑌸𑍍𑌯𑍋𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌚𑍇𑌤𑌸𑍋 𑌹𑍍𑌯𑌾𑌶𑍁 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌪𑌰𑍍𑌯𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇 ॥

ப்ரஸா:தேஸர்வதுக்கானும் ஹாநிரஸ்யோபஜாயதே,
ப்ரஸந்நசேதஸோ ஹ்யாஶு புத்தி: பர்யவதிஷ்டதி. ௬௫

ప్రసాదే సర్వదుఃఖానాం హానిరస్యోపజాయతే,
ప్రసన్నచేతసో హ్యాశు బుద్ధిః పర్యవతిష్ఠతి. ౬౫

65. அரு—மனம் சரிப்படுதலால் என்னபலம்?
திரு—மோக்ஷம் உண்டாம்.
அரு—பிரம்மஞான மில்லாமலே மோக்ஷமுண்டாமா?
திரு—மனசு சரிப்பட்டால் ஞானமுண்டாகும்.

𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌨 𑌚𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌨𑌾 ।
𑌨 𑌚𑌾𑌭𑌾𑌵𑌯𑌤𑌶𑍍𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑍁𑌤𑌸𑍍𑌸𑍁𑌖𑌮𑍍 ॥ ௬௬

நாஸ்தி புத்தி ரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனா,
ந சாபாவயதஶ்ஶாந்தி ரஶாந்தஸ்ய குத ஸ்ஸுகம் ௬௬

నాస్తి బుద్ధి రయుక్తస్య న చాయుక్తస్య భావనా,
న చాభావయతశ్శాన్తి రశాన్తస్య కుత స్సుఖమ్. ౬౬

த்வைதம், விசிஷ்டாத்வைதம்.

66. திரு—மனசு சரிப்படாதவனுக்குச் சுத்தாத்மச்வரூபஞானமும்; ஆத்மத்யானமும் உண்டாகா. தியானம் இல்லாமையால் விஷயங்களில் ஆசைவிடாது. ஆகையால் மோக்ஷம் உண்டாகாது.

அத்வைதம்.

மனம் சரிப்படாதவனுக்கு ஆத்மஸ்வரூபஞானம்; ஆத்மஞானபிநிவேசம் (நிச்சயம்) உண்டாகாது. ஆதலால் இவனுக்கு விஷயங்களில் ஆசைவிடாது. ஆதலால் சுகம் இல்லையென்று பொருள். சரபங்கருஷி இந்திரன் பிரத்யக்ஷமானபோது ஸ்வர்க்கத்தை விரும்பாமல் அவனை துரும்பாவெண்ணி ஸ்ரீராமன்சந்நிதியில் பிராணனைவிட்டு முத்தியடைந்தான். "ஆசைக்கடியான சில லோகங்களுக்கு மாசற்றநல்லடியா னுவானே—ஆசை, தனையடிமைகொண்டவனே தப்பாதுலகந்தனையடிமை கொண்டவனேதான்." ஆசைக்குஅடியவனுயின் அகிலலோகங்களுக்குமடியவனுக வேண்டியிருக்குமெனவும், ஆசையைத்தனக்கு அடிமையாகச் செய்துகொண்டவன் உலகமெல்லாவற்றையுந் தனக்கு வசமாக்கிக்கொண்டவன் என்பதும் சங்கரபாஷ்யம்.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌹𑌿 𑌚𑌰𑌤𑌾𑌂 𑌯𑌨𑍍𑌮𑌨𑍋𑌽𑌨𑍁𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।
𑌤𑌦𑌸𑍍𑌯 𑌹𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌨𑌾𑌵𑌮𑌿𑌵𑌾𑌮𑍍𑌭𑌸𑌿 ॥

இந்த்ரியாணும் ஹி சரதாம் யந்மநோநுவிதீயதே,
தத³ஸ்யஹரதிப்ரஜ்ஞாம் வாயுர்நாவமிவாம்பஸி. ௬௭

ఇంద్రియాణాం హి చరతాం యన్మనోఽనువిధీయతే,
తదస్య హరతి ప్రజ్ఞాం వాయుర్నావ మివాంభసి. ౬౭

67. அரு—இந்திரியங்களையும், மனதையும்வெல்லுதல் முடியாதகாரியம், இவற்றில் எதை முக்யமாய் வெல்லவேண்டுமோ அதை யொன்றைமாத்திரம் சொல்லும்.

கிரு—இரண்டும் முக்யமானவிஷயங்களே. ஆயினும் முக்யமாய் மனதைச் செயிக்கவேண்டும்.

எந்தமனம் விஷயங்களில் பிரவர்த்தித்துக்கொண்டிருக்கும் இந்திரியங்களின் பிரவர்த்தியை அநுசரித்துநடக்கின்றதோ அந்தமனம் அந்தப்புருஷனுடைய பிரஞ்ஞையை(சுத்தாத்மஸ்வரூப ஞானத்தை)ஜலத்தில் கப்பலுக்குப் பிரதிகூலமான காற்றுப்போல,ஹரிக்கின்றது. (ஆதலால் மனதேமுக்கியமானது. மனம் சரியாயுள்ளபோது இத்திரியகாரியங்கள் எவையும் தீமைசெய்யா. அநுமான், சீதான்வேஷணுர்த்தம் (சீதையைத்தேட) லங்கையில் ராத்திரியில் திரிகையில் ராவணன் பார்யைகளை (வஸ்திரங்கள் விலகியிருந்தவர்களையும் கூட) கண்டு, அவ்வாறுசெய்ததற்குத் தன்னை நிந்தித்துக்கொண்டு மீண்டும் தன்மனம் சரியாயிருந்ததினல் பிரம்மசர்யத்திற்கு எந்தக்கெடுதியும் வரவில்லையென்று சமாதானஞ்செய்துக்கொண்டான். மதுசூதன சரஸ்வதி, மனம்கெட்டவழியில் போகும். ஒரு இந்திரியம் வெளியேறினும் குற்றமென்று அபிப்ராயப்பட்டனர்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥

தஸ்மாத்யஸ்யமஹாபாஹோ நிக்ருஹீதாநி ஸர்வஸ:,
இந்த்ரியாணீந்த்ரியார்தேப்ய ஸ்தஸ்யப்ராஜ்ஞாப்ரதிஷ்டிதா. ௬௮

తస్మాద్యస్య మహాబాహో! నిగృహీతాని సర్వశః,
ఇంద్రియాణీంద్రియార్థేభ్య స్తస్య ప్రజ్ఞా ప్రతిష్ఠితా. ౬౮

த்வைதாத்வைதம்.

68. கிரு—எல்லாஇந்திரியங்களையும் விஷயங்களிலிருந்து நிவர்த்திக்கவேண்டும்.இந்திரியாணி யென்பதால் எல்லா இந்திரியங்களென்று பொருள்படும். ஆகையால் சர்வச: என்பதற்கு எல்லாபிரகாரங்களாலும் அர்த்தம் என்றும், ஆகையால் சர்வபிரயத்னங்களாலும் இந்திரியங்களை விஷயங்களிலிருந்து திருப்பவேண்டுமென்பது கருத்து. வேதாந்த தேசிகர் வைராக்கியத்தின்

பொருட்டாயினும் ஸ்திரீயங்கங்களிலுள்ள ஆபாசங்களை வர்ணிக்கத்தொடங்கி னும் மனம்கெடும் என்று அபிப்ராயப்பட்டனர். ஆகையால் எல்லாப்ரகாரங்களி னாலும் மனதைத்திருப்ப முயலவேண்டும்.

அரு—எவ்வகைப்பட்ட அஸஹ்யமான மருந்தையாயினும் ரோகிக்குக் கொடுப்பதற்கு வைத்யனுக்கு ஆக்ஷேபணையிராது. மருந்தையுண்பவனுக்கே அதிலுள்ளவருத்தம் தெரியும், அவ்வாறே, விஷயத்தைவிடுங்களென்று சாதா ரணமாய்க் கூறினாய். அதை அநுசரிக்கிற எனக்கன்றோ அதன்வருத்தம் தெரியும். இந்தச்சுலோகத்தில் கிருஷ்ணன் மஹாபாஹோஎன்பதால் நீ வல்ல வனாகையா லிந்தகாரியத்தில் சிரமம் இராதென்றுகருத்து.

யா நிஶா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ ।
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிஶா பஶ்யதோ முநே: ॥

யா நிஶா ஸர்வபூதானும் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ,
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிஶா பஶ்யதோ முநே:. கூசு

యా నిశా సర్వభూతానాం తస్యాం జాగర్తి సంయమీ,
యస్యాం జాగ్రతి భూతాని సా నిశా పశ్యతో మునేః. ౬౯

69. அரு—(ஞானியின் லக்ஷணத்தை 14-ச்லோகங்களால் விசேஷமாய்கூறி னாய் அந்தலக்ஷணத்தைச் சுருக்கமாகத் தெரிவிக்க.)

கிரு—எதுஉயிர்களுக்கெல்லாம் இரவோ அதில் மேற்கூறியபடி இந்திரி யங்களை ஜெயித்த ருஷி சாக்ரதையுள்ளவனாய் இருப்பன். எதில் எல்லாப்ராணி களும் சாக்ரதையா யிருக்குமோ அது ஆத்ம தரிசனஞ்செய்யும் ருஷிக்கு இர வாகும். (இவ்வாறு கூறுதல் எல்லாப் பிராணிகளுக்கும் தெரியாத ஆத்மா, ருஷிக்குத் தெரிகின்றதென்று கருத்து.)

அரு—இவன் எல்லாரையும் போல ஆகாராதிகளை அடைந்திருக்கின் இவன் எவ்வாறு சிரேஷ்டதமன் ஆவான்.

கிரு—64-சுலோகத்தில் சொன்னதுபோல் அவ்வாறு செய்யினும் குற்ற மில்லை அதுவு மன்றி,

ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிஶந்தி யத்வத் ।
தத்வத்காமா யம் ப்ரவிஶந்தி ஸர்வே
ஸ ஶாந்திமாப்நோதி ந காமகாமீ ॥ எ0

ஆபூர்யமாண மசலப்ரதிஷ்டம் ஸமுத்ரமாப: ப்ரவிஶந்திய த்வத்,
தத்வத்காமாயம்ப்ரவிஶந்திஸர்வேஸஶாந்திமாப்நோதிநகாமகாமீ. எ0

ఆపూర్యమాణ మచలప్రతిష్ఠం సముద్రమాపః ప్రవిశంతియద్వత్,
తద్వత్కామా యం ప్రవిశంతి సర్వే సశాంతి మాప్నోతి నకామకామీ.

விசிஷ்டாத்வைதம்.

70. தனக்குத்தானே நிறைந்துகொண்டு தன்ஸ்திதியைக்கடவாத கடலில் நதிகள் முதலியவை யெவ்வாறு பிரவேசிக்கின்றனவோ (எனின் இவைபிரவேசிக்கினும் விருத்தியில்லை.பிரவேசிக்காமலிருக்கினும் குறைவில்லை.) அவ்வாறே சப்தாதி விஷயங்களெல்லாம் ஆத்மாநுபவத்தால் திருப்தியடைந்த எவனிடத்தில் பிரவேசிக்கின்றனவோ (எனின் விஷயங்களைப் பார்ப்பதனால் சந்தோஷமில்லை. பாராததினால் குறைவுமில்லை யென்பது) அப்படிப்பட்டவன் சாந்தியை ஆத்ம தர்சனத்தாலுண்டாம் திருப்தியை அடைகின்றான்.

அத்வைதம்.

சமுத்திரத்தை யடையுமுன் நதிகளுக்குப் பேர்களிருக்கும். அதிற் கலந்த பிறகு சமுத்ரமென்றே அழைக்கப்படும். அவ்வாறே பரப்ரம்மத்தினிடத்தில் சேருமுன் விஷயங்களென்கிற பேதம் தெரியும். பிரமத்தில் சேர்ந்த உடன் எல்லாம் பிரமமாயிருக்கும். இவ்வாறு சமுத்ரதிருஷ்டாந்தத்தால் அறியப்படுகிறது.

சங்கராநந்தசரஸ்வதி அபிப்ராயம் —அசலப்ரதிஷ்டா என்பதால் சமுத்ரம் தன்னிடமிருக்கும் பர்வதங்களை ரக்ஷிக்கின்றது. அவ்வாறே பிரம்மஞானி யெதை அநுபவிக்கினும் பாதகமில்லையென்று கருத்து.

𑌵𑌿𑌹𑌾𑌯 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌯 𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑍁𑌮𑌾𑌂𑌶𑍍𑌚𑌰𑌤𑌿 𑌨𑌿𑌸𑍍𑌪𑍃𑌹𑌃 ।
𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌨𑌿𑌰𑌹𑌙𑍍𑌕𑌾𑌰 𑌸𑍍𑌸 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ௭௧

விஹாய காமாந் ய ஸ்ஸர்வாந் புமாம் ஶ்சரதி நிஸ்ப்ருஹ:,
நிர்மமோ நிரஹங்கார ஸ்ஸ ஶாந்தி மதிகச்சதி. ௭௧

విహాయ కామాన్ యస్సర్వాన్ పుమాం శ్చరతి నిస్స్పృహః,
నిర్మమో నిరహఙ్కార స్స శాన్తి మధిగచ్ఛతి. ౭౧

த்வைதம்.

71. கிரு—சப்தாதி விஷயங்களை 64-வது-சலோகம்போல அநுபவிக்க வேண்டும். விசிஷ்டாத்வைதம் அவைகளைத் திரஸ்கரிக்கவேண்டும்.

அத்வைதம்.

அவைகளை முழுதும் விடவேண்டும் என்பது கருத்து.

அரு—இவ்வாறு செய்யின் என்ன உண்டாம்?

கிரு—மோக்ஷமுண்டாம்.

𑌏𑌷𑌾 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍀 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑍈𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌵𑌿𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 ।
𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇𑌽𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 ।

ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைனும் ப்ராப்ய விமுஹ்யதி.
ஸ்தித்வாஸ்யா மந்தகாலேபி ப்ரஹ்மநிர்வாண ம்ருச்சதி. ௭௨

ఏషా బ్రాహ్మీ స్థితిః పార్థ నైనాం ప్రాప్య విముహ్యతి,
స్థిత్వా஽స్యా మన్తకాలే஽పి బ్రహ్మనిర్వాణ మృచ్ఛతి. ౭౨

72. கிரு—2-அத். இந்திரியமனோ நிக்ரஹத்தைத் தெரிவிக்கின்றது. இதையறிந்து பலத்யாகம் செய்தவன் சம்சாரத்தில் பிறவான்.

அரு—எனக்கு இவ்வளவுநாட்கள் இந்த விஷயந்தெரியாமற் போயிற்று.

அத்வைதம்.

கிரு—கிழப்பருவத்தில் சந்நியசித்தால் மோக்ஷம் உண்டாம். (இனி பால்யன் விஷயம் கேட்கவேண்டுமா என்பது கருத்து.)

அரு—அது எவ்வாறு லபிக்கும்.

கிரு—கட்வாங்கமஹாராஜன் தனக்கு 6-முஹூர்த்தத்தில் இருக்கின்றதென்று அறிந்து இந்தத் தத்வத்தை யறிந்து அப்போதே மோக்ஷத்திற்குப் போயினனல்லவா?

த்லவதம்.

ஞானம் இல்லாமல் காக்கைப்போல எவ்வளவு நாள் பிழைக்கினும் பயனில்லை. கட்வாங்கனைப் போலிருக்கவேண்டும். இவ்வாறிருந்தால் அப்ராக்ருததிவ்ய விக்ரஹத்தையும் ஆநந்த ஸ்வரூபமாகும் பரப்பிரம்மத்தை சேரலாம். பிரக்ருதிபந்தம் விட்டாலன்றோ அந்த நிலைலபிக்கும் எனின் பரப்பிரம்மத்தி னிடத்தில் ஏகீபாவம் உண்டாம் என்று கருத்து.

விசிஷ்டாத்வைதம்.

கர்மபலத்யாகிக்கு பிரகிருதிபந்தராஹித சுத்தாத்மஸ்வரூபம் உண்டாம் என்று பொருள். 2-அத். 11-வது. சுலோகமுதல் 30 வரையிலும் ஞானோபதேச மாதலால் இது ஸாங்கிய (ஞான) யோகமென்று கூறப்படுகின்றது.

இது பகவத்கீதா உபநிஷத்தில் பிரமவித்தையில் யோகசாஸ்திரத்தில்
கிருஷ்ணார்ச்சுன ஸம்வாதத்தில் ஸாங்கியயோகநாம
இரண்டாவது அத்யாயம் முற்றுப்பெற்றது.



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாய பரப்ரம்மணே நம:.

# ஸ்ரீபகவத்கீதை

## கர்மயோகம்.

## மூன்றாவது அத்யாயம்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇 𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇 𑌮𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌤𑌤𑍍𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵 ॥ க

ஜ்யாயஸீ சே த்கர்மணஸ்தே மதா புத்திர்ஜநார்த்தந,
தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேஸவ. க

జ్యాయసీ చే త్కర్మణ స్తే మతా బుద్ధి ర్జనార్దన,
తత్కిం కర్మణి ఘోరే మాం నియోజయసి కేశవ. ౧

அருச்சுநன் கூறுதல்.

1. அரு—கர்மஞானங்களை உன்னால் கேட்கப்பட்டதனால் ஞானமே உயர்ந்ததென்று உன்னபிப்பிராயமானதென்று தோன்றுகின்றது. உனக்குப் பந்துவாகவும், நண்பனாகவும்,பக்தனாகவும் இருக்கும் எனக்கு அந்தப்பெரிதாகிய ஞானயோகத்தைக் கூறாமல் ஏன் கர்மயோகத்தைச் செய்யக்கூறுகின்றாய்?

கிரு—நான் கூறினேன். உனக்கு இஷ்டமிருக்கின் செய். இல்லாவிடின் விட்டுவிடு. பிரம்மருத்ராதிகளும் கூட ஆநந்தத்தைவிட்டு என்னாஞ்ஞையைச் செலுத்துதற்காக சிருஷ்டி சம்மாரங்களென்னும் கர்மங்களைச்செய்து கொண்டேயிருக்கின்றனர்.

அரு—நீ சொன்னதையே செய்யவேண்டுமென்று உன் அபிமதமா?

கிரு—பூபார நாசம் ஆக வேண்டாமா?

இந்தச் சுலோகத்தில் ஜநார்த்தனாஎன்று அருச்சுநன் அழைத்ததினால் சம்ஹாரமூர்த்தி! பூபாரத்தைப் போக்குவதற்கு உனக்கு என்சகாயம் வேண்டுமோ என்று கருத்து. எனின் அவன்சஹாயம் அவசியமில்லையென்று கருத்து.

𑌵𑍍𑌯𑌾𑌮𑌿𑌶𑍍𑌰𑍇𑌣𑍇𑌵 𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌮𑍋𑌹𑌯𑌸𑍀𑌵 𑌮𑍇 ।
𑌤𑌦𑍇𑌕𑌂 𑌵𑌦 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌯𑍇𑌨 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌹𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌮𑍍 ॥ உ

வ்யாமிஸ்ரேணைவ வாக்யேந புத்திம் மோஹயஸீவ மே,
ததேகம் வத நிஸ்சித்ய யேந ஶ்ரேயோऽஹ மாப்நுயாம். ௨

వ్యామిశ్రేణైవ వాక్యేన బుద్ధిం మోహయసీవ మే,
తదేకం వద నిశ్చిత్య యేన శ్రేయోఽహ మాప్నుయామ్. ౨

2. கிரு—2-அத.இல், கர்மஞானங்களிரண்டினையும் கூறியிருக்கையில் கர்மத்தைமாத்திரம் கூறினேன் என்ருயே என்ன ?

அரு—ஒன்றைக்கூருமல் இரண்டினையும் கலந்துகூறினதினுலேயன்ரே எனக்கு இவ்வளவு மனமயக்கத்திற்கு ஏதுவாகின்றது.

கிரு—இப்போது என்ன செய்யச்சொல்லுகின்ருய் ?

அரு—எனக்குச் சிரேயசாயிருப்பதைக்கூறு.

2-சுலோகத்திற்கு, யுக்தியாய் இரண்டுபொருள்கள் கூறப்பட்டன.

2-சுலோ. உத்தரார்த்தம்.

ததேகம் வத நிஸ்சித்ய யேனஶ்ரேயோஹமாப்னுயாம். முதல்அர்த்தம். அஹம் = நான், யேன = எந்தசொல்லால், ஶ்ரேய: = ஶ்ரேயஸை, ஆப்னுயாம் = அடைவேனே, தத் = அந்த, ஏகம் = ஒருசொல்லை, நிஸ்சித்ய = நிச்சயித்துக்கொண்டு, வத = சொல்லும். இவ்வாறு கேட்டவுடனே, சாஸ்திரங்களில் எனக்கு அவ்வளவு பரிசயமில்லையா, நான் அவ்வளவு யோசனையில்லாமல் பேச யென்று கிருஷ்ணனுக்குக் கோபம்வந்தது.

இரண்டாவது அர்த்தம்—அஹம் = நான், யேன = எந்தசொல்லால், நிஸ்சித்ய = நிச்சயித்துக்கொண்டு,ஶ்ரேய: = சிரேயசை, ஆப்னுயாம் = அடைவேனே, தத் = அந்த, ஏகம் = ஒருவார்த்தையை, வத = சொல். இரணடில் எது உயர்ந்ததென்று தெரிந்துகொள்வதற்கு எனக்கு வன்மை யில்லாமையால் நீ கூறின் யோசித்துக்கொண்டு செய்கிறேன் என்று கருத்து.

ஸ்ரீபகவாநுவாச.

𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌯𑌾𑌨𑌘 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

லோகேऽஸ்மிந் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயாநக,
ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம். ௩

లోకేఽస్మిన్ ద్వివిధా నిష్ఠా పురా ప్రోక్తా మయానఘ,
జ్ఞానయోగేన సాంఖ్యానాం కర్మయోగేన యోగినామ్. ౩

ஸ்ரீபகவான் கூறுதல்.

அத்வைதம்.

3. கிரு—பாடசாலாதிகாரி நண்பனுயிருக்கினும் ஸ்வல்பவித்தையுள்ளவனைக் கீழ்வகுப்பிலேயே யுட்காரச்செய்வன். அவ்வாறு செய்யாமலிவனை மேல்

வகுப்பில் உட்காரவித்தால் அதனால் அவனுக்குச்சிறிதும் லாபம் இராதல்லவா? அவ்வாறே நீ எல்லாவிதத்தாலும் எனக்கு ஆப்தனாயிருக்கினும உனக்கு ஞானம்போதாது. பூர்வவாசனையுள்ள ப்ரஹ்லாதிகளுக்கே அந்த ஞானம் பூர்வவாசனை யில்லாதவர்கள் கர்மஞ்செய்து அதின்வழியாய் பகவானுடைய முகமலர்ச்சியை யடையவேண்டும். முன்னால் நீ ஞானிஎன்று எண்ணி ஞானோபதேசஞ்செய்தேன். அது உன்புத்திக்கு எட்டாமையால் கர்மமார்க்கத்தைக் கூறினேன். (இதில் என்தவறு ஒன்று மில்லையென்று கருத்து.)

விசிஷ்டாத்வைதம்.

ஞானயோகம் கர்மயோகம் இரண்டும் ஒன்றே. கர்மயோகத்தில் கர்மபாகம் அதிகமாகவும்) ஞானயோகத்தில் ஞானபாகம் அதிகமாகவும் சேர்ந்திருக்கும். தண்ணீர் அதிகமாகக்கலந்திருக்கும் பாலினைப் பாலென்றேகூறுவர். பால்குடித்த மாத்திரத்தில் நீர்வார்த்தலினால் அந்தநீர் பால்போலிருக்கினும் தண்ணீரென்றே கூறுவர். மொத்தத்தில் பால் தண்ணீர் சேர்ந்தேயிருக்கிறதல்லவா. அவ்வாறே கர்மயோக ஞானயோகங்களுக்குப்பேதம். ஸைன்ஸ்-பிஏ-எனின் அந்தவித்தை மாத்ரமே அறிந்தவன் என்று பொருள் இல்லை அன்றோ! அவ்வாறே கர்மத்தில் ஞானம் கலந்திருக்கிறது. ஆகையாலிது குறைந்ததன்று என்பதுகருத்து.

த்வைதம்.

ஒருபெரிய அதிகாரியின்வீட்டில் வேலை செய்துக்கொண்டிருந்தால் அந்த அதிகாரியின் மனம் சந்தோஷமடைதலால் ஏதேனும் ஒருஉத்யோகம்கொடுக்க எண்ணி அவ்வாறேசெய்வான். அவ்வாறு செய்தற்கு அவன் சமர்த்தனாயிருப்பன். ஆகையால் கர்மம்செய்தால் பகவானுடைய முகமலர்ச்சியுண்டாம் என்பது கருத்து.

𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌮𑌨𑌾𑌰𑌮𑍍𑌭𑌾 𑌨𑍍𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌪𑌰𑍁𑌷𑍋𑌽𑌶𑍍𑌨𑍁𑌤𑍇।
𑌨𑌚 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑌨𑌾 𑌦𑍇𑌵 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ௪

ந கர்மணா மனாரம்பா ந்நைஷ்கர்ம்யம் புருஷோஸ்நுதே,
நச ஸந்ந்யஸனா தேவ ஸித்திம் ஸமதிகச்சதி. ௪

న కర్మణా మనారమ్భా న్నైష్కర్మ్యం పురుషోऽశ్నుతే,
నచ సన్న్యసనా దేవ సిద్ధిం సమధిగచ్ఛతి. ౪

4. அரு—அவ்வாறாயின் கர்மந்தானா என் யோக்யதைக்குத்தக்கது?

கிரு—ஆம்.

அரு—கர்மம்செய்தலால் எனக்குஞானம் உண்டாமா?

கிரு—உண்டாம்.

அரு—அவ்வாறாயின் ஞானத்தின்வழியாக மோக்ஷத்தை நான் கோறேன். சந்யாசி ஆவேன்.

கிரு—ஞானம் உண்டாதற்கு, ராகத்வேஷங்கள் கெட்டுப்போதற்கே அன்றோ சந்நியாசம். நீ யிதை யறிந்துகொள்ளாமல் கர்மஸந்யாசம் மாத்ரம் செய்கிறேன் என்கிறாய். கேவல சந்யாசம் மோக்ஷம்தராது. அவ்வாறுசெய்தவன் உபயப்ரஷ்டன்ஆவான். (எனின் கர்மஞானம் இல்லாதவன்என்று பொருள்.)

த்வைதம்.

கிரு—கர்மம்செய்தால் ஞானம் உண்டாம்..

அரு—சங்கத்தைப் பூரித்தேனே.

கிரு—பூபாரநாசம் ஆகவேண்டாமா, அவ்வாறுசெய்து பகவானுடைய முகவுல்லாசத்தைப் பெறவேண்டும்.

அத்வைதம்.

அரு—ஸன்யாசம் கூடாதா?

கிரு—மனசுசித்தியாய் யோக்யதையை யடைந்து சன்யசிக்கவேண்டும்.

விசிஷ்டாத்வைதம்.

கிரு—கர்மம் செய்யவேண்டியதே.

அரு—சங்கத்தை ஊதினேனே.

கிரு—ஆரம்பித்து விட்டுவிடினும், முடியும்வரை செய்யாமலிருக்கினும் பயனில்லை.

அரு—2-அத். 40-வது-சுலோகத்தில் கொஞ்சம் செய்தாலும்போதும் என்றாய். இப்போது இவ்வாறு ஏன்கூறுகிறாய்.? 3-அத். 2-சுலோகத்தில் கலவரப்படுத்துகின்றாய் என்று நான்கூறினபோது கோபஞ்செய்து கொண்டாயல்லவா.

கிரு—செய்தவரையில் பயனுண்டாம் என்றேன். அதனால் விடினும் தவறில்லையென்று கூறினேன். இப்போது பெரும்பயனை யெண்ணுதலால் முடிவுவரை செய்யவேண்டுமென்று கூறுகின்றேன்.

2-அத். 40-சுலோகத்திலும், 6-அத். 40, 41, சுலோகங்கள் திடமாய்க் கூறும்.

𑌨 𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ।
𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ॥

நஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது. திஷ்ட த்யகர்மக்ருத்,
கார்யதே ஹ்யவஶ:கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜை ர்குணை:. ௫

నహి కశ్చిత్ క్షణమపి జాతు తిష్ఠ త్యకర్మకృత్,
కార్యతే హ్యవశః కర్మ సర్వః ప్రకృతిజై ర్గుణైః. ౫

அத்வைதம்.

5. அரு—யோக்யதை யில்லாதபொழுது சந்யாசம்கூடாதா?

கிரு—கூடாது. அவ்வாறு சந்யசித்துக்கொண்டால் மற்ற எந்தக்கார்யத்தையும் செய்யாதிரான். முக்குணங்களால் ஆக்ரமிக்கப்பட்டுப் பிரகிருதியால்

எந்தக்காரியத்தையாயினும் செய்விக்கப்படுவன். ஆகையால் கர்மம்செய்து அந்தக்கரணசுத்தி யடைந்து பின் அந்தநிலைக்கு வரவேண்டும். அவ்வாறன்றிச் சன்யசித்தாலும் வேஷத்தில் சரியாயிருக்குமேயன்றி உண்மையான சந்நியாசநிலைவராது.

விசிஷ்டாத்வைதம்.

அரு—முடிவுவரை செய்யவேண்டியிருத்தலால் கர்மம்கூடாது. ஞானம் சம்பாதிக்கிறேன்.

கிரு—இந்த லோகத்திலுள்ள எவனும் எந்தக்காலத்திலானாலும் க்ஷணமாத்ரம் கர்மங்களைச் செய்யாமலிருக்கான். ஒவ்வொருவனும் பிரகிருதிகுணங்களால் தன்சுவாதீனம் இல்லாமலே (பலாத்காரமாய்) கர்மங்கள் செய்விக்கப்படுகிறான். ஆகையால் ஸ்வகர்மத்தைசெய்து த்ரிகுணங்களையும் விட்டு இந்திரியங்கள் அனைத்தையும் ஒருமைப்படுத்தி பழையகர்மம்நீங்குவதற்காக நிவர்த்திகர்மத்தைசெய். உனக்கு ஸ்வகர்மம் யுத்தம் ஆதலால் அதனைச் செய்.

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரந் ।
இந்த்ரியார்த்தாந் விமூடாத்மா மித்யாசார ஸ்ஸ உச்யதே ॥ ரு

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மநஸா ஸ்மரந்,
இந்த்ரியார்த்தாந் விமூடாத்மா மித்யாசார ஸ்ஸ உச்யதே. ரு

కర్మేన్ద్రియాణి సంయమ్య య ఆస్తే మనసా స్మరన్,
ఇన్ద్రియార్థాన్ విమూఢాత్మా మిథ్యాచార స్స ఉచ్యతే. ౫

6. அரு—மனிதன் எந்தக்காரியத்தையேனும் செய்யாமலிரான் என்பது உன் அபிப்ராயமா?

கிரு—இந்திரியத்தின் காரியங்களை யொருவேளை நிறுத்தினும் மனதை கட்டுவதற்கு இவைகளால் ஆகாது. பந்தமோக்ஷங்களுக்கு மனதே காரணமாகின்றது. கர்மத்தைசெய்யும்போதாயினும் மனம் சற்று நிலைத்திருக்கும். எந்தக்கார்யமு மில்லாமல் சும்மாவிருக்கும்பொழுது விஷயங்களைச் சிந்திப்பதற்கு மனதிற்கு வ்யததி அதிகமாயிருக்கும். இவ்வாறு கர்மேந்திரியங்களை யடக்கி மனதால்விஷயங்களைச் சிந்திப்பவன் மித்யாசாரனாவன். அவன் ஆசரிக்கவிரும்பியது ஆத்மஞானம், ஆசரித்தது விஷயத்யானம் ஆகும்.

யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்யாரபதேऽர்ஜுந ।
கர்மேந்த்ரியை: கர்மயோக மஸக்த ஸ்ஸ விஶிஷ்யதே ॥ எ

ய ஸ்த்விந்த்ரியாணி மநஸா நியம்யாரபதேர்ஜுந,
கர்மேந்த்ரியை: கர்மயோக மஸக்த ஸ்ஸ விஶிஷ்யதே. எ

య స్త్విన్ద్రియాణి మనసా నియమ్యారభతేऽర్జున,
కర్మేన్ద్రియైః కర్మయోగ మసక్త స్స విశిష్యతే. ౭

7. அரு—அவ்வாருயின் என்னசெய்யவேண்டும் ?

கிரு—மனதைச் சுத்தப்படுத்தி, அவ்வகைப்பட்டமனதால் ஞானேந்திரியங்களை நியதிசெய்து (எனின் அகார்யங்களில் போகாமற்செய்து) பலாபேக்ஷையைவிட்டுக் கர்மேந்திரியங்களால் கர்மஞ்செய்தவன் சிரேஷ்டனுவான். (தாத்பர்ய சந்திரிகையில்) 7-வது மெத்தையிருந்தால் சுகம் உண்டாமென்று, 6-மெத்தைகள்கட்டாமல், 7-வது மெத்தையைக் கட்டமுயல்பவன் பயித்தியங்கொண்டவன் எனப்படுவன். அவ்வாறேஞானமில்லாமல் சன்னியாசி ஆதற்குப் பிரயத்னிப்பவனும் பயித்தியம்கொண்டவன் என்பது கருத்து. இந்த 3-அத். 7-வதுசுலோகங்கள் ஒருபிரகாணமாகிறது.

𑌨𑌿𑌯𑌤𑌂 𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌜𑍍𑌯𑌾𑌯𑍋 𑌹𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ।
𑌶𑌰𑍀𑌰𑌯𑌾𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌚 𑌤𑍇 𑌨 𑌪𑍍𑌰𑌸𑌿𑌧𑍍𑌯𑍇𑌦𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ॥ அ

நியதம் குரு கர்மத்வம் கர்மஜ்யாயோஹ்யகர்மண:,
ஶரீரயாத்ராபிசதே நப்ரஸித்யே தகர்மண:. அ

నియతం కురు కర్మ త్వం కర్మ జ్యాయో హ్యకర్మణః,
శరీరయాత్రాపిచతే న ప్రసిద్ధ్యే దకర్మణః.

8. (இந்திரியங்களையும் மனதையும் சுத்தப்படுத்தி பலாசக்தியைவிட்டு கர்மயோகத்தைசெய்பவன் சிறந்தவன் என்று கிருஷ்ணன் கூறுகையில் அர்ச்சுனனிவ்வாறு கேட்கிறுன்.)

அரு—நீ சொன்னது தெரிந்துக்கொண்டேன். ஆயினும் நீ அயலான் செய்தியைச் சொன்னுய். நான் என்னசெய்யவேண்டுமோ அதைச்சொல்.

கிரு—உனக்கென்றே யிந்தசங்கதிகளைத் தெரிவித்தேன்.

அரு—அப்படியாயின் என்னையழைத்து ஏன் சொல்லவில்லை.

கிரு—அவ்வாறுசொன்னுல் உனக்கு ஒருவேளை என்வார்த்தைகளில் வெறுப்பு உண்டாமென்று எண்ணினேன். உனக்கு நற்பதவி உண்டாக வேண்டும் என்று இஷ்டமிருந்தால் நீயும் அவ்வாறு நடந்துகொள்.

அரு—கர்மம் செய்கிறேன், யுத்தம் செய்யமாட்டேன்.

கிரு— (நியதம், என்பதால் உனக்கு விதிக்கப்பட்ட கர்மத்தைச்செய் என்று கருத்து.)

த்வைதாத்வைதம்.

அரு—கர்மஞ்செய்ய எனக்குமுடியுமா ?

கிரு—அப்யாஸமாயிருக்கும் கர்மத்தையேசெய். இப்பொழுது அசாஸ்திரீயமாய் செய்கிறகார்யத்தைச் சாஸ்திரீயமாய்ச்செய். நீ இப்பொழுது எந்த இந்திரியங்களுடன் எந்தக்கர்மஞ் செய்கின்ருயோ அவ்வாறேசெய். வேற்றுமை என்னவென்ருல், முன்னேபலத்தைக் கோரிசெய்தாய். இப்போது அதைவிட்டு நிவர்த்திகர்மஞ்செய் (குதிரைகளை அவைசெல்லும்வழியே விடாமல் தடுத்து மணற்பூமியில் ஒட்டினுல் அந்தவழியில் போதற்கு

அவைகளுக்குக் கஷ்டமாகஇருக்கும். அவ்வாறே பிரவர்த்திகர்மத்திலிருந்து நிவிருத்திகர்மமாய் மாற்றுவதால் நமக்குச் சிறிதுகஷ்டம் உண்டாம். எவ்வாறுயினும் அதைத் திருப்பவேண்டும்.)

விசிஷ்டாத்வைதம்.

ஞானத்தினும் கர்மமே உயர்ந்தது. கர்மத்திற்கு மனம் புத்திகளைநிறுத்தவேண்டிய பிரமேயம்இல்லை. ஆகையால் எளிது. ஞானம் உயர்ந்ததாயினும் தவறின் அநர்த்தமுண்டாகும். ஆகையால் கர்மமே கார்யசாதகமானது. பெரியபரீக்ஷைக்குப் படித்திருந்து தவறிப்போதலால் உத்யோகம் அகப்படாதவன் போலல்லாமல், ஒருசீமானுக்கு வேலைசெய்திருந்தவன், கொஞ்சம்வித்யை யுடையவனுயினும் பெரிய அதிகாரத்தை அடையத்தக்கவன். இவ்வாறே கர்மத்தால் பகவான் களிப்படைந்தவனுய் நல்லகதியை உண்டாக்குவான்.

3-அத், 35-சுலொ. இல் இவ்வாறுகூறப்படும்.

சரியாய் ஆசரிக்கப்பட்ட அன்யதர்மத்தைக்காட்டிலும் (எனின் பிரகிருதிசம்பந்தம் உள்ளவனுக்கு அசாத்யம் ஆதலால் அன்யதர்மமான ஞானயோகத்தைக் காட்டினும்) ஸ்வதர்மம் (கர்மயோகம்) குணமில்லாததாயினும் மிகவுயர்ந்தது. தன்தர்மத்திலிருந்து (ஒரேஜன்மத்தில் பலம்லபிக்காமல்) இறத்தலும் மேலாகும். பரதர்மம் (ஞானயோகம்) பயஹேது. (எனின் தவறின் நரகஹேது.)

அரு—கர்மத்தில் எனக்கு இச்சையுண்டாகவில்லை.

கிரு—எல்லாக்கர்மங்களையும் விட்டுவிடுகின்ருயா ?

அரு—விட்டுவிடுகின்றேன்.

கிரு—அவ்வாருயின் எப்படி போஜனஞ்செய்வாய் ?

அரு—சரீரசம்ரக்ஷணைக்கு வேண்டிய கர்மங்களைச் செய்கின்றேன்.

கிரு—அநித்யமான சரீரத்தைக்குறித்து சாக்ரதைபடுகிறவன் சாச்வதமான ஆத்மக்ஷேமத்தை கவனியாதிருத்தல் நியாயமா ?

𑌯𑌜𑍍𑌞𑌾𑌰𑍍𑌥𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌲𑍋𑌕𑍋𑌽𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑌃।
𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑌃 𑌸𑌮𑌾𑌚𑌰 ॥ ௯

யஜ்ஞார்த்தா த்கர்மணோந்யத்ர லோகோயம் கர்மபந்தந:,
ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க ஸ்ஸமாசர. ௯

యజ్ఞార్థా త్కర్మణోఽన్యత్ర లోకోఽయం కర్మబన్ధనః,
తదర్థం కర్మ కౌన్తేయ ముక్తసఙ్గ స్సమాచర. ౯

9. அரு—கர்மம் பந்தஹேதுஎன்று சாஸ்திரங்கள்கூறுதலால் கர்மத்தில் எனக்கு இச்சை யில்லாமலிருக்கிறது.

கிரு—இந்த லோகத்திற்கு யஞ்ஞார்த்தமான கர்மத்தினும் வேறு (ஸ்வப்ரயோஜனர்த்தமான) கர்மம் பந்தம். (சம்சாரஹேதுவாகும்) குந்திபுத்ரா ! யஞ்ஞார்த்தமான கர்மத்தை பலாசக்தியில்லாதவனுய் ஆசரி. இந்த அர்த்தமே 6-அத். 24-சுலோ, லும், எல்லாயஞ்ஞங்களுக்கும், ஆராத்யனும் பலங்கொடுப்ப

வனும் நானே. காம்யகர்மநிஷ்டர்கள் என்னை உண்மையாய் அறியார்கள். ஆகையாற்றான் அவர்க்கு தவறும் உண்டாம். விழுந்துவிடுவர். ஆதலால் மறுஜன்மத்திற்குவருவர். 5-அத். 26-சுலோ இல் யஞ்ஞம் தபஸ்ஸு இவைக ளால் ஆராதிக்கத்தக்கவனாய் உலகங்களெல்லாவற்றிற்கும் மஹேஶ்வரனாய், சர்வபூதங்களுக்கும் ஹிதனான, என்னை அறிந்தபின்பு சுகத்தை அடைகின்றான் என்றும் தெரிவிக்கப்படும். (இந்தச்சுலோகத்தில் உதஹரிக்கப்பட்ட பகவா னுடைய முகோல்லாசத்திற்காகச் செய்யும் கர்மம் பந்தஹேது அன்றென்பது கருத்து.)

அரு—இனி என்ன செய்வேன்? எப்படிப்போனாலும் கர்மம் செய்யவே ண்டியதென்றே ஏற்படுகின்றது.

கிரு—அவ்வாறு துக்கப்பட்டுச்செய்யாதே, பகவன் முகோல்லாசத்திற் கென்று பிரீதியுடன்செய்.

𑌸𑌹𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍁𑌰𑍋𑌵𑌾𑌚 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 ।
𑌅𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌸𑌵𑌿𑌷𑍍𑌯𑌧𑍍𑌵𑌮𑍇𑌷 𑌵𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 ॥ ௧௦

ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ராஜாபதி:,
அநேந ப்ரஸவிஷ்யத்வ மேஷ வோஸ்த்விஷ்டகாமதுக். ௧௦

సహయజ్ఞాః ప్రజా సృష్ట్వా పురోవాచ ప్రజాపతిః,
అనేన ప్రసవిష్యధ్వ మేష వోఽస్త్విష్టకామధుక్. ౧౦

10. அரு—நீ இப்பொழுது தெரிவித்த கர்மயோகத்தை நீ ஸ்வயமாய்க் கூறுகின்றாயா? பெரியவர்கள் யாராயினும் சொல்லியிருந்தாரா?

த்வைதாத்வைதம்.

கிரு—பிரமன்சொன்னான்.

விசிஷ்டாத்வைதம்.

ஸ்ரீமந்நாராயணன் கூறினான். இந்தச்சுலோகத்தில் பிரஜாபதி: எனும் பதத்தால் வெவ்வேறு கர்த்தாக்கள் நிர்த்தாரிக்கப்பட்டார்கள். கீழ்சுலோகங்க ளிலிந்தவிஷயம் செம்மையாய்த் தெரிவிக்கப்பட்டது. சிருஷ்டிகாலத்தில் சர் வேச்வரனாகிய பகவான் யஞ்ஞத்துடன் பிரஜைகளை (ஜீவாத்மாக்களை) சிருட் டித்து அவர்க்கு இவ்வாறுகூறினான். இந்தயஞ்ஞங்களால் நீங்கள் உங்களை விரு த்திசெய்து கொள்ளுங்கள். யஞ்ஞங்கள் உமக்கு எண்ணின (மோக்ஷத்தை) கோரிக்கையை பூர்த்தி செய்யக்கடவன்.

𑌦𑍇𑌵𑌾𑌨𑍍𑌭𑌾𑌵𑌯𑌤𑌾𑌨𑍇𑌨 𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁 𑌵𑌃 ।
𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑌰𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥 ॥ ௧௧

தேவா ந்பாவயதாநேந தே தேவா பாவயந்து வ:,
பரஸ்பரம் பாவயந்த ஶ்ரேய: பர மவாப்ஸ்யத. ௧௧

దేవాన్భావయతానేన తే దేవా భావయన్తు వః,
పరస్పరం భావయన్తః శ్రేయః పరమవాప్స్యథ. ౧౧

11. இந்த யஞ்ஞங்களால் தேவதைகளைப் பூஜைசெய். ஆராதிக்கப்பட்ட தேவர்கள் உங்களை விருத்திசெய்வார்களாக. பரஸ்பரம் விருத்திசெய்துகொண்டு நீங்கள் உத்கிருஷ்டமான சிரேயசை (மோக்ஷத்தை) அடைவீர்கள். (விசிஷ்டாத்வைதத்தில் பிரஜாபதியென்பதற்குப் பகவான்என்று ஏன்கூறப்பட்டதெனின் பிரம்மாதி ஸ்தம்பபர்யந்தமுள்ள பிராணிகள் பகவத்சிருட்டிக்குட்பட்டவர் என்றும் (இதற்கு நிதர்சனம், 8-அத். 16-சுலோ, இல், பிரம்மலோகம்வரையிலும் சென்றாலும் மீண்டும் ஜன்மம் உண்டென்பதே பிரம்மாவிற்கும் ஆயுட்பிரமாண மிருத்தலால் பிரம்மாதிகளை ரக்ஷ்யபிரஜைகளாயும், மனுஷ்யாதிகளை ரக்ஷகப்ரஜைகளாயும் சிருட்டித்து அவர்க்கு அவர்களுக்குச் சர்வேச்வரன்கூறினான் என்று, 10, 11, சுலோகங்களின் கருத்து.

𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌭𑍋𑌗𑌾𑌨𑍍𑌹𑌿 𑌵𑍋 𑌦𑍇𑌵𑌾 𑌦𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃।
𑌤𑍈𑌰𑍍𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑍈𑌭𑍍𑌯𑍋 𑌯𑍋 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌸𑍍𑌤𑍇𑌨 𑌏𑌵 𑌸𑌃॥

இஷ்டாந் போகாந் ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா:,
தைர்தத்தா ந ப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ:. கஉ

ఇష్టాన్ భోగాన్ హి వో దేవా దాస్యన్తే యజ్ఞభావితాః,
తైర్దత్తా న ప్రదాయైభ్యో యో భుంక్తే స్తేన ఏవ సః. ౧౨

12. அரு—இவ்வகை ஆஞ்ஞையை செலுத்தாவிடின் என்ன ?

கிரு—யஞ்ஞங்களால் பூஜிக்கப்பட்ட தேவதைகள் உமக்கு இஷ்டபோகங்களைக் கொடுப்பர். அவர்கள் கொடுத்தபோகங்களை அவர்களுக்குக் கொடுக்காமல் (அவர்களை ஆராதிக்காமல்) தானே புசிக்கிறவன் எவனோ அவன் சோரன்.

𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌶𑌿𑌨𑌃 𑌸𑌨𑍍𑌤𑍋 𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑍈𑌃।
𑌤𑍇 𑌤𑍍𑌵𑌘𑌂 𑌭𑍁𑌞𑍍𑌜𑌤𑍇 𑌪𑌾𑌪𑌾 𑌯𑍇 𑌪𑌚𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍॥

யஜ்ஞஶிஷ்டாஶிந ஸ்ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை:,
தே த்வகம் புஞ்ஜதே பாபா யே பச ந்த்யாத்மகாரணாத். கங

యజ్ఞశిష్టాశినః సన్తో ముచ్యన్తే సర్వకిల్బిషైః,
తే త్వఘం భుఞ్జతే పాపా యే పచన్త్యాత్మకారణాత్. ౧౩

13. அரு—அவ்வாறாயின் என்னசெய்யவேண்டும்.

கிரு—(பகவத்ஆராதன ரூபமான) யஜ்ஞஞ்செய்து மிதந்ததைப்புசிக்கிற சத்புருஷர்கள் எல்லாப்பாபங்களினின்று விடுவிக்கப்படுகின்றனர்.) தனக்கென்றே (பகவதாராதனைக்கென்று எண்ணாமல்) பாகம்செய்யும் பாபிகள் அமேத்யத்தையே புசிக்கின்றனர்.

13-அத், 27-சுலோ. எவ்விடத்திலும் ஆத்மா இருக்கிறதென்று கூறுகிறது. நாம் புசிக்கிறதற்கு முன்பு தான்யத்தை அறுத்தல், அடித்தல், மாவாக்கல், நமது கண்களுக்குத் தெரியாத எவ்வளவோ பிராணிகளுடனிருக்கும் தண்ணீரைப் பானம்செய்தல், எவ்வளவோ பிராணிகளுக்குத் துன்பம்உண்டாம் வகைமிபருக்கல் எனும் இந்த ஐந்து ஹத்திகளைச்செய்யாமல் புசிக்கமாட்டோம். இந்த பாபபரிஹாரார்த்தமாய் பஞ்சயஜ்ஞங்களைச்செய்து அந்தயஜ்ஞசேஷத்தைப் புசிக்கவேண்டும். இவ்வாறு செய்யாவிடின் பாபபோஜனமாகும் நாசமுண்டாம். அமேத்யமாம். இது உபநிஷதர்த்தமாம்.)

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌨𑌸𑌂𑌭𑌵𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑍋 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ॥ கச
𑌕𑌰𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 ॥ கரு

அந்நா த்பவந்தி பூதாநி பர்ஜந்யா தந்நஸம்பவ:,
யஜ்ஞா த்பவதி பர்ஜந்யோ யஜ்ஞ: கர்மஸமுத்பவ:. கச
கர்ம ப்ரஹ்மோத்பவம்வித்தி ப்ரஹ்மாக்ஷரஸமுத்பவம்,
தஸ்மா த்ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம். கரு

అన్నాద్భవన్తి భూతాని పర్జన్యాదన్నసమ్భవః,
యజ్ఞాద్భవతి పర్జన్యో యజ్ఞః కర్మసముద్భవః. ౧౪
కర్మ బ్రహ్మోద్భవం విద్ధి బ్రహ్మాక్షరసముద్భవమ్,
తస్మాత్సర్వగతం బ్రహ్మ నిత్యం యజ్ఞే ప్రతిష్ఠితమ్. ౧౫

14. 15. அரு—நீ 11. சுலோகத்தில் தெரிவித்ததுபோல தேவதாப்ரசாதம் எனக்குவேண்டாம். 1-அத், 32-சுலோ. ராஜ்யாதிசுகங்களும் எனக்குவேண்டாமென்று தெரிவித்திருந்தேனல்லவா ?

கிரு—உனக்கு இச்சையில்லாதிருக்கினும் ஜகச்சக்ரபிரவிர்த்திக்காக நிவர்த்தி கர்மத்தைச்செய்.

விசிஷ்டாத்வைதம்.

14-சுலோ. அன்னத்தால் பிராணிகள் பிறக்கின்றன. மழையால் அன்னம் உண்டாகின்றது. யஜ்ஞத்தால் மழையுண்டாகின்றது. கர்மத்தால் யஜ்ஞம் ஆகின்றது. 15-சுலோ. பிரம்ம (பிரகிருதி பரிணாமரூபமான சரீரம்) த்தால் கர்மம் உண்டாயிற்று. அந்தச்சரீரம் அக்ஷரம் எனப்படும். ஜீவாத்மாவால் உண்டாயிற்று. ஆகையால் அனைவரிடத்தும் வியாபித்த பிரகிருதிரூபமானசரீரம் எக்காலத்திலும் யஜ்ஞத்தையே ஆதாரமாய் ஆச்ரயித்திருக்கின்றது.

த்வைதம்.

யஜ்ஞம்வரையில் முற்கூறியபடியே கர்மம் பரப்ரம்மத்தாலும், பரப்ரம்மம் அக்ஷரத்தாலும், பிராணிகள் அன்னத்தாலுமாம். எல்லாவற்றிலும் நிறைந்திருக்கும் பரப்ரம்மத்தின் தாத்பர்யம் கர்மத்தில்இருக்கிறதென்று கருத்து.

வேதத்தால் பகவத்ஆராதனம் நடத்தலாலும் அவனுக்கு பிரஜைகளுக்குக் கர்ம த்தால் நன்மையென்பது கருத்து.

அத்வைதம்.

இவ்விடத்தும் யஜ்ஞம்வரையில் முற்கூறியபடியே கர்மம் வேதத்தாலும் வேதம் பரப்ரம்மத்தாலும் என்றும் பரப்ரம்மத்தால் உண்டானவேதத்தில் சகலார்த்தங்களும் உண்டென்றும் பொருள். இவ்வாறுமூன்று மதத்தவரா லும் ஜகச்சக்ரம் நிரூபிக்கப்பட்டது.

𑌏𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌂 𑌚𑌕𑍍𑌰𑌂 𑌨𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑍀𑌹 𑌯𑌃 ।
𑌅𑌘𑌾𑌯𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑌾𑌮𑍋 𑌮𑍋𑌘𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸 𑌜𑍀𑌵𑌤𑌿 ॥ ௧௬

ஏவம் ப்ரவர்திதம் சக்ரம் நாநுவர்தயதீஹ ய:,
அகாயு ரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி. ௧௬

ఏవం ప్రవర్తితం చక్రం నానువర్తయతీహ యః,
అఘాయు రింద్రియారామో మోఘం పార్థ స జీవతి. ౧౬

16- அரு—என்க்ஷேமத்தையே பாராட்டுகிறவனல்லன். லோகக்ஷேமத் திற்காகக் கர்மத்தை செய்யட்டுவேணு?

கிரு—இப்படிப்பட்டவன் இறந்தாலும் நலம். அவன்பாபம் செய்வ தற்கே பிழைத்திருக்கிறான். பசு எவ்வளவு நாட்களிருக்கினும் நலம். தேள் பிழைத்திருத்தலால் என்னபயன்.

𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌰𑌤𑌿𑌰𑍇𑌵 𑌸𑍍𑌯𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌤𑍃𑌪𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌨𑌵𑌃 ।
𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 𑌚 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

ய ஸ்த்வாத்மரதி ரேவ ஸ்யா தாத்மத்ருப்தஸ்ச மாநவ:,
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்ட ஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே. ௧௭

య స్త్వాత్మరతి రేవ స్యా దాత్మతృప్తశ్చ మానవః,
ఆత్మన్యేవ చ సంతుష్ట స్తస్య కార్యం న విద్యతే. ౧౭

17. அரு—அவ்வாறுயின் கர்மத்தைச்செய்கிறேன். சரியாய்ச்செய்ய எனக்கு சாத்யப்படாது.

கிரு—செம்மையாகவே செய்யவேண்டும்.

அரு—ச்யவனுதியர் காலந்தவராமல் சந்தியாவந்தனுதிகள் செய்தனரா?

கிரு—அவர்களின் பெயரைக்கூருதை. நீயும் அவர்களது நிலைக்குவந்தா லன்றோ கர்மத்தைவிடலாம். கர்மஞ்செய்யாதகாலத்திலவர்கள் பகவத்தியா னஞ்செய்து கொண்டிருந்தனர்.

(ஒருவேலைக்காரன் தான்வேலைசெய்யும் இடத்திற்கு 10-மணிக்கு வர வேண்டுமென்று உத்தரவு பெற்றிருந்தும் அவன் யஜமானன்வீட்டிற்கு ஏதோ வேலையாகப்போயிருந்து மத்யானம் (3) மணிக்குத் தன்உத்யோகத்தி ற்கு வந்தானென்று எண்ணிக்கொள்வோம். அவன்அவ்வாறு ஆலஸ்யமாகவ

ரினும் கட்டளையை அவமதித்தவனுகப் பாவிக்கப்படான். அவ்வாறே ருஷ்யாதிகள் எவனைத் தெரிந்துகொள்வதற்காக சாஸ்திரம் ஏற்பட்டதோ அப்படிப்பட்ட பரமாத்மாவை தெரிந்து த்யானிப்பதால் சாஸ்திரத்தை உல்லங்கனஞ் செய்தவர்கள் என்னப்படார். என்றுகருத்து.)

கிரு—கீழ். 16-சுலோகத்தில் தெரிவிக்கப்பட்டதுபோலக் கர்மஞ்செய்யாதவன் வியர்த்த ஜீவியும் பாபியும்ஆகிருன். அப்படிப்பட்டவன் செத்தாலும் நலம்.

அரு—உன் சொற்களால் பயம் உண்டாகிறது. கர்மம்செய்வேனன்றி யுத்தமாத்ரம் செய்யேன்.

கிரு—உனக்கு ச்வதர்மமான யுத்தத்தைச்சரியாய்ச் செய்யவேண்டும்.

அரு—ச்யவனுதியர் தவருமல் நித்யானுஷ்டானங்கள் நடத்தினரா ?

கிரு—நீயும், உன்னையொத்தவரும் வர்ணுச்ரமங்களே அனுசரித்து பகவான் முகோல்லாசத்திற்கென்று எண்ணி கர்மஞ்செய்யவேண்டியதே.

அத்வைதம்.

ச்யவனுதியர் கர்மத்தைவிட்டபோது பரமாத்மாவில்,

த்வைத விசிஷ்டாத்வைதம்.

ஸ்வாத்மஸ்வரூபத்திலும் இஷ்டமுடையவர்களா யிருந்தனர். (அவர்களனைத்திலும் திருப்தியடைந்து சந்தோஷமுள்ளவர்களா யிருந்தனர். சாதாரணமாகசிலர் ஊர் க்ஷேமமாக இருக்கவில்லையென்று எண்ணுதல்உண்டு. காளிதாஸன் தம்மவர், தன்குணங்கள் சரியாகஇருக்கின்றனவா என்று பார்துக் கொள்ளவேண்டுமென்று கூறியிருக்கின்ருன். ஆகையால் போக்குவருத்துக்களாகிய சிந்தைகளைப் பெற்றிருந்தல் வியர்த்தம். 16-அத், 11-சுலோ. அளவில்லாமல் பிரளயபர்யந்தம் இருக்கந்தக்கமனதைத் ஆச்ரயித்தவர்கள் அசுரஸ்வபாவமுள்ளவர்களென்று கூறப்படுவர். ச்யவனுதியர் எவ்வளவும் அப்படிப்பட்ட சிந்தையில்லாமல் ஆத்மத்ருப்தி யடைந்திருந்தனர். 12-அத், 14-சுலோ, இல் நித்யம் திருப்தியுள்ளவனுய் எப்பொழுதும் ஆத்மசந்தானம் செய்பவனுய மனோவிருத்தியைவிட்டு திருடநிச்சயமாய் என்னிடத்தில் மனதையும் புத்தியையும் நிறுத்தி என்னிடத்தில் பக்தியுள்ளவனெவனே அவனேஎனக்குப்பிரியன். பகவத்வாக்யத்தைப் பாராட்டி நடப்பவர்களே ச்யவனுதிகள்.) (யாஜ்ஞவல்க்யன் ஜனகனிடத்தில கௌரவம் பெற்றிருக்கையில் அதைக்கண்டு சிலர் ஆசூயைக்கொண்டவர்களா யிருந்தனர். இதனைப் பரிஹரிக்கஎண்ணி யாஜ்ஞவல்க்யன் தன் சிஷ்யர்களுக்கு ஏதோ ரஹஸ்யத்தைச்சொல்லி அவ்வாறு செய்யுங்களென்று கட்டளையிட்டிருந்தான்.ஜனகனும் அவனைப்போன்ற மற்றவர்களும் வேதாந்தச்ரவணஞ் செய்கையில் அந்தச்சிஷ்யர் தங்கள் குருவின்கட்டளையை அநுசரித்து மிதிலேப் பற்றி யெரிந்துபோகின்றதென்று கூச்சலிட்டனர். அவ்விடமிருந்தவர்கள் அனைவரும் பயப்ராந்தி கொண்டவர்களாய் உபதேசத்தைக் கேளாதவர்களாய்ச் சிதறிப்போயினர். ஜநகன் மனம் சலிக்கவில்லை.யாஜ்ஞவல்க்யன் உபதேசத்தை நிறுத்துகையில் ஜநகன் மிதிலேப் பற்றி

யெரியின் எனக்கென்னநஷ்டம். அதற்கிதுவரையில் எத்தனையரோ பிரபுக்களாயினர். அவர்களில் நான் ஒருவன், என்மனோபுத்திகளுக்கு ஹானிஉண்டாயினன்றோ எனக்குச்சிந்தை யுண்டாகவேண்டும். நிராடங்கமாய் வேதாந்தத்தைப் போதியுங்களென்று கூறி கேட்டிருந்தான்.) ஆகையால் ஆத்மாவில் ஆசக்தியுடையவராய் அதில் திருப்தியடைந்து அதிலேயேசுகிக்கிறவர்கள் கர்மத்தைச் செய்யவேண்டியதில்லை. ஆகையால் அவர்களின் பெயரைக்கூறுதே.

𑌨𑍈𑌵 𑌤𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍇𑌨𑌾𑌰𑍍𑌥𑍋 𑌨𑌾𑌕𑍃𑌤𑍇𑌨𑍇𑌹 𑌕𑌶𑍍𑌚𑌨 ।
𑌨𑌚𑌾𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌕𑌶𑍍𑌚𑌿 𑌦𑌰𑍍𑌥𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ॥ ௧௮

நைவ தஸ்ய க்ருதேநார்த்தோ நாக்ருதேநேஹ கஶ்சந,
நசாஸ்ய ஸர்வபூதேஷு கஶ்சி தர்த்தவ்யபாஶ்ரய:. ௧௮

నైవ తస్య కృతేనార్థో నాకృతేనేహ కశ్చన,
నచాస్య సర్వభూతేషు కశ్చి దర్థవ్యపాశ్రయః. ౧౮

18. அரு—அப்படியானால் அவர்களுக்குச் செய்யவேண்டியகார்யம் ஒன்றுமின்று.

விசிஷ்டாத்வைதம்.

கிரு—ஆத்மஞானம் ஸ்வத: உண்டாயிருத்தலால் அவர்களுக்கிந்த கிரியைகளில் எந்தப்பிரயோஜனமுமிராது.

அத்வைதம்.

பிரம்மாமுதல் ஸ்தம்பபர்யந்தம் பூதங்களால் வேலைஇல்லாமையால் அவர்களுக்குக் கர்மத்திலாவச்யமிராது.

த்வைதம்.

ப்ருதிவ்யாதி பூதங்களால் இவைகளுக்கு ஆகவேண்டியவை யின்மையால் கர்மம் அக்கரையில்லை. காலம்வரின் பிரகிருதி நீங்குமென்று எண்ணி பகவன் முகவுல்லாசம் உண்டாகவேண்டுமென்று எண்ணி யிருப்பர்.

𑌤𑌸𑍍𑌮𑌾 𑌦𑌸𑌕𑍍𑌤 𑌸𑍍𑌸𑌤𑌤𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌾𑌚𑌰 ।
𑌅𑌸𑌕𑍍𑌤𑍋 𑌹𑍍𑌯𑌾𑌚𑌰𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮 𑌪𑌰𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 ॥

தஸ்மா தஸக்த ஸ்ஸததம் கார்யம் கர்ம ஸமாசர,
அஸக்தோ ஹ்யாசரந் கர்ம பரமாப்நோதி பூருஷ:. ௧௯

తస్మా దసక్త స్సతతం కార్యం కర్మ సమాచర,
అసక్తో హ్యాచరన్ కర్మ పరమాప్నోతి పూరుషః. ౧౯

19. அரு—அவ்வாறாயின் என்னை யென்ன செய்யச்சொல்லுகிறாய்.

கிரு—ஸ்வதர்மம்செய்.

அரு—அதுமாத்ரம் முடியாது.

கிரு—பலத்தையெண்ணாமல் உன்ஜாதிகர்மம் செய்யவேண்டியதே.

அரு—ஐயோ, கடைசியாய் கர்மம் செய்யவேண்டுமென்றே ஏற்படுகிறது, செய்கிறேன்.

கிரு—அவ்வாறு வெறுப்பாய் செய்யாதே பக்தியுடன்செய்.

துர்பலமான மனுஷ்யஜன்மமெடுத்ததினால் பலத்தையெண்ணாமல் மேற்சொன்னபடி செய்யின் பிரம்மபிராப்தி யுண்டாகும்.

𑌕𑌰𑍍𑌮𑌣𑍈𑌵 𑌹𑌿 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌜𑌨𑌕𑌾𑌦𑌯𑌃 ।
𑌲𑍋𑌕𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑌮𑍇𑌵𑌾𑌪𑌿 𑌸𑌂𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌕𑌰𑍍𑌤𑍍𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

கர்மணைவ ஹி ஸம்ஸித்தி மாஸ்திதா ஜநகாதய:,
லோகஸங்க்ரஹ மேவாபி ஸம்பஶ்யந் கர்த்து மர்ஹஸி. ௨௰

కర్మణైవ హి సంసిద్ధి మాస్థితా జనకాదయః,
లోకసఙ్గ్రహ మేవాపి సంపశ్యన్ కర్తు మర్హసి. ౨౦

20. கிரு—3-அத். முதல் நமக்கு விவாதமாகவே யிருக்கிறது. இஷ்டமிருந்தால் செய். அல்லாவிடின் விட்டுவிடு.

அரு—எங்களவர் எவருனாலும் கர்மம் செய்தார்களா?

கிரு—ஜநகன், அம்பரீஷன், பகீரதன், பிரியவிருதன், அச்வபதி முதலியவர்கள் கர்மம் செய்தார்கள்.

(மதுசூதனஸரஸ்வதி அபிப்ராயம்—அருச்சுநன் 1-அத். 43-சுலோ. இல் ஜாதிதர்மங்கள், குலதர்மங்கள் கெடுமென்று இரண்டாகப்பிரித்து கூறியிருக்கின்றான். ஆகையால் எங்கள் சாதியாராகும் ஜநகாதியர் செய்தார்களேயன்றி எம்குலத்தவர் செய்யவில்லையென்று அபிப்ராயப்படும் ஆகையால் ஜநகாதய: என்பதற்கு ஜநகயுதிஷ்டிர பிரப்ருதிகள் என்று கருத்து என்றனர்.) 1-அத். 46-சுலோ-இல். உன்தமயனும் அநந்தவிஜயமென்னும் சங்கத்தை யூதி யுத்த சந்நத்தனா யிருத்தலால் அந்த வேதாந்தம் அவனுக்குத்தெரியாதா. உன்தமயன் செய்தலினால் உன்குலத்தவர் செய்ததாகத் தெரிகின்றது.

அரு—கர்மத்தை ஏன் செய்யவேண்டும்.

கிரு—ஞானத்தின் பொருட்டு.

அரு—அது எனக்கு உள்ளதே.

கிரு—நீஞானியாய்விட்டனை, லோகஸங்கிரஹார்த்தம்செய். (தான் நல்லவழியில் நடந்து மற்றவர்களையும் நல்லவழியில் திருப்புதலே லோகசங்கிரஹம் எனப்படும்.)

𑌯𑌦𑍍𑌯𑌦𑌾𑌚𑌰𑌤𑌿 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑌦𑍇𑌵𑍇𑌤𑌰𑍋 𑌜𑌨𑌃 ।
𑌸 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌲𑍋𑌕𑌸𑍍𑌤𑌦𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥ ௨௧

ய த்யதாசரதி ஶ்ரேஷ்ட ஸ்தத்த தேவேதரோ ஜந:,
ஸ யத்ப்ரமாணம் குருதே லோக ஸ்தத நுவர்த்ததே. ௨௧

య ద్యదాచరతి శ్రేష్ఠ స్తత్త దేవేతరో జనః,
స యత్ప్రమాణం కురుతే లోక స్తదనువర్తతే. ౨౧

21. அரு—நான் கர்மஞ்செய்யின் உலகத்தவரும் என்னை அநுசரிப்பார்களா?

கிரு—பெரியவன்செய்கிறதை மற்றவரும் செய்வார்கள். நீ ஞானி ஆசையால் இந்தக்கார்யத்தைச் செய்து லோகோபகாரம் செய்.

அரு—பெரியவர்கள் செய்யும் துஷ்டகாரியங்களைக் கூட அநுசரிக்க வேண்டுமோ?

கிரு—அவர்கள் பிரமாணங்களை யநுசரித்துச்செய்யும் கர்மங்களை மாத்ரம் அநுசரிக்கவேண்டும்.

𑌨 𑌮𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨 ।
𑌨𑌾𑌨𑌵𑌾𑌪𑍍𑌤𑌮𑌵𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌵𑌰𑍍𑌤 𑌏𑌵 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 ॥ ௨௨

நமே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந,
நாநவாப்த மவாப்தவ்யம் வர்த்த ஏவச கர்மணி. ௨௨

నమే పార్థాస్తి కర్తవ్యం త్రిషు లోకేషు కించన,
నానవాప్త మవాప్తవ్యం వర్త ఏవచ కర్మణి. ౨౨

22. அரு—லோகத்திற்காக எவனேனும் கர்மஞ்செய்வானு?

கிரு—அவாப்த சமஸ்த காமனுகும் நான் செய்கிறேன். (நாரதன் ஒருநாள் சுவாமிதர்சனுர்த்தம் வருகையில் அப்போது கிருஷ்ணன் பூஜை செய்து கொண்டிருந்தான். பின்பு நாரதன் லோகத்தவர்களால் பூசிக்கப்பட்ட நீ யாரைப் பூசிக்கின்றுய் என்று ஹரியைக்கேட்கையில் பாகவதபாத தூளியை யென்று ஸ்வாமி கூறினர். இவ்வாறே சத்கர்மத்தை லோகசங்கிரஹத்திற்காக ஸ்வாமி செய்துகொண்டிருந்தார்.) எனக்கு ஒன்றும் குறைவில்லாதிருக்கினும் நான் கர்மஞ் செய்துகொண்டே யிருக்கின்றேன்.

அரு—நானும், 1-அத். 32-சுலோ. இல் இராஜ்யாதி சுகங்கள் வேண்டாமென்று கூறினேனன்றே.

கிரு—எனக்குத் திரிலோகங்களிலும் எதுவும் அக்கரையில்லை. உனக்கு மோக்ஷம் வேண்டாமா? ஆதலால் நீயெனக்குச்சரியென்று எண்ணுதே.

𑌯𑌦𑌿 𑌹𑍍𑌯𑌹𑌂 𑌨 𑌵𑌰𑍍𑌤𑍇𑌯𑌂 𑌜𑌾𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌤𑌃 ।
𑌮𑌮 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ॥ ௨௩

யதி ஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாதுகர்மண்யதந்த்ரித:,
மம வர்த்மாநு வர்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வஶ:. ௨௩

యది హ్యహం న వర్తేయం జాతుకర్మణ్యతన్ద్రితః,
మమ వర్త్మానువర్తన్తే మనుష్యాః పార్థ సర్వశః. ౨౩

23. அரு—உன்னை யார் கர்மஞ்செய்யக்கூறினர்? நானும் செய்யேன். நீயும் செய்யாதிரு.

கிரு—நான் பெருங்கார்யங்கள் செய்தவனுதலாலும், பெருந்தன்மை யுள்ளார்க்கு மானுதலாலும், நான் கர்மஞ்செய்யாதிருப்பின் பிரஜைகள் என் வழியை அநுசரிப்பர்.

𑌉𑌤𑍍𑌸𑍀𑌦𑍇𑌯𑍁𑌰𑌿𑌮𑍇 𑌲𑍋𑌕𑌾 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌚𑍇𑌦𑌹𑌮𑍍 ।
𑌸𑌙𑍍𑌕𑌰𑌸𑍍𑌯 𑌚 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸𑍍𑌯𑌾𑌮𑍁𑌪𑌹𑌨𑍍𑌯𑌾𑌮𑌿𑌮𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 ॥

உத்ஸீதேயு ரிமே லோகா ந குர்யாம் கர்மசே தஹம்,
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யா முபஹந்யா மிமா: ப்ராஜா:. ௨௪

ఉత్సీదేయు రిమే లోకా న కుర్యాం కర్మచే దహమ్,
సఙ్కరస్య చ కర్తా స్యా ముపహన్యా మిమాః ప్రజాః. ౨౪

24. கிரு—நான் கர்மஞ்செய்து காட்டாதிருக்கின் கர்மமார்க்கம் அறியாமல் ஜனங்கள் கெடுவார்கள் சங்கரமுண்டாகும் ஆதலால் ஜனங்களைக்கெடுத்தவன் ஆவேன். ஆகையால் வர்ணாச்ரமத்திற்குத் தக்கபடி கர்மங்களைச்செய்யவேண்டும்.

𑌸𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍋 𑌯𑌥𑌾 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑌕𑍍𑌤𑌶𑍍𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑍁𑌰𑍍𑌲𑍋𑌕𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑌮𑍍 ॥

ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத,
குர்யா த்வித்வாம் ஸ்ததாஸக்த ஶ்சிகீர்ஷு ர்லோகஸங்க்ரஹம். ௨௫

సక్తాః కర్మణ్యవిద్వాంసో యథా కుర్వన్తి భారత,
కుర్యా ద్విద్వాం స్తథాసక్త శ్చికీర్షు ర్లోకసఙ్గ్రహమ్. ౨౫

25. அரு—நான் கர்மஞ்செய்யின் அஞ்ஞானிக்கும் எனக்கும் பேதமில்லாமற் போமே.

கிரு—அவ்வாறன்று. ஞானி பலாபேக்ஷையில்லாமல் கர்மஞ்செய்வான் அஞ்ஞானி பலத்தை யெண்ணிச்செய்வன். இதேபேதம்.

அரு—கர்மம் விட்டாலல்லவா கௌரவம் உண்டாம்.

கிரு—வெளிகௌரவத்தால் உனக்குக்கார்யமில்லை. மலத்தைக்கொடுக்கிறவனாதலினால் உட்கருத்தை நானறிந்து கொள்வேன் அதுபோதும்.

அரு—அவ்வாறாயின் கர்மஞ்செய்யவேண்டியது தானா?

கிரு—செய்யவேண்டும்.

𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌭𑍇𑌦𑌂 𑌜𑌨𑌯𑍇𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌜𑍋𑌷𑌯𑍇𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌮𑌾𑌚𑌰𑌨𑍍 ॥ ௨௬

ந புத்திபேதம் ஜநயே தஜ்ஞானாம் கர்மஸங்கினாம்,
ஜோஷயே த்ஸர்வ கர்மாணி வித்வாந் யுக்த ஸ்ஸமாசரந். ௨௬

న బుద్ధిభేదం జనయే దజ్ఞానాం కర్మసఙ్గినామ్,
జోషయే త్సర్వకర్మాణి విద్వాన్ యుక్త స్సమాచరన్. ౨౬

26. கிரு—நீ கர்மம் கூடாதென்றால் அவர்களும் விட்டுவிடுவர். ஆகையால் அவர்க்கு புத்திபேதம் உண்டாக்கக்கூடாது. கர்மத்தை நீவிட்டாலும் கூடா

தென்று அவருக்குப்போதித்தாலும் அவர்கள் விட்டுவிடுவார்கள். ஆகையால் மனத்தால் பகவானை யெண்ணி செம்மையாய்க் கர்மத்தைச்செய்து அவர்களால் செய்விக்கப்படவேண்டும்.

மதுசூதனசரஸ்வதி அபிப்ராயம்.

உபாத்யாயன் எம், ஏ, ஆய் இருப்பினும் பிள்ளைகளுக்குப் போதிக்கையில் எளிதானசொற்களால் போதிக்கவேண்டும். தனக்குச்சமானமானவன் வந்தபோது தன்பிரதாபத்தைத் தெரிவித்து அத்வைதரஹஸ்யத்தைத் தெரிவிக்கலாம். அவ்வாறே ஞானி கர்மயோகிகளுக்குப் புத்தி பேதம் கற்பிக்கக்கூடாது. அஞ்ஞானிக்கு அத்வைதமர்மத்தைத் தெரிவிக்கக்கூடாது. அப்போது அவன் கர்மப்ரஷ்டன் ஆவன்.

ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வஶ:
அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே ॥　　உ௭

ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வஶ:,
அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே.　　உ௭

ప్రకృతేః క్రియమాణాని గుణైః కర్మాణి సర్వశః,
అహఙ్కారవిమూఢాత్మా కర్తాహమితి మన్యతే.　　౨౭

27. கிரு—அஞ்ஞானி அஹம் மம என்று சொல்லிக்கொண்டு கார்யங்களைச் செய்வன்.

அரு—அஞ்ஞானி அவ்வாறு நினைப்பதற்குக்காரணம் என்ன? (இந்தச்சுலோகத்தில் பதங்களை மாற்றுவதால் நானார்த்தங்கள் ஏற்படுகிறது.

கிரு—27-சுலோகம், பூர்வார்த்தம், பிரக்ருதே: க்ரியமாணானிகுணை: கர்மாணிஸர்வஶ:,

பிரகிருதே: குணை: = பகவானுடைய இச்சாதிகளாலும்,

பிரகிருதே: கர்மாணி = ஜீவனுடைய அதிர்ஷ்டத்தினாலும்,

பிரகிருதே: குண: = பிரகிருதி குணங்களாலும்,

பிரகிருதே: கிரியமாணானி = பிரகிருதிகாரியங்களாகும் இந்திரியங்களாலும், அஹம், மம, என்று எண்ணுவதற்குக் காரணமாகின்றது.

18-அத், 14-சுலோ. இல், அதிஷ்டானமும், கர்த்தாவும், வெவ்வேறுகாரணங்கள், நாநாவிதங்களான வெவ்வேறுசேஷ்டைகள் ஐந்தாவதுதெய்வம் இத்தனைசேர்ந்து ஒருகார்யம் நடக்கின்றதென்று கூறப்படும். அஞ்ஞானிக்கிந்த விஷயம் போதப்படாது. பலரா லிழுக்கப்பட்டரதத்தை ஒருவன் தொட்ட மாத்திரத்திலே நான் இழுத்துவிட்டேன் என்று சொல்லிக்கொண்டால் அவன் பயித்தியம்கொண்டவனே யன்றோ.

தத்வவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோ: ।
குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥

தத்வ வித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோ:,
குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே.　　உ௮

తత్త్వవిత్తు మహాబాహో గుణకర్మవిభాగయోః,
గుణా గుణేషు వర్తన్త ఇతి మత్వా న సజ్జతే. ౨౮

28. அரு—ஞானி யவ்வாறு நினையான்?

விசிஷ்டாத்வைதம்.

திரு—ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களுடையவும், அதனதனுக்குத் தக்க கர்மங்களுடையவும், விபாகங்களிலுள்ள தத்வங்களை அறிந்தவன் அந்த ஸத்வாதிகுணங்கள் தத்தம் கார்யங்களிலிருக்கின்றனவென்று எண்ணுதலால் அஹங்கரிக்கான்.

அத்வைதம்.

இந்திரியங்கள் விஷயங்களில் பிரவர்த்திக்கின்றனவென்று ஆத்மா அவ்வாறு பிரவர்த்திக்காதென்று எண்ணி அஹங்கரிக்கான்.

த்வைதம்.

கர்மபேத, குணபேதங்களின் தத்வத்தை அறிந்தவன் இந்திரியங்கள் குணங்களி லிருக்கின்றனவென்று எண்ணி அஹங்கரித்தான்.

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇 𑌗𑍁𑌣𑌸𑌂𑌮𑍂𑌢𑌾𑌃 𑌸𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑍇 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 ।
𑌤𑌾𑌨𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌦𑍋 𑌮𑌨𑍍𑌦𑌾𑌨𑍍 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌨𑍍𑌨 𑌵𑌿𑌚𑌾𑌲𑌯𑍇𑌤𑍍 ॥ ௨௯

ப்ரக்ருதே ர்குணஸம்மூடா ஸ்ஸஜ்ஜந்தே குணகர்மஸு,
தா நக்ருத்ஸ்நவிதோ மந்தாந் க்ருத்ஸ்ந விந்நவிசாலயேத். ௨௯

ప్రకృతే ర్గుణసమ్మూఢా స్సజ్జన్తే గుణకర్మసు,
తా నకృత్స్నవిదో మన్దాన్ కృత్స్నవిన్న విచాలయేత్.

29. திரு—நீ ஞானியாயிருக்கினும் அஞ்ஞானிகளுக்கும் பேதபுத்தியை உண்டாக்கக்கூடாது. ஆத்மஸ்வரூபத்தை முழுமையும் அறியாதவர்கள். பிரகிருதிசம்பந்தத்தால் (பிரகிருதியின் குணங்களால்) பிரமையடைந்து சுத்தாத்மஸ்வரூப ஞான மில்லாதவர்களாயிருக்கின்றனர். ஆகையால் கர்மங்களிலேயே அதிகாரிகளாகின்றனர். (ஆகையால் பிரகிருதியைவிட்ட ஆத்மஸ்வரூபஞானத்திற்கு அதிகாரிகள் ஆகார்.) அவ்வகை பூரணத்தையறியாத மந்தபுத்தியுடையாரைப் பூர்ணமாயறிந்தவன் தன் ஞானயோகஸ்திதியால் சலிக்கச்செய்லாகாது.

𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌚𑍇𑌤𑌸𑌾 ।
𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌵𑌿𑌗𑌤𑌜𑍍𑌵𑌰𑌃 ॥ ௩௦

மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்யாத்மசேதஸா,
நிராசீ ர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர.: ௩௦

మయి సర్వాణి కర్మాణి సన్న్యస్యాధ్యాత్మచేతసా,
నిరాశీ ర్నిర్మమో భూత్వా యుధ్యస్వ విగతజ్వరః. ౩౦

30. அரு—அவ்வாறுயின் செய்கிறேன். எவ்வாறு செய்யவேண்டுமோ தெரியாதே.

கிரு—கர்மம் செய்.

அரு—எந்தக்கர்மம்.?

கிரு—யுத்தம்.

அரு—அந்தக்கார்யம் செய்யவேண்டும் எனின் துக்கம்உண்டாகின்றதே.

கிரு—ஆத்மஞான யுக்தமான மனதுடன் (ஸர்வேச்வரனுன) என்னிடம் கர்மம் முழுதும் அர்ப்பணஞ்செய்து (பகவானே கர்த்தா, செய்விக்கிறவன் என்று எண்ணி) பலத்தையெண்ணுமல் கர்மங்களில் மமதையைவிட்டு யுத்தம் செய்.

அரு—பீஷ்மனை யெவ்வாறுகொல்வேன் என்று துக்கம் உண்டாகின்றது.

கிரு—அவ்வாறு துக்கப்படாதே.

𑌯𑍇 𑌮𑍇 𑌮𑌤𑌮𑌿𑌦𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌾𑌃 |

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌨𑍍𑌤𑍋𑌽𑌨𑌸𑍂𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍇𑌽𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃 ||

யே மே மத மிதம் நித்ய மநுதிஷ்டந்தி மாநவா:,

ஶ்ரத்தாவந்தோநஸூயந்தோ முச்யந்தே தேபி கர்மபி:. ௩௧

యే మే మత మిదం నిత్య మనుతిష్ఠన్తి మానవాః,

శ్రద్ధావన్తోఽనసూయంతో ముచ్యన్తే తేఽపి కర్మభిః. ౩౧

31. அரு—நீ சொன்னபடி நடக்கின் என்னஆகும்.?

கிரு—என்னுடைய பிரீதியை நினைத்து சிரத்தையுடன் அசூயை யில்லாமல்செய்தால் கர்மங்களால் விடப்பட்டவராவர்.

விசிஷ்டாத்வைதம்.

இந்த-31-சுலோ-இல், தே, அபி என்பதால் மேற்கூறிய அவ்வளவுசெம்மையாய் கர்மம் செய்தவர்களின் விஷயமன்றெனவும், இங்கு மூன்று வகுப்பினரைக்குறித்து அன்வயமாகுமென்றும் பொருள். என் அபிப்ராயத்தைக் கேட்டு அவ்வாறே செய்பவர்களுக்கும் செய்யாவிடினும் சிரத்தைகொண்டிருப்பவருக்கும்,சிரத்தை யில்லாவிடினும் தூஷிக்காமலிருப்பவருக்கும் மோக்ஷம் உண்டாம் என்று கருத்து.

𑌯𑍇 𑌤𑍍𑌵𑍇𑌤𑌦𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌨𑍍𑌤𑍋 𑌨𑌾𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌮𑍍 |

𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌂𑌸𑍍𑌤𑌾𑌨𑍍 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌨𑌷𑍍𑌟𑌾𑌨𑌚𑍇𑌤𑌸𑌃 ||

யே த்வேத தப்யஸூயந்தோ நாநுதிஷ்டந்தி மே மதம்,

ஸர்வஜ்ஞாநவிமூடாம் ஸ்தாந் வித்தி நஷ்டா நசேதஸ:. ௩௨

యే త్వేత దభ్యసూయన్తో నానుతిష్ఠన్తి మే మతమ్,

సర్వజ్ఞానవిమూఢాం స్తాన్ విద్ధి నష్టా నచేతసః. ౩౨

32. நீ சொன்னபடி நடவாவிடின் என்னவாகும்?

கிரு—சிரத்தை யில்லாமல், அசூயைகொண்டு கர்மத்தை ஆசரிக்காதவர்கள் பாழாவார். அவர்களுக்குச் சகலசாஸ்திரங்களாலும் பிரயோஜனமில்லை. (ஆத்மாவிற்கு நாசம் இல்லாமையால் கும்பிபாகாதி நரகங்களை அநுபவிப்பனென்று கருத்து.)

𑌸𑌦𑍃𑌶𑌂 𑌚𑍇𑌷𑍍𑌟𑌤𑍇 𑌸𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑌪𑌿 ।
𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 𑌕𑌿𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ॥ ௩௩
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑍇 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 ।
𑌤𑌯𑍋𑌰𑍍𑌨 𑌵𑌶𑌮𑌾𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍𑌤𑍌 𑌹𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌪𑌨𑍍𑌥𑌿𑌨𑍌 ॥

ஸத்ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்ஜ்ஞாநவாநபி,
ப்ரக்ருதிம்யாந்திபூதாநி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி. ௩௩
இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ,
தயோர்நவஶமாகச்சேத்தௌஹ்யஸ்ய பரிபந்திநௌ. ௩௪

సదృశం చేష్టతే స్వస్యాః ప్రకృతే ర్జ్ఞానవా నపి,
ప్రకృతిం యాన్తి భూతాని నిగ్రహః కిం కరిష్యతి. 33
ఇన్ద్రియ స్యేన్ద్రియస్యార్థే రాగద్వేషౌ వ్యవస్థితౌ,
తయో ర్నవశ మాగచ్ఛే త్తౌహ్యస్య పరిపన్థినౌ. 34

33, 34. அரு—ஞானியும் சரியானவழியை விட்டு நடந்து கொண்டேயிருக்கிறன்.

கிரு—ஞானியால் மாத்ரம் என்ன? அவர்களின் பிரகிருதிக்குத்தக்கபடியே நடப்பன். சாஸ்திரத்தால் ஞானம் உண்டாயினும் பிரம்மாமுதல் ஸ்தம்ப பர்யந்தம் உள்ளவர்கள் பூர்வ பூர்வ வாசனைகளை அநுசரித்தே கார்யங்களைச செய்வர். சாஸ்திரம் என்ன செய்யும்?

அரு—இனி கீதை கேட்டது போதும்.

கிரு—ஏன்?

அரு—கீதைகேட்கின் ஞானம் உண்டாம்என்று எண்ணினேன். வாசனுபலம் என்றாய் ஆகையால் அதற்குத்தகுந்தபடி சர்வகார்யங்களும் நடக்கும். இனி கீதாச்ரவணத்தால் என்ன பிரயோசனம்.

கிரு—அவ்வாறன்று. சாஸ்திரத்தைத் தெரிவிப்பவன் இருக்க வேண்டியது. பிரகிருதி ராகத்வேஷங்களென்னும் இரண்டு சக்ரங்களைப் பெற்றிருக்கிறது. இவைகளே மனுஷ்யர்களை நடத்துகின்றன.

ராகம் (கெட்டகார்யங்களில் ஆசை) த்வேஷம் (நல்லகாரியங்களிடத்தில் கூடாதென்று கருத்து) இவ்வகை மனோபாவங்கள் ராகத்வேஷாதிகளால் உண்டாகின்றன. சருக்கரைப்பொங்கலில் விஷமிருக்கினும் அதையறியாதவன் அதை தின்பதற்கு ஆசைப்படுவன். அதில் விஷம் கலக்கப்பட்ட தென்று

அறிந்தவன் சொன்னபோதே அதிலுள்ள ஆசையைவிடுவன். இவ்வகைப்பட்டதே சாஸ்திரப்ரயோசனம் ஆகையால் சாஸ்திரம் அதைப்போதிக்க ஆசாரியனிருக்கவேண்டியது. அதினால் விவேகம் உண்டாகும். அவுஷதத்தில் த்வேஷம் உண்டாயிருக்கும் ரோகிக்கு அவனுக்கு நண்பன் அந்தமருந்து சஞ்சீவியென்றுபோதித்த பொழுது அவனுக்கு அதினிடமிருந்த த்வேஷம் விட்டுப்போம். தோஷங்கள் தெரியாதலினாலேயே ராகங்கள் உண்டாம். இதனை ஆசாரியன் தெரிவித்தபோது அதனிடமுள்ள ராகம்விடும். அப்போது பிரகிருதிபலம் குறையும். 2-அத். 64-சுலோ. ப்போல், மனம் சுத்தப்படவேண்டும். ராகத்வேஷங்களுக்குட்படக்கூடாது.

அரு—என் ராகத்வேஷங்களுக்குச் சுவாதீனமாகக்கூடாது.

கிரு—அவை சத்ருக்கள்.

𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍋 𑌵𑌿𑌗𑍁𑌣𑌃 𑌪𑌰𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌤𑍍 ।
𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌿𑌧𑌨𑌂 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑌰𑌧𑌰𑍍𑌮𑍋 𑌭𑌯𑌾𑌵𑌹𑌃 ॥ ௩௫

ஶ்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வநுஷ்டிதாத்,
ஸ்வதர்மே நிதனம் ஶ்ரேய: பரதர்மோ பயாவஹ:. ௩௫

శ్రేయాన్ స్వధర్మో విగుణః పరధర్మాత్స్వనుష్ఠితాత్,
స్వధర్మే నిధనం శ్రేయః పరధర్మో భయావహః. ౩౫

35. அரு—உன் உபதேசத்தைக்கேட்டு யுத்தஞ்செய்ய எண்ணி தலையெடுத்துப்பார்க்கையில் பாட்டனாகும் பீஷ்மன் கண்ணிற்பட்டவுடன் துக்கம் உண்டாகின்றது.

த்வைதாத்வைதம்.

கிரு—கார்யம் சரிப்படினும் ஆகாவிடினும் ஸ்வதர்மம் நல்லது. பரதர்மம் செம்மையாய்ச்செய்யினும் தீது.

விசிஷ்டாத்வைதம்.

நமக்கு ஸ்வந்தமாகும் கர்மம் உயர்ந்தது. பரதர்மமாகும் ஞானம் அபாயகரம்.

அரு—அதுவும் தர்ம சாஸ்திரமேயன்றோ எவ்வாறு தவறாகும்.

கிரு—மேலதிகாரியின் உத்தரவு இல்லாமல் ஒருவன் ஒரு வேலையைச் செம்மையாய்ச்செய்யினும் அது தவறேயாகும். மேலதிகாரிசெய்த வேலையைக் கொஞ்சங்குறையச்செய்யினும் செய்தவரையில் மேம்பாட்டையடைவான். ஆகையால், ஸ்வதர்மமாதும் கர்மம் ஸ்வல்பமாய் ஆசரிக்கப்பட்டதாயினும் மேன்மையே. ஞானவழியாய் மோக்ஷத்தைச்சம்பாதித்தலில் அபாயம் அதிகமாக இருக்கும்.

அரு—ஸ்வதர்மம் செய்வேணுயினும் அஹங்காரமமகாரங்களையும் பலத்தையும் விட்டுச்செய்தல் கஷ்டமாக இருக்கிறது.

கிரு—அது எதனால்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

𑌅𑌥 𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌚𑌰𑌤𑌿 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 ।
𑌅𑌨𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌪𑌿 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌬𑌲𑌾𑌦𑌿𑌵 𑌨𑌿𑌯𑍋𑌜𑌿𑌤𑌃 ॥ ௩௬

அதகேநப்ரயுக்தோயம் பாபம் சரதி பூருஷ:,
அநிச்சந்நபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித:. ௩௬

అథ కేన ప్రయుక్తోఽయం పాపం చరతి పూరుషః,
అనిచ్ఛన్నపి వార్ష్ణేయ బలాదివ నియోజితః. ౩౬

அருச்சுநன் கூறுதல்.

36. அரு—ஆசை அதிகமாக இருக்கிறது. ஆசையில்லாவிடினும் பலவந்தனெவனே நிர்ப்பந்தித்து கார்யத்தைச்செய்விக்கிறான்போல் இருக்கிறது. அவ்வாறு செய்கிறவன் எவன்?

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

𑌕𑌾𑌮 𑌏𑌷 𑌕𑍍𑌰𑍋𑌧 𑌏𑌷 𑌰𑌜𑍋𑌗𑍁𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 ।
𑌮𑌹𑌾𑌶𑌨𑍋 𑌮𑌹𑌾𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌨𑌮𑌿𑌹 𑌵𑍈𑌰𑌿𑌣𑌮𑍍 ॥

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ:,
மஹாஶநோ மஹாபாப்மா வித்யேநமிஹ வைரிணம். ௩௭

కామ ఏష క్రోధ ఏష రజోగుణసముద్భవః,
మహాశనో మహాపాప్మా విద్ధ్యేనమిహ వైరిణమ్. ౩౭

ஸ்ரீபகவான் கூறுதல்.

37. கிரு—அவனைத்தெரிவிக்கிறேன். அவனைக்கொல்லுகிறாயா?

அரு—அவனிருக்கும் இடம் அறிந்தால் அப்படியேசெய்கிறேன்.

கிரு—அவனேகாமன். (ஆசை)

அரு—அவனால் என்ன தீங்கு?

கிரு—கார்யம் பலியாதிருப்பின் காமம் குரோதமாகும்.

அரு—அவனுக்குவேண்டியதைக் கொடுத்து திருப்திசெய்து அனுப்பலாகாதா.

கிரு—அவன்பேராசையுள்ளவன். அக்கினிக்கு ஆஹாரமும் காமத்திற்கு விஷயங்கள்தர எவர்க்கும் முடியாது. இந்தக்காமத்தை விவேகத்தால் கொள்ள வேண்டும். ஒரு பொருள் அதிகமாக வேண்டியதானால் பாபம் செய்யாமலது லபிக்காது. ஆகையாற்றான் இந்த ஆசைக்கு மஹாசனன் மஹாபாபிஎன்று பேரிடப்பட்டது.

𑌧𑍂𑌮𑍇𑌨𑌾𑌵𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌹𑍍𑌨𑌿𑌰𑍍𑌯𑌥𑌾𑌦𑌰𑍍𑌶𑍋 𑌮𑌲𑍇𑌨 𑌚 ।
𑌯𑌥𑍋𑌲𑍍𑌬𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑍋 𑌗𑌰𑍍𑌭𑌸𑍍𑌤𑌥𑌾 𑌤𑍇𑌨𑍇𑌦𑌮𑌾𑌵𑍃𑌤𑌮𑍍 ॥

தூமேனாவ்ரியதே வஹ்நிர் யதாதர்ஸோமலேநச,
யதோல்பேனாவ்ருதோகர்ப்ப ஸ்ததா தேநேதமாவ்ருதம். ௩௮

ధూమేనావ్రియతే వహ్ని ర్యథాzzదర్శో మలేనచ,
యథోల్బేనావృతో గర్భ స్తథా తే నేద మావృతమ్. ౩౮

38. அரு—அது பிராணிகளை யெவ்வாறு கெடுக்கும்.?

த்வைதம்.

கிரு—இதனால் ஈச்வரன், ஜீவாத்மா, மனஸ், மூடப்படுவார்கள். புகை நெருப்பையும், புழுதி கண்ணாடியையும் மாயை கர்ப்பத்திலிருக்கும் சிசுவையும் ஆவரித்துக்கொண்டிருப்பதுபோல ஆசை பிராணிகோடிகளை யாவரித்துக் கொண்டிருக்கும். இந்த (3) உதாரணங்களால் ஆசையின் (3) சிறிய பெரிய அவஸ்தைகள் தெரிவிக்கப்பட்டன.

விசிஷ்டாத்வைதம்.

நெருப்புப் புகையுடன் பிறப்பதுபோல ஆசை பிறப்புடன் பிராணிகளுக் குண்டாம். கண்ணாடியைத் துடைத்துக்கொண்டிருப்பினும் மேலும்மேலும் தூளியுண்டாய்க்கொண்டிருக்கும். குழந்தை தன்னைச் சூழ்ந்திருக்கிற மாயை நீக்கிக்கொள்ள தெரிந்துகொள்ளாததுபோல பிராணிகள் ஊர்ச்சிதப்பட்ட மாயையைப் போக்கிக்கொள்ளமாட்டார்.

ஆவ்ருதம் ஜ்ஞாநமேதேந ஜ்ஞாநிநோ நித்யவைரிணா,
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணாநலேநச. ௩௯

ஆவ்ருதம் ஜ்ஞாந மேதேந ஜ்ஞாநிநோ நித்யவைரிணா,
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணாநலேநச. ௩௯

ఆవృతం జ్ఞాన మేతేన జ్ఞానినో నిత్యవైరిణా,
కామరూపేణ కౌన్తేయ దుష్పూరేణానలేనచ. ౩౯

39. அரு—அபண்டிதர்களையல்லவா ஆசை அதிகம் பீடிக்கும். எனக்கென்னபயம்.

கிரு—காமம்எனும் இந்தப் பெரியபகைவன் பரோக்ஷஞானத்தைச் சம்பூர்ணமாய் த்வம்சம்செய்வன். நெருப்பைப்போல் நாசஞ்செய்யும்.

அரு—விவேகத்தையே குறைக்குமா?

கிரு—இந்தச்சுலோகத்தில் "கௌந்தேய" என்பதால் விவேகம் கொஞ்சம் குறைந்தேயல்லவா தூர்வாசரின் வார்த்தையடைந்த குந்திக்கு நீபிறந்தாய். ஆசை (காமம்) யின்வேகம் உன்தாயைக்கேட்டால் தெரியும்என்பது கருத்து.

அத்வைதபாஷ்யம்.

இந்தக்காமம் அஜ்ஞானிக்கு ஒருவேளை சத்ருவாகும். ஞானிக்கு அனுபவிக்கையில் எல்லாம் கூடாதகார்யமென்று தெரிந்திருத்தலினால் சத்ருவாயிருக்கும்.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌮𑌨𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌏𑌤𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍋𑌹𑌯𑌤𑍍𑌯𑍇𑌷 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍 ॥

இந்த்ரியாணி மனோ புத்தி ரஸ்யாதிஷ்டாந முச்யதே,
ஏதை ர்விமோஹய த்யேஷ ஜ்ஞாந மாவ்ருத்ய தேஹிநம். ௪௦

ఇన్ద్రియాణి మనో బుద్ధి రస్యాధిష్ఠాన ముచ్యతే,
ఏతై ర్విమోహయ త్యేష జ్ఞాన మావృత్య దేహినమ్. ౪౦

40. கிரு—3-அத், 35-சுலோ. இல் சொல்லப்பட்டதுபோல ஸ்வதர்மம் செய். தவறினும் தோஷம்இல்லை. சரியாக ஆசரித்தாலும் பரதர்மம் பயஹேதுவாகும். நீ க்ஷத்ரியனாதலினால் உன்ஸ்வதர்மம் ஆகும் யுத்தத்தைச்செய்.

அரு—யுத்தம் செய்யக்கூடும் ஆதலால் பலத்தை யெண்ணாதிருத்தல் கஷ்டம். மனதைநிறுத்தல் கஷ்டமாகஇருக்கிறது.

கிரு—இந்த அத்யாயம் 37-வதுசுலோ. இல், தெரிவித்த சத்ருவாகும் காமத்தை அவச்யம் ஜயிக்கவேண்டும். அது ஜயிக்கப்பட்டால்தான் நிவர்த்திகர்மம்செய்தல் எளிதாகும். அதுஞானி பூவிரோதி, ஆதலால் அதைக் கெடுத்துவிடு.

அரு—ஆசை இவ்வளவு வேலை செய்யுமா? அதுசத்ருவா? செய்யக்கூடாத காரியத்தைக்கூடச் செய்விக்குமா? அவ்வாறாயின் அது இருக்கும் இடம் அதுவரும் வழி, தெரிவித்தால் அதைச் செயிக்கிறேன்.

கிரு— இந்திரியங்கள், மனம், புத்தி, இவை காமம் உள்வருதற்கு வழிகளாம். இவைகளே அதற்கும் இருப்பிடம். காமம் இந்திரியங்களின் வழியய் உள்ளே பிரவேசிக்கும். எந்தவஸ்துவையாயினும் பார்த்து கேளாதமுன்பு ஆசைஉண்டாகாதன்றோ, இந்திரிய மனோபுத்திகள் வேலைசெய்து ஆத்மாவை மோசப்படுத்தும்.

அரு—ஞான மிருக்கின்றதல்லவா. அது எவ்வாறு தீமையுண்டாக்கும்.

கிரு—கள்வன் கதவுதிறந்திருக்கையில் உள்ளேபிரவேசித்து விளக்கை மாற்றி யிருளுண்டாக்கிவிட்டு எஜமானனைக்கட்டுவதுபோல, காமம் இந்திரியங்களின் வழியாய் உட்பிரவேசித்து ஞானவிளக்கை அவித்து அஞ்ஞானமெனும் இருளைக்கற்பித்து அதிலிருக்கும் ஆத்மாவைப் பாதிக்கும்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌾𑌦𑍌 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ।
𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌜𑌹𑌿 𑌹𑍍𑌯𑍇𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌾𑌶𑌨𑌮𑍍 ॥

தஸ்மாத்வ மிந்த்ரியா ண்யாதௌ நியம்ய பரதர்ஷப,
பாப்மாநம் ப்ரஜஹி ஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாநநாஶநம். ௪௧

తస్మా త్త్వ మిన్ద్రియా ణ్యాదౌ నియమ్య భరతర్షభ,
పాప్మానం ప్రజహి హ్యేనం జ్ఞానవిజ్ఞాననాశనమ్. ౪౧

41. ஆகையால் இந்திரியமனோபுத்திகளைச் சுவாதீனத்தில் வைத்துக்கொள். திருடன்பிரவேசித்துச் சொத்துக்களை அபகரிக்குமுன்னமே ஜாக்ரதைப்படவேண்டும். அவ்வாறே காமம் பிரவேசித்துப் பாதிக்குமுன்பே யத்னஞ்செய். அவ்வாறுசெய்யாவிட்டால் இது ஞானத்தையும் விசேஷஞானத்தையும் நாசஞ்செய்யும். மனிதஜன்மம் துர்லபமானது அசாச்வதமானது எல்லாவற்றிற்கும் பகவான் ஒருவன் இருக்கிறான்என்று எண்ணுதல் என்று கொஞ்சம் தெரிந்துக்கொள்ளுதல் சாமான்யஞானம். பகவான் எங்கிருக்கின்றான் அவன் செய்யுங் கார்யங்கள் எப்படிப்பட்டவை? மானம் என்றால் என்னஎனும் இவ்வகைவிஷயங்களை ஆராய்தல் விசேஷஞானம். காமம் இந்த இரண்டு ஞானங்களையும் போக்கும். இதுபாபி எனின் இதனுடன் ஸஹவாஸம் செய்தவனையும்கூட இது பாபியாக்கும். ஆகையாலிதை நசிக்கச்செய். இந்தச் சுலோகத்தில் ப்ரஜஹிஹி என்று விட்டுவிடென்றும், ப்ரஜஹிஹி கொல்லு, வெல்லு இவ்வாறுசெய்யவேண்டும் என்பது பிரசித்தமான சங்கதி என்று பொருள்.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌪𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌂 𑌮𑌨𑌃 ।
𑌮𑌨𑌸𑌸𑍍𑌤𑍁 𑌪𑌰𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑍁 𑌸𑌃 ॥
𑌏𑌵𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌸𑌂𑌸𑍍𑌤𑌭𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 ।
𑌜𑌹𑌿 𑌶𑌤𑍍𑌰𑍁𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 𑌦𑍁𑌰𑌾𑌸𑌦𑌮𑍍 ॥

இந்த்ரியாணி பராண்யாஹு ரிந்த்ரியேப்ய: பரம் மந:,
மநஸஸ்து பரா புத்தி ர்யோ புத்தே: பரதஸ்து ஸ:. ௪௨
ஏவம் புத்தே: பரம் புத்வா ஸம்ஸ்தப்யாத்மாந மாத்மநா,
ஜஹி ஶத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம். ௪௩

ఇన్ద్రియాణి పరాణ్యాహు రిన్ద్రియేభ్యః పరం మనః,
మనసస్తు పరా బుద్ధి ర్యో బుద్ధేః పరతస్తు సః. ౪౨
ఏవం బుద్ధేః పరం బుద్ధ్వా సంస్తభ్యాత్మాన మాత్మనా,
జహి శత్రుం మహాబాహో కామరూపం దురాసదమ్. ౪౩

42. 43. சிரு—காமம் உண்டாயிருந்தால் நிவர்த்திகர்மம் செய்தல் கஷ்டமாம் ஆதலால் அதைவெல்லு.

அரு—அதை செயிக்கமுடியுமா?

சிரு—தேகங்களைக்காட்டினும் இந்திரியங்கள்முக்யம். இந்திரியங்களைக் காட்டினும் மனம்முக்யம். என் எனில் மனம் சோரகாலத்தில் இந்திரியங்களுக்கு அவ்வளவு சக்தியிராது. மனசுசேர்ந்தால்தான் விஷயகிராஹ்யம்உண்டாம். மனதைக்காட்டிலும் புத்திமுக்யம். புத்திக்கும் கோசரிக்காதவன் பகவான். இந்த 42-சுலோ. இல் ஸ: எனின் அவன். அவன் எனின் பகவான் என்றுபொருள். புத்திக்குக் கோசரிக்காதவன் என்றதால் அவனைப்பற்றி

முன்பு எப்போதாயினும் பிரஸ்தாபிக்கப் பட்டிருக்கவேண்டும் அல்லவா? 2-அத், 56-சுலோ, இல் பரம்த்ருஷ்ட்வா = பரமாத்மாவைக் கண்டபிரகுக் காமம் கெடுமென்று கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் ஸ: எனின் அந்தப்பரன்என்று பொருள். பெரியவர்களால் கேள்வியுற்று பரமாத்மாவை யறிந்துகொண்டு ச்ரமப்படினும் சாத்தியமில்லாத காமத்தை நாசஞ்செய்.

விசிஷ்டாத்வைதம்.

காமத்தின் சங்கதியைக்கூறும் பிரகரணமாகையினுல் காமம் கெடுத்தற்கு முக்கியமானதென்று கூறப்பட்டிருக்கிறது. கண்களால் கண்டு காதுகளால் கேட்கப்பட்டபின்பே ஆசைஉண்டாகின்றதாகையால் சரீரங்களைக் காட்டிலும் இந்திரியங்கள் முக்கியம். இந்திரியங்கள்வேலைசெய்து கொண்டிருந்தால்மாத்ரம் பயனில்லை. மனம் சேர்ந்தால்தான்விஷயங்களை அநுபவித்தலில் உறுதி யுண்டாகும். ஆகையால் இவைகளைக்காட்டிலும் மனம் முக்கியம். மனம் வசப்பட்டாலும் சாதகபாதகங்களைத்தெரிவிக்கிறபுத்தி சேர்ந்தாலேமனதிற்குப்பலம். ஆகையால் மனதைக் காட்டிலும் புத்தி முக்யம். புத்தி சரியாயிருக்கினும் காமம் சேர்ந்து அதைக்கெடுக்கும் ஆகையால், ஸ:—என்று கூறப்பட்டது. காமத்திற்கே அன்வயிக்கவேண்டும். புத்திமானையும் இக்காமம் கெடுக்கக்கூடியது. காமத்தை சாஸ்திரத்தால் சமஸ்கரிக்கப்பட்ட மனதால் பக்குவப்படுத்தி கர்மயோகத்தில்பிரவர்த்திக்கச்செய்ய வேண்டும்.

அரு—காமம் இருக்கக்கூடாதா?

கிரு—கூடாது, அதனைக்கெடு.

இது பகவத்கீதா உபநிஷத்து ப்ரம்மவித்யாயோகசாஸ்திரத்தில்
கிருஷ்ணார்ச்சுனசம்வாதமாகிய கர்மயோகம் எனப்பட்ட
மூன்ருவது அத்யாயம், முற்றுப்பெற்றது.



ஸ்ரீ

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரம்மணே நம:.

# ஸ்ரீபகவத்கீதை

## ஞானயோகம்.

### நான்காவது அத்யாயம்.

ஸ்ரீபகவாநுவாச.

𑌇𑌮𑌂 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌤𑍇 𑌯𑍋𑌗𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌵𑌾 𑌨𑌹 𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।
𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌾𑌨𑍍 𑌮𑌨𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌮𑌨𑍁 𑌰𑌿𑌕𑍍𑌷𑍍𑌵𑌾𑌕𑌵𑍇𑌽𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥ க
𑌏𑌵𑌂 𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤 𑌮𑌿𑌮𑌂 𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑌯𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 ।
𑌸 𑌕𑌾𑌲𑍇𑌨𑍇𑌹 𑌮𑌹𑌤𑌾 𑌯𑍋𑌗𑍋 𑌨𑌷𑍍𑌟𑌃 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ॥ உ
𑌸 𑌏𑌵𑌾𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌤𑍇𑌽𑌦𑍍𑌯 𑌯𑍋𑌗𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑌾𑌤𑌨𑌃 ।
𑌭𑌕𑍍𑌤𑍋𑌽𑌸𑌿 𑌮𑍇 𑌸𑌖𑌾 𑌚𑍇𑌤𑌿 𑌰𑌹𑌸𑍍𑌯𑌂 𑌹𑍍𑌯𑍇𑌤𑌦𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவா நஹ மவ்யயம்,
விவஸ்வாந் மநவே ப்ராஹ மநு ரிக்ஷ்வாகவேப்ரவீத். க
ஏவம் பரம்பரா ப்ராப்த மிமம் ராஜர்ஷயோ விது:,
ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப. உ
ஸ ஏவாயம் மயா தேத்ய யோக: ப்ரோக்த: புராதந:,
பக்தோஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேத துத்தமம். ௩

ఇమం వివస్వతే యోగం ప్రోక్తవా నహ మవ్యయమ్,
వివస్వాన్ మనవే ప్రాహ మను రిక్ష్వాకవేఽబ్రవీత్. ౧
ఏవం పరమ్పరాప్రాప్త మిమం రాజర్షయో విదుః,
స కాలేనేహ మహతా యోగో నష్టః పరంతప. ౨
స ఏవాయం మయా తేఽద్య యోగః ప్రోక్తః పురాతనః,
భక్తోఽసి మే సఖా చేతి రహస్యం హ్యేత దుత్తమమ్. ౩

ஸ்ரீபகவான் கூறுதல்.

1. 2. 3. அரு—இந்தக்கர்மத்தை யெனக்காகவே கூறுகின்றாயா? பெரியவர்கள் எவராயினும் கூறினரா?

கிரு—3-அத். 10-சுலோ. இல், பகவத் ஆஞ்ஞையென்று தெரிவித்திருந்தேனே.

அரு—அந்தச்சங்கதி தெரியும் உபதேசம் புதிதாய் செய்தாயா? முன்யாருக்காவது சொல்லி யிருந்தனையா?

கிரு—அநேகருக்கு உபதேசமாயிற்று.

அரு—எவர்க்கு.

கிரு—சூர்யனுக்குச்சொல்லினேன். இந்த அர்த்தம் நாசரஹிதமான வேதத்திலிருந்து வந்தது. அந்த அர்த்தத்தை அரசர்கள், ருஷிகள், அன்றி ருஷிகளைப்போலிருக்கும் அரசர்கள் தெரிந்து கொண்டார்கள். ஆகையால் சந்தேகப்படாதே.

அரு—அவர்களுக்கு உபதேசமான அர்த்தத்தை என் மீண்டும் எனக்கு உபதேசிக்கின்றாய்.

கிரு—ஜீர்ணோத்தாரணத்திற்காக.

அரு—சூர்யனுக்குத் தெரிவிந்ததுதானா எனக்கு இப்போது தெரிவித்தாய்.

கிரு—செம்மையாய் அவனுக்குத் தெரிவித்ததே.

அரு—அதுதானா.

கிரு—அதுவே.

அரு—ஜீர்ணோத்தாரணம் நீ ஏன் செய்யவேண்டும்.

கிரு—முன் நான் உபதேசித்ததினால் எனக்கே அக்கரையிருக்கும்.

அரு—என்னையேன் வருத்தப்படுத்துகிறாய்.

கிரு—மாணாக்கனாகிறேன் என்று கூறினாயன்றோ ஆதலினால்.

அரு—இது ரஹஸ்யமா?

கிரு—ஆம்.

அரு—இவ்வகை ரஹஸ்யத்தை யெனக்கேன் கூறினாய்.

கிரு—பக்தனென்றும், நண்பனென்றும் கூறினேன். (பக்தனாகையால் பரிகஸிக்காமல் பக்தியுடன் கேட்பாயென்றும், நண்பனாதலினால் நிர்ப்பயமாய்த் தெரியத்தக்க பொருள்களை செம்மையாய்க்கேட்டு தெரிந்து கொள்வாயென்றும் உனக்கு உபதேசித்தேனென்று கருத்து.)

அரு—இந்தரஹஸ்யத்தைக் கேட்பதற்கு இவ்வளவு யோக்யதைகள் எனக்கு உண்டா? (இந்த-2, சுலோகங்களில் பரந்தப என்று விளித்ததினால் உள்ளிருக்கிற சத்ருக்களைச் செயித்தனையன்றோ என்று கருத்து.)

அரு—என் உட்கருத்து உனக்கெப்படி தெரியும்.?

கிரு—ஊர்வசி விஷயத்தில் தெரிந்துகொண்டேன். (தவத்தைக்கெடுக்க வந்த அப்ஸரஸ்திரீகளைத் திரஸ்கரிக்கும்படி நாராயணருஷியின் தொடையிற்

பிறந்து, ஆதலால் ஊர்வசியென்று பெயரடைந்து இந்திரனின் அடியாளாயிருந்த ஊர்வசிமோஹித்து உன்னை விரும்பினும் தந்தைக்கு அன்புள்ளவன் என்று நீ அவளை நிக்ரஹித்தாய். ஆகலால் உன் இந்திரிய நிக்ரஹம் தெரிந்துகொண்டேனென்று பரந்தப என்பதற்குக்கருத்து.)

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

𑌅𑌪𑌰𑌂 𑌭𑌵𑌤𑍋 𑌜𑌨𑍍𑌮 𑌪𑌰𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌤𑌃 ।
𑌕𑌥 𑌮𑍇𑌤 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌂 𑌤𑍍𑌵 𑌮𑌾𑌦𑍌 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 ॥ ௪
𑌬𑌹𑍂𑌨𑌿 𑌮𑍇 𑌵𑍍𑌯𑌤𑍀𑌤𑌾𑌨𑌿 𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑌿 𑌤𑌵 𑌚𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌤𑌾 𑌨𑍍𑌯𑌹𑌂 𑌵𑍇𑌦 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌨𑌤𑍍𑌵𑌂 𑌵𑍇𑌤𑍍𑌥 𑌪𑌰𑌂𑌤𑌪 ॥ ௫
𑌅𑌜𑍋𑌽𑌪𑌿𑌸 𑌨𑍍𑌨𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾 𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌪𑌿𑌸𑌨𑍍 ।
𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾 𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾 𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮 𑌮𑌾𑌯𑌯𑌾 ॥ ௬
𑌯𑌦𑌾 𑌯𑌦𑌾 𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌗𑍍𑌲𑌾𑌨𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌅𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨 𑌮𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ ௭
𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌯 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌚 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌮𑍍 ।
𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿 𑌯𑍁𑌗𑍇 𑌯𑍁𑌗𑍇 ॥ ௮

அபரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:,
கத மேத த்விஜாநீயாம் த்வ மாதௌ ப்ரோக்தவாநிதி. ௪
பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந,
தாந்யஹம் வேத ஸர்வாணி நத்வம் வேத்த பரந்தப. ௫
அஜோபிஸந்நவ்யயாத்மா பூதாநா மீஸ்வரோபிஸந்,
ப்ரக்ருதிம் ஸ்வா மதிஷ்டாய ஸம்பவா ம்யாத்ம மாயயா. ௬
யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத,
அப்யுத்தான மதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம். ௭
பரித்ராணாய ஸாதூநாம் விநாஸாய ச துஷ்க்ருதாம்,
தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே. ௮

అపరం భవతో జన్మ పరం జన్మ వివస్వతః,
కథ మేత ద్విజానీయాం త్వ మాదౌ ప్రోక్తవానితి. ౪
బహూని మే వ్యతీతాని జన్మాని తవ చార్జున,
తా న్యహం వేద సర్వాణి నత్వం వేత్థ పరంతప. ౫
అజోఽపిస న్నవ్యయాత్మా భూతానా మీశ్వరోఽపిసన్,
ప్రకృతిం స్వా మధిష్ఠాయ సమ్భవా మ్యాత్మమాయయా. ౬

యదా యదా హి ధర్మస్య గ్లానిర్భవతి భారత,
అభ్యుత్థానమధర్మస్య తదాత్మానం సృజామ్యహమ్. ౭
పరిత్రాణాయ సాధూనాం వినాశాయ చ దుష్కృతామ్,
ధర్మసంస్థాపనార్థాయ సంభవామి యుగే యుగే. ౮

அர்ச்சுநன் கூறுதல்.

4. 5. 6. 7. 8. (4. முதல் 8-வரையில்)-அரு—இந்தச் செய்தி பரிஹாசிய பதமாயிருக்கிறது. இதற்குமுன் தன் தந்தை மணஞ்செய்து கொண்டதை பார்த்தே னென்பது போலும், நேற்று முந்தையநாள் பிறந்த நீ ஸூர்யனுக்கு எவ்வாறு உபதேசம் செய்தனை.

ஸ்ரீபகவான் கூறுதல்.

கிரு—ஜன்மாந்தரத்தில் ஸூர்யனுக்கு இச்சங்கதியை யுபதேசித்தேன்.

அரு—அவ்வாறாயின் உனக்கும் ஜன்மம் உண்டா?

கிரு—உண்டு.

அரு—நீயும் செத்துப்பிறக்கவேண்டியவன்றானே?

கிரு—ஆம்.

அரு—ஜனநமரண மிருத்தலால் நீயும் என்னை யொத்தவனே ஆகிறாய்.

கிரு—அநேக ஜன்மங்களெடுக்கினும் என் ஜன்மங்களின் செய்தி நானறிவேன். நீ அறியாய்.

அரு—அவ்வளவு பெரியவன் நீ யேன் ஜன்மமெடுக்க வேண்டும்?

கிரு—அது எனதிச்சை, நான் ஈஶ்வரனாதலாலிறப்புப் பிறப்பெனக்கில்லை.

அரு—இருப்பதுபோல தோற்றுகின்றதே.

கிரு—அவற்றை யென்வசத்தில் வைத்துக்கொண்டு பிறக்கின்றேன்.

அரு—மற்றுந் தோன்றுகின்றதே.

கிரு—மாயையால்.

விசிஷ்டாத்வைதம்.

வேடிக்கைக்காகவும், லோகோத்தாரணத்திற்காகவும் வந்துகொண்டும் போய்க்கொண்டு மிருக்கிறேன்.

அரு—லோகோத்தாரணத்திற்காக ச்ரமப் படுகின்றாயா?

கிரு—முத்தர்களால் பூஜிக்கப்படும் ஸ்வபாவத்தைவிடாமலே பிறக்கின்றேன்.

அரு—பிறப்பதுபோல இறப்பதுபோலத் தோன்றுகின்றதே.

கிரு—அதுவிலை. (மனிதர்களுக்கு பிறப்பிறப்பு, ஈஶ்வரனுக்கு அவதாரமென்றும் அந்தர்தானமென்றும் கூறப்படும்.)

அரு—உன்ஜன்மம் எப்போதுண்டாம்.

கிரு—எப்போது தர்மலோபமும் அதர்மவிருத்தியு முண்டாகின்றதோ அப்போது.

அரு—அப்படிஅவதரித்து என்னசெய்வாய்?

கிரு—சாதுக்களை ரக்ஷித்துப் பாபிகளைச் சிக்ஷித்துத் தர்மத்தை ஸ்தாபிப்பேன். இதற்காக அவசரம்வந்தபோது பிறக்கின்றேன்.

𑌜𑌨𑍍𑌮 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌮𑍇 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍇𑌵𑌂 𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 |
𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌹𑌂 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌨𑍈𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌤𑌿 𑌸𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ‖

ஜந்ம கர்மச மே திவ்ய மேவம் யோ வேத்தி தத்வத:,
த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந. ௯

జన్మ కర్మచ మే దివ్య మేవం యో వేత్తి తత్త్వతః,
త్యక్త్వా దేహం పునర్జన్మ నైతి మామేతి సోఽర్జున. ౯

9. அரு—தெரிந்தது. இந்தவிஷயத்தை யினி நிறுத்தி கர்மஜ்ஞானத்யானயோகங்களைத் தெரிவி. என் அதிகப்ரஸங்கத்தால் இந்தவிருதா விஷயம் தெரிவிக்கப்பட்டது.

கிரு—இந்த எட்டுசுலோகங்களே முக்யமானவை. இது கீதையின் சாரம்

அரு—அதெப்படி?

கிரு—கர்மஞானாதிகள் என்னையடைய யுபாயங்கள், இது என்ஸ்வவிஷயம். இந்த என்சங்கதி அறிபவன் முத்தியடைவன்.

அரு—நான் கேட்டும் எனக்குமோக்ஷம் வரவில்லையே.

கிரு—சரீரம் நீங்கிய பின்பேயல்லவா மோக்ஷம் உண்டாகும்.

𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌾 𑌮𑌨𑍍𑌮𑌯𑌾 𑌮𑌾𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 |
𑌬𑌹𑌵𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌪𑌸𑌾 𑌪𑍂𑌤𑌾 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 ‖ ௧௦

வீதராகபயக்ரோதா மந்மயா மா முபாஸ்ரிதா:,
பஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்பாவ மாகதா:. ௧௦

వీతరాగభయక్రోధా మన్మయా మా ముపాశ్రితాః,
బహవో జ్ఞానతపసా పూతా మద్భావ మాగతాః. ౧౦

10. அரு—இதைக்கேட்டு எவராயினும் மோக்ஷத்திற்குச் சென்றனரா? என்பொருட்டே கூறினையா?

கிரு—ஈஸ்வரஸ்வரூபஞானமெனும் தவத்தால் பரிசுத்தரான அநேகர் ராகம், பயம், குரோதம் இல்லாதவர்களாய் என்ஸ்வரூபர்களாய் என்னை ஆச்ரயித்து (த்வைதம்) என்சமீபத்தையும், (அத்வைதம்) என் பாவத்தையும், (விசிஷ்டாத்வைதம்) என் ஸ்வபாவத்தையும் அடைந்திருக்கின்றனர்.

𑌯𑍇 𑌯𑌥𑌾 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌭𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 |
𑌮𑌮 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ‖ ௧௧

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம் ஸ்ததைவ பஜாம்யஹம்,
மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வஶ:. ௧௧

యే యథా మాం ప్రపద్యన్తే తాం స్తథైవ భజామ్యహమ్,
మమ వర్త్మానువర్తన్తే మనుష్యాః పార్థ సర్వశః. ౧౧

த்வைதாத்வைதம்.

11. அரு—இனி கர்மத்தின் செய்தி கூறு.

கிரு—பிரவிருத்தி நிவிருத்தி கர்மங்களைக் கூறினேன். நிவர்த்திகர்மஞ் செய்யின் மோக்ஷந்தருவன்.

அரு—மோக்ஷந்தருபவன் நீயாதலால் செய்வித்து அனைவர்க்கும் மோக்ஷந் தரக்கூடாதா?

கிரு—அவரவர்களுக்கு வேண்டியவைகளே கொடுக்கவேண்டும்.

அரு—ஸ்வல்ப பலத்தை யேன்கொடுக்கிறாய்?

கிரு—அனைவரும் அந்தவழியிலிருந்தே போவர். நானே அனைத்தும் கொடுக்கின்றேன் (கற்பகவிருக்ஷம் தன்னைக் கோரினவர்களின் கோரிக்கைகளைத் தீர்ப்பது போல பகவான் தன்னைப் பிரார்த்திப்பவரின் கோரிக்கைகளைத் தீர்ப்பன் என்று பாகவதத்தில் கூறப்பட்டிருக்கிறது.)

விசிஷ்டாத்வைதம்.

எவர் எவர்கள் எவ்வாறு எவ்வாறு எண்ணுகின்றனரோ அவரவர்களின் தேச, கால, நாம, ரூபகுலங்களுக்குத் தக்கபடி காப்பேன். இவ்வாறு செய்ததால் அனைவரும் என்னையே அநுசரிப்பர். (6-அத், 31-சுலோகம் சொன்னபடி என்பக்தர் கெடார்கள். எந்தவிதமாக பஜிப்பவர்க்குத்தக்கபடி ஸ்வாமி பிரஸன்னராகாவிட்டால் பிரஜைகள் வெறுப்படைவார்கள் ஆதலால் பகவான் ஆச்ரயித்தவர்களின் மனோபாவத்திற்குத்தக்கபடி பலம் கொடுக்கின்றான் என்று கருத்து.)

𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌯𑌜𑌨𑍍𑌤 𑌇𑌹 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 ।
𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌹𑌿 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌜𑌾 ॥

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா:,
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்திர்பவதி கர்மஜா. கஉ

కాంక్షన్తః కర్మణాం సిద్ధిం యజన్త ఇహ దేవతాః,
క్షిప్రం హి మానుషే లోకే సిద్ధిర్భవతి కర్మజా. ౧౨

12. அரு—காம்யகர்மங்களுக்குப் பலம் ஏன் ஸ்வல்பம்?

கிரு—அவர்கள் விரைவில் மனோரதஸித்தியை யடைய எண்ணுதலால் இந்திராதிகளை ஆராதிப்பர். கர்மபலம் மனுஷ்யலோகத்தில் சீக்ரமாய்லபிக்கும். 7-அத், 19-சுலோ. இல் ஞானம் அநேகஜன்மங்களுக்கென்று கூறினேன். பிரவிருத்திகர்மபலம் கைமேல் லபிக்கும்.

அரு—ஏன் ஞானத்திற்குப் ப்ரயத்னப்படார்கள்.

கிரு—நிவர்த்தி கர்மஞ்செய்து ஞானத்வாரா மோக்ஷத்திற்குப் போகும்பாக்யம்அவர்க்கில்லை. அவர்களின்பாபம் இதற்குத்தடைபடும்.

𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌣𑍍𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ ௧௩

சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகஶ:,
தஸ்ய கர்த்தார மபி மாம் வித்யகர்த்தார மவ்யயம். ௧௩

చాతుర్వర్ణ్యం మయా సృష్టం గుణకర్మవిభాగశః,
తస్య కర్తార మపి మాం విద్ధ్యకర్తార మవ్యయమ్. ౧౩

13. அரு—இந்தக்கர்மம் எந்தச்சாதியார் செய்யவேண்டும்?

கிரு—நான்குஜாதிகளையும் நானே சிருட்டித்ததினால் என் குழந்தைகளாகும் அனைவரும் இதை ஆசரிக்கத்தக்கவர்களே.

அரு—எல்லாரையும் பிராம்மணராகவே ஏன் சிருட்டிக்கவில்லை?

கிரு—பிரகிருதி குணங்களால் அவ்வாறு தடஸ்தப்படும்.

அரு—இத்தனை பெயர்களையும் காத்தல் அருமையல்லவா?

கிரு—நான் அகர்த்தன். அநாயாசமாய் இந்தக்கார்யத்தைச் செய்வேன்.

𑌨 𑌮𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌮𑍇 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 ।
𑌇𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌯𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌰𑍍𑌨 𑌸 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥ ௧௪

நமாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலஸ்ப்ருஹா,
இதி மாம் யோபிஜாநாதி கர்மபிர்நஸ பத்யதே. ௧௪

నమాం కర్మాణి లిమ్పన్తి న మే కర్మఫలస్పృహా,
ఇతి మాం యోఽభిజానాతి కర్మభి ర్న స బధ్యతే. ౧౪

14. அரு—ஸ்ருஷ்டிஸ்திதிலயங்கள் நீயன்றோ செய்கிறாய்.

கிரு—ஆம்.

அரு—இவ்வளவு பேதமாய் சிருட்டித்தலால் உனக்குப் பாபம் உண்டாகாதா.

கிரு—நான் எவ்வாறு செய்யினும் கர்மம் என்னை பாதிக்காது.

அரு—அது ஏன்.

கிரு—கர்மபலத்தில் எனக்கு இச்சையில்லை. சட்டம் ஏற்படுத்தி அதின் பிரகாரம் செய்விப்பேன். (ஜட்ஜி தண்டிக்கினும் தப்பாகப் பாவிக்கப்படாதல்லவா. லஞ்சம் வாங்கிக்கொண்டால்தான் தப்பாகும். அவ்வாறே பகவானுக்குப் பலேச்சையில்லை ஆதலால் கர்மம் அவனைப்பாதிக்காது) இவ்வாறு என்னை யறிந்தவர்கள் கூட கர்மவிமுக்தராகையில் எனக்கு எவ்வாறு கர்மபாதை நேரும்.

𑌏𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌰𑌪𑌿 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌭𑌿𑌃 ।
𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌤𑌰𑌂 𑌕𑍃𑌤𑌮𑍍 ॥

ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி:,
குரு கர்மைவ தஸ்மாத்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம். ௧௫

ఏవం జ్ఞాత్వా కృతం కర్మ పూర్వైరపి ముముక్షుభిః,
కురు కర్మైవ తస్మాత్త్వం పూర్వైః పూర్వతరం కృతమ్. ౧౫

15. இவ்வாறு என்னையறிந்து நெடுநாட்களாய் முமுக்ஷுக்கள் கர்மஞ் செய்தார்கள். ஆகையால் ஸூர்யன், மனுமுதலானவர்கள் செய்த இந்த நிவர்த்திகர்மத்தை நீயும் செய். (இந்த சுலோகத்தில், பூர்வைரபி, பூர்வை:, பூர்வதரம் என்று மூன்று பர்யாயங்கள் தெரிவிக்கப்படுதலால் இந்தக்கருமம் அநாதியாகவந்ததென்று கருத்து.)

𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌿𑌮𑌕𑌰𑍍𑌮𑍇𑌤𑌿 𑌕𑌵𑌯𑍋𑌽𑌪𑍍𑌯𑌤𑍍𑌰 𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑌤𑍍𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌽𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 ॥

கிம் கர்ம கி மகர்மேதி கவயோப்யத்ர மோஹிதா:,
தத்தே கர்மப்ரவக்ஷ்யாமி யத்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேஶுபாத். ௧௬

కిం కర్మ కి మకర్మేతి కవయోఽప్యత్ర మోహితాః,
తత్తే కర్మ ప్రవక్ష్యామి యజ్జ్ఞాత్వా మోక్ష్యసేఽశుభాత్. ౧౬

16. கிரு—இந்த அத். 15 சுலோ. இல் பூர்வீகர்கள் எல்லாம்கர்மஞ்செய்தார்கள் என தெரிவித்திருந்தேன் ஆதலால் நீயும் கர்மத்தைச்செய்.

அரு—கர்மஞ்செய்தற்குக் கர்மபேதங்கள் எனக்குத் தெரியா.

கிரு—சொல்லுகிறேன் கேள்.

அரு—நான் மூடன் என்று எண்ணுகிறேன். எனக்கு அந்தவிஷயம் அறியமுடியுமா ?

கிரு—நீயேயல்ல. இந்தவிஷயத்தில் பண்டிதர்கள்கூட பிரமிக்கின்றனர். அப்படிப்பட்ட கர்மபேதங்களை யுனக்குத் தெரிவிக்கின்றேன்.

அரு—இந்தச்சங்கதிகளைத் தெரிந்துக்கொள்ள வேண்டியதுதானு ?

கிரு—இதுதெரிந்தால் மோக்ஷவிரோதிகளாகும் புண்யபாபங்கள் கெடும் (பாபத்தைப்போலவே புண்யமும் மோக்ஷவிரோதியல்லவா)

அரு—பண்டிதர்களுக்குச் சந்தேஹமான சங்கதி எனக்குப் போதப்படுமா?

கிரு—உனக்கு இந்தச்சந்தேஹம் வேண்டாம். நான்செம்மையாய்ச் சொல்லுகிறேன்.

𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌹𑍍𑌯𑌪𑌿 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌵𑌿𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 ।
𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌶𑍍𑌚 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌗𑌹𑌨𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌗𑌤𑌿𑌃 ॥ ௧௭

கர்மணோஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யஞ்ச விகர்மண:,
அகர்மணஶ்ச போத்தவ்யம் கஹநா கர்மணோ கதி:. ௧௭

కర్మణో హ్యపి బోద్ధవ్యం బోద్ధవ్యంచ వికర్మణః,
అకర్మణశ్చ బోద్ధవ్యం గహనా కర్మణో గతిః. ౧౭

17. அரு—இந்தப்பெரியசங்கதி எனக்குத் தெரியவேண்டியதுதானு?

கிரு—கர்மம் செய்யத்தகுந்தது. விகர்மம்-கெடுக்கத்தக்கது. அகர்மம் செய்யக்கூடாதது. இந்தமூன்றும் அறியத்தகுந்தவையே.

அரு—இது பெரியவிஷயமா யிருக்கிறதே.

கிரு—கர்மம் பெரிதே.

அரு—கர்மம் எளிதென்றுகூறினுயே?

கிரு—இந்தமூன்றையு மறிதல்கஷ்டம்.

𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌦𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌃 ।
𑌸 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁 𑌸 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ॥

கர் மண்யகர்ம ய: பஶ்யே தகர்மணி ச கர்மய:,
ஸ புத்திமான்மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத்.　　௧௮

కర్మ ణ్యకర్మ యః పశ్యే దకర్మణి చ కర్మ యః,
స బుద్ధిమాన్మనుష్యేషు స యుక్తః కృత్స్నకర్మకృత్.　　౧౮

18. கிரு—கர்மத்தைச்செய்யுங்காலத்தில் செய்யாதுபோலவும் செய்யாதபோது செய்ததுபோலவும் அறிந்துகொள்பவன் புத்திசாலி. அவனே மனுஷ்யர்களில் மோக்ஷாருகன். எல்லாசாஸ்திரோக்த கருமங்களைச் செய்தவனுவன்.

த்வைதம்.

கர்மங்களைச் செய்கையில் கர்மங்களைச்செய்கிறவன் ஈச்வரனேயன்றி தான் செய்யவில்லையென்று எண்ணவேண்டும். தான்காரியஞ் செய்யாமலிருக்கும் நித்ராதிசமயங்களிலும் ஈச்வரன் காரியத்தைச் செய்துகொண்டிருக்கிருன் என்றும் அறியவேண்டும். இவ்வாறு அறிபவன் புத்தியுக்தன்.

அத்வைதம்.

கர்மம் காணப்படினும் ஆத்மாவிற்கு அது சம்பந்திக்காமையால் கர்மத்தில் அகர்மம்இருக்கிறது. நான்பரப்பிரமம் ஆதலால் எனக்குக் கர்மம் ஆவச்யகமில்லையென்று எண்ணி சன்யசித்தலிஞலேயே கர்மம் ஏற்படுகிறது. அப்படிப்பட்ட சன்யாசியை நம்பக்கூடாது. 3-அத், 4-சுலோகம் போல், சன்யசித்தமாத்திரத்தில் ஞானியாகமாட்டான். 3-அத், 6-சுலோ. போல், கர்மேந்திரியங்களையடக்கி விஷயத்யானம் செய்யின் அது சன்யாசமன்று. இவ்வாறு அறிபவனே ஞானி.

விசிஷ்டாத்வைதம்.

நிவர்த்திகர்மத்தில் ஞானம் சேர்ந்திருக்கிறது. 2-அத். 42-சுலோ, போல் ஞானிக்கு மோக்ஷம்தவிர வேறுகோரிக்கை கிடையாது. பகவானை அறிந்துகொண்டவனன்றோ கர்மத்தைச்செய்வன். ஆகையால் கர்மத்தில் ஞானமிருக்கிறது. ஞானம் உள்ளவன் கர்மத்தைச்செய்வன் ஆகையால் ஞானத்தில் கர்மம் இருக்கிறது. இவ்வாறு அறிபவன் புத்திமான்.

𑌯𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃 𑌕𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌤𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌂 𑌬𑍁𑌧𑌾𑌃 ॥

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்பவர்ஜிதா:,
ஜ்ஞாநாக்நிதக்தகர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா:. ௧௯

యస్య సర్వే సమారమ్భాః కామసఙ్కల్పవర్జితాః,
జ్ఞానాగ్నిదగ్ధకర్మాణం తమాహుః పణ్డితం బుధాః. ౧౯

19. காம, ஸங்கல்பங்களில்லாமல் கர்மத்தைச்செய்தவன் ஞானக்னியால் கர்மங்களை தஹித்தவனவன். காமம்எனின் ஆசை. சங்கல்பமெனின் மேல் நடக்கவேண்டியவைகளை யோசித்தல். இந்தஅத்-37-சுலோ, இல், ஞானங் கர்மங்களைப் பஸ்மஞ்செய்யுமென்று அறிவிக்கப்படும். (ஆகையால் 18, 19, சுலோகங்களைக் கவனிக்கவேண்டும்.)

𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌸𑌙𑍍𑌗𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍃𑌪𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ।
𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑌃 ॥

த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராஸ்ரய:,
கர்மண்யபிப்ரவ்ருத்தோபி நைவ கிஞ்சித்கரோதி ஸ:. ௨௦

త్యక్త్వా కర్మఫలాసఙ్గం నిత్యతృప్తో నిరాశ్రయః,
కర్మణ్యభిప్రవృత్తోఽపి నైవ కిఞ్చిత్కరోతి సః. ౨౦

20. பலத்தைக்கோராமல், அஹங்கார மமகாரங்களைவிட்டு பரப்பிரம்மத்தில் திருப்தன் ஆகவேண்டும்.

விசிஷ்டாத்வைதம்.

ஆத்மாவைத்தவிர வேறு ஆச்ரயம் இல்லையென்று தோன்றவேண்டும்.

அரு—இவ்வாறுசெய்யின் இதுவெந்த கர்மமாகும்.?

கிரு—பலத்தைக் கோராததினால் ஞானயோகமாகும். என்னெனின் ஞான சாதனமாகவே இவன் கர்மத்தை ஆசரிக்கிறான். ஆகையால் தோஷமிராது.

𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑍍𑌯𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌶𑌾𑌰𑍀𑌰𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌮𑍍 ॥ ௨௧

நிராஸீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ:,
ஸாரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம். ௨௧

నిరాశీర్యతచిత్తాత్మా త్యక్తసర్వపరిగ్రహః,
శారీరం కేవలం కర్మ కుర్వన్నాప్నోతి కిల్బిషమ్. ౨౧

21. அரு—நீசொன்னபடி அஹங்காராதிகளைவிட்டுக் கர்மத்தைச்செய்யினும் சரீரம் நிமித்தமாதலினால் இது பிரகிருதிகர்மமாய்ப் பரிணமிக்காதா?

கிரு—சரீரம் சரியாயில்லாவிடின் சத்கார்யங்கள் எவ்வாறுசெய்யலாகும். 3-அத். 8-சுலோ. சொன்னதுபோல சரீரங்களுக்கு வேண்டியகர்மஞ் செய்யக் கூடும்.

அரு—2-அத். 42, 43, 44, 46, சுலோகங்களில் அந்தக்கர்மத்தைத் தூஷித்தாய் அல்லவா. ஆதலால் பிரகிருதிகர்மமாமேயென்று பயப்படுகின்றேன்.

கிரு—பாபம் இராதென்று நான் சொல்லுகிறேன்.

அரு—அவ்வாறாயின் நீ சொன்னசொல்லை மனதில்வைத்துக்கொள்ளுகிறேன்.

கிரு—கர்மம்செய்கையில் ஆசையிருத்தலாகாது. மனமும் சரீரமும் ஸ்வாதீனத்தில் இருக்கவேண்டும். பெண்டுபிள்ளைகளிடத்தில் அபிமானமிருக்கக்கூடாது. இவ்வாறுசெய்தால் தோஷமிராதென்று கவனிப்பாய்.

𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑍋 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑍋 𑌵𑌿𑌮𑌤𑍍𑌸𑌰𑌃 ।
𑌸𑌮𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌚 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌪𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥ ௨௨

யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர:,
ஸமஸ்ஸித்தாவஸித்தௌச க்ருத்வாபி நநிபத்யதே. ௨௨

యదృచ్ఛాలాభసంతుష్టో ద్వన్ద్వాతీతో విమత్సరః,
సమస్సిద్ధావసిద్ధౌచ కృత్వాపి ననిబధ్యతే. ౨౨

22. அரு—அவ்வாறாயின் சரீரத்திற்கு உபயோகமானகர்மங்களைச் செய்யலாம் அல்லவா?

கிரு—சரீரத்தைக் காப்பதற்கென்று அதிகஆசைகூடாது. கிடைத்தவரையில் திருப்தியடையவேண்டும். சீதோஷ்ணாதி த்வந்த்வங்களை விடவேண்டும்.

அரு—அதிகர்களாகும் மற்றவர்களைக்கண்டபோது துக்கமுண்டாமே?

கிரு—மத்ஸரம்கூடாது. சித்தி அசித்திகளில் சமபாவம் உண்டாயிருக்கவேண்டும். இவ்வாறிருந்து கர்மம்செய்தால் பாதகமாகாது.

𑌗𑌤𑌸𑌙𑍍𑌗𑌸𑍍𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌯𑌾𑌚𑌰𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌗𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 ॥ ௨௩

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்தித சேதஸ:,
யஜ்ஞாயாசரத:கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே. ௨௩

గతసఙ్గస్య ముక్తస్య జ్ఞానావస్థితచేతసః,
యజ్ఞాయాచరతః కర్మ సమగ్రం ప్రవిలీయతే. ౨౩

23. கிரு—பலத்தைவிரும்பாமல் பார்யாபுத்ராதிகளில் அபிமானத்தைவிட்டு ஞானத்தில்நிலைத்து பகவானுக்காக கர்மஞ்செய்யவேண்டும். 18-சுலோ. முதல், 23-சுலோ, வரையில் சொன்னபடி நிவர்த்தி கர்மஞ்செய்தால் பிராசீன கர்மம் நீங்கும்.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌹𑌵𑌿
𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌹𑍁𑌤𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌤𑍇𑌨 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 ॥ ௨௪

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர்ப்ரஹ்மாக்நௌப்ரஹ்மணா ஹுதம்.
ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்ம கர்ம ஸமாதிநா. ௨௪

బ్రహ్మార్పణం బ్రహ్మ హవి ర్బ్రహ్మాగ్నౌ బ్రహ్మణా హుతమ్,
బ్రహ్మైవ తేన గన్తవ్యం బ్రహ్మ కర్మ సమాధినా. ౨౪

24. அரு—கர்மஞ்செய்கையில் மந்த்ரதந்த்ரலோபமுண்டாயின் என்னகதி?
கிரு—பிரம்மமென்கிற சாதனத்தால் பிரம்மமெனும் ஹவிஸ்ஸை பிரம்மமெனும்அக்னியில் பிரம்ம(ரூபனுனகர்த்தா) த்தால் ஹோமம் செய்யப்படுகிறது. பிரம்மரூபமான கர்மத்தை த்யானஞ்செய்வதால் அப்படித்யானஞ்செய்புவனுக்கு பிரம்மமேபிராப்யமாம். (எல்லாம் பிரம்மமேயென்று கர்மஞ்செயின் தவரினும் தோஷமில்லையென்றுகருத்து.) இவ்வாறு அனைத்தும் பிரம்மம் என்பதால் அத்வைததோஷம் வராதா எனில்.

த்வைதம்.

பிரம்மார்ப்பணம் = பிரம்மயதீனமென்று எண்ணவேண்டும்.

விஸிஷ்டாத்வைதம்.

பிரம்மகாரியமென்று எண்ணவேண்டும்.

𑌦𑍈𑌵𑌮𑍇𑌵𑌾𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑌾𑌵𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑍈𑌵𑍋𑌪𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ॥

தைவமேவாபரே யஜ்ஞம் யோகிந: பர்யுபாஸதே,
ப்ரஹ்மாக்நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி. ௨௫

దైవమేవాపరే యజ్ఞం యోగినః పర్యుపాసతే,
బ్రహ్మాగ్నావపరే యజ్ఞం యజ్ఞేనైవోపజుహ్వతి. ౨౫

25. அரு—கர்மம் ஒருவிதமாகவே செய்யவேண்டுமா, தேசகாலவர்ணாச்ரமங்களுக்குத் தக்கபடி செய்யவேண்டுமா?
கிரு—நிவர்த்திகர்மமா யிருக்கவேண்டுமேயன்றி பேதம் இருக்கலாம். 12 பேதங்களிருக்கின்றன. அவைகளைக்கேள்.

த்வைதம்.

ஞானிகள் நாராயணனை த்யானிப்பர். பரப்ரம்மாதீனமாக யஞ்ஞானிகள் செய்வர்.

அத்வைதம்.

கர்மநிஷ்டர்கள் தேவர்களைக்குறித்து யஞ்ஞங்கள்செய்வர். ஞானநிஷ்டர் பிரம்மைவாஹம் என்று பரமாத்மாவில் ஐக்யானுசந்தானம் செய்வர்.

விசிஷ்டாத்வைதம்.

(இது கர்மயோக ப்ரகரணமாதலால் கர்மத்தையே தெரிவிக்கவேண்டும்.) சிலர் தேவதார்ச்சனை சௌகர்யமிருக்கின், 24-சுலோகத்தைப்போல் யஜ்ஞம் செய்வர்.

𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌨𑍍𑌯𑍇 𑌸𑌂𑌯𑌮𑌾𑌗𑍍𑌨𑌿𑌷𑍁 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ।
𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑌨𑍍𑌯 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌷𑍁 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ॥ ௨௬

ஶ்ரோத்ராதீநீந்த்ரியாண்யந்யே ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி,
ஶப்தாதீ ந்விஷயா நந்யேபீந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி. ௨௬

శ్రోత్రాదీనీన్ద్రియాణ్యన్యే సంయమాగ్నిషు జుహ్వతి,
శబ్దాదీ న్విషయా నన్య ఇన్ద్రియాగ్నిషు జుహ్వతి. ౨౬

26. சிலர் சுரோத்ரம் முதலாகிய இந்திரியங்களை நிக்ரஹமெனும் அக்னியில் ஹோமம் செய்கின்றனர். மற்றுஞ்சிலர் சப்தாதிவிஷயங்களை இந்திரியங்களாகிய அக்னிகளில் ஹோமம்செய்கின்றனர். (எனின் இந்திரியங்களை விஷயங்களிலிருந்து நிவாரிக்கின்றனர். இந்தச்சுலோகத்தில் முதலில்தெரிவித்தது பிரம்மசாரிகளின் சங்கதி. பின்தெரிவித்தது கிருகஸ்தர் சங்கதி.)

𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌚𑌾𑌪𑌰𑍇 ।
𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌯𑌮𑌯𑍋𑌗𑌾𑌗𑍍𑌨𑍌 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍀𑌪𑌿𑌤𑍇 ॥ ௨௭

ஸர்வாணீந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே,
ஆத்மஸம்யமயோகாக்நௌ ஜுஹ்வதி ஜ்ஞானதீபிதே. ௨௭

సర్వాణీన్ద్రియకర్మాణి ప్రాణకర్మాణి చాపరే,
ఆత్మసంయమయోగాగ్నౌ జుహ్వతి జ్ఞానదీపితే. ౨౭

27. சிலர் இந்திரிய வியாபாரங்கள்முழுதும் ஞானத்தால் ஜ்வலிக்கின்ற மனோநிக்ரஹாப்யாஸமென்னும் அக்னியில் ஆகுதிசெய்கின்றார்கள். இது சன்யாசிகளின் விஷயம். இது 2-அத். 54-சுலோகத்தில் தெரிவித்த ஸ்திதப்ரஜ்ஞன் நிலை.

𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌤𑌪𑍋𑌯𑌜𑍍𑌞𑌾 𑌯𑍋𑌗𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌪𑌰𑍇 ।
𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌯𑌤𑌯𑌃 𑌸𑌂𑌶𑌿𑌤𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ॥ ௨௮

த்ரவ்யயஜ்ஞா ஸ்தபோயஜ்ஞா யோகயஜ்ஞா ஸ்ததாபரே,
ஸ்வாத்யாயஜ்ஞானயஜ்ஞாஶ்ச யதயஸ்ஸம்ஶிதவ்ரதா:. ௨௮

ద్రవ్యయజ్ఞా స్తపోయజ్ఞా యోగయజ్ఞా స్తథాపరే,
స్వాధ్యాయజ్ఞానయజ్ఞాశ్చ యతయ స్సంశితవ్రతాః. ౨౮

28. சிலர் த்ரவ்ய யஜ்ஞஞ்செய்வர். (மதுசூதன ஸரஸ்வதி அபிப்பிராயம்) அக்னியில் நெய்முதலிய த்ரவ்யங்களைவிட்டுச் செய்வது த்ரவ்ய யஜ்ஞம்.

15

அத்வைதம், விசிஷ்டாத்வைதம்.

யஜ்ஞவிஷயம் கீழ்த்தெரிவிக்கப்பட்டது. ஆகையால் தேசகாலபாத்ரங்கள் லபிக்கும்போது த்ரவ்யம் கொடுத்தல் திரவ்ய யஜ்ஞம். சிலர் தபோயஜ்ஞம் = கிருச்ரசாந்த்ராயணாதிவிரதங்கள், சிலர் யோகயஜ்ஞம்.

த்வைதம்.

யோகமெனின் த்யானம்.

விசிஷ்டாத்வைதம்.

யோகம் எனின் சேருதல். எங்கெங்கேசேரவேண்டுமோ அங்கே சேருதல் எனின் யாத்திரைசெய்தல் யோகயஜ்ஞம். சிலர் ஸ்வாத்யாயம் எனின் வேதாத்யயனம். பொருள்தெரிந்துக்கொள்ளாமல் அத்யயனம் செய்யின் பிரயோசனம் இல்லையென்று சிலர் ஞானயஜ்ஞம் எனின் வேதார்த்தவிசாரம் செய்வர். இவையெல்லாம் யத்னத்தால் உண்டாகும்.

𑌅𑌪𑌾𑌨𑍇 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌽𑌪𑌾𑌨𑌂 𑌤𑌥𑌾𑌪𑌰𑍇 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌗𑌤𑍀 𑌰𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 ॥
𑌅𑌪𑌰𑍇 𑌨𑌿𑌯𑌤𑌾𑌹𑌾𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ।
𑌸𑌰𑍍𑌵𑍇𑌽𑌪𑍍𑌯𑍇𑌤𑍇 𑌯𑌜𑍍𑌞𑌵𑌿𑌦𑍋 𑌯𑌜𑍍𑌞𑌕𑍍𑌷𑌪𑌿𑌤𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 ॥
𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌮𑍃𑌤𑌭𑍁𑌜𑍋 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ।
𑌨𑌾𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌯𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌕𑍁𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌃 𑌕𑍁𑌰𑍁𑌸𑌤𑍍𑌤𑌮 ॥

அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேபானந் ததாபரே,
ப்ராணாபானகதீ ருத்வா ப்ராணாயாமபராயணா:. ௨௯
அபரே நியதாஹாரா: ப்ராணாந் ப்ராணேஷு ஜுஹ்வதி,
ஸர்வேப்யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞக்ஷபிதகல்மஷா:. ௩௦
யஜ்ஞஶிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதநம்,
நாயம்லோகோஸ்த்யயஜ்ஞஸ்ய குதோந்ய: குருஸத்தம. ௩௧

అపానే జుహ్వతి ప్రాణం ప్రాణేఽపానం తథాపరే,
ప్రాణాపానగతీ రుద్ధ్వా ప్రాణాయామపరాయణాః. ౨౯
అపరే నియతాహారాః ప్రాణాన్ ప్రాణేషు జుహ్వతి,
సర్వేఽప్యేతే యజ్ఞవిదో యజ్ఞక్షపితకల్మషాః. ౩౦
యజ్ఞశిష్టామృతభుజో యాన్తి బ్రహ్మ సనాతనమ్,
నాయం లోకోఽస్త్యయజ్ఞస్య కుతోఽన్యః కురుసత్తమ. ౩౧

29. 30. 31. (29-முதல் 31) வரையில். (விசேஷபுத்தியில்லாவிடினும் சீக்ரபலப்ரதமாதலினாலும் சிலர்) பிராணாயாமமே முக்யமாயுள்ள சிலர்ஆஹார நியமத்துடன் அபானத்தில் பிராணத்தை ஹோமம் செய்கின்றனர். மற்றும் சிலர் பிராணத்தில் அபானத்தினை ஹோமம்செய்கின்றனர். மற்றுஞ் சிலர் பிரா

ஞுபானங்களை இரண்டுமார்க்கங்களிலும் பந்தித்து பிராணத்தில் ஹோமம் செய்கின்றனர்.

அரு—எல்லாவற்றிற்கும் பலம் ஒன்றுதானு?

கிரு—இவர்களெல்லாம் யஜ்ஞத்தை யறிந்தவர்களாய் யஜ்ஞத்தால் பாபம் நசித்தவராய் யஜ்ஞசேஷமான அமிர்தத்தைப்புசித்து சாச்வதமான பிரமத்தை அடைகின்றனர்.

அரு—இந்தக்கர்மத்தில் எதுவும் செய்யாதபக்ஷத்தில் என்னகதி.?

கிரு—இஹபரங்களுக்கு அந்நியனுய் நசித்துப்போவன்.

விசிஷ்டாத்வைதம்.

இவ்வகைப்பட்டயஜ்ஞம் செய்யாதவருக்குத் தர்மார்த்த காமங்களே இல்லை. இனி மோக்ஷம் எப்படிவரும். இந்தச்சுலோகத்தில் குருஸத்தம எனக்கிருஷ்ணன் அழைத்தபடியால் பெரிய குருமஹாராஜன் வம்சத்தில் ஜன்மித்த நீ அவ்வாறு கெட்டுப்போகாதே என்று கருத்து.

𑌏𑌵𑌂 𑌬𑌹𑍁𑌵𑌿𑌧𑌾 𑌯𑌜𑍍𑌞𑌾 𑌵𑌿𑌤𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌮𑍁𑌖𑍇 ।

𑌕𑌰𑍍𑌮𑌜𑌾𑌨𑍍 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍇𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 ॥

ஏவம் பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே, ௩௧

கர்மஜா ந்வித்தி தாந் ஸர்வா நேவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே. ௩௨

ఏవం బహువిధా యజ్ఞా వితతా బ్రహ్మణో ముఖే,

కర్మజా న్విద్ధి తాన్ సర్వా నేవం జ్ఞాత్వా విమోక్ష్యసే. ౩౨

த்வைதம்.

32. அரு—இந்தச் சில்லரை காரியங்களுக்கும் சந்தோஷமா?

கிரு—இவை பரப்பிரமத்தில் சேரும்.

அத்வைதம்.

அரு—சௌகர்யத்திற்காகக் கூறினுயா?

கிரு—அன்று, வேதத்திலிருக்கிறது.

விசிஷ்டாத்வைதம்.

அரு—சுத்தாத்மாவல்லவா வேண்டியது?

கிரு—பிரம்மத்திற்கு முகத்வாரமாகும்.

த்வைதம், அத்வைதம்.

அரு—இந்தப்பன்னிரண்டில் எந்தக்கர்மமாயினும் செய்கின்றேன். யுத்தஞ் செய்யேன்.

கிரு—கர்மம் செய்தாலன்றோ இது நடக்கும்.

விசிஷ்டாத்வைதம்.

கிரு—நிவிருத்திகர்மமார்க்கத்தை அறிந்தாயல்லவா. இனி கர்மம்செய்.

அரு—நீசொன்னபன்னிரண்டில் சேராமையால் சந்தியாவந்தனுதிகளை விட்டுவிடுகிறேன்.

கிரு—கீழுள்ள கார்யங்களைச்செய்தே, மேலேயுள்ளகார்யங்களுக்கு வரவேண்டும். ஸந்தியாவந்தனுதி நித்யகிருத்யங்களைச்செய்யாதவன் இப்படிப்பட்ட யஜ்ஞங்களுக்கு அநதிகாரியாய் பிரஷ்டனுவான்.

𑌶𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌯𑌾 𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌜𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ।
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌖𑌿𑌲𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 ॥

ஶ்ரேயாந் த்ரவ்யமயா த்யஜ்ஞாத் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப,
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே. ௩௩

శ్రేయాన్ ద్రవ్యమయా ద్యజ్ఞాత్ జ్ఞానయజ్ఞః పరంతప,
సర్వం కర్మాఖిలం పార్థ జ్ఞానే పరిసమాప్యతే. 33

33. அரு—2, 3, 4, அத்யாயங்களில் தெரிவித்தகருமம் சிரேஷ்டமானதாக இருக்கிறதே.

கிரு—அவ்வாறுஎண்ணுதே. ஞானம் உண்டாதற்கன்றோ கர்மம்செய்வது. கர்மம் சாதனம். ஞானம் பலம். ஞானத்திற்கனதிகாரிகள் கர்மஞ்செய்யவேண்டியவராவர். கர்மமே சிறந்ததென்று பாவிக்காதே.

𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌾𑌤𑍇𑌨 𑌪𑌰𑌿𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍇𑌨 𑌸𑍇𑌵𑌯𑌾 ।
𑌉𑌪𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨 𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥ ௩௪

தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா,
உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிந ஸ்தத்வதர்ஶிந:. ௩௪

తద్విద్ధి ప్రణిపాతేన పరిప్రశ్నేన సేవయా,
ఉపదేక్ష్యన్తి తే జ్ఞానం జ్ఞానిన స్తత్త్వదర్శినః. 34

34. கிரு—அர்சுன ! நீபிரமித்ததுபோல கர்மயோகம் ஞானயோகத்திலும் சிரேஷ்டதர மானதன்று. ஞானம் உண்டாகவேண்டுமென்றே யல்லவா கர்மத்தைச்செய்யவேண்டியிருக்கும். ஆகையால் ஞானம் முக்யமென்று அறிந்துகொள்.

அரு—ஞானம் யாரைக்கேட்டால் தெரியும் ?

கிரு—ஆத்மஸ்வரூபமறிந்த ஞானிகளைக் கேட்கின் கூறுவர்.

அத்வைதம்.

ஞானவான்களான சிலர் தத்வத்தை அறியார் ஆகலால் தாம் தர்சித்து தரிசிக்கச்செய்பவரைக்கேட்கின் தெரியும். அப்படிப்பட்டவர்க்கு நமஸ்காரஞ்செய்து பிரச்னைசெய்து சிச்ருஷைசெய்து தெரிந்துகொள்.

𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌪𑍁𑌨𑌰𑍍𑌮𑍋𑌹 𑌮𑍇𑌵𑌂 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 ।
𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾 𑌨𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮 𑌨𑍍𑌯𑌥𑍋 𑌮𑌯𑌿 ॥

யஜ்ஜ்ஞாத்வா ந புநர்மோஹ மேவம் யாஸ்யஸி பாண்டவ,
யேந பூதா ந்யஶேஷேண த்ரக்ஷ்ய ஸ்யாத்ம ந்யதோ மயி. ௩௫

యజ్జ్ఞాత్వా న పునర్మోహ మేవం యాస్యసి పాండవ,
యేన భూతా న్యశేషేణ ద్రక్ష్య స్యాత్మ న్యథో మయి. ౩౫

35. அரு—ஞானயோகம் இவ்வளவு சிரமப்பட்டுத்தெரிந்துகொள்ளவேண்டியதா ?

கிரு—அந்தச்சங்கதி தெரிந்தபிறகு அது முக்கியமானதென்று உனக்கே தெரியும்.

த்வைதம்.

மோஹநிவர்த்தியான பிறகு அஞ்ஞானத்தால் எல்லாவற்றிற்கும் நானே ஆதாரமென்று அறிவாய்.

அத்வைதம்.

சராசரபூதங்களனைத்தும் மித்யாபூதங்களென்றும், பிரமம் ஒன்றே சத்யமென்றும் தெரிந்துகொள்வாய். ஞானம் முதிர்ந்தபிறகு என்னிடத்தில் சேர்தலைக்காண்பாய். பரப்பிரமத்தில் என்று கருத்து.

விசிஷ்டாத்வைதம்.

பிரகிருதிஸம்பந்தமில்லாத ஆத்மாக்கள் அனைத்தும் அந்யோன்யம் துல்யமென்றும், சர்வேச்வரனுக்குச் சமானமென்றும் தெரிந்து கொள்வாய். ஞானம் முதிர்ந்த பிறகு இவ்வாறு தோன்றும்.

𑌅𑌪𑌿 𑌚𑍇𑌦𑌸𑌿 𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑍍𑌤𑌮𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌲𑌵𑍇𑌨𑍈𑌵 𑌵𑍃𑌜𑌿𑌨𑌂 𑌸𑌨𑍍𑌤𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 ॥ ௩௬

அபி சேதஸி பாபேப்ய ஸ்ஸர்வேப்ய: பாபக்ருத்தம:,
ஸர்வம் ஜ்ஞாநப்லவே னைவ வ்ருஜிநம் ஸந்தரிஷ்யஸி. ௩௬

అపి చేదసి పాపేభ్య స్సర్వేభ్యః పాపకృత్తమః.
సర్వం జ్ఞానప్లవే నైవ వృజినం సన్తరిష్యసి. ౩౬

36. அரு—இங்கு மேலே கூறப்பட்ட விஷயங்கள் யாருக்கு அருகமானவை. நான் மிகுந்த பாபியாகையால் எனக்கு அருகமில்லை என்று எண்ணுகிறேன்.

கிரு—நீ அப்படிப்பட்ட பாபிஅல்ல. அப்படிப்பட்டபாபியும்கூட பயப்பட அவசரமில்லை. நீ பாபிகளைப்பார்க்கினும் பாபியாயிருக்கினும் பயப்படாதே. பாபமெனும் கடலை ஞானமெனும் கப்பலால் தாண்டுவாய். மோக்ஷத்தையடைவாய்.

𑌯𑌥𑍈𑌧𑌾𑌂𑌸𑌿 𑌸𑌮𑌿𑌦𑍍𑌧𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌤𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌤𑌥𑌾 ॥ ௩௭

யதைதாம்ஸி ஸமித்தோக்நி ர்பஸ்மஸா த்குருதேர்ஜுந,
ஜ்ஞாநாக்நி ஸ்ஸர்வகர்மாணி பஸ்மஸா த்குருதே ததா. ௩௭

యథైధాంసి సమిద్ధో௨గ్ని ర్భస్మసా త్కురుతే௨ర్జున,
జ్ఞానాగ్ని స్సర్వకర్మాణి భస్మసా త్కురుతే తథా. 3౭

37. அரு—சமுத்திரத்தின் இந்தக்கரையைத்தாண்டி அந்தக்கரையையடையினும் சமுத்திரமென்னமோ இருப்பதுபோலவே இருக்குமல்லவா, அவ்வாறே ஞானமென்கிற கப்பலால் பாபக்கடலைத்தாண்டினும் மோக்ஷம் அடைந்தாலும் பாபம் அவ்வாறே நிலைத்திருக்குமா ?

கிரு—செம்மையாய் எரிகின்ற தீ கட்டைகளை பஸ்மம்செய்வதுபோல ஞானக்னி சகல பாபங்களையும் பஸ்மம் செய்யும். நெருப்புக் கொஞ்சமாயிருக்கின் ஆறிப்போகும். அதிகமாயிருக்கின் எரியும். ஆகையால் பாபங்களை நீறுக்குவதற்கு ஞானக்னியைச் செம்மையாய் எரியச்செய்யவேண்டும்.

𑌨 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌸𑌦𑍃𑌶𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌹 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌯𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌕𑌾𑌲𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 ॥ ௩௮

நஹி ஜ்ஞாநேந ஸத்ருஶம் பவித்ர மிஹ வித்யதே.
தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேநாத்மனி விந்ததி. ௩௮

నహి జ్ఞానేన సదృశం పవిత్ర మిహ విద్యతే,
తత్స్వయం యోగసంసిద్ధః కాలేనాత్మని విన్దతి. 3౮

38. அரு—கங்காதி புண்யநதிஸ்நானங்களால் பாபம் சமிக்காதா ?

கிரு—கங்கைமுதலிய நதிகளில் ஸ்நானஞ் செய்வதால் பாபம் நீங்கினும் புண்யமதிகமாகும். (பாபத்தைப்போலவே புண்யம்கூட மோக்ஷவிரோதியாகும். துருவனுக்குப் புண்யமேயன்றோ மோக்ஷத்திற்குத்தடைப்பட்டது) 2-அத். 50 சுலோ. புத்தியுள்ளவன் சுக்ருத துஷ்கிருதங்களை விடுவன் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் கங்காதி நதிஸ்நானங்களால் புண்யமதிகப்படும். ஆகையால் மோக்ஷம் உண்டாகாது.

அரு—ஞானம் வேண்டுமே ?

கிரு—இவ்வளவு சீக்கிரத்தில் பிராப்தியாகாது. நான் ஞானத்தைச் சம்பாதியென்று சொல்லுகிறேன் அன்றி அது பூர்வச் செயலின் மூலமாய் உண்டாக வேண்டும்.

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑍍 𑌲𑌭𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌤𑍍𑌪𑌰𑌸𑍍𑌸𑌂𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑌰𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ௩௯

ஶ்ரத்தாவாந் லபதே ஜ்ஞாநம் தத்பர ஸ்ஸம்யதேந்த்ரிய:,
ஜ்ஞாநம் லப்த்வா பராம் ஶாந்தி மசிரேணாதிகச்சதி. ௩௯

శ్రద్ధావాన్ లభతే జ్ఞానం తత్పర స్సంయతేన్ద్రియః,
జ్ఞానం లబ్ధ్వా పరాం శాన్తి మచిరేణాధిగచ్ఛతి. 3౯

39. ஞானத்தையே முக்யமாய் ஆச்ரயித்து ச்ரத்தையுள்ளவனாய் இந்திரிய நிக்ரஹம் செய்பவன் ஞானத்தை யடைவன். ஞானத்தையடைந்த பிறகு உத்கிருஷ்டமான சாந்தியை (மோக்ஷத்தை) சீக்கிரமாக அடைகிறான்.

𑌅𑌜𑍍𑌞𑌶𑍍𑌚𑌾𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌶𑍍𑌚 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌨𑌾𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨𑌪𑌰𑍋 𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

அஜ்ஞஸ்சாஸ்ரத்ததாநஸ்ச ஸம்ஸயாத்மா விநஸ்யதி,
நாயம் லோகோஸ்தி நபரோ ந ஸுகம் ஸம்ஸயாத்மந:. ௪௦

అజ్ఞశ్చాశ్రద్ధధానశ్చ సంశయాత్మా వినశ్యతి,
నాయం లోకోఽస్తి నపరో న సుఖం సంశయాత్మనః. ౪౦

40. ஆத்மஞான மில்லாதவனும் சிரத்தையில்லாதவனும் சம்சயம் உள்ளவனும் நசிப்பன். அப்படிப்பட்ட சம்சயமுள்ளவனுக்கு இகலோக பரலோகங்களில்லை. சுகமும் இல்லை.

𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌮𑍍 ।
𑌆𑌤𑍍𑌮𑌵𑌨𑍍𑌤𑌂 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌧𑌨𑌂𑌜𑌯 ॥ ௪௧

யோகஸந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்சிந்நஸம்ஸயம்,
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய. ௪௧

యోగసన్న్యస్తకర్మాణం జ్ఞానసఞ్ఛిన్నసంశయమ్,
ఆత్మవన్తం న కర్మాణి నిబధ్నన్తి ధనఞ్జయ. ౪౧

விசிஷ்டாத்வைதம்.

41. (6-அத். 27-சுலோ. போல சர்வகர்மங்களையும் பகவதர்ப்பணஞ்செய்து கொண்டு, 6-அத். 22-சுலோ. போல வேறுசிந்தை யில்லாமல் பகவானை த்யானித்துக்கொண்டு உபவாசம் செய்து கொண்டிருக்கவேண்டுமென்று சொல்லப் பட்டதுபோல) தனஞ்ஜயா! யோகத்தால் ஞானரூபமான கர்மயோகம் உண்டாகி ஆத்மஞானத்தால் ஆத்மவிஷயமான சம்சயம்நீங்கின் திருடச்சித்தம் உள்ளவனை கர்மங்கள் பந்திக்கா.

அத்வைதம்.

பரமார்த்தஞானத்தால் தர்மாதர்மரூபங்களாகும் கர்மங்களை விட்டவனும் ஆத்மாவும் ஈஸ்வரனும் ஒருவன் எனும் ஞானத்தால் சந்தேகம் நீங்கினவனும் ஆத்மவந்தனும் எனின் குற்றம் இல்லாதவனுகும் அவனை சத்வாரஜஸ்தமோகுணவியாபாரரூபங்களான கர்மங்கள் பந்திக்கா.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌥𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑌿𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌸𑌂𑌶𑌯𑌂 𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑌿𑌷𑍍𑌠𑍋𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌭𑌾𑌰𑌤 ॥ ௪௨

தஸ்மா தஜ்ஞாநஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் ஜ்ஞாநாஸிநாத்மந:,
சித்வைநம் ஸம்ஶயம் யோக மாதிஷ்டோத்திஷ்ட பாரத. சஉ

తస్మా దజ్ఞానసమ్భూతం హృత్స్థం జ్ఞానాసినాzత్మనః,
ఛిత్త్వైనం సంశయం యోగ మాతిష్ఠోత్తిష్ఠ భారత. ౪౨

42. கிரு—ஆகையால் அஞ்ஞானத்தாலுண்டாகி ஹ்ருதயத்தில் நிலைத்துள்ள இந்த ஆத்மவிஷயமான சந்தேஹத்தைச் சேதித்து விடு.

அரு—எதினுல் சேதிக்கவேண்டும்?

கிரு—ஆத்மஞான மெனும் கத்தியால்சேதி. கர்மயோகம் செய்.

அரு—எனக்கொன்றும் தோன்றவில்லை.

கிரு—பாரதா எழுந்திரு, (இந்தச்சுலோகத்தில் பாரதா என்று விளித்ததால் பரதவம்சத்தில் பிறந்தாய் ஆதலால் யுத்தம் செய்யவேண்டியவனுயிருக்கின்றாய். யோசிக்காதை யென்பது கருத்து.)

இது ப்கவத்கீதா உபநிஷத்து ப்ரம்மவித்யாயோகசாஸ்திரத்தில்
கிருஷ்ணார்ச்சுனசம்வாதத்தில் ஞானயோகம் என்கிற
நான்காவது அத்யாயம், முற்றுப்பெற்றது.



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாய பரப்ரம்மணே நம:.

# ஸ்ரீ பகவத் கீதை

## கர்மஸந்நியாஸ யோகம்.

### ஐந்தாவது அத்யாயம்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍁𑌨𑌰𑍍𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌶𑌂𑌸𑌸𑌿 ।
𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯 𑌏𑌤𑌯𑍋𑌰𑍇𑌕𑌂 𑌤𑌨𑍍𑌮𑍇 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌮𑍍 ॥ க

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑌶𑍍𑌚 𑌨𑌿𑌃𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌕𑌰𑌾𑌵𑍁𑌭𑍌 ।
𑌤𑌯𑍋𑌸𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍋 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ।
𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌸 𑌨𑌿𑌤𑍍𑌯𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌯𑍋 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 ॥
𑌨𑌿𑌰𑍍𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍋 𑌹𑌿 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌸𑍁𑌖𑌂 𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇

ஸந்யாஸம் கர்மணும் க்ருஷ்ண புநர்யோகஞ் ச ஶம்ஸஸி,
யச்ரேய ஏதயோ ரேகம் தந்மே ப்ரூஹி ஸுநிஶ்சிதம். க
ஸந்யாஸ: கர்மயோக ஶ்ச நிஶ்ரேயஸகரா வுபௌ,
தயோஸ்து கர்மஸந்யாஸா த்கர்மயோகோ விஶிஷ்யதே. உ
ஜ்ஞேய ஸ்ஸ நித்யஸந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி,
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத்ப்ரமுச்யதே. ௩

సన్న్యాసం కర్మణాం కృష్ణ పునర్యోగం చ శంససి,
యచ్ఛ్రేయ ఏతయో రేకం తన్మే బ్రూహి సునిశ్చితమ్. ౧
సన్న్యాసః కర్మయోగ శ్చ నిశ్శ్రేయసకరా వుభౌ,
తయోస్తు కర్మసన్న్యాసా త్కర్మయోగో విశిష్యతే. ౨
జ్ఞేయ స్స నిత్యసన్న్యాసీ యో న ద్వేష్టి న కాంక్షతి,
నిర్ద్వన్ద్వో హి మహాబాహో సుఖం బన్ధాత్ప్రముచ్యతే. ౩

அருச்சுநன் கூறுதல்.

த்வைதம்.

1. 2. 3. அரு—கர்மம் சன்னியாசம் இவற்றில் உயர்ந்ததெது? சிலவற்றை விடவேண்டுமென்றும், சிலவற்றைக்கொள்ளவேண்டுமென்று சொன்ன இரண்டில் முக்யமானதெது?

ஸ்ரீபகவான் கூறுதல்.

கிரு—4-அத். 22-சுலோ. போல் காமக்ரோதாதித்வந்தங்களை விடவேண்டுமாயினும் சொன்ன இரண்டு கார்யங்களையும் செய்யவேண்டும்.

அரு—கர்மத்தைச் செய்யவேண்டுமென்றாய். காமக்ரோதங்களை விடச் சொன்னாய். கர்மம் செய்கையில் காமக்ரோதாதிகள் சேருமல்லவா. ஏன் அதனை விடச்சொன்னாய்.

கிரு—மோக்ஷம் அடைவதற்கு கர்மத்தைச்செய்து ராகத்வேஷாதிகளை விடவேண்டும். (மருந்துசாப்பிடுதல் பத்யம் இவ்விரண்டும் முக்யமாயினும் பத்தியமிருந்தால் மருந்து விரைவில் ரோகத்தைக்கண்டிக்கும். இல்லாதபோது மருந்து ஆலஸ்யமாய் வேலைசெய்யும்.) அவ்வாறே காமக்ரோதங்களைவிட்டால் கர்மம் விரைவில் பலிக்கும். (இல்லாவிடின் மெதுவாகப்பலிக்கும் என்பது.)

அத்வைதம்.

கர்மஞ்செய்யென்றும், வேண்டாமென்றும் சொல்கின்றாய். எப்படியிரண்டும் செய்யமுடியும். இரண்டில் ஒன்றைச்செய்.

கிரு—கர்மம்செய்.

அரு—அது குறைந்ததல்லவா?

கிரு—ராகத்வேஷங்களை விட்டுக் கர்மம் செய்கிறவன் நித்யஸன்யாசி. அவனே மோக்ஷாருகன்.

விசிஷ்டாத்வைதம்.

ஞானயோகத்தையும் கர்மயோகத்தையும் செய்யென்கிறாய். இவ்விரண்டில் விரைவாய் ஆத்மபிராப்திக்குச்சாதனமான ஒன்றை மிகவுண்மையாக எனக்குச்சொல்.

கிரு—3-அத். 1-சுலோகத்திலும் சம்சயப்பட்டாய். மீண்டும் மீண்டும் சம்சயம் ஏன் அடைகின்றாய். ஞானகர்மயோகங்கள் இரண்டும் மோக்ஷஹேதுக்கள். அவ்விரண்டில் கர்மமே மேலானது. இந்த விஷயம் 6-அத். 1-சுலோகத்தில் கூறப்படும். ஓமஹாபாஹோ, எவன்த்வேஷம், ஆசையில்லாமல் த்வந்தமில்லாமல் இருக்கின்றானோ அவனே நித்யசன்யாசி என்று தெரிந்து கொள்ளவேண்டும். அவன் எளிதாய் சம்சாரத்திலிருந்து விடுவிக்கப்படுகிறான்.

ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: ।
ஏகமப்யாஸ்தித ஸ்ஸம்யகுபயோர்விந்ததே பலம் ॥ ௪

ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா:,
ஏக மப்யாஸ்தித ஸ்ஸம்ய குபயோ ர்விந்ததே பலம். ௪

సాఙ్ఖ్యయోగౌ పృథగ్బాలాః ప్రవదన్తి న పణ్డితాః,
ఏక మప్యాస్థిత స్సమ్య గుభయో ర్విన్దతే ఫలమ్. ౪

4. கிரு—ஞானயோகம், கர்மயோகம் வேறுயினவென்று, சிறுவர் (சம்பூர்ணஞானமில்லாதவர்கள்)சொல்லுவரன்றிப் பண்டிதர்கள் கூறுர். இவ்விரண்டில் ஒன்றையேனும் செம்மையாய் ஆசரித்தவன் ஒரே பலத்தை அடைவன்.

𑌯𑌤𑍍𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 ।
𑌏𑌕𑌂 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ ௫

யத்ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தானம் தத்யோகைரபி கம்யதே,
ஏகம் ஸாங்க்யஞ்ச யோகஞ்ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி. ௫

యత్సాంఖ్యైః ప్రాప్యతే స్థానం తద్యోగైరపి గమ్యతే,
ఏకం సాఙ్ఖ్యం చ యోగం చ యః పశ్యతి స పశ్యతి. ౫

5. அரு—வேறென்று கூறுவரே?

கிரு—இரண்டிற்கும் ஒரேபலம்.

அத்வைதம்.

கர்மம், ஞானத்தையுண்டாக்கி அதன் மூலமாய் மோக்ஷத்தையுண்டாக்கும்.

த்வைதம்.

கர்மத்திலிருந்து சாக்ஷாத்தாய் மோக்ஷத்திற்குப்போகலாகும்.

விசிஷ்டாத்வைதம்.

இரண்டிற்கும் ஒரேபலம் உண்டாம்.

ஒரேபலம் உண்டாதலால் கர்மஞானங்கள் ஒன்றே. இவ்வாறு தெரிந்துகொள்பவனே அறிந்தவன்.

𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌤𑍁 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍁𑌃𑌖𑌮𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑌯𑍋𑌗𑌤𑌃 ।
𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ ௬

ஸந்யாஸஸ்து மஹாபாஹோ து:க மாப்துமயோகத:,
யோகயுக்தோ முநிர் ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி. ௬

సన్న్యాసస్తు మహాబాహో దుఃఖ మాప్తు మయోగతః,
యోగయుక్తో ముని ర్బ్రహ్మ న చిరేణాధి గచ్ఛతి. ౬

6. அரு—ஒரேபலமுள்ள இவற்றில் எதையேனும் செய்யக்கூடாதா?

விசிஷ்டாத்வைதம்.

கிரு—கர்மயோகமில்லாமல் ஞானத்தை யடைதல் அசாத்யம். கர்மயோக சம்பன்னனுன முனிமாத்ரம் சீக்ரமாக ஆத்மாவையடைவான்.

அத்வைதம்.

கர்மயோகி பிரம்மஞானத்தை, எனின் சன்யாசத்தை யடைவான்.

த்வைதம்.

யோகமில்லாமல் மோக்ஷம் உண்டாகாது. சன்யாசிக்குக்காமாதிகளைச் செயித்தல் துக்கமே அன்றிவேறில்லை. யோகத்துடன் கூடினால்தான் சன்னியாசம் பெரும்பலத்தைத்தரும்.

𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌪𑌿 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 ॥

யோகயுக்தோ விஶுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய:,
ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வ ந்நபி ந லிப்யதே. எ

యోగయుక్తో విశుద్ధాత్మా విజితాత్మా జితేన్ద్రియః,
సర్వభూతాత్మభూతాత్మా కుర్వన్నపి న లిప్యతే. ౭

7. (பகவதாராதனரூபமான) கர்மயோகத்தில் நிஷ்டையுண்டாய்ப் பரிசுத்தமானமனம் உள்ளவனாய் மனோ இந்திரியங்களைச்செயித்து தன்ஆத்மாவையும் எல்லா ப்ராணிகளின் ஆத்மாக்களையும் ஏகரூப்மாய் எண்ணுகிறவன் கர்மங்கள் செய்யினும் அஹங்காராதிகள் அவனைத் தீண்டா.

விசிஷ்டாத்வைதம்.

தன் ஆத்மாவையும், சர்வபிராணிகளின் ஆத்மாக்களையும் ஏகரூபமாய் எண்ணுபவன் அஹங்காராதிகளால் தீண்டப்படான்.

அத்வைதம்.

தன்சரீரத்திலுள்ள ஆத்மாவும், எல்லாசரீரங்களிலுள்ள ஆத்மாவும் ஒன்றேயென்று அறிபவருக்குக் கர்மபந்தம் இல்லை.

த்வைதம்.

ஸர்வபூதங்களுக்குச் சுவாமியானவன் தனக்கும் ஸ்வாமியென்று அறிபவன் பந்தத்தை யடையான்.

𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍋𑌮𑍀𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑌨𑍍𑌯𑍇𑌤 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 ।
𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌶𑍃𑌣𑍍𑌵𑌨𑍍𑌸𑍍𑌪𑍃𑌶𑌨𑍍𑌜𑌿𑌘𑍍𑌰𑌨𑍍𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌸𑍍𑌵𑌪𑌨𑍍𑌶𑍍𑌵𑌸𑌨𑍍 ॥
𑌪𑍍𑌰𑌲𑌪𑌨𑍍 𑌵𑌿𑌸𑍃𑌜𑌨𑍍 𑌗𑍃𑌹𑍍𑌣𑌨𑍍𑌨𑍁𑌨𑍍𑌮𑌿𑌷𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌷𑌨𑍍𑌨𑌪𑌿 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤 𑌇𑌤𑌿 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍 ॥ கூ

நைவ கிஞ்சி த்கரோமீதி யுக்தோ மந்யேத தத்வவித்,
பஶ்யந் ஶ்ருண்வந் ஸ்ப்ருஶந் ஜிக்ரந்நஶ்னந்கச்சந் ஸ்வபந் ஶ்வஸந்.அ
ப்ரலபந் விஸ்ருஜந் க்ருஹ்ண ந்நுந்மிஷ ந்நிமிஷந்நபி,
இந்த்ரியா ணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயந். கூ

నైవ కిఞ్చిత్కరోమీతి యుక్తో మన్యేత తత్త్వవిత్.
పశ్యఞ్ శృణ్వఞ్ స్పృశఞ్ జిఘ్రన్నశ్నన్గచ్ఛఞ్ స్వపఞ్ శ్వసన్. ౮

ప్రలపన్ విసృజన్ గృహ్ణన్నున్మిషన్నిమిషన్నపి,
ఇన్ద్రియాణీన్ద్రియార్థేషు వర్తన్త ఇతి ధారయన్. ౯

8. 9. அரு—நான் செய்யும் கார்யங்களை நான் அல்லவென்று எவ்வாறு எண்ணலாகும்?

கிரு—நீ தூங்கியெழுந்ததுமுதல், பார்த்தல், கேட்டல், தொடுதல், வாசனை பார்த்தல், சாப்பிடல், மூச்சுவிடல், பேசல், விடுதல், கிரகித்தல், கண்களைத்திறத்தல், மூடுதல், இந்தப்பதின்மூன்று கார்யங்களும்கூட உன்னால்நடக்கவில்லையென்று எண்ணவேண்டும். 18-அத். 14-சுலோ. அவ்வாறு அனைத்திற்கும் பகவான் கர்த்தாவென்று எண்ணவேண்டும். இந்திரியங்கள் விஷயங்களில் பிரவேசிக்கும் இந்திரியங்களுக்கு நியாமகன்பகவான் என்றும் அறியவேண்டும். இவ்வாறு எண்ணுதலால் நிவர்த்திமார்க்கம் அநுசரிக்கலாகும். கர்மத்தைச்செய்து அஹங்காரத்தைவிடவேண்டும்.

ஸ்ரஹ்மண்யாயாய கஃமாணி ஸஜ்ஞம் தூக்ஷா கரோதி யஃ ।
ஸிவ்யதெ நஸ பாவெந வக்ஷவக்ஷமிவாம்ஹஸா ॥ கo

ப்ரஹ்மண்யாத்யாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய:,
லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா. கo

బ్రహ్మణ్యాధాయ కర్మాణి సఙ్గం త్యక్త్వా కరోతి యః,
లిప్యతే న స పాపేన పద్మపత్రమివామ్భసా. ౧౦

10. அரு—இந்தக்கர்மங்கள் எவர்களால்நடக்கும் என்று எண்ணவேண்டும்.

த்வைதம், அத்வைதம்.

பிரம்மத்தால் என்று எண்ணவேண்டும்.

விசிஷ்டாத்வைதம்.

பிரகிருதியிலுள்ள மூன்றுகுணங்களால் ஏற்பட்டு செய்யப்படுகின்றனவென்று எண்ணவேண்டும்.. 3-அத். 28-சுலோ. இல், பிரகிருதிக்கே கர்த்திருத்வமென்று சொல்லப்படவில்லையா?

(மேலதுபோலெண்ணி பலாசக்தியில்லாமல் கர்மஞ்செய்பவனைத தாமரையிலையினீர்போல பாபங்கள் தீண்டா)

காயெந உநஸா வுஜ்ஜா கெவலெரிந்திரியெரபி ।
யொகிநஃ கஃ குவந்தி ஸஜ்ஞம் தூக்ஷா஽஽த்மஶுஜயெ ॥ கக

காயேந மநஸா புத்யா கேவலை ரிந்த்ரியைரபி,.
யோகிந: கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்மஶுத்தயே. கக

కాయేన మనసా బుద్ధ్యా కేవలైరిన్ద్రియైరపి,
యోగినః కర్మ కుర్వన్తి సఙ్గం త్యక్త్వాzzత్మశుద్ధయే. ౧౧

11. அரு—ஜனங்களெல்லாம் இவ்வாறு செய்வார்களா?

கிரு—யோகிகள், சரீரம் மனே புத்திகள்போன்ற இந்திரியங்களால் பலா சக்தியைவிட்டு ஆத்மசுத்திக்காக யோகம் செய்கின்றனர்.(3-அத்.20-சுலோகம்) இல் ஜநகாதியர் எனின் க்ஷத்ரியர்கள் செய்தார்கள் என்று இறந்தகாலசங்கதி கூறப்பட்டது. இப்போது யோகியரும் நிகழ்காலத்துச் செய்கின்றாரென்று கூறப்பட்டது.

യുക്തഃ കർമ്മഫലം ത്യക്ത്വാ ശാന്തിമാപ്നോതി നൈഷ്ഠികീം ।
അയുക്തഃ കാമകാരേണ ഫലേ സക്തോ നിബധ്യതേ ॥ ൧൨

யுக்த: கர்மபலம் த்யக்த்வா ஶாந்தி மாப்னோதி நைஷ்டிகீம்,
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே. ௧௨

యుక్తః కర్మఫలం త్యక్త్వా శాన్తి మాప్నోతి నైష్ఠికీమ్,
అయుక్తః కామకారేణ ఫలే సక్తో నిబధ్యతే. ౧౨

12. அரு—கர்மம் கெட்டதாக இருக்கிறதே?

கிரு—கர்மத்திற்கு ராகத்வேஷமில்லை.

அரு—ஒருவனுக்கு நல்ல பலம் மற்றொருவனுக்குக் கெட்டபலமும் தருகிறதே.

கிரு—பலங்களையெண்ணுமல் ஞானநிஷ்டையால் நிவர்த்திகர்மஞ்செய்யின் ஸ்திரபுத்தியுண்டாம். காமநிற்பந்தத்தால் ஆசைப்பட்டுப் பாழாக்கின் கெடும். 4-அத். 11-சுலோ. போல, எதைக்கேட்கினும் அதைக்கொடுப்பதற்கு தெய்வம் சித்தமாக இருக்கிறது. அபிஸந்தி பேதமே இல்லாமல் கர்மத்தை நிந்திக்காதே.

സർവ്വകർമ്മാണി മനസാ സന്ന്യസ്യാഽഽസ്തേ സുഖം വശീ ।
നവദ്വാരേ പുരേ ദേഹീ നൈവ കുർവ്വന്ന കാരയൻ ॥ ൧൩

ஸர்வகர்மாணி மனஸா ஸந்யஸ்யாஸ்தே ஸுகம் வஶீ,
நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வந்நகாரயந். ௧௩

సర్వకర్మాణి మనసా సన్న్యస్యాzz స్తే సుఖం వశీ,
నవద్వారే పురే దేహీ నైవ కుర్వన్న కారయన్. ౧౩

த்வைதம்.

13. சர்வகர்மங்களையு மீச்வரன் மீதிட்டு மனதையுமிந்திரியங்களையும் ஸமர்ப்பணஞ்செய்யின் நவத்வார புரத்திலிருக்கலாம். அதிகத்வாரமுள்ள பட்டணத்தில் ஸௌக்யம் அதிகமாகயிருக்கும்.

அத்வைதம்.

வித்வத்பரம், கர்மம் செய்தவன் அனைத்தையும் விடலாம். கர்த்திருத்வ, காரயித்வம் இல்லாதிருக்கலாம். ஞானயோகநிஷ்டனும் கர்மம் செய்ய வேண்டும்.

விசிஷ்டாத்வைதம்.

கர்மங்களை இந்தப் பிரகிருதிவிகாரமான சரீரம் செய்யுமென்று எண்ண வேண்டும். பிரகிருதி, சரீரத்தில் நவத்வாரங்கள் ஏற்படுத்தி கார்யங்கள் செய்கின்றதென்று, பிரகிருதி சரீரத்தினால் சுகதுக்கங்கள் அநுபவிக்கிறேனென்று எண்ணுதலால் ஆத்மாவிற்குச் சுகமுண்டாம்.

𑌨 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌸𑍃𑌜𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ।
𑌨 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌸𑌂𑌯𑍋𑌗𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥ ௧௪

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு:,
நகர்மபல ஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே. ௧௪

న కర్తృత్వం న కర్మాణి లోకస్య సృజతి ప్రభుః,
నకర్మఫల సంయోగం స్వభావస్తు ప్రవర్తతే. ౧౪

14. அரு—கர்மபலம் சம்பாதிக்க சக்தியில்லையா? ஆத்மாவிற்குக் கர்த்ருத்வம், கர்மங்களைச்செய்தல் அனைத்தும் இருக்கின்றனவே.

கிரு—இவன் அல்லன் ஸ்வபாவம். ஈஸ்வரன்,ஸ்வபவதி = அவனேபிறப்பன். ஸ்வம்பாவதி = ஜீவாத்மாவைச்சிருட்டிப்பன் ஆதலால் அனைத்தும் ஈஸ்வராதீனம். அத்வைதம், விசிஷ்டாத்வைதம் பிரகிருதி செய்கின்றது.

𑌨𑌾𑌦𑌤𑍍𑌤𑍇 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 𑌨 𑌚𑍈𑌵 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 𑌵𑌿𑌭𑍁𑌃 ।
𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑍇𑌨 𑌮𑍁𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃 ॥ ௧௫

நாதத்தே கஸ்ய சித்பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு:,
அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:. ௧௫

నాదత్తే కస్య చిత్పాపం న చైవ సుకృతం విభుః,
అజ్ఞానేనావృతం జ్ఞానం తేన ముహ్యన్తి జన్తవః. ౧౫

15. அரு—அவ்வாறுயின் சரீரத்துடன் சம்பந்தித்த, 15-கார்யங்களும்கூட ஜீவாத்மாவிற்கு அதிகாரமில்லையா?

கிரு—ஜீவன் தன் பெண்டுபிள்ளைகளுக்குண்டான அநிஷ்டாதிகளை,தன் சத்துருக்களா யிருப்பவரின் சுகிர்தபலங்களைப் போக்கடிக்கமுடியுமா?

அரு—கூடாது.

கிரு—ஆகையாற்றான் சுவதந்திர ஹீனனென்று எண்ணு. ஆத்மாவிற்குச் சுகதுக்கங்களினாலேயே துக்கம் உண்டாம்.

அரு—அவன் என் அவ்வாறுசெய்வான்?

கிரு—அவன்கர்மம்.

𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌤𑍁 𑌤𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌨𑌾𑌶𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌤𑍇𑌷𑌾𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑌿 𑌤𑌤𑍍𑌪𑌰𑌮𑍍 ॥ ௧௬

ஜ்ஞானேன து ததஜ்ஞானம் யேஷாம் நாஶித மாத்மனம்,
தேஷா மாதித்யவத்ஜ்ஞானம் ப்ராகாஶயதி தத்பரம். ௧௬

జ్ఞానేన తు తదజ్ఞానం యేషాం నాశిత మాత్మనామ్,
తేషా మాదిత్యవద్ జ్ఞానం ప్రకాశయతి తత్పరమ్. ౧౬

16. அரு—நீசொன்னபிறகே எனக்கு இந்தச்சங்கதிகள் தெரியும். முன் பேன்தெரியவில்லை.

கிரு—எனக்கும் உனக்கும் ஞானம் இருக்கிறது. உன்ஞானம் மூடப்பட்டிருக்கிறது. (கூட்டில் தீபத்தையிட்டு அதை ஒருகூடையால்மூடின் எவ்வாறு இருள் உண்டாமோ அவ்வாறு மறைந்திருக்கிறது. எனக்கு மாயாசம்பந்த மில்லாமையால் அனைத்தும் எனக்கு விளங்கும்.

அரு—அந்த விளக்குத்தெரிய என்னசெய்ய வேண்டும் ?

கிரு—ஞானம் அஞ்ஞானத்தைப் போக்கடித்து பரபிரமத்தைத் தெரிவிக்கும். ஆதித்யவத் = மேகங்களால் மறைக்கப்பட்டிருந்து அவற்றால்விடப்பட்ட சூர்யன், தான் அந்தகாலத்தில் எவ்விடத்தி லிருக்கவேண்டியதோ அவ்விடத்திலே காணப்படுவன்.மேகங்கள்நீங்க மீண்டும் புதிதாக உதயமாகானன்றோ அவ்வாறே ஞானம் எப்போதும் இருக்கிறது மாயைநீங்கினஉடன் பிரகாசிக்கும்.

த்வைதாத்வைதம்.

இந்த ஞானம் பரப்ரம்மத்தைத் தெரிவிக்கும்.

விசிஷ்டாத்வைதம்.

மறைவுநீங்கின் தீபம் விளங்குவது போல பிரகிருதிபந்தம் நீங்க ஞானம் விளங்கும்.

തദ്ബുദ്ധയ സ്തദാത്മാന സ്തന്നിഷ്ഠാ സ്തത്പരായണാഃ ।
ഗച്ഛന്ത്യപുനരാവൃത്തിം ജ്ഞാനനിർധൂതകല്മഷാഃ ॥ ൧൭

தத்புத்தயஸ்ததாத்மானஸ்தந்நிஷ்டாஸ்தத்பராயணா:,
கச்சந்த்யபுனராவ்ருத்திம் ஜ்ஞானநிர்த்தூதகல்மஷா:. கஎ

తద్బుద్ధయ స్తదాత్మాన స్తన్నిష్ఠా స్తత్పరాయణాః,
గచ్ఛన్త్యపునరావృత్తిం జ్ఞాననిర్ధూతకల్మషాః. ౧౭

17. அரு—அப்போது என்ன செய்யவேண்டும் ?

கிரு—ஞானத்தைச்சம்பாதி. அவ்விடத்திலேயே புத்தியைவை. மனதையும் அவ்விடத்திலேயேவை. எவ்வாறாயினும் சம்பாதிக்க வேண்டுமென்று கோரியிரு. அதுவே யாச்ரயமென்று எண்ணு. இவ்வாறுசெய்யின் ஞானம்உண்டாம் பாபம் நீங்கும் மோக்ஷம் உண்டாம்.

விசிஷ்டாத்வைதம்.

புனராவ்ருத்திரஹிதமான பிரகிருதிபந்தரஹித சுத்தாத்மஸ்வரூபம் லபிக்கும்.

த்வைதாத்வைதம்.

மோக்ஷம் உண்டாம்.

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 𑌗𑌵𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌿 ।
𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥ கஅ

வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி,
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டிதா ஸ்ஸமதர்ஶிந:. கஅ

విద్యావినయసంపన్నే బ్రాహ్మణే గవి హస్తిని,
శుని చైవ శ్వపాకే చ పండితా స్సమదర్శినః. ౧౮

18. கிரு—ஆத்மஞானிகள் வித்தையில் பயிற்சியுள்ளவர்களிடத்தும் படிப்பில்லாத பிராம்மணனிடத்தும், பசு யானை, நாய்களிடத்தும் நாய்தின்னும் சண்டாளனிடத்தும் கூட சமத்வத்தைக்காட்டுவர்.

த்வைதம்.

பகவான் எல்லா இடத்திலும் இருத்தலால் சமமாகபாவிக்கவேண்டும்.

அத்வைதம்.

எல்லாவற்றையும் பிரமமாகப்பாவிக்கவேண்டும். உத்தம, மத்யம, அதமங்களாகும், பசு, யானை, நாய்களிடத்து சமதர்சனம் உண்டாயிருக்கவேண்டும்.

விசிஷ்டாத்வைதம்.

கர்மத்தால் இவ்வளவு சன்மங்களாக இருந்தாலும் எல்லாவற்றிலிருக்கும் ஆத்மஞானஸ்வரூபமென்றும் பிரகிருதிக்கேபேதமென்றும் எண்ணவேண்டும்.

அரு—கீதைமோசமானது. கௌதமஸ்மிருதியில் அவரவர்களின் யோக்யதைக்குத்தக்கபடி பூசிக்கவேண்டுமென்றும், கடந்து நடக்கின் பாபமென்றும் கூறப்பட்டிருக்கிறது. கீதை இவைகளுக்கு விருத்தமாய்க்கூறுகின்றதே?

கிரு—இவ்வாறு எண்ணுதலால் இந்தச்சன்மத்திலேயே மோக்ஷம் உண்டாம். சூர்யன் கங்கையிலும், கிணற்றிலும், மூத்ரஜலத்திலும் காணப்படினும் அவனுக்குத்தோஷமில்லை. அவ்வாறே எல்லாசரீரங்களிலுமிருக்கும் ஆத்மாவிற்குப்பேதமில்லை. சூர்யன் பிரதிபலிக்கின்ற இடமென்று மூத்ராதிகளில் ஆசமனம் செய்யக்கூடாதவாறுபோல அந்தந்த ஜன்மங்களுக்குத்தக்கபடி பூஜிக்கவேண்டும். கர்மத்தைச் சாஸ்திர பிரகாரம் செய்யவேண்டும். ஞானத்தால் சமம் என்று எண்ணவேண்டும். கௌதம ஸ்மிருதிசொன்னது பூஜையெனின் கர்மவிஷயம். கீதையில் சொல்லப்பட்டசமத்வம் ஞானவிஷயம்.

𑌇𑌹𑍈𑌵 𑌤𑍈𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃 ।
𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌹𑌿 𑌸𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ॥

இஹைவ தைர்ஜித ஸ்ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மந:,
நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத்ப்ரஹ்மணி தே ஸ்திதா:. க௯

ఇహైవ తైర్జిత స్సర్గో యేషాం సామ్యే స్థితం మనః,
నిర్దోషం హి సమం బ్రహ్మ తస్మాద్బ్రహ్మణి తే స్థితాః. ౧౯

விசிஷ்டாத்வைதம்.

19. கிரு—யார்க்கு (ஆத்மாக்கள் எல்லாம் சமம் எனும் பாவத்தால் மனம் நிலைத்ததோ அவரால் கர்மாநுஷ்டான காலத்திலேயே சம்சாரம் ஜயிக்கப்பட்டது. பிரகிருதி சம்பந்ததோஷமில்லாத சமமான ஆத்மஸ்வரூபமேயல்லவா பிரம்மம் சமமனம் உள்ளவர்கள் பிரம்மத்தில் இருப்பவர்.

த்வைதம்.

அப்பாலைய சுலோகத்தை யிது புகழ்கின்றது.

அத்வைதம்.

நிர்க்குணமாதலினாலும், குணபேதங்களாலும் உண்டாகும் பேதமில்லாததாகையால் ஒன்றுதலினால் சமபுத்தியுடையவர்கள் பிரமத்திலேயே இருப்பவர். அவர்க்குத் தேஹாதிசங்காதங்களில் ஆத்மாவென்கிற புத்தி இல்லை. தோஷவாசனையாலும் அவரைத் தீண்டாது.

ந ப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத்ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித்ப்ரஹ்மணி ஸ்திதஃ ॥ ௨௦

நப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத்ப்ராப்யசாப்ரியம்,
ஸ்திரபுத்தி ரஸம்மூடோ ப்ரஹ்மவித்ப்ரஹ்மணி ஸ்தித:. ௨௦

నప్రహృష్యేత్ప్రియం ప్రాప్య నోద్విజేత్ప్రాప్యచాప్రియమ్,
స్థిరబుద్ధి రసమ్మూఢో బ్రహ్మవిద్బ్రహ్మణి స్థితః. ౨౦

20. கிரு—பிரியாப்பிரியங்களைச் சமமாய்ச்செய்துகொள்ளவேண்டும். பெரியவர்களிடம் தெரிந்துகொள்ளவேண்டும்.

த்வைதாத்வைதம்.

ஸ்திரபுத்தி உண்டாயிருக்கவேண்டும்.

விசிஷ்டாத்வைதம்.

ஆத்மஸ்திரம், சரீரம் அஸ்திரம், ஸ்திரமான ஆத்மாவில் புத்தியைச் சேர்க்கவேண்டும்.

பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மனி யத்ஸுகம் ।
ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமச்னுதே ॥ ௨௧

பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மநி ய ஸ்ஸுகம்,
ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுக மக்ஷய்ய மச்நுதே. ௨௧

బాహ్యస్పర్శేష్వసక్తాత్మా విన్దత్యాత్మని య స్సుఖమ్,
స బ్రహ్మయోగయుక్తాత్మా సుఖ మక్షయ్య మశ్నుతే. ౨౧

21. அரு—இவ்வாறு செய்தல் எளிதான செயலாக இருக்கின்றதே. பிர்ம்மவிசாரம் எதற்கு.

கிரு—சுகமிருக்கிறது ஆயினும் அது சாச்வதசுகம் அன்று. குணதோஷங்கள்தெரியாமையாலும், ஞானியல்லாததாலும், 2-அத். 40-சுலோ. போல் பிரமாதங்களான இந்திரியங்கள் இவனது மனதை ஹரிக்கும். பரப்பிரம்மத்தில் கூடினமனம் உள்ளவனுக்கே சுகம் இருக்கிறது. குறைவு இராது. ஆகையினுற்ருனே பிரம்மயோகம் செய் என்று சொல்லுகிறேன்.

യേ ഹി സംസ്പർശജാ ഭോഗാ ദുഃഖയോനയ ഏവ തേ ।
ആദ്യന്തവന്തഃ കൗന്തേയ ന തേഷു രമതേ ബുധഃ ॥ ௨௨

யே ஹி ஸம்ஸ்பர்ஶஜா போகா து:கயோநய ஏவ தே,
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத:. ௨௨

యే హి సంస్పర్శజా భోగా దుఃఖయోనయ ఏవ తే,
ఆద్యన్తవన్తః కౌన్తేయ న తేషు రమతే బుధః. ౨౨

22. அரு—20-சுலோ. இல், பிரியாப்ரியங்களைச் சமமாக எண்ணுக எனக்கூறினுயே அது கூடுமா.

கிரு—விஷயேந்திரிய சமபந்தத்தாலுண்டாகும் சுகங்கள் எவையோ அவைகள் துக்கஹேதுக்களாம். 2-அத். 14-சுலோ. இல். சொன்னதுபோல ஆத்யந்தங்களுள்ளவை ஆதலின் துக்கஹேதுக்களாகும். இந்தச்சங்கதி அறிந்த விவேகி அதில் ரமிக்கான்.

ശക്നോതീഹൈവ യഃ സോഢും പ്രാക്ശരീരവിമോക്ഷണാത് ।
കാമക്രോധോദ്ഭവം വേഗം സ യുക്തഃ സ സുഖീ നരഃ ॥

ஶக்நோதீஹைவ ய ஸ்ஸோடும் ப்ராக்சரீரவிமோக்ஷணாத்,
காமக்ரோதோத்பவம் வேகம் ஸயுக்த ஸ்ஸ ஸுகீ நர:. ௨௩

శక్నోతీహైవ య స్సోఢుం ప్రాక్ఛరీరవిమోక్షణాత్,
కామక్రోధోద్భవం వేగం సయుక్త స్స సుఖీ నరః. ౨౩

23. காமக்ரோதங்களைவிடவேண்டும். இல்லாவிடின் வாசனையால் கஷ்டம் சம்பவிக்கும். ரோகி தானிருக்குமிடம் விட்டு வேறிடம் போனுலும் அவன்ரோகம் அவனைத்தொடர்ந்து செல்லுவதுபோல பூர்வவாசனையால் கர்மம் சீவனைத்தொடர்ந்தேவரும். ஆகையால் இந்தஜன்மத்திலேயே காமக்ரோதாதிகளைச் செயிக்கவேண்டும்.

அரு—சொல்கிறவர்களுக் கென்ன, செய்பவர்களுக்கன்றே கஷ்டம் தெரியும்.

கிரு—முழுமையும் விட்டுவிடென்று சொல்லவில்லை. முதலில் அதன் வேகத்தைக்குறைக்கவேண்டும். (வேகமாகப் பிரவாகிக்கும் நதியில் தப்பித்துக் கொள்ளுதல் கஷ்டமேயன்றி சாதாரணமாய் ஓடும் நதி அப்படிப்பட்டதுன்பம்

உண்டாக்காதன்றே) இவ்வாறு செய்பவனேயோகி சுகி, மனுஷன். முயலுகிறவனே மனுஷ்யன் அல்லாவிடின் மிருகமென்று கருத்து.

𑌯𑍋𑌽𑌨𑍍𑌤𑌃𑌸𑍁𑌖𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌰𑌾𑌮𑌸𑍍𑌤𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍇𑌵 𑌯𑌃
𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑍋𑌽𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

யோந்தஸ்ஸுகோந்தராராம ஸ்ததாந்தர்ஜ்யோதி ரேவ ய:,
ஸயோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோ திகச்சதி. ௨௪

యోఽన్తస్సుఖోఽన్తరారామ స్తథాన్తర్జ్యోతి రేవ యః,
సయోగీ బ్రహ్మనిర్వాణం బ్రహ్మభూతోఽధిగచ్ఛతి. ౨౪

**24.** கிரு—எவன் அந்தராத்மாவிலேயே சுகம் உள்ளவனும் அந்தராத்மாவிலேயே ரமிப்பவனும் ஆத்மஞானமுள்ளவனும் இருக்கின்றானோ அந்தயோகி பிரம்மஸ்வரூபனும் ஆத்மசுகத்தை யடைகிறான்.

விசிஷ்டாத்வைதம்.

ஆராமம் = ஆத்மானுபவத்திலிருப்பவன், தோட்டத்திலிருப்பவன் சந்தோஷத்துடனிருப்பதுபோல இருப்பன். தீபத்திற்கு மாறாக ஆத்மஜ்யோதியே உண்டாயிருக்கும். இவ்வாறிருக்கும் யோகி 2-அத். 72-சுலோ. சொன்னபடி ப்ராக்ருதரஹிதனும் பரப்பிரம்மத்தை யடைவன்.

த்வைதம்.

பரப்பிரம்மத்திலிருப்பன்.

அத்வைதம்.

ஐக்யம் உண்டாம்.

விசிஷ்டாத்வைதம்.

பிரகிருதிபந்தரஹிதசுத்தாத்மஸ்வரூபம் லபிக்கும்.

𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑍃𑌷𑌯𑌃 𑌕𑍍𑌷𑍀𑌣𑌕𑌲𑍍𑌮𑌷𑌾𑌃 ।
𑌛𑌿𑌨𑍍𑌨𑌦𑍍𑌵𑍈𑌧𑌾 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑍇 𑌰𑌤𑌾𑌃 ॥

லபந்தே ப்ரஹ்மநிர்வாண ம்ருஷய: க்ஷீணகல்மஷா:,
சின்னத்வைதா யதாத்மான ஸ்ஸர்வபூதஹிதே ரதா:. ௨௫

లభన్తే బ్రహ్మనిర్వాణ మృషయః క్షీణకల్మషాః,
ఛిన్నద్వైధా యతాత్మాన స్సర్వభూతహితే రతాః. ౨౫

**25.** கிரு—விஷயா சக்தனல்லாம லிருக்கவேண்டும். இவ்வாறிருந்தால் மோக்ஷத்திற்குப் போகலாகும். ஞானிகள் மோக்ஷத்தை அடைவர்.

அரு—மோக்ஷம் உண்டாகுமா?

த்வைதம்.

கிரு—விபரீதஞானம் நீங்கவேண்டும்.

அத்வைதம்.

இதுவோ அதுவோ எனும் ஸந்தேஹம் கூடாது.

விசிஷ்டாத்வைதம்.

த்வந்தங்கள் நீங்கவேண்டும். இவை நீங்கின் பிரமமாவன்.

𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑌤𑍀𑌨𑌾𑌂 𑌯𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ।
𑌅𑌭𑌿𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌂 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌵𑌿𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 ॥௨௬

காமக்ரோதவியுக்தானாம் யதீனாம் யதசேதஸாம்,
அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்த்ததே விஜிதாத்மனாம். ௨௬

కామక్రోధవియుక్తానాం యతీనాం యతచేతసామ్,
అభితో బ్రహ్మనిర్వాణం వర్తతే విజితాత్మనామ్. ౨౬

26. அரு—எளிதாயிருக்கின்றதே.

கிரு—காமக்ரோதங்களை விடவேண்டும். மனதைச்சரிப்படுத்திக்கொள்ள வேண்டும். மனதை வெல்லவேண்டும்.

விசிஷ்டாத்வைதம்.

பிரயத்னஞ்செய்யவேண்டும்.

த்வைதம்.

பிரயத்னம் கூடாது. இவ்வாறுசெய்தால்.

த்வைதம்.

பிராக்ருதபரப்ரம்மம் எங்குமிருக்கிறது. பிரகிருதியில் இருக்கிறான்.

அத்வைதம்.

ஜீவன்முக்தியிலும் மோக்ஷசுகம் இருக்கிறது.

விசிஷ்டாத்வைதம்.

பிரம்மானுபவம் எதிலும் உண்டு. கரஸ்தமாயிருக்கிறது.

𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌨𑍍 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌬𑌹𑌿𑌰𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌂
𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌶𑍍𑌚𑍈𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑍇 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌃 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑍌 𑌸𑌮𑍌 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾
𑌨𑌾𑌸𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌚𑌾𑌰𑌿𑌣𑍌 ॥ ௨௭

𑌯𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 ।
𑌵𑌿𑌗𑌤𑍇𑌚𑍍𑌛𑌾𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑍋 𑌯𑌃 𑌸𑌦𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤 𑌏𑌵 𑌸𑌃 ॥

ஸ்பர்சாங்க்ருத்வாபஹிர்பாஹ்யாம்ஸ்சக்ஷுஸ்சைவாந்தரேப்ருவோ:,
ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தரசாரிணௌ. ௨௭
யதேந்த்ரியமனோபுத்திர்முனிர்மோக்ஷபராயண:,
விகதேச்சாபயக்ரோதோ ய ஸ்ஸதா முக்த ஏவ ஸ:. ௨௮

స్పర్శాన్ కృత్వా బహిర్బాహ్యాంశ్చక్షుశ్చైవాన్తరే భ్రువోః,
ప్రాణాపానౌ సమౌ కృత్వా నాసాభ్యన్తరచారిణౌ. ౨౭

𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌾𑌵𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑍍𑌚𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌮𑍍 ।
𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑍋𑌽𑌹𑌮𑍇𑌵𑌾𑌤𑍍𑌰 𑌦𑍇𑌹𑍇 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾𑌂 𑌵𑌰 ॥ ௪

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோத்யாத்மமுச்யதே,
பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞிதஃ. ௩
அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷ ஶ்சாதிதைவதம்,
அதியஜ்ஞோஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம்வர. ௪

అక్షరం బ్రహ్మ పరమం స్వభావోऽధ్యాత్మముచ్యతే,
భూతభావోద్భవకరో విసర్గః కర్మసంజ్ఞితః. 3
అధిభూతం క్షరో భావః పురుష శ్చాధిదైవతమ్,
అధియజ్ఞోऽ హమేవాత్ర దేహే దేహభృతాంవర. ౪

**ஸ்ரீபகவான் கூறுதல்.**

த்வைதம்.

**3. 4.** கிரு—விஷ்ணுவேப்ரம்மம், 2-அத்.12-சுலோ, இல். கூறப்பட்ட ஆத்மஸ்வபாவம் சரீரத்தில் இருப்பதால் அத்யாத்மம் எனப்படும். சேதனங்கள் ஜடபதார்த்தங்க ளிவற்றையீச்வரன் படைத்தலேகர்மம். நசிக்கிறபொருள்கள் அதிபூதம், பிரம்மதேவன் அதிதெய்வம் எல்லாவற்றையும் கிரஹிப்பவன் அதியஞ்ஞன்.

அத்வைதம்.

நிர்க்குண பரப்ரம்மமே பிரமம். நிர்க்குணபரப்பிரம்மத்திற்கு சரீர சம்பந்தத்தால் அத்யாத்மம். பிராணிகளின் க்ஷேமத்தின் பொருட்டுச் செய்வது கர்மம். பிறப்பு இறப்புள்ள பொருள்களெல்லாம் அதிபூதம், சூர்யனிடத்தும் எல்லாரிடத்தும் இருப்பவன் அதிதெய்வம். யஞ்ஞங்களெல்லாவற்றிற்கும் அபிமானியான தேவதையே அதியஞ்ஞம்.

விசிஷ்டாத்வைதம்.

நாசரஹிதமான சுத்தாத்மாவே ப்ரம்மம். ஸ்வபாவம் ஸம்பந்தித்தது. பிரகிருதியே அத்யாத்மம் (இது) ஜீவாத்மாவை நாநாவிதமாக மாற்றும்.

அரு—சுத்தாத்மாவிற்குத்தேஹம் எவ்வாறுகிடைக்கும்.

கிரு—மனுஷ்யாதி மாறுதல்கள் உண்டாகும். சமஸ்தபிராணிகளுக்கும் உத்பத்திகாரணமான விஸர்க்கம் கர்மமெனப்படும். அதிபூதம் என்பது பரிணமித்தபொருள்கள். சப்தாதிவிஷயங்களை அநுபவிக்கும் புருஷன் அதிதெய்வதம். இந்தத்தேஹங்களில் நானே அதியஞ்ஞன். (ஸர்வ யஞ்ஞங்களாலாராதிக்கப்பட்டவன்.)

(இந்த-4-வது சுலோகத்தில் தேஹப்ருதாம்வர என்று கிருஷ்ணன் விளிக்கப்பட்டதனால் பிரம்மசிருஷ்டியில் நீ உயர்ந்தவன். நீ கேட்ட கேள்விகளுக்கெல்லாம் நான் ஸ்வயமாய் உத்தரவு கூறுகிறேன். இதனால் உன்பாக்கியமே பாக்யம் என்றுகருத்து )

𑌅𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌲𑍇𑌬𑌰𑌮𑍍 ।
𑌯𑌃 𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌿 𑌸 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌸𑌂𑌶𑌯𑌃 ॥ ௫

அந்தகாலேச மா மேவ ஸ்மரா ந்முக்த்வா களேபரம்,
ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நா ஸ்த்யத்ர ஸம்ஸய:. ௫

అన్తకాలేచ మా మేవ స్మర న్ముక్త్వా కళేబరమ్,
యః ప్రయాతి స మద్భావం యాతి నా స్త్యత్ర సంశయః. ౫

5. அரு—அந்த்யகாலத்தில் உன்ஸ்மரணை என் உண்டாகவேண்டும்.

கிரு—எங்களுக்குவருவதற்கு.

த்வைதம்.

என்சமீபத்திலிருத்தற்கு.

அத்வைதம்.

நானே அதற்கு.

விசிஷ்டாத்வைதம்.

என் ஸ்வபாவத்தையடைதற்கு. இதற்குச்சந்தேஹமில்லை. என்னையே நினைக்கவேண்டும் (கூரத்தாழ்வார் வரதராஜஸ்தவத்தில் இவ்வாறு கூறினர்.) நான் இறந்தால் என்பெண்டு புத்ரர்களின் கதிஎன்னமாமோ என்று தோற்றும். அப்படிப்பட்ட யோசனையால் என்னலாபம் கிடைக்கும். நான் இப்போது சரீரத்தைவிடின் என்கதியென்னமாமோ என்றுதோன்றுதன்றோ) (இது வன்றி எவ்வளவோகஷ்டப்பட்டுச்சம்பாதித்த செல்வமும் கூடவருமா. வராது. அவ்வாறே பசுக்கள் பெண்டு, ஜன்ம சிநேகர் எல்லாருடைய சங்கதிகளும் பலகாலம் தனக்காக பலபாடுகளைப்பட்டானென்று எண்ணிச் சரீரமாயினும் கூடச்செல்லுமா? அதுவும் ஆத்மாவை உன் இச்சைபோனபடிபோக என்று கூறி ஸ்வஸ்தமாகப்படுத்தியிருக்கும். கடைசியில் ஆத்மாவொன்றே புண்ய பாபத்துடன்போகவேண்டியிருக்கும். அப்போது ஸர்வேஸ்வரனேயன்றி வேறொருவரும் கதியில்லை. இதனாலேயே ஸ்வாமி முடிவில் தன்னைநினைத்தால் தான் அந்தகஷ்டகாலத்தில் காப்பாற்றுகிறேன் என்று கூறினர்.)

𑌯𑌂 𑌯𑌂 𑌵𑌾𑌪𑌿 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌭𑌾𑌵𑌂 𑌤𑍍𑌯𑌜𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌲𑍇𑌬𑌰𑌮𑍍 ।
𑌤𑌂 𑌤𑌮𑍇𑌵𑍈𑌤𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌸𑌦𑌾 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌭𑌾𑌵𑌿𑌤𑌃 ॥ ௬

யம் யம் வாபி ஸ்மரந் பாவம் த்யஜத்யந்தே களேபரம்,
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவித:. ௬

యం యం వాపి స్మరన్ భావం త్యజత్యన్తే కళేబరమ్,
తం తమేవైతి కౌన్తేయ సదా తద్భావభావితః. ౬

6. அரு—இந்தஸ்மரணத்திற்கும் மோக்ஷத்திற்கும் சம்பந்தமென்ன?

கிரு—அந்திய காலத்தில் எந்தஸ்வரூபத்தை யெண்ணிப் பிராணத்தை விடின் அந்தஸ்வரூபமே கிடைக்கும். (ஜடபாதரெனும் ராஜருஷி காட்டில் தாயை இழந்த மான்குட்டியைப்பார்த்து ஒருபொருளாக மதித்து பரிதாபமுள்ள

வராய் அதைத் தான் கொண்டுபோய்க் காப்பாற்றிவந்தனர். தன் மரணகாலத்தில் இதின்கதி யெவ்வாறோ என்று நினைத்துக்கொண்டு ப்ராணத்தை விட்டு அப்படிப்பட்ட மான் பிறப்பையடைந்து அந்த ஜன்மத்தில் பூர்வஜன்ம புண்ய விசேஷத்தால் ஹரியையெண்ணி சிரேஷ்டமான மனிதப்பிறப்படைந்து சற்கதியடைந்தார்.) ஆகையால் என்னை நினைக்கின் என்னிடம் வரலாகும்.

அரு—எதனால் உன்ஞாபகம் உண்டாம். மரணகாலம் பஹுநாகுகான காலம் அல்லவா? உன்னை யெண்ண அவகாசமிருக்குமா? (ப்ராணப்ரயாணஸமயே கபவாத பித்தை: கண்டாவரோதனவிதௌ ஸ்மரணம் குதஸ்தே) என்று குலசேகராழ்வார் அருளிச்செய்ததுபோல மரணகாலத்தில் கபவாதபித்தங்கள் சூழ்ந்துகொண்டிருக்கையில் உன் ஸ்மரணம் எவ்வாறு உண்டாம்.

கிரு—ஸர்வகாலம் எண்ணப்பட்டபொருளே மனதில் பற்றிருக்கும். அப்படியிருத்தலால் எவன் எதனை யெண்ணி சரீரத்தைவிடுவானோ அவன் அந்த ஸ்வரூபத்தையடைவன்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌮𑌾𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰 𑌯𑍁𑌧𑍍𑌯 𑌚 ।
𑌮𑌯𑍍𑌯𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌸𑌂𑌶𑌯𑌃 ॥ ௭

தஸ்மா த்ஸர்வேஷு காலேஷு மா மநுஸ்மர யுத்ய ச,
மய்யர்பிதமநோபுத்தி ர்மாமேவைஷ்யஸ்யஸம்சய:. ௭

తస్మా త్సర్వేషు కాలేషు మా మనుస్మర యుధ్య చ,
మయ్యర్పితమనోబుద్ధి ర్మామేవైష్యస్యసంశయః. ౭

7. அரு—அவ்வாருயின் என்னசெய்யவேண்டும்.

கிரு—மரணம் எப்போதுநேரிடுமோதெரியாது. ஆகலால் எப்போதும் என்னை ஸ்மரித்துக்கொண்டிரு. இந்தஅப்யாசத்தால் அந்த்யகாலத்திலும் என் ஸ்மரணை யுண்டாகும்.

அரு—சரி, இனிஞானமார்க்கத்தில் விழுந்தேன். யுத்தத்தில் எனக்கு வேலை இல்லை. அது ஸ்வல்பதர்மம்.

கிரு—நீ யுத்தம் மாத்ரம் செய்யவேண்டியது.

அரு—இன்னும் அந்த தொந்தரை என்னைவிடாதா.

கிரு—பயப்படாதே, மனோபுத்திகளையென்னிடம் வைத்தால் என்னையே அடைவாய் (2-அத். 38-சுலோ. போல சுகதுக்கங்களைச்சமமாகச்செய்துகொள் (அன்றி) பகவதர்ப்பணம்செய். உன்ஸ்வதர்மத்தைவிடாதே. உன்தர்மம் யுத்தமாதலால் அதை அவச்யம் செய். என்னையெண்ணிச்செய்.

அரு—எதுஎப்படியிருக்கினும் இப்போது பாட்டன் குருக்கள்களாகும் பீஷ்மத்ரோணதிகளைக்கொல்லவேண்டியதாக ஏற்படுகின்றதே.

கிரு—4-அத். 40-சுலோ, போல சம்சயப்படாதே, சம்சயமில்லாதவனாக என்னை யடையலாகும். ஆதலால் சம்சயமில்லாதவனாய் யுத்தம்செய்.

𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 𑌚𑍇𑌤𑌸𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑌗𑌾𑌮𑌿𑌨𑌾 ।
𑌪𑌰𑌮𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍 ॥ ௮

அப்யாஸயோகயுக்தேந சேதஸா நாந்யகாமிநா,
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தாநுசிந்தயந்.   ௮

అభ్యాసయోగయుక్తేన చేతసా నాన్యగామినా,
పరమం పురుషం దివ్యం యాతి పార్థాఽనుచింతయన్.   ౮

விசிஷ்டாத்வைதம்.

8. பார்த்த அப்யாசத்தாலும் யோகத்தாலும் சேர்ந்து இதரவிஷயங்களை ஆச்ரயிக்காத மனதால் அப்ராக்ருதனான பரமபுருஷனைச்சிந்திப்பவன் என்னை யேயடைவன்.

த்வைதம், அத்வைதம். விசிஷ்டாத்வைதம்.

அப்படி அப்யாசம், யோகம் எனும் இரண்டல்லாமல் அப்யாஸ யோகம் எனும் இரண்டல்லாமல் அப்யாசயோகத்தால் என்று சொல்லப்பட்டது.

𑌕𑌵𑌿𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣 𑌮𑌨𑍁𑌶𑌾𑌸𑌿𑌤𑌾𑌰
𑌮𑌣𑍋 𑌰𑌣𑍀𑌯𑌾𑌂𑌸 𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑍇𑌦𑍍𑌯𑌃 |
𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌧𑌾𑌤𑌾𑌰 𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑍂𑌪
𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 ||   ௯

கவிம் புராண மநுஸாஸிதார மணோ ரணீயாம்ஸ மநுஸ்மரேத்ய:
ஸர்வஸ்ய தாதார மசிந்த்யரூப மாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத். ௯

కవిం పురాణ మనుశాసితార మణో రణీయాంస మనుస్మరేద్యః,
సర్వస్య ధాతార మచింత్యరూప మాదిత్యవర్ణం తమసః పరస్తాత్.   ౯

9. அரு—உன்னை யெப்படி சிந்திக்கவேண்டும். நாங்கள் உன்னைத் தியானிக்கின் உனக்கெப்படிதெரியும்.

கிரு—நீங்கள் என்னை நினைத்தலை நான் அறிவேன். நான் கவி (எனின் சர்வஞ்ஞன் என்றுஅறிந்துகொள்)

அரு—நீ வைகுண்டத்தில் இருப்பவன். உனக்கெப்படிதெரியும்.

கிரு—என்னைப் புராணனென்று அறிந்துகொள். (எனின் சகலசரீரங்களிலு முள்ளவன் என்றுபொருள்.)

அரு—உன்னை எல்லாரும் எண்ணுதலும் தெரியவேண்டுமே.

கிரு—எல்லாவற்றிலும் இருக்கிறேன்.

அரு—சண்டாளனிடத்திலுமிருக்கிறீரையா.

கிரு—இருக்கிறேன்.

அரு—ஐயோ உன் அவஸ்தை என்ன என்னலாம்.

கிரு—என்னை அநுசாஸிதன் என்று தெரிந்துகொள் (எனின் சரீரத்திலிருக்கும் ஜீவாத்மா, கர்மபலத்தை நான் அநுபவிப்பவன் அவர்களைப் போலல்லாமல் அநுபவிக்கச்செய்பவனாக இருக்கிறேன்.) (சிறையிலிருத்தல் திரு—

னுக்குச்சங்கடம். அவ்விடத்திலிருக்கும் அதிகாரிக்கு என்னசங்கடம். அவன் கௌரவத்திற்கு என்னகுறைவு.) (ஆத்மாவுடன் நரகத்தில் யமன் இருக்கினும் அவனுக்கு என்ன உபத்ரவம் இருக்கிறது.)

அரு—யானையில் அவ்வளவு பெரியவனுயிருக்கும் நீ எறும்பில் எப்படி இருப்பாய்.

கிரு—அணுவிற்கு அணுவாயிருக்கின்றேன். அவர் அவர்களுக்குத் தக்கபலன்களைக் கொடுக்கின்றேன்.

அரு—நீ அனைத்திலும் நிறைந்திருத்தலால் உன்னை அனுயாசமாய்த் தியானிக்கலாமே.

கிரு—அது கூடாதகார்யம் என்று தெரிந்துகொள். ஏனெனில், அத்யந்த ப்ரகாசம் உள்ளவன். மனதிற்கு எட்டாதவனு யிருக்கின்றேன். ப்ரகிருதி மிருத்யுவு, அஞ்ஞானம் இல்லாமல் மேலிருக்கின்றேன். தமஸ்ஸுக்கும் எனின்.

த்வைதம்.

அவ்யக்தத்திற்கும் அப்பால் இருக்கிறேன்.

அத்வைதம்.

அஞ்ஞானம் என்று இருளுக்குமேல் இருக்கிறேன்.

விசிஷ்டாத்வைதம்.

பிரகிருதிக்கு அப்பால் இருக்கிறேன். மேற்கூறிய மஹிமையுள்ள என்னை யெவன் விடாமல் ஸ்மரிப்பானோ,

പ്രയാണകാലേ മനസാऽചലേന
ഭക്ത്യാ യുക്തോ യോഗബലേന ചൈവ ।
ഭ്രുവോർമധ്യേ പ്രാണമാവേശ്യ സമ്യക്
സ തം പരം പുരുഷമുപൈതി ദിവ്യം ॥ ൧൦

ப்ரயாணகாலே மநஸாசலேந
பக்த்யாயுக்தோ யோகபலேநசைவ,
ப்ருவோர்மத்யே ப்ராணமாவேஶ்யஸம்யக்
ஸதம்பரம்புருஷ முபைதி திவ்யம். ௧0

ప్రయాణకాలే మనసాऽచలేన భక్త్యాయుక్తో యోగబలేనచైవ,
భ్రువోర్మధ్యే ప్రాణమావేశ్యసమ్యక్ సతంపరం పురుషముపైతిదివ్యమ్.

10. அவன் ப்ராண ப்ரயாணகாலத்தில் த்ருடமனத்துடனும், பக்தியுடனும், யோகபலத்துடனும், கூடினவனுய் கண்விழிகளுக்கு நடுவில் பிராணத்தை செம்மையாய் நிறுத்தி அந்த திவ்யரூபனுன பரமபுருஷனை யாச்ரயிப்பவன். (விஷயங்களைக் நேட்டு தெரிந்துகொண்டு மனனம்செய்து த்யானஞ்செய்தல் ராஜயோகம். அவ்வாறன்றி சுவாசபந்தனம் செய்து யோகம் செய்தல் ஹடயோகம் என்னப்படும். இவ்வாறுசெய்தலால் புகையால் நிறைந்த

புகைக்கூண்டு எவ்வாறு ஆகாசத்திற் மேற்கிளம்புமோ அவ்வாறு இவ்வகைப் பட்டயோகம் செய்பவன் தலையுடைந்து அவ்விடமிருந்து ஆத்மா நீங்கும். மோக்ஷத்திற்கு இதுவும் ஒருவழியாக இருக்கிறது. ராஜயோகத்தால் சித்தி ஆலஸ்யமாயுண்டாயினும் அது சிரேஷ்டதரமானதா இருக்கிறது: என் எனின் (7-அத், 18-சுலோகத்தில், கூறப்பட்டதுபோல ஞானிமனதை பகவானிடம் நிறுத்தி அவனையே சர்வோத்தமப்ராப்யமாக நிச்சயித்து பகவானுக்கு ஆத்மாவென்று சொல்லத்தக்கவனு யிருக்கின்ருன்.)

𑌯𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍋 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿
𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌯𑌦𑍍𑌯𑌤𑌯𑍋 𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌾𑌃 ।
𑌯𑌦𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌂 𑌚𑌰𑌨𑍍𑌤𑌿
𑌤𑌤𑍍𑌤𑍇 𑌪𑌦𑌂 𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑍇𑌣 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 ॥ ௧௧

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி
விஶந்தியத்யதயோ வீதராகா:
யதிச்சந்தோ ப்ராஹ்மசர்யம் சரந்தி
தத்தேபதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே. ௧௧

యదక్షరం వేదవిదో వదన్తి విశన్తి యద్యతయో వీతరాగాః,
యదిచ్ఛన్తో బ్రహ్మచర్యం చరన్తి తత్తేపదం సఙ్గ్రహేణ ప్రవక్ష్యే.

11. அரு—ராஜத்யாகமெனவும், ஹடயோகமெனவும், நித்யமும் எண்ணியிருக்க வேண்டுமென்றும் கூறுகின்ருய். இவ்வளவுமுக்யமாக இருக்கும் வஸ்துதத்வம் செம்மையாக தெரிந்துகொள்ள வேண்டுமென்று எண்ணமுண்டாகிறது.

கிரு—அந்தவஸ்துத்வம் எல்லார்க்கும் தெரியாது. வேதாந்தவிசாரம் செய்யவேண்டும். (15-அத், 15-சுலோ. போல அந்தவஸ்துவை வேதத்தால் தெரிந்துகொள்ள வேண்டும். 3-அத்யாயத்தில் சொல்லியிருந்தேனல்லவா அந்தக் காமாதிகளைத் தள்ளிவிட வேண்டும். இவ்வாறு ஆசையை விட்டவர்கள், பிரம்மத்தை யெண்ணினவர்கள். பிரம்மசர்யத்தைச் செய்வார்கள். உலகத்தவர் விஷயங்களில் சுகம்உள்ளதாக எண்ணுவார்கள். பகவானை அறிந்தவர்கள் இந்தச்சுகத்தில் திருப்தியடையார்கள். அந்தச்சுகம் எல்லாவற்றிலும் உயர்ந்ததாக இருக்கிறது. அது அறியத்தக்கதும் அடையத்தக்கதுமாயிருக்கிறது. இப்படிப்பட்ட வஸ்து தத்வத்தைச் செம்மையாய் விசாரிப்பதற்கு ஆயுள் போதுமா, புத்திபோதுமா. ஆதலினுல் இந்தத் தத்வத்தைச் சுருக்கிக்கூறுகிறேன்.

அரு—இவ்வகைப்பட்டபெரியவிஷயம் எளிதாய் அறியப்படாதென்று எண்ணுகிறேன்.

கிரு—ப்ரவக்ஷ்யே-உனக்குத்தெரியும்படி செம்மையாய்க் கூறுகிறேன்.

𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌣𑌿 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌮𑌨𑍋 𑌹𑍃𑌦𑌿 𑌨𑌿𑌰𑍁𑌧𑍍𑌯 𑌚 ।
𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑍍𑌯𑌾𑌧𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌯𑍋𑌗𑌧𑌾𑌰𑌣𑌾𑌮𑍍 ।

𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑌨𑍍𑌮𑌾𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 ।
𑌯𑌃 𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌿 𑌤𑍍𑌯𑌜𑌨𑍍𑌦𑍇𑌹𑌂 𑌸 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥ ௧௩

ஸர்வத்வாராணி ஸம்யம்ய மநோ ஹ்ருதி நிருத்ய ச,
மூர்த்ந்யாதாயாத்மந: ப்ராண மாஸ்திதோ யோகதாரணாம். ௧௨
ஓ மித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மா மநுஸ்மரந்,
ய: ப்ரயாதி த்யஜந் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம். ௧௩

సర్వద్వారాణి సంయమ్య మనో హృది నిరుధ్యచ,
మూర్ధ్న్యాధాయాత్మనః ప్రాణ మాస్థితో యోగధారణామ్.
ఓ మిత్యేకాక్షరం బ్రహ్మ వ్యాహర న్మా మనుస్మరన్,
యః ప్రయాతి త్యజన్ దేహం స యాతి పరమాం గతిమ్. ౧౩

**12, 13.** கிரு—மனுஷ்யர்களுக்கு வெளியிற்செல்ல வாயில்களுள்ளது போல இந்திரியங்கள் மனதிற்கு த்வாரமாயிருக்கின்றன. இந்த த்வாரங்களை மூடி (எனின்) இந்திரியங்களை அவற்றின் செயல்களினின்று நிறுத்திஹ்ருதயத்தில் மனதை நிறுத்தி அதைச்சிரத்தில் சேர்த்து யோகத்தை திடமாய் வைத்துக்கொண்டு, (ஓம்) எனும் பிரமத்தை ஸ்மரித்துக்கொண்டு என்னை யெண்ணிக்கொண்டு பிராணத்தை விட்டால் பரமபிராப்யவஸ்துவை அடையலாகும்.

த்வைதம், அத்வைதம்.

பரப்ரம்மத்தை அடையலாகும்.

விசிஷ்டாத்வைதம்.

பிரகிருதி பந்தரஹித சுத்தாத்மஸ்வரூபத்தை யடையலாம்.

𑌅𑌨𑌨𑍍𑌯𑌚𑍇𑌤𑌾𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌸𑍍𑌮𑌰𑌤𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌸𑍁𑌲𑌭𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ॥

அநந்யசேதா ஸ்ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:,
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந:. ௧௪

అనన్యచేతా స్సతతం యో మాం స్మరతి నిత్యశః,
తస్యాహం సులభః పార్థ నిత్యయుక్తస్య యోగినః. ౧౪

**14.** அரு—இது பது கஷ்டமான கார்யமாக இருக்கிறதே. நித்யமும் எப்படித்யானிக்கலாகும்.

கிரு—பார்த்தா! எவன் நித்யமாய் வேறுமனம் இல்லாமல் அவிச்சின்னமாய் என்னை ஸ்மரிக்கிறானோ நித்யம் உபாசித்துக்கொண்டிருக்கிற அந்தயோகிக்கே நான் சுலபன்.

அரு—அந்தமத்தின் ஸ்மரணை அன்றோ வேண்டும். நாடோறும் என் த்யானிக்கவேண்டும்.

கிரு—நித்யமும் எண்ணியிருந்தாலன்றோ அப்போது ஞாபகத்திற்குவரும் (நாடோறும் படித்துக்கொண்டிருக்கும் சிறுவன் மாத்ரமே பரீக்ஷைகளில் விஷயங்களை மனதில்வைத்துக்கொண்டு எழுதக்கூடியவனாயிருப்பான். ஒரு வருஷம் இருக்கையில் இப்போது என் வாசிக்கவேண்டுமென்று எண்ணுபவன்கதி பரீக்ஷையில் என்ன ஆகும்.)

𑌮𑌾𑌮𑍁𑌪𑍇𑌤𑍍𑌯 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌦𑍁𑌃𑌖𑌾𑌲𑌯𑌮𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ।
𑌨𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌾𑌃 ॥ ௧௫

மா முபேத்ய புநர்ஜந்ம து:காலய மஶாஶ்வதம்,
நாப்நுவந்தி மஹாத்மாந ஸ்ஸம்ஸித்திம் பாமாம்கதா:. ௧௫

మా ముపేత్య పున ర్జన్మ దుఃఖాలయ మశాశ్వతమ్,
నాప్నువ న్తి మహాత్మాన స్సంసిద్ధిం పరమాం గతాః. ౧౫

**15.** அரு—இவ்வளவுகஷ்டப்பட்டு மோக்ஷத்தை யடைந்தால் அவ்விடத்தில் எத்தனை நாட்களிருக்கலாகும்.

கிரு—இவ்வளவு கஷ்டப்பட்டு வந்தவர்களை மீண்டும்போஎன்பேனா. மீண்டும் ஜன்மம் எடுக்கவேண்டிய பிரமேயமேஇல்லை. துக்கத்திற்குக்காரணமான அநித்யமானஜன்மம் மீண்டும்வராது. ஆயினும் ச்ரமப்பட்டு அந்தப்பதவியைச் சாதிக்கவேண்டும்.

𑌆𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍁𑌵𑌨𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌃 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌮𑌾𑌮𑍁𑌪𑍇𑌤𑍍𑌯 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

ஆப்ரஹ்மபவநா ல்லோகா: புநராவர்த்திநோர்ஜுந,
மா முபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே. ௧௬

ఆబ్రహ్మభువనా ల్లోకాః పునరావ ర్తినో౽ర్జున,
మా ముపేత్య తు కౌ న్తేయ పునర్జన్మ న విద్యతే. ౧౬

**16.** அரு—பிரம்மாதிகள் சாமான்யர்களல்லர். ஆகையால் அவர்களிடத்திற்குப்போயினும், புனர்ஜன்மம் இல்லைபல்லவா. இவ்வாறு புனர்ஜன்மராஹித்யமானவையும், சாச்வதமானவையுமாகும் இடங்கள் எத்துணையுண்டோ தெரிவியும்.

கிரு—பிரம்மலோகம்வரையிலுள்ள எந்தலோகத்திற்குச்சென்றாலும் புனர்ஜன்மம் எடுக்கவேண்டியிருக்கும். என்னையடைந்தபின் மாத்ரம் ஜன்மம் உண்டாகாது.

அரு—பாபிகளுக்கு அந்தப்பதவிகளுக்குப்போகசக்தியுண்டா ?

கிரு—(இந்த, 16-சுலோ. இல் மாமுபேத்யது எனின் என்னைஅடைந்தால் என்று ஒரு பொருள். அன்றி, மாம்—லக்ஷ்மியை, உபேத்யது—ஆச்ரயித்தால் எனின் தாயான லக்ஷ்மியை புருஷாகாரபூதையாய் செய்துகொண்டால் பக

வான் அவளது புருஷாகாரத்தால் நமது தவறுகளை மன்னித்து தன்ஸ்தானத்தில் வைத்துக்கொள்வன் என்று பொருள்.)

𑌸𑌹𑌸𑍍𑌰𑌯𑍁𑌗𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑌹𑌰𑍍𑌯𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 ।
𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌂𑌯𑍁𑌗𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌂𑌤𑍇𑌽𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑌵𑌿𑌦𑍋𑌜𑌨𑌾𑌃

ஸஹஸ்ரயுகபர்யந்த மஹர்யத்ப்ரஹ்மணோ விது:,
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தேஹோராத்ரவிதோ ஜநா:. கஎ

సహస్రయుగపర్యన్త మహర్యద్బ్రహ్మణో విదుః,
రాత్రిం యుగసహస్రాన్తాం తేఽహోరాత్రవిదో జనాః. ౧౭

17. அரு—பிரம்ம சாதாரணமானவன் என்றும், நீ உயர்ந்தவன் என்றும் கூறுகின்றாயே.

கிரு—ஆம், அவர்களுக்கு ஆயுட்பிரமாணமிருக்கின்றது. எனக்கு அப்படி இல்லை. அஹோராத்ரவிபாகங்கள் தெரிந்த ஜனங்கள் நமது சதுர்யுகங்களின் ஸஹஸ்ரம் பிரமற்கு ஒரு பகலென்றும், அவ்வளவுகாலம் அவற்கு ஒரு இரவென்றும் கூறுவர்.

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌯𑌃𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌹𑌰𑌾𑌗𑌮𑍇 ।
𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑍇 ॥

அவ்யக்தா த்வ்யக்தய ஸ்ஸர்வா: ப்ரபவ ந்த்யஹராகமே,
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரை வாவ்யக்த ஸம்ஜ்ஞகே. க அ

అవ్యక్తా ద్వ్యక్తయ స్సర్వాః ప్రభవ న్త్యహరాగమే,
రాత్ర్యాగమే ప్రలీయ న్తే తత్రై వాఽవ్యక్త సంజ్ఞ కే. ౧౮

18. அரு—பிரம்ம தனதினத்தில் என்னசெய்வன்.

கிரு—பகற்றொடக்கத்தில் பிரகிருதிஸ்வரூபனான பிரமனிடமிருந்துலோகரூபங்களனைத்தும் உற்பத்தியாகின்றன. பிரமனுக்குராத்ரித்தொடக்கத்தில் பிரகிருதிரூபனான அவன் (பிரமன்) இடத்திலே அனைத்தும் லயம் அடைகின்றன.

𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌃 𑌸 𑌏𑌵𑌾𑌯𑌂 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇 ।
𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇𑌽𑌵𑌶𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑍍𑌯𑌹𑌰𑌾𑌗𑌮𑍇 ॥ க௯

பூதக்ராம ஸ்ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே,
ராத்ர்யாகமேவஸ: பார்த்த ப்ரபவ த்யஹராகமே. க௯

భూతగ్రామ స్స ఏవాయం భూత్వా భూత్వా ప్రలీయతే,
రాత్ర్యాగమేఽవశః పార్థ ప్రభవ త్యహరాగమే. ౧౯

19. அரு—பிரம்மாவிற்கு ராத்ரி ஆனகாலத்திலன்றோ அனைத்திற்கும் முடிவு உண்டாகின்றது. ஆகையால் வேதாந்தங்களைத் தெரிந்துகொள்ள

எதும் அவசரம் இல்லையென்று எண்ணுகிறேன். கீதையை யுபதேசித்துலை நிறுத்து.

கிரு—அவசரப்படாதே. செம்மையாய்க்கேள். பார்த்தா, அதேபிராணி வர்க்கம் கர்மபரவசமாய்ப்பிறந்து பிறந்து நசிக்கின்றது. இராத்ரிதொடக்கத்தில் அழிதலும் பகற்றொடக்கத்தில் பிறத்தலும் உண்டாகின்றது. (கடைக்காரன்பகலில் கடைவைத்து இரவில் மூடுவான் என்றபோது அவ்விடத்தில் வைக்கப்பட்டிருக்கும்பொருள்களெல்லாம் ராத்ரியாகும் வரையில் செலவாகாமல் அவ்விடத்திலேயேவைக்கப்பட்டிருக்கும் என்று அர்த்தம் அல்லவா. விற்கப் போகும்சாமான்கள் போய்க்கொண்டிருக்கையில் வேறுவஸ்துக்கள் வைக்கப் படும் அல்லவா. அவ்வாறே பிரளயம் வரையில் பிராணிகள் அவ்வாறேயிருக்கையில் மீண்டும் மீண்டும் ஜன்ம பரம்பரையில் அநுபவித்துக்கொண்டிருப்பர்.

அரு—நான்ஜென்மங்களையெடுக்கேன் என்று கூறின் பிரம்மா என்ன செய்வான்.

கிரு—அவஶ:—இந்தச்சங்கதியில் அவனுக்கு ஒன்றும் ஸ்வதந்திரம்இல்லை.

𑌪𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍁 𑌭𑌾𑌵𑍋𑌽𑌨𑍍𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 |
𑌯𑌃 𑌸 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍁 𑌨 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 || ௨௦
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌕𑍍𑌷𑌰 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 |
𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮 || ௨௧

பர ஸ்தஸ்மாத்து பாவாத்யோ வ்யக்தோவ்யக்தா த்ஸநாதந:,
ய ஸ்ஸ ஸர்வேஷு பூதேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி. ௨௦
அவ்யக்தோக்ஷர இத்யுக்த ஸ்தமாஹு: பரமாம் கதிம்.
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்தாம பரமம் மம. ௨௧

పర స్తస్మాత్తు భావాద్యో వ్యక్తోఽవ్యక్తా త్సనాతనః,
య స్స సర్వేషు భూతేషు నశ్యత్సు న వినశ్యతి. ౨౦
అవ్యక్తోఽక్షర ఇత్యుక్త స్తమాహుః పరమాం గతిమ్,
యం ప్రాప్య న నివర్తన్తే తద్ధామ పరమం మమ. ౨౧

20,21. அரு—சரி, இனி உன்சங்கதிதெரிவி.

த்வைதாத்வைதம்.

கிரு—பிரம்மாதிகளினும் விலக்ஷணமானவன், பெரியவன், அநாதிபுருஷன், மேற்கூறியவருக்கு இதுதான், சரீரம் நீங்கினும் அவனுக்கு நாசமில்லை.

அரு—என் காணப்படான்?

கிரு—கௌரவசாலியாதலால் காணப்படான். இந்த அத். 13-சலோ. இல் தெரிவித்தவனே யிவன், இவனிடத்தில் சேர்ந்தால் மீண்டும் வரவேண்டியதில்லை.

அரு—அவன் எவன்.

கிரு—நானே அவன்.

விசிஷ்டாத்வைதம்.

2-அத். 20-சுலோ. போல ஆத்மநாசமில்லாத பொருளாக இருக்கிறது. 2-அத். 12-சுலோ. போல, பிறப்பிறப்புக்கள் முழுதும் பிரகிருதிக்கே. அவன் அவ்யக்தன், அக்ஷரன் என்று கூறப்படுகிறான். இந்தஅத்யாயம், 13-சுலோ இல், தெரிவித்திருந்தேனே அவனை (பிரகிருதி பந்தரஹித சுத்தாத்மாவை) அடையினும் மீண்டும் வரவேண்டியதில்லை.

அரு—ஆத்மா அவ்வளவு சிரேஷ்டமானதாக இருத்தலால் நீ யென்ன உயர்ந்தவன்.

கிரு—தத்தாமபரமம்மம— அது எனக்கு உத்கிருஷ்டமான ஸ்தானமாக இருக்கிறது. (பகவானுடைய அதிகாரத்திலிருப்பது பிரகிருதி, பிரகிருதி பத்தாத்மா, தத்விமுக்தாத்மா, இந்த மூன்றும் பகவானுடைய நியமன ஸ்தானங்களாக இருக்கின்றன. இவைகளில் மிகுந்த அதிகாரத்தைசெலுத்தும்இடம் பிரகிருதி பந்தரஹிதசுத்தாத்மா, இவ்வகைச்சுத்தாத்மாவாயினும் பகவானுக்கு அடங்கினதேயென்று அர்த்தம்.

𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸 𑌪𑌰𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍 ॥ ௨௨

புருஷ ஸ்ஸ பர: பார்த்த பக்த்யா லப்ய ஸ்த்வநந்யயா,
யஸ்யாந்த:ஸ்தாநி பூதாநி யேந ஸர்வ மிதம் ததம். ௨௨

పురుష స్స పరః పార్థ భక్త్యా లభ్య స్త్వనన్యయా,
యస్యా న్తః స్థాని భూతాని యేన సర్వ మిదం తతమ్. ౨౨

22. அரு—7-8-அத். களை கேட்டதால் பயமாகின்றது. எப்படிப்பட்ட பெரியபொருள்கள் சமர்ப்பித்து உன்னை அருச்சிக்கவேண்டியிருக்குமோ அல்லவா.

கிரு—அவாப்த சமஸ்தகாமனுயிருக்கும் எனக்கு உங்களால்வேண்டியதென்ன இருக்கிறது. என்பாதங்களில் விழுந்தால் எனக்குக்கருணை உண்டாகும் மனப்பூர்வமான பக்தியிருந்தால்போதும்.

அரு—இது எளிதானகார்யமாக இருக்கிறதே.

கிரு—வேறுபிரயோஜனத்தைக்கோரக்கூடாது.

அரு—அப்படிசெய்யவேண்டுமா.

கிரு—எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் அந்தர்யாமியாயிருப்பவனை அடையவேண்டும்.

𑌯𑌤𑍍𑌰 𑌕𑌾𑌲𑍇 𑌤𑍍𑌵𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚𑍈𑌵 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ।
𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌾 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑌂 𑌕𑌾𑌲𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ॥ ௨௩

யத்ரகாலே த்வநாவ்ருத்தி மாவ்ருத்திம் சைவ யோகிந:,
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப. ௨௩

యత్ర కాలే త్వనావృత్తి మావృత్తిం చైవ యోగినః,
ప్రయాతా యాన్తి తం కాలం వక్ష్యామి భరతర్షభ. ౨౩

23. அரு—இந்திராதிகளை ஆராதித்துப் புனர்ஜன்மம் எடுப்பவர்கள். உன்னை அடைந்து மீண்டும் வர அக்கரையில்லாதவரும், இந்த இருவகைப்பட்டவர்களும் போகவேண்டியமார்க்கம் ஒன்றுதானு, பேதம்உண்டா.

கிரு—அந்தமார்க்கங்களின் பேதங்களைக் கூறுகிறேன்.

𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌹𑌃 𑌶𑍁𑌕𑍍𑌲𑌃 𑌷𑌣𑍍𑌮𑌾𑌸𑌾 𑌉𑌤𑍍𑌤𑌰𑌾𑌯𑌣𑌮𑍍 ।
𑌤𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌾 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍋 𑌜𑌨𑌾𑌃 ॥ ௨௪

அக்னி ர்ஜ்யோதி ரஹ ஶ்ஶுக்ல ஷ்ஷண்மாஸா உத்தராயணம்,
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்ம விதோ ஜநா:. ௨௪

అగ్ని ర్జ్యోతి రహ శ్శుక్ల ష్షణ్మాసా ఉత్తరాయణమ్,
తత్ర ప్రయాతా గచ్ఛన్తి బ్రహ్మ బ్రహ్మవిదో జనాః. ౨౪

24. அக்னி, தேஜஸ், அஹஸ்ஸு, சுக்லபக்ஷம், உத்தராயண்ம், இந்தமார்க்கங்களில் சென்ற பிரம்மவித்துக்களான ஜனங்கள் பிரமத்தையேசேருவர். அது அர்ச்சராதிமார்க்கம்.

𑌧𑍂𑌮𑍋 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌸𑍍𑌤𑌥𑌾 𑌕𑍃𑌷𑍍𑌣𑌃 𑌷𑌣𑍍𑌮𑌾𑌸𑌾 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌯𑌨𑌮𑍍 ।
𑌤𑌤𑍍𑌰 𑌚𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑍀 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥

தூமோ ராத்ரி ஸ்ததா க்ருஷ்ண ஷ்ஷண்மாஸா தக்ஷிணாயனம்,
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதி ர்யோகீ ப்ராப்ய நிவர்த்ததே. ௨௫

ధూమో రాత్రి స్తథా కృష్ణ ష్షణ్మాసా దక్షిణాయనమ్,
తత్ర చాన్ద్రమసం జ్యోతి ర్యోగీ ప్రాప్య నివర్తతే. ౨౫

25. தூமம், ராத்ரி கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம் இந்தமார்க்கமாகசந்திர தேஜஸை ஆச்ரயிக்கும் யோகி புனர்ஜன்மத்தையடைகிறான். இது தூமாதி மார்க்கம் எனப்படும். ஆகையால் மார்க்கத்திலும் பேதம் உண்டு.

𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌗𑌤𑍀 𑌹𑍍𑌯𑍇𑌤𑍇 𑌜𑌗𑌤𑌃 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍇 𑌮𑌤𑍇 ।
𑌏𑌕𑌯𑌾 𑌯𑌾𑌤𑍍𑌯𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌨𑍍𑌯𑌯𑌾𑌽𑌽𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 ॥ ௨௬

ஶுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத ஶ்ஶாஶ்வதே மதே,
ஏகயா யா த்யநாவ்ருத்தி மந்யா வர்த்ததே புந:. ௨௬

శుక్లకృష్ణే గతీ హ్యేతే జగత శ్శాశ్వతే మతే,
ఏకయా యా త్యనావృత్తి మన్యయా వర్తతే పునః. ౨౬

26. அரு—என்ன ஆர்ப்பாடமாய்க் கூறுகின்றாய்.

கிரு—இந்த மார்க்கங்கள் சாச்வதமாக இருந்தவை. இதில் ஒரு வழியாகப் போனவன் மீண்டும் பிறவான். வேறொருவழியாய்ச்சென்றவன் மீண்டும் பிறப்பன் இவ்வாறு நெடுநாட்களாய் நடக்கிறது.

𑌨𑍈𑌤𑍇 𑌸𑍃𑌤𑍀 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌜𑌾𑌨𑌨𑍍 𑌯𑍋𑌗𑍀 𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ॥

நைதே ஸ்ருதீ பார்த்த ஜாநந் யோகீ முஹ்யதி கஶ்சந,
தஸ்மா த்ஸர்வேஷு காலேஷுயோகயுக்தோ பவார்ஜுந. ௨௭

నైతే సృతీ పార్థ జానన్ యోగీ ముహ్యతి కశ్చన,
తస్మా త్సర్వేషు కాలేషు యోగయుక్తో భవార్జున. ౨౭

27. அரு—இதுவும் ஒரு உபதேசமா.

கிரு—இந்த இரண்டு மார்க்கங்களின் சங்கதிதெரியவேண்டியதே. இந்திராதிகளை ஆராதித்தலால் மீண்டும் ஜன்மம்உண்டாம் எனவும், அந்தமார்க்கம் புகையுடனும், ராத்ரி, இருளுடனும் நிறைந்திருத்தலால் கஷ்டமானவழியாக இருக்கும்எனவும் தெரியவேண்டும். மற்றொரு மார்க்கம் நல்ல மார்க்கமாயிருத்தல் நிவர்த்திகர்மஞ்செய்து நன்மார்க்கத்தில் விழுந்து நற்கதிக்குப்போக வேண்டுமென்றுதோன்றும். ஆகையால் மார்க்கங்களின் சங்கதி ஞாபகத்தில் வைக்கத்தகுந்ததாம்.

அரு—எனக்கெந்தமார்க்கம் உண்டாமோ.

கிரு—(இந்த 27-சுலோ. அர்ஜுநா என்று விளித்ததால் நீ பரமசுத்தன் ஆதலால் மீண்டும் வரவேண்டியதில்லை யென்றுகருத்து.)

𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 𑌤𑌪𑌸𑍍𑌸𑍁 𑌚𑍈𑌵
𑌦𑌾𑌨𑍇𑌷𑍁 𑌯𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑍍 ।
𑌅𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾
𑌯𑍋𑌗𑍀 𑌪𑌰𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌚𑌾𑌦𑍍𑌯𑌮𑍍 ॥ ௨௮

வேதேஷு யஜ்ஞேஷு தபஸ்ஸுசைவ
தாநேஷு யத்புண்யபலம் ப்ரதிஷ்டம்,
அத்யேதி த த்ஸர்வமிதம் விதித்வா
யோகீ பரம்ஸ்த்தாந முபைதி சாத்யம். ௨௮

వేదేషు యజ్ఞేషు తపస్సుచైవ దానేషు యత్పుణ్యఫలం ప్రదిష్టమ్,
అత్యేతి త త్సర్వమిదం విదిత్వా యోగీ పరంస్థాన ముపైతి చాద్యమ్.

28. அரு—உபதேசம்முடிந்ததா.(அர்சுனன் கீதைகேட்டதுபோதும் என்று எண்ணிமுடிந்ததா என்று கேட்கையில் இன்னும் பத்து அத்யாயங்களை உபதேசிக்கவேண்டியிருத்தலால்கிருஷ்ணன் அந்தவினவிற்கு பதில்கூறாமல்வேறுவிதமாய்க் கூறுகிறான்.

கிரு—இந்தக்கீதையில் ஒரு சுலோகத்தைக்கேட்ட மாத்திரத்தில் நான்கு வேதங்களை அத்யயனம் செய்து அர்த்தவிசாரம் செய்தால் எவ்வளவுபலம்கிட்டுமோ (அத்யேதி) அதினும் அதிகமானபலம் கிடைக்கும். யஞ்ஞங்கள் செய்தவரினும், தபங்கள், தானங்கள், செய்பவரினும் மிகுந்தபலம் உண்டாம். (தத்ஸர்வம்) மேற்கூறிய புண்ணியகார்யங்களனைத்தினையும் ஒருவனே செய்யின் எவ்வளவுபுண்யமோ அவைகளினும் அதிகபுண்யம் கீதையால்உண்டாகும். ஆயின் கேவலம் கேட்டமாத்திரத்திலன்று, (விதித்வா) அதனை தெரிந்து கொள்ளின் அப்படிப்பட்டபுண்யம் உண்டாம். கர்ம, ஞான, பக்தி, த்யான யோகியாவன். மோக்ஷம் உண்டாம்.

த்வைதம்,விசிஷ்டாத்வைதம்.

வைகுண்டம் லபிக்கும்.

அத்வைதம்.

பரப்பிரம்மத்தை அடைவான். (பரப்பிரம்மத்தில் இல்லாதது தோன்றுகிறபடியால் மித்யாபூதமான சகல சராசரங்களுக்கு ஸ்தானமான பிரம்மத்தை அடைவான்.) இந்த அத்யாயம், 21-சுலோ. அநுசரித்து த்வைதாத்வைதங்களில் இந்தஅத்யாயம் பரப்பிரம்மபரம். விசிஷ்டாத்வைதத்தில் ஆத்மபரம்.

ஸ்ரீ பகவத்கீதை உபநிஷத் பிரம்மவித்தையென்கிற யோக சாஸ்திரக் கிருஷ்ணார்ச்சுன சம்வாதத்தில் அக்ஷரபரப்ரஹ்மயோகமென்னும் பெயருள்ள எட்டாவது அத்யாயம். முற்றுப்பெற்றது.



ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாய பரப்ரம்மணே நம:.

# ஸ்ரீ பகவத்கீதை

## ராஜவித்யாராஜகுஹ்ய யோகம்.

### ஒன்பதாவது அத்யாயம்.

ஸ்ரீபகவாநுவாச.

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानविज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥

இதந்து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே,
ஜ்ஞாநவிஜ்ஞாநஸஹிதம் யத்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே ஶுபாத். க

ఇదంతు తే గుహ్యతమం ప్రవక్ష్యామ్యనసూయవే,
జ్ఞానవిజ్ఞానసహితం యద్జ్ఞాత్వా మోక్ష్యసేzశుభాత్. ౧

ஸ்ரீபகவான் கூறுதல்.

1. அரு—8-அத்யாயம் முடிவில் நீ சொன்னபலத்தைக்கேட்டு கீதையின் மஹிமை தெரிந்துகொண்டேன். யதா சாவகாசமாய் கீதை உபதேசம் செய்.

கிரு—உனக்குப் பரமரஹஸ்யமான ஞானத்தை விஞ்ஞானத்துடன் கூறுகிறேன்.

த்வைதம்.

பரோக்ஷ ஞானத்தையும் அபரோக்ஷ ஞானத்தையும் கூறுகிறேன்.

அத்வைதம்.

சர்வம் வாசுதேவன்எனும் ஞானத்தையும் அநுபவத்தையும் கூறுகிறேன்.

விசிஷ்டாத்வைதம்.

பக்தி உபாசனபேதங்கள் கூறுகிறேன்.

அரு—இவ்வளவு பெரியவிஷயங்கள் தெரிந்துகொள்ள நான் அருகனோ?

கிரு—குணங்களெல்லாவற்றினும் அசூயைகெட்டது. உனக்கு அந்தக் குணமில்லை ஆகையால் இந்தச்சங்கதி அறிந்துகொள்ள நீ அருகன்.

இந்தச்சுலோகத்தில் (து) பிரயோகத்தால் நீஇதுவரையில்கேட்ட ரஹஸ்யமன்று. 2-அத். 50-சுலோ. போல சுபாசுபரூபங்களான சம்சாரபந்தங்

களிலிருந்து விடுவிக்கப்படுவாய் என்றுகருத்து. (புண்யபாபங்களை விட்டால்தான் மோக்ஷம்அடையலாம் என்பது முண்டகோப நிஷத்வாக்யம்.)

𑌰𑌾𑌜𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌰𑌾𑌜𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 |
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌵𑌗𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌸𑍁𑌖𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ||

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ர மித முத்தமம்,
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்து மவ்யயம். ௨

రాజవిద్యా రాజగుహ్యం పవిత్ర మిద ముత్తమమ్,
ప్రత్యక్షావగమం ధర్మ్యం సు సుఖం కర్తు మవ్యయమ్. ౨

2. கிரு—இது வித்தைகளுக்கு அரசு. அன்றி ராஜார்ஹமான வித்தை, ரஹஸ்யங்களுக்கு ராஜன் அன்றி ராஜார்ஹமான ரஹஸ்யம்.

விசிஷ்டாத்வைதம்.

இந்தவித்தை ராஜாக்களுக்கே அருகமானதா எனின் அவ்வாறன்று. அநேககார்யங்கள் செய்யத்தக்கவரா யிருக்கும் அரசர்களின் மனம் விசாலமாகஇருக்கும். அவர்களைப்போல விசாலமானமனம் உள்ளவர்களுக்கு இந்தவித்யை அருகம். ஞாபகசக்தி கிரஹணசக்தி யில்லாதவர்களுக்கு இந்தவித்தை பிரயோஜனப்படாது. இதைகேட்டாலும் படிப்பித்தாலும், அறிந்துகொண்டாலும் சிரேஷ்டம். 4-அத். 3-சுலோ. போல, அஸமானமான ஞானம் இது உத்தம பவித்ரம் கங்காதிகள் பாபத்தைமாத்ரம் போக்கடிக்கக் கூடியதாகும். இது மோக்ஷப்ரதிபந்தங்களாகும் புண்யபாபங்களான இரண்டினையும் போக்கடிக்கும். கீதாச்ரவணம் பிரத்யக்ஷாவகம் ஆனது ஒவ்வொருஇந்திரியங்களுக்கும் நியாமகன், பிரவர்த்தகனுமிருக்கும் பகவானைத் தெரிந்துகொள்ளலாகும். ப்ரம்மஞானம் சாதனம்.

அத்வைதம்.

அரு—ஞானம் எப்படியிருக்கும் கண்களுக் ககப்படுமா.

கிரு—ப்ரத்யக்ஷாவகமம் = வெள்ளை, கறுப்பு தெரிவதுபோல சுகதுக்கங்கள் தெரியுமா.

அரு—சுகதுக்கங்கள் தெரிந்துகொண்டே யிருக்கும்.

கிரு—அவ்வாறே நான் சிறிது ஞானியென்று தெரிந்திருக்கும்.

விசிஷ்டாத்வைதம்.

கீதையாலறியத்தக்க பகவான் பிரத்யக்ஷமாவன்.

அரு—இவ்வளவு பெரியவிஷயம் அறிந்துகொள்ள நான் அதிகாரியா

கிரு—இதில் பிரவர்த்திக்கின் எளிது. சாச்வதசுகம் கொடுக்கும்.

𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌾𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 |
𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌨𑌿 || ௩

அஶ்ரத்ததானு: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப,
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி. ௩

అశ్రద్దధానాః పురుషా ధర్మస్యాస్య పరంతప,
అప్రాప్య మాం నివర్తన్తే మృత్యుసంసారవర్త్మని. ౩

3. அரு—இந்தவிஷயத்தைக் கேட்டும் ச்ரத்தை பிறவாதிருந்தால் என்னகதி.

கிரு—அவன் நாசமாய்ப்போவன். தர்மரூபமான இதில் சிரத்தையில்லாதவர்கள் என்னையடையார்.

அரு—என்னஆவர்.

கிரு—மிருத்யுரூபமான சம்சாரத்தில் சதா பரிப்ரமிப்பார்கள், மோக்ஷத்திற்குப்போக அசமர்த்தராவர். கீதை நம்பாத இப்படிப்பட்டவர்கள் மேலேறினும் கீழ் வீழ்வர்.

𑌮𑌯𑌾 𑌤𑌤𑌮𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑌗𑌦𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾 ।
𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨𑌚𑌾𑌹𑌂 𑌤𑍇𑌷𑍍𑌵𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥

மயா தத மிதம் ஸர்வம் ஜக தவ்யக்தமூர்த்தினா,
மத்ஸ்தாநி ஸ்ர்வபூதாநி நசாஹம் தேஷ்வவஸ்திதஃ. ௪

మయా తత మిదం సర్వం జగ దవ్యక్తమూర్తినా,
మత్ స్థాని సర్వభూతాని నచాహం తేష్వవస్థితః. ౪

4. அரு—சிரத்தையுடன் கேட்கிறேன் உபதேசி.

கிரு—7-அத். 4.சுலோ. இல், பெரியதாகும் பிரகிருதி என் ஆதீனமென்று கூறியிருந்தேனன்றோ, அந்தப்பிரகிருதியால் சரீரங்களை சிருட்டிக்கிறதே அல்ல. எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்திருக்கிறேன்.

அரு—எல்லாவற்றி லிருந்தபோது நீகாணப்படவில்லையே.

கிரு—அவ்யக்தமூர்த்தியா யிருக்கிறேன். (நாம், சாதாரணமாய்க் காணப்படாதிருந்தாலும் சில இடங்களில் பிசாசங்களிருக்கின்றன என்று எண்ணுகிறோம். சர்வசக்தியுள்ள பகவானுக்கு இவ்வகைச்சக்தி யில்லையென்று நாம் நினைக்கக்கூடாது.)

அரு—நீ எல்லா இடங்களிலும் அப்படிஎன் இருக்கிறாய்.

கிரு—அவற்றின க்ஷேமத்தின்பொருட் டிருக்கின்றேன். அவைகளுக்கு நான் ஆதாரமாக இருக்கின்றேன். எனக்கவை ஆதாரமாக இரா.

𑌨 𑌚 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌭𑍂𑌤𑌭𑍃𑌨𑍍𑌨 𑌚 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑍋 𑌮𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃 ॥ ௫

ந ச மத்ஸ்தாநி பூதாநி பஶ்ய மே யோக மைஶ்வரம்,
பூதப்ருந்ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவநஃ. ௫

న చ మత్థాని భూతాని పశ్య మే యోగ మైశ్వరమ్,
భూతభృన్న చ భూతస్థో మమాత్మా భూతభావనః. ౫

5. அரு—நீ யெல்லாவற்றையும் பரிக்கும்பக்ஷத்தில் அசுத்தவஸ்துக்களின் ஸ்பரிசம் உனக்கு உண்டாமே.

கிரு—என்மீதிரா.

அரு—பூர்வசுலோகத்தில் என்னிடத்திலிருக்கின்றன என்றுகூறி இப்போது இல்லையென்கிறுயே திருடமான ஒருவார்த்தைசொல்.

கிரு—நான் அவர்களின் ஸ்பர்சம் இல்லாமல் அந்தராத்மாவா யிருக்கின்றேன்.

அரு—யுக்தியாய்ச் சொன்னுய் அது சுலபமானவேலையா.

கிரு—நான் ஈஸ்வரன் ஆதலால் எனக்கு அதுகூடும்.

த்வைதம்.

என்சரீரம் அனைத்தையும் சிருட்டிக்கும்.

அத்வைதம்.

என்ஸ்வரூபம் அனைத்தையும் படைக்கும்.

விசிஷ்டாத்வைதம்.

என்ஸங்கல்பம் எல்லாவற்றையும் சிருட்டிக்கிறது.

𑌯𑌥𑌾𑌕𑌾𑌶𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌗𑍋 𑌮𑌹𑌾𑌨𑍍 ।
𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌤𑍍𑌯𑍁𑌪𑌧𑌾𑌰𑌯 ॥ ௬

யதாகாஶஸ்திதோ நித்யம் வாயு ஸ்ஸர்வத்ரகோ மஹாந்,
ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்தாநீத்யுபதாரய. ௬

యథాకాశస్థితో నిత్యం వాయు స్సర్వత్రగో మహాన్,
తథా సర్వాణి భూతాని మత్స్థానీత్యుపధారయ. ౬

6. அரு—உன்சொற்களால் எனக்கொன்றும் சமாதானம் பிறக்கவில்லை.

த்வைதாத்வைதம்.

கிரு—ஆகாசம் எங்குமிருப்பினும் வாயுவைத் தொடர்ந்திருத்தல்போல நான் எங்குமிருப்பினும் பூதங்களின் ஸ்பர்சம் இன்றி யிருக்கிறேன்.

விசிஷ்டாத்வைதம்.

ஆகாசத்திலுள்ள சர்வவியாப்தமான மஹாவாயுவைப்போல எல்லாரும் என்னிடத்தில் இருக்கின்றன வென்று நிச்சயித்துக்கொள். கிருஷ்ணன் 7-அத், இல், சிருஷ்டி ஸ்திதிலயம் கூறினன். இப்போது உள்ளே பிரவேசம் சொன்னுன். 7-அத், 7-சுலோ, இல். எல்லாவற்றிலும் இருக்கிறேன் என்றுசொல்லி மீண்டும் இந்தஅத்தியாயத்தில் அந்தச்சங்கதி ஏன்சொன்னுன் எனின் அந்தச் சங்கதியை உறுதிப்படுத்தவாம்.

𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑌿𑌕𑌾𑌮𑍍 ।
𑌕𑌲𑍍𑌪𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌾𑌨𑌿 𑌕𑌲𑍍𑌪𑌾𑌦𑍌 𑌵𑌿𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ ௭

ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம்,
கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம். ௭

సర్వభూతాని కౌన్తేయ ప్రకృతిం యాన్తి మామికామ్,
కల్పక్షయే పునస్తాని కల్పాదౌ విసృజామ్యహమ్. ౭

7. அரு—அந்த பிரவேசம் உன்வேலேயாயிருக்கிறது. சிருட்டிக்கிறதற்கு வேறுயாராவது இருக்கக்கூடாதா.

கிரு—பிரகிருதிக்கு நான் லயகர்த்தா.

அரு—லயம்அடையச்செய்தால் எப்படி?

கிரு—மீண்டும் சிருட்டிப்பேன்.

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾 𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 𑌵𑌿𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 ।
𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮 𑌮𑌿𑌮𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨 𑌮𑌵𑌶𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍍𑌵𑌶𑌾𑌤𑍍 ॥ ௮

ப்ரக்ருதிம் ஸ்வா மவஷ்டப்ய விஸ்ருஜாமி புந: புந:,
பூதக்ராம மிமம் க்ருத்ஸ்ந மவஶம் ப்ரக்ருதே ர்வஶாத். ௮

ప్రకృతిం స్వా మవష్టభ్య విసృజామి పునః పునః,
భూతగ్రామ మిమం కృత్స్న మవశం ప్రకృతే ర్వశాత్. ౮

8. அரு—ஸ்ருஷ்டி ஸ்திதிலயங்களுக்கு நீ ஆதாரமானபோது எந்தஆதாரத்தில் சிருட்டிக்கிறாய்.

கிரு—7-அத்.7-சுலோ. இல்,எல்லாவற்றிற்கு மாதாரம் நான் என்றேனல்லவா.

அரு—மேற்சங்கதி திடப்படுத்த மீண்டும் சொன்னதுபோல சிருட்டிசங்கதியும் மீண்டும் சொல்லவில்லேயல்லவாஎன்று கேட்டேன்.

த்வைதம்.

பிரகிருதியைக்காரணமாகவைத்துக்கொண்டு சிருட்டிப்பேன்.

அத்வைதம்.

பிரகிருதியை ஆச்ரயித்து சிருட்டிப்பேன்.

விசிஷ்டாத்வைதம்.

பிரகிருதியை மாற்றிப் பலவிதங்களாகப் பிறப்பேன்.

அரு—எத்தனேமுறை.

கிரு—அநேகமுறை.

அரு—எல்லாப்பிராணிகளேயுமா.

கிரு—ஆம் எல்லாப்பிராணிகளேயும்.

அரு—பிராணிகள் சொன்னபடி நடவாவிடின் என்ன செய்வாய்?

கிரு—அவைகளுக்கு என்னஸ்வதந்தரம் உண்டு.

அரு—என்னஅன்யாயம். அவைகளுக்கு அவ்வளவு அஸ்வாதந்திரயம் என்று உன் இஷ்டப்ரகாரம் தயையில்லாமல் பிரவர்த்திக்கிறாயா?

கிரு—ஜன்மம் அவரவர்களின் பிரகிருதி வசமாக இருக்கிறது.நான்என்ன செய்ய மாட்டுவேன்.

அரு—பிரகிருதி யாருக்குரியது.

கிரு—எனக்குரியது.

𑌨 𑌚 𑌮𑌾𑌂 𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 ।
𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌵𑌦𑌾𑌸𑍀𑌨𑌮𑌸𑌕𑍍𑌤𑌂 𑌤𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 ॥ ௯

ந ச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தனஞ்ஜய,
உதாஸீநவதாஸீந மஸக்தம் தேஷு கர்மஸு. ௯

న చ మాం తాని కర్మాణి నిబధ్నన్తి ధనఞ్జయ,
ఉదాసీనవదాసీన మసక్తం తేషు కర్మసు. ౯

9. அரு—அதனைச்சரியாக வர்த்திக்கக் கட்டளை யிடக்கூடாதா. விஷமசிருஷ்டி உனக்குத் தோஷத்தை யுண்டாக்காதா.

கிரு—நான் உதாசீனன். விஷமசிருஷ்டி யென்னைச் சிறிதும் பாதிக்காது.

அரு—நீ உதாசீனனானால் கார்யங்கள் எப்படிநடக்கும்.

கிரு—உதாசீனன்போலிருக்கிறேன். ஆதலால் கர்மபலங்களில் எனக்கு இச்சையிராது. அவரவர்களின் பாப புண்யங்களுக்கு அநுகுண்யமாக சிருட்டி நடக்குமென்று நான் சும்மா இருப்பேன். இந்தசங்கதி 4-அத், 14-சுலோ. இல், சொன்னேன் அதைவிவரணமாய் மீண்டும் சொன்னேன். (ஜட்ஜி குற்றஞ்செய்தவனைத் தண்டித்தாலும் அதனால் அவனுக்கு எதுவும் பாபம் இல்லாததுபோல கர்மாநுகுண்யமாய்த் தண்டிக்கிற பகவானுக்கு கர்மங்களால் பாதையில்லை.)

𑌮𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌸𑍂𑌯𑌤𑍇 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 ।
𑌹𑍇𑌤𑍁𑌨𑌾𑌨𑍇𑌨 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌜𑌗𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥ ௰

மயாத்யக்ஷேண ப்ரக்ருதி ஸ்ஸூயதே ஸசராசரம்,
ஹேதுநாநேந கௌந்தேய ஜகத்விபரிவர்த்ததே. ௰

మయాధ్యక్షేణ ప్రకృతి స్సూయతే సచరాచరమ్,
హేతునానేన కౌన్తేయ జగ ద్విపరివర్తతే. ౧౦

10. அரு—அவ்வாறாயின் ஜகத்கார்யங்கள் எவ்வாறுநடக்கக் கூடும்.

கிரு—சாஸ்திரங்களை அனுசரித்து.

அரு—நீ சொன்னபடிநடக்குமா.

த்வைதம்.

கிரு—பகவான் அத்யக்ஷனாயிருத்தலால் நடக்கும்.

அத்வைதம்.

காந்தம் தன்சந்நிதானத்திலிருப்பதை யிருப்பதுபோல என்சந்நிதானமாத்திரத்தில் நடக்கும்.

விசிஷ்டாத்வைதம்.

அந்தந்தப்பூர்வகர்மங்கள் எனக்குச்சாக்ஷாத்தாய்த்தெரியும் ஆதலால் பிரகிருதியை அநுசரிப்பேன். மேற்சொன்னபடிநடந்துகொண்டிருக்கும் (அஹே-

ராத்ரங்களைப்போலவும் கிருஷ்ணபக்ஷசுக்லபக்ஷங்களைப்போலவும் ஜகத்ஸ்ருஷ்டிசம்மாரங்கள் நடந்துகொண்டிருக்கும்.)

𑌅𑌵𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌮𑍂𑌢𑌾 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌤𑌨𑍁 𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌮𑍍 ।
𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵 𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮 𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ ௧௧

அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநு மாஶ்ரிதம்.
பரம் பாவ மஜாநந்தோ மம பூதமஹேஸ்வரம். ௧௧

అవజాన న్తి మాం మూఢా మానుషీం తను మాశ్రితమ్,
పరం భావ మజానన్తో మమ భూతమహేశ్వరమ్. ౧౧

11. அரு—உன் மஹிமைகளைக்கேட்பதால் நீ மிருந்தசிலாகிக்கத்தக்கவன் என்று தோன்றுகின்றது. இவ்வளவுபெரியனுயிருந்தும் உன்னை உலகத்தவர்கள் தூஷிக்கின்றனர்.

த்வைதாத்வைதம்.

கிரு—நீ அவருடன் சேரவேண்டாம். என்பெருமைஅவர்கள் அறியார். நான் கருடவாஹனனுருடனுய்வந்திருந்தால் அவர்கள் பயபக்திகாட்டுவர். நான் மனுஷ்யசரீரத்தைக்காட்டுதலால் அவர்கள் என்னை அறியார்கள். என் பிரபாவம் அறிந்த நாரதாதிகள் என்னை தூஷிக்கவில்லையன்றோ.

விசிஷ்டாத்வைதம்.

நான் உபநிஷத்துக்களில் கூறப்பட்டபடியில்லை. நான் பூதமஹேச்வரன். சௌலப்யத்தை அறிவித்தற்காக இந்தலோகத்தில்அவதரித்தேன். லோகோத்தாரணார்த்தம் நான்செய்யும் லீலைகளைதெரியாமல் தூஷிக்கிறவர்கள் மூடர்கள். (பெரியவர்கள் சிலருடன்கலந்து அளவளாவிருத்தலால் அவர்களுக்கு கௌரவம் உயருமல்லாமல் குறையாதன்றோ. கவர்னர் 3 வது க்ளாஸ்புகைபண்டியில் பிரயாணஞ்செய்தாலும் அவருக்குக் கவரவம் உயருமே அன்றி குறையாதென்று ஸ்ரீமான் லக்ஷ்மணசாரிசொல்லும்வழக்கம். அந்தவேளை நமதுகவர்னராகும் ஸ்ரீகார்மிகல் பிரபு அவர்கள்செய்து காட்டினர். அவரின் சௌலப்யத்திற்கு அனைவரும் புகழ்கின்றார்கள் அல்லவா. இவ்வாறே ஸ்ரீஹரி மனுஷதேஹத்திலிருக்கினும் அவரின்தத்வம் அறிந்தவர்கள் அவரை ஆராதிப்பர். மகிமை அறியாதமூடர் தூஷிப்பர்.

𑌮𑍋𑌘𑌾𑌶𑌾 𑌮𑍋𑌘𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍋 𑌮𑍋𑌘𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌵𑌿𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍀 𑌮𑌾𑌸𑍁𑌰𑍀𑌂 𑌚𑍈𑌵 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌮𑍋𑌹𑌿𑌨𑍀𑌂 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ॥

மோகாஶா மோககர்மாணோ மோகஜ்ஞாநா விசேதஸ:,
ராக்ஷஸீ மாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ஶ்ரிதா:. ௧௨

మోఘాశా మోఘకర్మాణో మోఘజ్ఞానా విచేతసః,
రాక్షసీ మాసురీం చైవ ప్రకృతిం మోహినీం శ్రితాః. ౧౨

12. அவ்வாறு அலக்ஷ்யம்செய்பவர் மனோரதம்தீராது. அவர்கள்செய்யும் கர்மத்திற்கு பலம்இராது. அவருக்குஞானம் உண்டாகாது. சேதனத்திற்கும் அவர்க்கும் பேதம்இல்லை. ஜன்மத்தில் அவர்கள் மனுஷ்யராகவிருந்தாலும் அவர்கள் ராக்ஷசஸ்வபாவம் உள்ளவர்கள்.

𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌦𑍈𑌵𑍀𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।
𑌭𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ கங

மஹாத்மான ஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதி மாஶ்ரிதா:,
பஜந்த்யநந்யமனஸோ ஜ்ஞாத்வா பூதாதி மவ்யயம். கங

మహాత్మాన స్తు మాం పార్థ దైవీం ప్రకృతి మాశ్రితాః,
భజ న్త్యనన్యమనసో జ్ఞాత్వా భూతాది మవ్యయమ్. ౧౩

13. அரு—உன்னை தூஷிக்கிறவர்கள் மூடரென்று எவ்வாறுகூறலாம். உன்னிடத்திலும் தவறுகளுண்டோ என்னமோ.

கிரு—என்விஷயத்தில் தவறுகளைப் பாராட்டித்தூஷிப்பவர்கள் மூடர்களே. ஏன் எனின் மற்றும்சிலர் சநகாதியர், நாரதாதியர் என்னைத்தோத்திரம் செய்கின்றார் அல்லவா.

அரு—அவ்வாறு இருக்கின்றாரா.

கிரு—இருக்கிறார்கள். வேறுமனமில்லாமல் நானே அனைத்திற்கும் கர்த்தா என்று அறிந்து பஜிப்பார்கள் அவர்கள் மஹாத்மாக்கள்.

𑌸𑌤𑌤𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌯𑌤𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌦𑍃𑌢𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ।
𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 ॥ கச

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா:,
நமஸ்யந்த ஶ்ச மாம்பக்த்யா நித்யயுக்தா உபாஸதே. கச

సతతం కీర్తయన్తో మాం యతన్తశ్చ దృఢవ్రతాః,
నమస్య న్త శ్చ మాంభక్త్యా నిత్యయుక్తా ఉపాసతే. ౧౪

14. அரு—எப்படிபஜிப்பது.

கிரு—திருடவிரதராகும் அவர்கள் சர்வகாலமும் என்னையேகீர்த்தனம் செய்துகொண்டும், (என்னைஉபாசிக்கிறதற்கு) ப்ரயத்னப்பட்டுக்கொண்டும், பக்தியுடன் என்னை நமஸ்கரித்துக்கொண்டும், என்னுடன் நித்யாசம்பந்தத்தைக்கோரினவர்களாய் உபாசனை செய்வார்கள். (வீணைதிவாத்யங்களால் என்னைப்பஜிப்பார்கள். அவர்கள் நாரதாதிகள்முதலியவர்கள்.)

𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌚𑌾𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑍇 𑌯𑌜𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌏𑌕𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑍃𑌥𑌕𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌮𑍍 ॥ கரு

ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மா முபாஸதே,
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விஶ்வதோமுகம். கரு

జ్ఞానయజ్ఞేన చా ప్యన్యే యజంతో మా ముపాసతే,
ఏకత్వేన పృథక్త్వేన బహుధా విశ్వతో ముఖమ్. ౧౫

15. அரு—அவ்வாறு, ஆடி, பாடி, பஜிப்பவர்கள் சிலர். கொஞ்சமும். அசையாதிருந்து பஜிக்கின்றார்களே, அவர்கள் சங்கதி என்ன.

கிரு—அது அதற்குமேனிலே.

விசிஷ்டாத்வைதம்.

நான் விச்வதோமுகன், வெவ்வேறுபொருள்களிலிருக்கிறேன். பேதங்களிருக்கினும், நான் ஒருவனென்று அறிந்தவேறுசிலர் மஹாத்மாக்கள் ஞானமென்கிறயஞ்ஞம் செய்துகொண்டு என்னை உபாசிப்பார்கள்.

அத்வைதம்.

உத்தமர்கள் பரப்ரம்மம்ஒன்றென்றும், மத்யமர் தான் ஒருவன் ஸ்வாமி ஒருவன் என்று இரண்டென்றும், அதமர்கள் சூர்யன் சந்திரன் முதலிய பஹுரூபங்களாயிருக்கின்றான் என்று உபாசிப்பர்.

த்வைதம்.

எங்கும் நாராயணன் ஒருவனேயிருக்கின்றான் என்றும் அவன் மற்றவைகளினும் விலக்ஷணன் என்றும் வியூஹாவதாரங்களாயும் உபாசிப்பார்கள்.

𑌅𑌹𑌂 𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑌹𑌂 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌸𑍍𑌵𑌧𑌾𑌹𑌮𑌹𑌮𑍌𑌷𑌧𑌮𑍍 ।
𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋𑌽𑌹𑌮𑌹𑌮𑍇𑌵𑌾𑌜𑍍𑌯𑌮𑌹𑌮𑌗𑍍𑌨𑌿𑌰𑌹𑌂 𑌹𑍁𑌤𑌮𑍍 ॥ ௧௬
𑌪𑌿𑌤𑌾𑌹𑌮𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍋 𑌮𑌾𑌤𑌾 𑌧𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ।
𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑍋𑌙𑍍𑌕𑌾𑌰 𑌋𑌕𑍍𑌸𑌾𑌮 𑌯𑌜𑍁𑌰𑍇𑌵 𑌚 ॥ ௧௭
𑌗𑌤𑌿𑌰𑍍𑌭𑌰𑍍𑌤𑌾 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌨𑌿𑌵𑌾𑌸𑌃 𑌶𑌰𑌣𑌂 𑌸𑍁𑌹𑍃𑌤𑍍 ।
𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌪𑍍𑌰𑌳𑌯𑌃 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 𑌬𑍀𑌜𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ ௧௮

அஹம் க்ரது ரஹம் யஜ்ஞ: ஸ்வதாஹ மஹ மௌஷதம்,
மந்த்ரோஹ மஹ மேவாஜ்ய மஹமக்நி ரஹம் ஹுதம். ௧௬
பிதாஹ மஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ:,
வேத்யம் பவித்ர மோங்கார ருக்ஸாம யஜு ரேவச. ௧௭
கதிர்பர்தா ப்ரபு ஸ்ஸாக்ஷீ நிவாஸ ஶ்ஶரணம் ஸுஹ்ருத்,
ப்ரபவ: ப்ரளய: ஸ்தாநம் நிதானம் பீஜமவ்யயம். ௧௮

అహం క్రతు రహం యజ్ఞః స్వధాహ మహ మౌషధమ్,
మంత్రోహ మహ మేవాజ్య మహమగ్ని రహం హుతమ్.
పితాహ మస్య జగతో మాతా ధాతా పితామహః,
వేద్యం పవిత్ర మోంకార ఋక్సామ యజు రేవచ. ౧౬

గతి ర్భర్తా ప్రభు స్సాక్షీ నివాస శ్శరణం సుహృత్,
ప్రభవః ప్రళయః స్థానం నిధానం బీజ మవ్యయమ్. ౧౮

—16, 17, 18. (16-முதல் 18வரையில்) அரு—எல்லாவற்றிலும் இருக்கின்ருயா ?

கிரு—பலதடவை கேட்காதே. நானேயஞ்ஞம், நானே மஹாயஞ்ஞம், நானே ஸ்வத (பிதுரர்கட்குக் கொடுக்கத்தக்கத்ரவ்யம்) நானேஔஷதம் (எனின் தேவதைகளுக்குக் கொடுக்கத்தக்க அவிஸ்,) நானே மந்த்ரம்,நானே ஆஜ்யம் நானே அக்னி, நானேஹோமம்.கிரதுவுக்கும் யஞ்ஞத்திற்கும் பேதம் என்ன எனின்.

த்வைதம்.

பார்யையுடன் சங்கல்பம்செய்து செய்வதுயஞ்ஞம். மந்திரம் சொல்லி அவிஸ்கொடுப்பது கிரது.

அத்வைதம்.

சுருதி ஸ்மிருதிகளில் தெரிவிக்கப்பட்டவை.

விசிஷ்டாத்வைதம்.

க்ரதுபெரிது, யஞ்ஞம்சிறிது (வீடுகளில்செய்வது) இந்தஉலகத்திற்குத்தந்தை நான், வேதவேத்யமான பரமபாவனம் நான், ஓங்காரம் நான், ருக்சாமய சுர்வேதங்கள் நான், (தாய்தந்தையர் முதலியோர் நான் என்று பகவான்கூறுதலால் சர்வவிதபந்துக்களின் கார்யங்களை பகவான் செய்கின்ருன் என்பதுபாவம்.) ஆச்ரயிக்கவேண்டிய இடம்நான், தரிக்கிறவன்நான், பரிபாலிக்கிறவன் நான், பார்க்கிறவன்நான், வாசஸ்தானம் நான், சரணம் நான், மித்ரன் நான், உத்பத்திலயஸ்தானம் நான், நிதானம் நான்,நாசமில்லாத விதைநான் (ஒருவன் தாங்குகிறவனுயினும் அதிகாரமில்லாதிருந்தபோது ஆச்ரயிப்பவர்களின் கோரிக்கைகளைத்தீர்க்கமுடியாதவனுகஇருப்பன். ஸ்வாமி (தாங்குகிற) பர்த்தாவேயன்றி சகலாதிகாரமுள்ள பிரபுவாகவும் இருக்கிருன். ஒருவன் அதிகாரமுள்ள பிரபுவாக இருக்கினும் ஆச்ரிதர்களுக்குச்சம்பவிக்கப்போகிற ஆபத்தரிந்தாலே காப்பாற்றக்கூடியவனுயிருப்பன். அல்லாவிடின் காப்பாற்றவல்லவனுகான். ஸ்வாமி அதிகாரமுள்ள பிரபுவேஅல்லன். ஸாக்ஷியாயும் = சகலசங்கதிகளேயும் காண்பவனுக இருக்கிருன். நிவாஸம் = தன்னிடத்தில் வைத்துக்கொண்டு ரக்ஷிப்பவனுயும் இருக்கிருன். ஶரணம் = ஆபத்துவந்தகாலத்தில் ரக்ஷிப்பன். சுஹ்ருத் = பிரத்யுபகாரம் கோராமல் உபகாரம்செய்பவன், ஸ்ருஷ்டி, லயம், காப்பாற்றுகிறவன்.)

விசிஷ்டாத்வைதம்.

ப்ரபவ: ப்ரளய ஸ்தானம் = இறப்புப்பிறப்புகளினிடம் பகவானே, ஸ்தானம் = தத்காலத்திலும், நிதானம் = பின்னுல், வயிற்றில் வைத்துக்கொண்டு பிறக்கச்செய்கிறவன்

அரு—எல்லாம் லயமானபிறகு மீண்டும் சிருட்டியெப்படிநடக்கும்.

கிரு—எல்லாவற்றிற்கும் வித்து நான். எங்கும் இருக்கிறேன்.

கிரு—உனக்கேதேனும் ஆபத்துசம்பவித்தால் எப்படி ?

கிரு—அவ்யயம் = நான் நாசம் இல்லாதவன். எனக்கு ஆபத்துநேராது.

𑌤𑌪𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑌹𑌂 𑌵𑌰𑍍𑌷𑌂 𑌨𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌮𑍍𑌯𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌚 ।
𑌅𑌮𑍃𑌤𑌂 𑌚𑍈𑌵 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌸𑌦𑌸𑌚𑍍𑌚𑌾𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 ॥ ௧௯

தபா ம்யஹ மஹம் வர்ஷம் நிக்ருஹ்ண முத்ஸ்ருஜாமிச,
அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச ஸதஸ ச்சாஹ மர்ஜுந. ௧௯

తపా మ్యహం మహం వర్షం నిగృహ్ణా మ్యుత్సృజామిచ,
అమృతం చైవ మృత్యుశ్చ సదస చ్చాహ మర్జున. ౧౯

19. அரு—நான் நான் என்று கூறுகின்றாயே சூர்யன் ஒன்றும் செய்யாதிருக்கின்றானா.

கிரு—அந்தச் சூர்யன் நான்.

அரு—தபிக்கச் செய்வாயே.

கிரு—மழை பெய்யச்செய்கிறேன்.

அரு—உலகம் முழுகினால் எப்படி.

கிரு—சமயத்திற்குத் தக்கபடி மழை பொழிவிப்பேன். நான் அமிர்தம் = மோக்ஷஸாதனம், ஜீவசாதனம், மிருத்யுவு, யமன், இவைகளுக்கு நான் கர்த்தா. (ஸதஸத் எனின்)

த்வைதம்.

காரியகாரணமா யிருக்கிறேன்.

அத்வைதம்.

எவர்களுக்கு எது இருக்கின்றதோ அது பரமாத்மா. எது இல்லையோ அதுவும் பரமாத்மா.

விசிஷ்டாத்வைதம்.

இருப்பது இல்லாதது வரப்போவது பரமாத்மாவே.

𑌤𑍍𑌰𑍈𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌾𑌂 𑌸𑍋𑌮𑌪𑌾𑌃 𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾
𑌯𑌜𑍍𑌞𑍈𑌰𑌿𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑍇 ।
𑌤𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌾𑌸𑌾𑌦𑍍𑌯 𑌸𑍁𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑍋𑌕
𑌮𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌦𑌿𑌵𑌿 𑌦𑍇𑌵𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 ॥ ௨௰

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே,
தே புண்ய மாஸாத்ய ஸுரேந்த்ரலோக
மஶ்நந்தி திவ்யாந் திவி தேவபோகாந். ௨௰

త్రైవిద్యామాం సోమపాః పూతపాపా యజ్ఞైరిష్ట్వా స్వర్గతిం ప్రార్థయన్తే
తే పుణ్య మాసాద్య సురేన్ద్రలోక మశ్నన్తి దివ్యాన్ దివి దేవభోగాన్.

20. அரு—எல்லாம் நீயானபோது தேவதைகளை ஆராதிக்கக்கூடாதா.
கிரு—7-அத். 20-சுலோ. முதல், 4, சுலோகங்களால் சரீரத்திற்குச் செய்த உபசாரமூலத்தால் சரீரிக்குச் சந்தோஷம் உண்டாமென்று தேவதைகளை ஆராதித்தால் எனக்குச்சேரும் என்றேன். ஆனால், பலத்தைக் கோரக்கூடாது. அவ்வாறு தேவதைகளை ஆராதிக்கின் சுவர்க்கத்தையடைந்து விலக்ஷண சுகத்தை அநுபவிக்கக்கூடும்.

𑌤𑍇 𑌤𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌾𑌲𑌂
𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 ।
𑌏𑌵𑌂 𑌤𑍍𑌰𑌯𑍀𑌧𑌰𑍍𑌮𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾
𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 ॥ ௨௧

தே தம் புக்த்வா ஸ்வர்க்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி,
ஏவம் த்ரயீதர்ம மநுப்ரபந்நா
கதாகதம் காமகாமா லபந்தே. ௨௧

తే తం భుక్త్వా స్వర్గలోకం విశాలం క్షీణే పుణ్యే మర్త్యలోకం విశన్తి,
ఏవం త్రయీధర్మ మనుప్రపన్నా గతాగతం కామకామా లభన్తే.

21. அரு—அந்த அநுபவத்துடன் நெடுங்காலம் அவ்வாறேயிருப்பார்களா.
கிரு—அந்தச்சுகம் சாச்வதமானதன்று. மூன்றுவேதங்களை அநுசரித்து கர்மபலத்தைக் கோரினவர்களுக்கு இந்தக்கதியுண்டாம். என்னை ஆராதிக்கினும் பிரவர்த்தி கர்மம் செய்பவருக்கு ஜன்மம் உண்டாகும்.

𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌯𑍇 𑌜𑌨𑌾𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍋𑌗𑌕𑍍𑌷𑍇𑌮𑌂 𑌵𑌹𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

அநந்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே,
தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம். ௨௨

అనన్యాశ్చిన్తయన్తో మాం యే జనాః పర్యుపాసతే,
తేషాం నిత్యాభియుక్తానాం యోగక్షేమం వహామ్యహమ్.

22. 7-அத். 23-சுலோ. இல், சொன்னபடி உன்னை ஆராதித்தால் என்ன உண்டாம்.
கிரு—பிரயோஜனாந்தரங்களை விரும்பாமல் என்னையே த்யானித்துக்கொண்டு உபாசனை செய்கின்றவர்கள் யாரோ என்னிடத்தில் நித்யசம்பந்தத்தைக் கோரின அவர்களுக்கு என்பிராப்தியெனும் யோகத்தினையும் புனர்ஜன்ம நிவர்த்தியெனும் க்ஷேமத்தையும் நானே கொடுக்கின்றேன்.

த்வைதம்.

மற்றவர்களைப் பகவானுக்குச் சமானமாகப் பாவிக்கக்கூடாது.

அத்வைதம்.

நானே வாசுதேவன் என்று இருக்கவேண்டும்.

விசிஷ்டாத்வைதம்.

வேறொரு ப்ரயோசனம் இருக்கக்கூடாது. நித்யமும் முயன்றுகொண்டே யிருக்கவேண்டும். இப்படிபஜித்தால் தான் மோக்ஷம்தருவேன். (யோகம் = இல்லாததைத் தருதல். க்ஷேமம் = உள்ளதைக்காப்பாற்றல்) என்பக்தர்களுக்கு இந்த வேலைசெய்தற்கு நான் சிரசாவஹிக்கிறேன். (தன்னைநம்பின குசேலனுக்கு ஐச்வர்யத்தை அவனிடம் கொடுத்துஅனுப்பாமல் தன்பிரதிஞ்ஞையை முடிப்பதற்காக அந்தபாரத்தைத் தானேவகித்தான் என்பதற்கு ஹரி அவன் வீட்டில் சகலசம்பத்தையும் நிறைவித்தான்.)

𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾𑌭𑌕𑍍𑌤𑌾 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑍇𑌽𑌪𑌿𑌮𑌾𑌮𑍇𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ॥ ௨௩

யேப்யந்யதேவதாபக்தா யஜந்தே ஶ்ரத்தயாந்விதா:,
தேபிமாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம். ௨௩

యేఽప్యన్యదేవతా భక్తా యజన్తే శ్రద్ధయాన్వితాః,
తేఽపిమామేవ కౌన్తేయ యజన్త్యవిధిపూర్వకమ్. ౨౩

23. அரு—இந்திராதிகளை ஆராதிப்பவர் புனர்ஜன்மம் எடுப்பார்களென்று நீ சொன்னசொல் அவ்வளவு சரியானதாக இருக்கவில்லை. அவர்களை ஆராதிப்பவர்களுக்கு மாத்ரம் ஏன் மோக்ஷம் உண்டாகாது.

கிரு—அது என் ஆராதனைஅன்று.

அரு—இந்த அத்யாயத்தில் "அஹம் க்ரதுரஹம் யஞ்ஞ:" என்று சர்வம் நீயேயென்று கூறினையே, இந்திராதிகளை ஆராதித்தால் உனக்குச்சேரவில்லையா.

கிரு—இந்திராதிகளை ஆராதிக்கினும் அப்பூஜை எனக்கேஆகிறது. ஆயினும் அது விதிபூர்வகமான பூஜைஅன்று (எனின் அவர்களுக்கு ஞானம்இல்லையென்று கருத்து.)

𑌅𑌹𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍇𑌵 𑌚 ।
𑌨 𑌤𑍁 𑌮𑌾𑌮𑌭𑌿𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌤𑌶𑍍𑌚𑍍𑌯𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 ॥ ௨௪

அஹ்ம் ஹி ஸர்வயஜ்ஞானும் போக்தாச ப்ரபு ரேவ ச,
நது மா மபிஜாநந்தி தத்வேநாதஸ்ச்யவந்திதே. ௨௪

అహం హి సర్వయజ్ఞానాం భోక్తాచ ప్రభు రేవ చ,
నతు మా మభిజానన్తి తత్త్వేనాతశ్చ్యవన్తితే. ౨౪

24. அரு—அது எவ்வாறு விதி பூர்வகமாயாகாது.

கிரு—எல்லா யஞ்ஞங்களுக்கும் போக்தா நான், பலம்கொடுப்பவனுநான்.

இந்தச்சங்கதி அவர்களுக்குத்தெரியாது. இவ்வாறறிந்து பூஜிப்பவருக்கே மோக்ஷம் கொடுப்பேன்.

𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌦𑍇𑌵𑌵𑍍𑌰𑌤𑌾 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌪𑌿𑌤𑍄𑌨𑍍 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑌿𑌤𑍃𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ।
𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌭𑍂𑌤𑍇𑌜𑍍𑌯𑌾 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑌿𑌨𑍋𑌽𑌪𑌿 𑌮𑌾𑌮𑍍

யாந்திதேவவ்ரதா தேவாந் பித்ரூந் யாந்தி பித்ருவ்ரதா:,
பூதாநி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜிநோபி மாம். உரு

యాన్తి దేవవ్రతా దేవాన్ పితౄన్ యాన్తి పితృవ్రతాః,
భూతాని యాన్తి భూతేజ్యా యాన్తి మద్యాజినోఽపి మామ్.

25. அரு—தேவதைகளை ஆராதிப்பவர்கள் என்னை ஆவார்கள்.

கிரு—7-அத். 23-சுலோ. போல, எவர்களை ஆராதிப்பவர்கள் அவர்களை சேருவர். என்னை ஆராதிக்கின் என்னை அடைவர். (மாமபி = என்பதால் என்னிடத்தில் வந்தவர்கள் மோக்ஷசுகத்தை அனுபவித்தலேயன்றி அவர்கள் கோரின் சுவர்க்காதி லோகங்களுக்குச்சென்று அவ்விடத்திய சுகங்களையும் கூட அநுபவிப்பார்கள்.

𑌪𑌤𑍍𑌰𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌫𑌲𑌂 𑌤𑍋𑌯𑌂 𑌯𑍋 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 ।
𑌤𑌦𑌹𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌹𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑌾𑌮𑌿 𑌪𑍍𑌰𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥ உசு

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி,
ததஹம் பக்த்யுபஹ்ருத மச்நாமி ப்ரயதாத்மந:. உசு

పత్రం పుష్పం ఫలం తోయం యో మే భక్త్యా ప్రయచ్ఛతి,
తదహం భక్త్యుపహృత మశ్నామి ప్రయతాత్మనః. ౨౬

26. அரு—நீ யிவ்வளவு கனமுள்ளவனுதலால் உன்னை யெந்தவிதமாக ஆராதிக்கவேண்டுமோ உனக்கு என்னசமர்ப்பிக்கவேண்டி யிருக்குமோ என்று பயம் உண்டாகின்றது.

கிரு—பயப்படாதே, நான் பரமசுலபன், உங்கள் சக்திக்குத்தக்கது என்ன தரினும் திருப்தியுடன் கைக்கொள்வேன். ஒருபத்திரத்தையாயினும், ஒருபுஷ்பத்தையாயினும், ஒருபழத்தையாயினும், உத்தரணி ஜலத்தையாயினும் கொடுத்தாலும் போதும்.

அரு—எவ்வளவு சுலபமான வஸ்துவினுலாயினும் திருப்தி யடைவாயா.

கிரு—ஆம்.

அரு—அது உனக்கு எப்படி போதுமானதாம்.

கிரு—அவாப்தசமஸ்தகாமன். சுத்தமனதுடன் மாத்ரம் ஸமர்பிக்கவேண்டும். (1) த்ரௌபதியிடம் அவள்புசிப்பதற்குமுன் எத்தனைபெயர் ஆனாலும் அவர்களுக்குப்போஜனம் ஆயத்தப்படுத்தக்குந்தபாத்திரம் ஒன்றிருந்தது. துர்யோதனனுடைய ப்ரேரணையால் தூர்வாசன்பாண்டவர்களைச் சபித்தற்பொரு

ட்டு திரௌபதி புசித்தபிறகு அநேகரிஷிகளுடன்வந்தான். பசியோடிருக்கும் இவரையெவ்வாறு ஆராதிப்பேனென்று திரௌபதிதுக்கிக்கையில் ஸ்ரீகிருஷ்ணன் இந்தச்சங்கதியறிந்து அவ்விடத்திற்குவந்து பசியெடுக்கிறதென்றும்ஏதேனும் கொடுக்கும்படியும்கேட்டான். அவள்ஒன்றும் இல்லையென்றுகூறசமையல் செய்தபாத்திரத்தில் பார்க்கும்படிகூறினன். அவள் தான் சுத்தஞ்செய்த பாத்திரத்தில் அவ்வாறு இராதென்று எண்ணி ஆயினும் அவ்வாறே பார்க்கையில் ஒருநாத்துண்டு அகத்திக்கீ அகப்பட்டது. அதுவும் கிருஷ்ணனதுமாயையென்றுதெரிந்து அந்தஇலையைஅவள் கிருஷ்ணனுக்குக்கொடுத்தனள். கிருஷ்ணன் அதைவாயிலிட்டுக்கொள்ளவே தூர்வாசாதிகளின் வயிறுகள்வெடிக்கும்படி ஆயாஸம் உண்டாகி இவர்களைப்பங்கப்படுத்தவந்து தாமேபங்கப்பட்டுப்போயினர். இந்தக்கதையேகிருஷ்ணன் ஒருபத்ரத்தால் திருப்தனுதற்குதாரணம்.

(2) கஜேந்திரன் தடாகத்தில் தாமரைப்புஷ்பத்தைக்கண்டு பூர்வஞ்ஞானத்தால் அந்தப் புஷ்பத்தை ஹரிக்குச்சமர்ப்பிக்கக்கோரி முதலையால் பீடிக்கப்பட்டிருந்தும் அந்தப் புஷ்பத்தை மாத்திரம்விடாமல் அதனைக்கொண்டுபோமென்று ஹரியை அநேகவிதமாகப்பிரார்த்திக்கஅவன் பிரத்தியக்ஷமாய் முதலையைக்கொன்று கஜேந்திரனை ரக்ஷித்தான்.

(3) சபரிஸ்ரீராமனிடத்துள்ள பக்தியால் பழங்களைக்கடித்து ருசிபார்த்து நல்லபழங்களையேற்படுத்தி வைத்திருக்கையில் அதிக பிரீதியுடன் இராமரந்தப் பழங்களைப்புசித்தனர்.

(4) ரந்திதேவன் தான் பெற்றிருந்த சமஸ்தஐஸ்வர்யங்களைத்தானஞ்செய்து போக்கடித்துக்கொண்டு (48) தினங்கள் நிராஹாரனுயிருந்து ஜலத்தைப் பானம்செய்ய சித்தமாயிருக்கையில் ஹரிவேற்றுருவமாகவந்து பசியென்று முறையிடுகையில் அதிதியன் பிராணத்தைக்காத்தல் சிரேஷ்டதரமென்று எண்ணி அந்த ஜலத்தை அரசன் ஹரிக்குச்சமர்ப்பித்தான். அதில் ஹரிபிரீதியடைந்தனர். இந்த உதாரணங்களால் எந்த வஸ்துவாயினும் பக்தியுடன் ஸமர்ப்பித்தால் ஹரிக்கு எவ்வளவோ சந்தோஷம் உண்டாமென்று தெரிகின்றது.

𑌯𑌤𑍍𑌕𑌰𑍋𑌷𑌿 𑌯𑌦𑌶𑍍𑌨𑌾𑌸𑌿 𑌯𑌜𑍍𑌜𑍁𑌹𑍋𑌷𑌿 𑌦𑌦𑌾𑌸𑌿 𑌯𑌤𑍍 ।
𑌯𑌤𑍍𑌤𑌪𑌸𑍍𑌯𑌸𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵 𑌮𑌦𑌰𑍍𑌪𑌣𑌮𑍍 ॥ ௨௭

யத்கரோஷி யதஸ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத்.
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்பணம். ௨௭

యత్కరోషి యదశ్నాసి యజ్జుహోషి దదాసియత్,
యత్తపస్యసి కౌన్తేయ తత్కురుష్వ మదర్పణమ్. ౨౭

27. அரு—இவ்வளவும் கூட சமர்ப்பிக்க சக்தியில்லாவிட்டால் எப்படி.

கிரு—அப்போது நீயென்னசெய்வாய்.

அரு—நான் யாரையாயினும் யாசித்து ஆயினும் வயிற்றை நிறப்பிக்கொண்டு பிழைப்பேன்.

கிரு—அதையே யெனக்கர்ப்பணஞ்செய். நீசெய்வதெதுவோ, புசிப்பதெதுவோ, ஹோமம் செய்வதெதுவோ, தானம்செய்வதெதோ, தவஞ்செய்வதெதோ அவை அனைத்தையும் எனக்கு அர்ப்பணம்செய்.

𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌫𑌲𑍈𑌰𑍇𑌵𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑍈𑌃।
𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑌾𑌮𑍁𑌪𑍈𑌷𑍍𑌯𑌸𑌿॥

ஶுபாஶுபபலைரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தநை:,
ஸந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ மா முபைஷ்யஸி. ௨௮

శుభాశుభఫలై రేవం మోక్ష్యసే కర్మబన్ధనైః,
సన్న్యాసయోగయుక్తాత్మా విముక్తో మాముపైష్యసి. ౨౮

28. அரு—எல்லாகார்யங்களைச்செய்து கிருஷ்ணார்ப்பணம் எனின் அது உன்முக உல்லாசஹேதுவாகுமா.

கிரு—அவ்வாறு அர்ப்பணம்செய்து, கர்மம்செய்துபகவதாராதனம்செய்து சுபாசுபரூபங்களாகும் கர்மங்களிலிருந்து நீங்கிப்போவர்.

அரு—எந்தஇடத்திற்குப்போவர்.

கிரு—எங்களூருக்கு வருவர்.

𑌸𑌮𑍋𑌽𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌨 𑌮𑍇 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃।
𑌯𑍇 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌮𑌯𑌿 𑌤𑍇 𑌤𑍇𑌷𑍁 𑌚𑌾𑌪𑍍𑌯𑌹𑌮𑍍॥ ௨௯

ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி நப்ரிய:,
யேபஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம். ௨௯

సమోఽహం సర్వభూతేషు న మే ద్వేష్యోఽస్తి న ప్రియః,
యే భజన్తి తు మాం భక్త్యా మయి తే తేషు చాప్యహమ్.

29. அரு—நீ இப்போது தெரிவித்ததனைத்தும் பிராம்மணரைக்குறித்தா, அன்றி யிது க்ஷத்ரியருக்குக்கூட அன்வயிக்குமா.

கிரு—எனக்கு அந்தப்பேதம் எவையும் இல்லை. எனக்குபக்தியேப்ரதானம். எனக்கு யாரிடத்தும் த்வேஷமாவது பிரீதியாவது இல்லை.

அரு—எல்லாரும் ஒப்புத்தானோ.

கிரு—ஆம்.

அரு—அவ்வாறாயின் அனைவருக்கும் மோக்ஷம் கொடாததற்குக்காரணம் என்ன.

கிரு—ஆச்ரயித்தவர்களிடத்தில் பேதம்பாரேன். என்னைப்பஜிப்பவர் என்னிடம் இருக்கின்றனர். நான் அவரிடம் இருக்கிறேன்.

அரு—அப்படி ஆச்ரயிக்காதவரிடம் உனக்குத்தயை இல்லாததினால் நீ சர்வசமன் எவ்வாறாவாய்.

கிரு—(கற்பகவிருக்ஷம் தன்னை ஆச்ரயித்தவர்களின் கோரிக்கைகளை தீர்க்கும். கோராதவர்களுடையதே அன்றோ தவறு. அக்னித் தன்னை அடைந்த

வர்களின் குளிரைப்போக்கும். அவ்வாறு அக்னியை நெருங்காமலிருந்தவன தே தவறன்றி அக்னிதேவனுக்கு என்ன இருக்கிறது.) சரணமடைந்தவனுடைய குலதோஷங்களைப்பாராட்டேன்.

𑌅𑌪𑌿 𑌚𑍇𑌤𑍍𑌸𑍁𑌦𑍁𑌰𑌾𑌚𑌾𑌰𑍋 𑌭𑌜𑌤𑍇 𑌮𑌾𑌮𑌨𑌨𑍍𑌯𑌭𑌾𑌕𑍍 ।
𑌸𑌾𑌧𑍁𑌰𑍇𑌵 𑌸 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌸𑍍𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑍋 𑌹𑌿 𑌸𑌃 ॥ ௩௦

அபி சேத்ஸுதுராசாரோ பஜதே மா மநந்யபாக்,
ஸாதுரேவ ஸ மந்தவ்யஸ்ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ:. ௩௦

అపి చేత్సుదురాచారో భజతే మా మనన్యభాక్,
సాధురేవ స మన్తవ్యస్సమ్యగ్వ్యవసితో హి సః. ౩౦

30. அரு—சரணடைந்தபிறகு எல்லாரும் உனக்கும்பேதம் இல்லாதவர்களாயிருந்தால், பக்திக்கு அவ்வளவு சக்தி இருக்கிறதா. பக்திசெய்கிறவன் துராசாரனாயிருந்தால் எப்படி.

கிரு—மற்ற ப்ரயோஜனங்களைக்கோராமல் என்னைப் பஜிக்கிறவன் ஆசாரஹீனனாயினும் அவனைச் சாது என்றே எண்ணவேண்டும்.

அரு—அவனை நமஸ்கரித்து ஸத்கரிக்கலாமா.

கிரு—அவனது மனோநிச்சயம் செம்மையாயிருக்கிறது. ஞானமே முக்யம்.

𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌶𑍍𑌵𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ।
𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 𑌨 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ ௩௧

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஶஶ்வச்சாந்திம் நிகச்சதி,
கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணஶ்யதி. ௩௧

క్షిప్రం భవతి ధర్మాత్మా శశ్వచ్ఛాన్తిం నిగచ్ఛతి,
కౌన్తేయ ప్రతిజానీహి న మే భక్తః ప్రణశ్యతి. ౩౧

31. அரு—இனி உன்கீதை வியர்த்தமே. நீ, 2, 3, 4, 5, அத்யாயங்களில் சொன்ன கர்மயோகங்களெல்லாம் இனிப்பாழாம்.

கிரு—எனக்கு அந்தயோசனை யில்லாதிருக்குமா. கர்மம் கெடுதலால் எனக்கேயன்றோ துக்கம்உண்டாகும். முதலில் அவர்கள் அவ்வாறு அநாசாரமாய்செய்வதற்கே அவர்களுக்கு அநுமதிகொடுக்கவேண்டும். அவ்வாறு கர்மத்தைத் தொடங்குகையில் அதிசீக்ரகாலத்தில் சதாசாரத்திற்குவருவர். சாச்வதசுகம் உண்டாகும்.

அரு—அவனுக்கு அப்படிப்பட்ட புத்தி உண்டாமா.

கிரு—என்னை நினைப்பவன் கெடுவானா.

அரு—இந்தச்சங்கதியை யெவருக்காயினும் கூறக்கூடுமோ.

கிரு—என்பக்தர் கெட்டுப்போகாரென்று நீ ப்ரதிஜ்ஞைசெய்யலாம்.

அரு—நீயே பிரதிஜ்ஞை செய்யக்கூடாதா.

கிரு—என் பிரதிஞ்ஞையினும் உன்பிரதிஞ்ஞை சிரேஷ்டதரம். என் எனின் பக்தர்களுக்காக நான் செய்திருக்கும் பிரதிஞ்ஞை கூட ஒருவேளைத் தவறுவேன். உன் பிரதிஞ்ஞைக்கு கௌரவம் அதிகம்.

𑌮𑌾𑌂 𑌹𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌯𑍇𑌽𑌪𑌿 𑌸𑍍𑌯𑍁𑌃 𑌪𑌾𑌪𑌯𑍋𑌨𑌯𑌃 ।
𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑍋 𑌵𑍈𑌶𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌪𑌿 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யேபி ஸ்யு: பாபயோநய:.
ஸ்த்ரியோவைச்யா ஸ்ததாசூத்ரா ஸ்தேபி யாந்தி பராம்கதிம்.

మాం హి పార్థ వ్యపాశ్రిత్య యేఽపి స్యుః పాపయోనయః,
స్త్రియో వైశ్యా స్తథా శూద్రా స్తేఽపి యాన్తి పరాంగతిమ్.

32. ஸ்திரீகள், வைச்யர், சூத்ரர், சண்டாளராயினும் என்னை நம்பியிருப்பவர் பரமபதத்தைஅடைவர். (புருஷர்களுக்கே அன்றி ஸ்திரீகளுக்கும் கீதை உபதேசம் செய்யப்பட்டதென்று தெரிவித்தற்காக ஸ்வாமி இந்த சுலோகத்தில் ஸ்திரீபிரசம்சை செய்தனர்.)

𑌕𑌿𑌂 𑌪𑍁𑌨𑌰𑍍𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾 𑌭𑌕𑍍𑌤𑌾 𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌅𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌸𑍁𑌖𑌂 𑌲𑍋𑌕𑌮𑌿𑌮𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌭𑌜𑌸𑍍𑌵 𑌮𑌾𑌮𑍍 ॥ ௩௩

கிம் புநர்ப்ராஹ்மணா: புண்யா பக்தா ராஜர்ஷய ஸ்ததா,
அநித்ய மஸுகம் லோக மிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம். ௩௩

కిం పున ర్బ్రాహ్మణాః పుణ్యా భక్తా రాజర్షయ స్తథా,
అనిత్య మసుఖం లోక మిమం ప్రాప్య భజస్వ మామ్. 33

33. இவ்வாறு இவர்களுக்கே சற்கதிஉண்டாகையில், இனி புண்யஜன்மம் உள்ள பிராம்மணர் அரசர் பக்திபெற்று என்னை ஆச்ரயிப்பதற்குக் கூறவேண்டுமோ.

அரு—அவ்வாருயின் என்னசெய்ய ஆஞ்ஞாபிக்கிருய்.

கிரு—சகலவிதசிரேயோமூலமான சரீரத்தை அடைந்ததால் என்னை பஜனைசெய்.

அரு—அதற்கு இப்போதென்ன அவசரம்.

கிரு—சரீரம் அநித்யம்.

அரு—சுகங்களை அநுபவிக்கஅல்லவா பிறந்தது.

கிரு—சுகமேது, துக்கத்தைக்கண்டு சுகமென்று பிரமித்து இருக்கின்றனர். லவலேச சுகமும்கிடையாது. இந்தசௌக்யங்கள் முழுதும் மின்னலைப்போல ஸ்வல்ப காலமுள்ளவை.

𑌮𑌨𑍍𑌮𑌨𑌾 𑌭𑌵 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁 ।
𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑍈𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 ॥ ௩௪

மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு,
மா மேவைஷ்யஸி யுக்த்வைவ மாத்மாநம் மத்பராயண:. ௩௪

మన్మనా భవ మద్భక్తో మద్యాజీ మాం నమస్కురు,
మా మే వైష్యసి యుక్త్వైవ మాత్మానం మత్పరాయణః.

34. அரு—எவ்வாறு பஜிக்கவேண்டும்.
கிரு—மனதை என்னிடம்வை.
அரு—மனதை உன்னிடம்நிறுத்தினல் போதுமா.
கிரு—அதுமாத்ரம் போதாது. என்னிடம் பக்திவை.
அரு—அதுபோதுமா.
கிரு—என் கர்மங்களைச்செய்.
அரு—கர்மங்களைத்தவருமல் செய்யமுடியுமா.
கிரு—நான் உன் தவறுகளை மன்னிக்க எனக்கு நமஸ்காரம்செய்.
அரு—இவவாறு செய்பவனுக்கு நீ யென்ன கடாக்ஷிப்பாய்.
கிரு—எங்களுருக்கு (மோக்ஷத்திற்கு) அழைத்துக்கொண்டு போவேன்

இது ஸ்ரீ பகவத்கீதா உபநிஷத் பிரம்மவித்தையில் யோகசாஸ்திரத்தில்
ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுன சம்வாதமாகிய ராஜவித்யா ராஜகுஹ்ய
யோகமெனும் பெயருள்ள ஒன்பதாவது அத்யாயம்
முற்றுப்பெற்றது.

ஸ்ரீ
ஸ்ரீகிருஷ்ணாய பரப்ரம்மணே நம:.

# ஸ்ரீ பகவத்கீதை
## விபூதியோகம்.

### பத்தாவது அத்யாயம்.

ஸ்ரீபகவாநுவாச.

भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।
यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ ௧

பூய ஏவ மஹாபாஹோ ஶ்ருணுமே பரமம் வச:,
யத்தேஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா. ௧

భూయ ఏవ మహాబాహో శృణు మే పరమం వచః,
యత్తేzహం ప్రీయమాణాయ వక్ష్యామి హితకామ్యయా. ౧

ஸ்ரீபகவான் கூறுதல்.

1. (8-அத். அருச்சுனன் கீதை முடிந்ததாளென்று கேட்கையில் கிருஷ்ணன் கீதையின்பலத்தைக் கூறினன். அப்போது அருச்சுனனுக்குக் கீதையில் சிரத்தையுண்டாகி வேறொரு அத்யாயம் கேட்டான். அருச்சுநன் மீண்டும் கீதைபோதும்என்று சொல்லுவான் எனும் ஐயத்தால் கிருஷ்ணன் தானே 10-அத். கூறத்தொடங்கினன்.

கிரு—ஓ மாஹாபாஹோ! நான்மீண்டும் சொல்வதைக்கேள்.

அரு—நான்கேட்காவிடினும் ஏன் சொல்லத்தொடங்கினுய்.

கிரு—உன்முகலக்ஷணங்களை நோக்குகையில் உனக்கு இந்தவிஷயம் கேட்பதற்கு ஆசையுண்டெனத் தெரிகிறது. நான் இப்போது சொல்லப்போம் சங்கதி சாமான்யமானதன்று. இதைக்கேட்டால் சம்பத்துண்டாம்.

அரு—இவ்வாறு நிர்ப்பந்தித்துச் சொல்வான் ஏன்.

கிரு—எனக்காக அன்று உன் நன்மைக்காகவே.

ന മേ വിദുഃ സുരഗണാഃ പ്രഭവം ന മഹൎഷയഃ ।
അഹമാദിൎഹി ദേവാനാം മഹൎഷീണാം ച സൎവശഃ ॥ ൨

ந மே விது ஸ்ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய:,
அஹ மாதி ர்ஹிதேவாநாம் மஹர்ஷீணாஞ் ச ஸர்வஶ:. உ

న మే విదు స్సురగణాః ప్రభవం న మహర్షయః,
అహ మాది ర్హి దేవానాం మహర్షీణాం చ సర్వశః. ౨

2. அரு—இதுவரையில் அநேகசங்கதிகள்சொல்லி அயர்த்திருக்கிறாய் ஆதலால் நீ சும்மாவிரு. நான் வேறுபெரியவர்கள் யாரையாயினும் கேட்டு இந்தச்சங்கதிகளைத் தெரிந்துகொள்ளுகிறேன்.

கிரு—என் சங்கதி நான்கூறவேண்டுமே யன்றி தேவதைகள், ரிஷிகள் முதலானவர்கள் அறியார்கள். அவர்கள்எல்லாருக்கும் நான் பெரியவன். (அவர்கள் பிறக்குமுன் நான் செய்தகாரியங்களை யவர்களைக்கேட்டால் உனக்கு என்ன விடைகூறமாட்டுவார்.)

യോ മാമജമനാദിം ച വേത്തി ലോകമഹേശ്വരം ।
അസംമൂഢസ്സ മൎത്ത്യേഷു സൎവപാപൈഃ പ്രമുച്യതേ ॥ ൩

யோ மா மஜ மநாதிம் ச வேத்தி லோகமஹேஶ்வரம்,
அஸம்மூட ஸ்ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே. ௩

యో మా మజ మనాదిం చ వేత్తి లోకమహేశ్వరమ్,
అసమ్మూఢ స్స మర్త్యేషు సర్వపాపైః ప్రముచ్యతే. 3

3. அரு—நீயே ஸ்வயமாய்க் கூறவேண்டுமோ.

கிரு—ஆம்.

அரு—இதைக்கேட்டால் என்ன பலம்.

கிரு—3-அத். இல், தெரிவித்ததுபோல கர்மபந்தம் விட்டுப்போம். அநாதி காலந்தொட்டுஜநநம் இல்லாமல் சர்வலோகங்களுக்கும் பரமேஸ்வரனென என்னை மனிதர்களில் எவன் பிரமை இல்லாமல் அறிகிறானோ அவன் எல்லாப்பாபங்களி லிருந்தும் நீங்குகிறான்.

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌸𑌮𑍍𑌮𑍋𑌹𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌦𑌮𑌃 𑌶𑌮𑌃 ।
𑌸𑍁𑌖𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌭𑌵𑍋 𑌭𑌾𑌵𑍋 𑌭𑌯𑌂 𑌚𑌾𑌭𑌯𑌮𑍇𑌵𑌚 ॥ ௪
𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌮𑌤𑌾 𑌤𑍁𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌤𑌪𑍋 𑌦𑌾𑌨𑌂 𑌯𑌶𑍋𑌽𑌯𑌶𑌃 ।
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑌾𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑌤𑍍𑌤 𑌏𑌵 𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌿𑌧𑌾𑌃 ॥ ௫

புத்தி ர்ஜ்ஞான மஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம ஶ்ஶம:,
ஸுகம் து:கம் பவோ பாவோ பயம் சாபயமே வச, ௪
அஹிம்ஸா ஸமதா துஷ்டி ஸ்தபோ தாநம் யஶோயஶ:,
பவந்தி பாவா பூதானாம் மத்த ஏவ ப்ருதக்விதா:. ௫

బుద్ధి ర్జ్ఞాన మసమ్మోహః క్షమా సత్యం దమ శ్శమః,
సుఖం దుఃఖం భవో భావో భయం చాభయ మేవచ. ౪
అహింసా సమతా తుష్టి స్తపో దానం యశోzయశః,
భవన్తి భావా భూతానాం మత్త ఏవ పృథగ్విధాః. ౫

**4, 5.** அரு—அவ்வாறாயின் உன்னைப்பஜித்தால் மோக்ஷம்உண்டாமா?

கிரு—அவ்வளவே அன்று. அவரவர்களுக்கு வேண்டியமோக்ஷோபாயங் களுக்குத்தகுந்த சத்குணாதிகளைக்கொடுக்கிறேன். என்னை நினைப்பவருக்கு நன் மையும், நினையாதவனுக்குத்தீமையும் உண்டாகும். புத்தியுண்டாம்.

அரு—ஒவ்வொருவருக்கும் புத்தியிருக்கிறதே.

கிரு—அப்படிப்பட்டபுத்தியல்ல. பிரசஸ்தமானபுத்தி. ஞானம் உண்டா கும்.

அரு—ஒவ்வொருவருக்கும் ஆஹாரநித்ராதிகளை அனுபவிக்கும் ஞானமிரு க்கவேயிருக்கிறது.

கிரு—அப்படிப்பட்டஞானமன்று, சரியானபிரம்மஞானம். இவ்வாறே சம்மோஹம் இல்லாதிருத்தல், சாந்தி, சத்யம், தமம், (பாஹ்யேந்திரியங்களை விஷயங்களிலிருந்து நீக்குதல்) சமம். (அந்தரிந்திரியநிக்ரஹம்) சுகம், துக்கம், பவோபாவ: = நன்மைதீமை.

த்வைதம்—ஜன்மம் உண்டாதல் பின்பு சௌக்கியமாக இருத்தல்.

அத்வைதம்—பிறத்தல், சாதல்.

விசிஷ்டாத்வைதம்.

அநுகூலாநுபவத்தால் மனம் நிலைத்தல், பிரதிகூலானுபவத்தால் மனம் கெடல். பயம், அபயம், அஹிம்சை, சமத்வம், துஷ்டி, (போதுமென்று தோன்றல்) தபசு, தானம் (எல்லாகார்யங்களும் செய்யலாம், தானம்கொடுத்தல்

கஷ்டம். அந்தக்குணமும் என்னாலேயுண்டாம்.) புகழ், அகீர்த்தி இவ்வகை வேறுவேறான மனோபாவங்கள் என்னாலேயே உண்டாகின்றன.

உஹர்ஷ்யஃ ஸ்ப்த பூர்வே சத்வாரோ உநவஸ்ததா ।
உத்பாவா உாநஸா ஜாதா யேஷாம் லோக இமாஃ ப்ரஜாஃ ॥

மஹர்ஷய ஸ்ஸப்த பூர்வே சத்வாரோ மநவஸ்ததா,
மத்பாவா மாநஸா ஜாதா ஏஷாம் லோக இமா: ப்ரஜா:. ௬

మహర్షయ స్సప్త పూర్వే చత్వారో మనవ స్తథా,
మద్భావా మానసా జాతా ఏషాం లోక ఇమాః ప్రజాః. ౬

6. 7-அத். இல், நீ சொன்னசங்கதி கேட்டுச்சம்சயம் உண்டாகிறது. பாகவதத்தில் ரிஷிகள், மனுக்கள், ஜனங்கள் சிருட்டித்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. நீ இது உன்கார்யமென்று கூறுகின்றாய். இதில் எது நிஜம், நம்பத்தக்கது. 7-அத். 6-சுலோ. சிருஷ்டி, லயம் நான் என்றாயல்லவா.

கிரு—இரண்டும் நம்பத்தக்கனவே.

அரு—விருத்தமாக இருக்கின்றனவே.

த்வைதம்.

கிரு—இந்தலோகத்தில் பிரஜைகளைச் சிருட்டித்த பிரமமான ஸத்புத்திரர்களாகும் எழு ரிஷிகள், நான்கு மனுக்கள் என்னால் பிறந்தவர்களன்றோ.

அத்வைதம்.

என்னைத்யானித்து என்மூலமாகவான்றோ அவர்கள் சிருட்டி செய்தனர்.

விசிஷ்டாத்வைதம்.

என் அபிப்பிராயத்தை அநுசரித்தன்றோ சிருட்டி செய்தனர். (இந்த மூன்று காரணத்தால் அவர்கள் சிருட்டிக்கப்படினும், பகவானே சிருஷ்டி கர்த்தாவென்று கருத்து.)

த்வைதம், விசிஷ்டாத்வைதம்.

வெகுகாலம் நான் ஏகாந்தமாய் இருந்தலினால் அநேகபொருள்களைச் சிருட்டிக்கவேண்டுமென்று எனக்குத்தோன்றுகையில்,

அத்வைதம்.

நானே அநேகம் ஆகவேண்டுமென்று தோன்றுகையில் அவர்கள் அவ்வாறு சிருட்டித்தனர்.

ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்வதஃ ।
ஸோऽவிகம்பேந யோகேந யுஜ்யதே நாத்ர ஸம்ஶயஃ ॥

ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்வத:,
ஸோவிகம்பேந யோகேந யுஜ்யதே நாத்ர ஸம்ஶய:. ௭

ఏతాం విభూతిం యోగం చ మమ యో వేత్తి తత్త్వతః,
సోఽవికంపేన యోగేన యుజ్యతే నాత్ర సంశయః. ౭

7. அரு—இதுவரையில் உன்னுடைய விலக்ஷணமான சங்கதியைக்கூறி இன்னமும் கூறுகின்றேனென்று சொல்கிருய். இந்தச்சங்கதி என் தெரிய வேண்டும்.

கிரு—என் விபூதியைத்தெரிந்துகொண்டால் சலிக்காதா யோகம் உண்டாம். எவரேனும் கெடுத்தற்குப்ரயத்னப்படினும் முடியாது. அவ்வகை யோகம் பிராப்தியாகும்.

அரு—எந்தயோகம்.

விசிஷ்டாத்வைதம்—பக்தியோகம்.

அத்வைதம்—வீசேஷஞானம்.

த்வைதம்.—த்யானம் உண்டாம் இதற்குச்சந்தேகம் இல்லை.

𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌮𑌤𑍍𑌤 𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ।
𑌇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂 𑌬𑍁𑌧𑌾 𑌭𑌾𑌵𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ॥ ௮

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த ஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே,
இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமந்விதா:. ௮

అహం సర్వస్య ప్రభవో మత్త స్సర్వం ప్రవర్తతే,
ఇతి మత్వా భజన్తే మాం బుధా భావసమన్వితాః. ౮

8. அரு—பக்திஞானத்யானங்களெதற்கு.

கிரு—7-8-6-அத். இல், சொன்னபடி என்னைப்பஜிக்கவேண்டும். என் விஷயத்தை அறியாதவர்கள் என்னை ஆராதிக்கினும் தமக்குப் பரம்பரையாய் வந்துகொண்டிருக்கும் வாடிக்கை யென்று ஆராதிப்பர். அவர்களுக்கு ஞானம் இராது. பிரதிதினமும் எந்தக்கார்யமிருக்கினும் இந்தக்கார்யத்தைச்செய்தழ வேண்டும்என்று செய்வர். உன்பத்திநானே, அனைத்திற்கும் நானேகாரணம் என்னுலேயே சர்வமும் நடக்கும் என்று அறிந்தஞானியோ சம்சாரத்தில் அகப்பட்டு இருத்தலால் சதாகார்யங்களைசெய்துகொண்டிருத்தலால் ஒருநாளாயினும் ஹரியை யதாசாவகாசமாய் பூசித்தற்கு இல்லையல்லவா என்று சிந்தித்துக் கொண்டுசெய்வன்.இவ்விருவரும் ஆராதிப்பவராயினும் இவர்களின் மனோபாவம் இவ்வாறு பேதப்பட்டிருக்கும்.

𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾 𑌮𑌦𑍍𑌗𑌤 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌬𑍋𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌮𑍍 !
𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌰𑌮𑌨𑍍𑌤𑌿 𑌚 ॥ ௯

மச்சித்தா மத்கதப்ராணு போதயந்த: பாஸ்பாம்,
கதயந்த ஸ்ச மாம் நித்யம் துஷ்யந்திச ரமந்திச. ௯

మచ్చిత్తా మద్గతప్రాణా బోధయన్తః పరస్పరమ్,
కథయన్తశ్చ మాం నిత్యం తుష్యన్తిచ రమన్తిచ. ౯

9. அரு—இவ்வாறு ஆரீதிப்பவருக்கு என்னப்ரயோஜனம் உண்டாம்.

கிரு—அதற்கதுவே சுகமானகார்யம்

அரு—அதுவே சுகமானகார்யமா.

கிரு—உனக்கு அந்தவிஷயம் தெரியாது. என்னிடத்தில்மனம்வைத்து பிராணம்வைத்து (மத்கதசேஷ்டா:—என்விஷயமாய்க் கார்யங்கள் செய்து கொண்டு என்று சிலவ்யாக்யானங்கள்) அவர்கள் என்பொருட்டேபிழைப்பர். அப்படிப்பட்ட சிருவர்கள் ஒருஇடத்தில்சேர்ந்தாலும் வேறுபிரசங்கமிருக்கு மா. தெரியாதவைகளைப் போதித்துக்கொள்வர். ஆஹாரநித்ராதிகளைக்கோ ரார். அவ்வளவு சுகமிருக்கின்றது. அந்தச்சங்கதி அவர்க்கும்எனக்கும் தெரி யும். (விசிஷ்டாத்வைதம்) துஷ்யந்திசரமந்திச = கேட்கின்றவர்கள் மிக்கஆ சையுடன் கேட்பார்கள், சொல்கின்றவர்கள் முன்னேவரப்போகிற சங்கதிக ளைத் தெரிந்திருப்பவ ராதலால் கூறுதலாலேயே திருப்தி யடைகின்றனர்.

𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑌜𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ।
𑌦𑌦𑌾𑌮𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂 𑌯𑍇𑌨 𑌮𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 ॥ ௧௦

தேஷாம் ஸததயுக்தானும் பஜதாம் ப்ரீதிபூர்வகம்,
ததாமி புத்தியோகம் தம் யேந மா முபயாந்தி தே. ௧௦

తేషాం సతతయుక్తానాం భజతాం ప్రీతిపూర్వకమ్,
దదామి బుద్ధియోగం తం యేన మా ముపయాన్తి తే. ౧౦

10. அரு—அப்படிப்பட்டவர்க்கு நீயென்ன ப்ரத்யுபகிருதிசெய்வாய்.

கிரு—இவ்வாறு பிரீதியால் பஜிப்பவருக்கு ஞானயோகம் (அபரோக்ஷ ஞானத்தைக்) கொடுப்பேன்.

அரு—அது தெரிதலால் என்னலாபம்.

கிரு—என்னிடம் வந்துசேருவர். இந்தசுலோகத்தில் பிரீதிபூர்வகம் என்பதை பஜதாம் என்பதுடன் சேர்க்கின் இந்தக்கீழ் பொருள்படும்.

அரு—பிரீதியுடன் எண்ணுபவர்க்கென்று அவர்களைப் பெருமையாய்க் கூறினாய். பஜிக்கிறதில் இருவிதங்களுண்டா. பிரீதியில்லாவிடின் அவர்க ளுக்கும் பலம் கொடுக்கின்றாயா.

கிரு—பஜிப்பவர் பிரீதியில்லாமல் பஜிப்பார்களா. ப்ரீதிபூர்வகம் என்ப தை ததாமியுடன் சேர்த்தால் இந்தக்கீழ் பொருள்படும்.

அரு—இவ்வாறு பஜிப்பவர்களுக்கு விதியில்லாமல் பலம் கொடுக்கிறாயா.

கிரு—பிரீதி பூர்வகமாய்க் கொடுக்கிறேன். என் உடைமையாகையால் என்னிடத்தில்வந்த எனக்குச்சந்தோஷம் உண்டாகும்.

𑌤𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌾𑌰𑍍𑌥𑌮𑌹𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌤𑌮𑌃 ।
𑌨𑌾𑌶𑌯𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌸𑍍𑌥𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍀𑌪𑍇𑌨 𑌭𑌾𑌸𑍍𑌵𑌤𑌾 ॥ ௧௧

தேஷா மேவா நுகம்பார்த்த மஹ மஜ்ஞானஜம் தம:,
நாஶயா ம்யாத்மபாவஸ்த்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா. ௧௧

తేషా మేవానుకమ్పార్థ మహ మజ్ఞానజం తమః.
నాశయా మ్యాత్మభావస్థో జ్ఞానదీపేన భాస్వతా. ౧౧

11. அரு—ஹ்ருதயத்தில் இருளாயிருக்கின்றதே. அபரோக்ஷஞானம் எவ்வாறு உண்டாகும்.

கிரு—இருளைப் போக்கடிப்பேன்.

அரு—அதற்கு மிகுந்தச்ரமம் உண்டாகுமோ என்னமோ.

கிரு—ஞானதீபத்தால் இருளைப்போக்குவேன்.

அரு—ஞானதீபம் உள்ளிருளைப் போக்கடிக்குமா ?

கிரு—ஸூர்ய சந்திரர்கள், தீபம், இவைகளால் ஆகாதகார்யம் ஞானதீபத்தால் ஆகும். அந்தபிரகாசமே வேறு.

அரு—நீ வைகுந்தத்திலிருக்கிறாய். இருள் இருதயத்திலிருக்கிறது. இந்த இருள் எவ்வாறுநீங்கும்.

கிரு—இருள்இருக்குமிடத்ததில் வந்து நீக்குவேன். பிராணிகளின் ஆத்மாக்களுக்குள் காட்டுவேன். (7-அத். 7-சுலோ. இல், தன்னிலும் வேறான மிகுந்த உத்கிருஷ்ட மானவஸ்துவில்லையென்று கிருஷ்ணன் கூறினதால் அர்ச்சுநனுக்கிவ்வாறுசம்சயம் உண்டாயிற்று. தேவதைகளுக்குள்ளும் யாதவர்க்குள்ளும் நான்அதிகன் என்று கூறினும் செல்லும். அவ்வாறன்றி நான் எல்லாவற்றிலும் சிரேஷ்டன் என்பதால் விருக்ஷங்களினும் சமுத்ரம் முதலியவற்றினும் இவன் சிரேஷ்டதரன் என்று எவ்வாறு எண்ணக்கூடும். தாரதம்யம் ஸஜாதீயப் பொருள்களிலல்லவா பார்க்கவேண்டும். இந்தச்சந்தேஹங்களைக்கேட்கின் இவனுக்குக்கோபம் உண்டாகுமோ என்னமோ. கேளாதிருந்தால், 4-அத். 40-சுலோ. சம்சயாத்மா நசிக்குமென்று ப்ரத்யக்ஷமாய்க் கூறியிருக்கின்றான் என்றுயோசித்து ஸ்வாமிக்குக்கடாக்ஷம் உண்டாதற்கு இவ்வாறு தோத்திரம் செய்கிறான்.

அர்ஜுந உவாச.

𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌂𑌧𑌾𑌮 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌭𑌵𑌾𑌨𑍍 ।
𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌾𑌦𑌿𑌦𑍇𑌵𑌮𑌜𑌂 𑌵𑌿𑌭𑍁𑌮𑍍 ॥ ௧௨
𑌆𑌹𑍁𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌮𑍃𑌷𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑌿𑌰𑍍𑌨𑌾𑌰𑌦𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌅𑌸𑌿𑌤𑍋 𑌦𑍇𑌵𑌲𑍋 𑌵𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌸𑍍𑌵𑌯𑌂 𑌚𑍈𑌵 𑌬𑍍𑌰𑌵𑍀𑌷𑌿 𑌮𑍇 ॥ ௧௩

பரம்ப்ரஹ்ம பரந்தாம பவித்ரம் பரமம் பவாந்,
புருஷம் ஶாஸ்வதம் திவ்ய மாதிதேவ மஜம் விபும். ௧௨
ஆஹு ஸ்த்வா ம்ருஷய ஸ்ஸர்வே தேவர்ஷி ர்நாரத ஸ்ததா,
அஸிதோ தேவலோ வ்யாஸ ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே. ௧௩

పరంబ్రహ్మ పరంధామ పవిత్రం పరమం భవాన్,
పురుషం శాశ్వతం దివ్య మాదిదేవ మజం విభుమ్. ౧౨
ఆహు స్త్వా మృషయ స్సర్వే దేవర్షి ర్నారద స్తథా,
అసితో దేవలో వ్యాస స్స్వయం చైవ బ్రవీషి మే. ౧౩

அருச்சுநன் கூறுதல்.

12, 13. அரு—நீ பரப்பிரமம், ஆச்ரயமில்லாத பெரிய தேஜஸ், சர்வோத்கிருஷ்டமானபவித்ரம், மங்களங்களில் மங்களம்.

கிரு—அதிகஸ்தோத்திரம் செய்கின்ருய் என்ன? நானிப்படிப்பட்டவனென்று உனக்கு எப்படிதெரியும்.

அரு—இதுவரையிலுமே கேட்டிருந்தேன்.

கிரு—யாரால்.

அரு—ரிஷிகள் சொல்லக்கேட்டேன்.

கிரு—என்னவென்றுகேட்டாய்.

அரு—நித்யன், அப்ராக்ருதன், ஆதிதேவன், ஜன்மமில்லாதவன் அணுக்களில் அணுவாய், மஹத்துக்களுக்கு மஹத்தாய் இருக்கும் புருஷன் என்று உன்னைக்குறித்து மஹாத்மாக்கள் கூறினர்.

கிரு—அவர்களின் வார்த்தைகளை நம்பக்கூடுமா. அவர்கள் ஒருவேளை தர்மராஜாதிகளுக்கு நான் ஆப்தனுகையால் என்னை தோத்திரம்செய்து அவர்களைச் சந்தோஷிப்பிக்கவேண்டுமென்று எண்ணி அவ்வாறு என்னைப்புகழ்ந்திருப்பர்.

அரு—அவர்கள் அன்றித் தேவரிஷியான நாரதனே உன்னைப்புகழ்ந்திருக்கிருன்.

கிரு—நாரதன் எனக்கு ஸ்நேகிதனுதலால் இவ்வாறுதோத்திரம் செய்திருக்கலாம்.

அரு—மஹாநுபாவர்களாகும், அசிதன், தேவலன் ஸ்தோத்திரம் செய்தனர். அசிதன் தேவலன்தந்தை இவர்க்கேதும் பக்ஷபாத புத்தியில்லையென்று நம்புகிறேன்.

கிரு—ஆயிரம்தடவையாயினும் கூறுவர். சமயம் வந்தால் நாங்கள்கூற இல்லையென்பர். ஆகையால் எழுத்துமூலமாயிருந்தாலே நம்பத்தக்கது.

அரு—வியாசன் எழுதியிருக்கிருன்.

கிரு—நான்சரியென்றேனு.

அரு—7-8-9-அத். இல், நீ ஸ்வயமாகவே கூறுகிருய்.

𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌤𑌦𑍃𑌤𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌯𑌨𑍍𑌮𑌾𑌂 𑌵𑌦𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵 ।
𑌨 𑌹𑌿 𑌤𑍇 𑌭𑌗𑌵𑌨𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌾 𑌨 𑌦𑌾𑌨𑌵𑌾𑌃 ॥

ஸர்வமேத த்ருதம் மந்யே யந்மாம் வதஸி கேஶவ,
ந ஹி தே பகவந் வ்யக்திம் விது ர்தேவா ந தாநவா:.　　௧௪

సర్వమేత దృతం మన్యే యన్మాం వదసి కేశవ,
న హి తే భగవన్ వ్యక్తిం విదు ర్దేవా న దానవాః.　　౧౪

14. கிரு—நான் சொன்னுல் என்ன நீ நிஜமென்று நம்புகிருயா.

அரு—நீ யெனக்குக் கூறியவெல்லாம் நிஜமென்று நான் எண்ணினேன்.

கிரு—இவ்வளவு ச்ரமப்பட்டுத் தெரியத்தக்கதா என்மகிமை.

அரு—உன்மஹிமை தேவாசுரர்களுக்கும் தெரியாது (ஹரிபக்தரன்றி தேவதைகள் உன்மஹிமை அறிந்திருப்பார்கள். அவ்வாறறிந்தவர்களாயினும் உன்மஹிமையை முழுதும் அவர்கள அறியார்களென்று கூறுதல் சமஞ்சஸமாகும். ஹரியைச் சதா த்வேஷித்துக்கொண்டு ஹரிமகிமைகளே தெரியாத அசுரர்களேயீண்டு உதஹரித்தல்கூடுமாஎனின் சத்ருக்கள் தோஷத்தைத் தேடுவதற்காக சதா சாக்ரதையாயிருப்பர். ஹரிக்கு த்வேஷிகளாகும் அசுரர்கள் பகவன்மஹிமைகள் தெரிதற்காக ஸதா பிரயத்னப்பட்டிருக்கினும் அவர்களும் அறியார் என்று கருத்து.)

𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑍇𑌤𑍍𑌥 𑌤𑍍𑌵𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 ।
𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨 𑌭𑍂𑌤𑍇𑌶 𑌦𑍇𑌵𑌦𑍇𑌵 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑍇 ॥ கரு

ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேதத த்வம் புருஷோத்தம,
பூதபாவந பூதேஶ தேவதேவ ஜகத்பதே. கரு

స్వయమేవాత్మనాత్మానం వేత్థ త్వం పురుషోత్తమ,
భూతభావన భూతేశ దేవదేవ జగత్పతే. ౧౫

15. கிரு—அவ்வாறாயின் யார் அறிவார்கள்.

அரு—புருஷச்ரேஷ்டா! சர்வபூதங்களையும் சிருட்டித்தவனே ரக்ஷிக்கிற பிரபு, ஆராத்யனாகின்றாய், உன்னிடத்தில் பிரீதி யில்லாவிடினும் ரக்ஷிக்கிறவனே அப்படிப்பட்ட உன்மஹிமை உனக்கே தெரியவேண்டும்.

𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌭𑍂𑌤𑌯𑌃 ।
𑌯𑌾𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌭𑌿𑌰𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑌿𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌤𑌿𑌷𑍍𑌠𑌸𑌿 ॥

வக்து மர்ஹஸ்யஶேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய:,
யாபி ர்விபூதிபி ர்லோகா நிமாந்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி. கசு

వక్తు మర్హస్యశేషేణ దివ్యా హ్యాత్మవిభూతయః,
యాభి ర్విభూతిభి ర్లోకా నిమాం స్త్వం వ్యాప్య తిష్ఠసి. ౧౬

16. கிரு—நீ இவ்வளவு சிலாகிப்பதற்குப்பிரயோஜனமென்னவோ இருக்க வேண்டும். உன்மனதிலுள்ளதைக் கூறுக.

அரு—நீ இதுவரையில் கூறினசொற்கள் அனைத்தையும் நம்பினேன். அநேகபெரியபதார்த்தங்கள் காணப்படுகின்றன. அவை அனைத்திற்கும் நீயே காரணமாயிருக்கின்றாயென்று தெரிகிறது. நீ ஒருவனே அங்கங்கே பிரவேசித்துக் கார்யங்களைச்செய்கிறாய். அந்தச்சங்கதியைக்கூறு. உன் விபூதியைச் சமக்ரமாகத் தெரிவி.

𑌕𑌥𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌹𑌂 𑌯𑍋𑌗𑌿𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑌦𑌾 𑌪𑌰𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍 ।
𑌕𑍇𑌷𑍁 𑌕𑍇𑌷𑍁 𑌚 𑌭𑌾𑌵𑍇𑌷𑍁 𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌸𑌿 𑌭𑌗𑌵𑌨𑍍𑌮𑌯𑌾 ॥

கதம் வித்யா மஹம் யோகிந் த்வாம் ஸதா பரிசிந்தயந்.
கேஷு கேஷு ச பூதேஷு சிந்த்யோஸி பகவந்மயா. கஎ

కథం విద్యా మహం యోగిన్ త్వాం సదా పరిచింతయన్,
కేషు కేషు చ భావేషు చింత్యోఽసి భగవన్మయా. ౧౭

17. கிரு—7-அத். 8.சுலோ. இல், கூறியிருந்தேனே.

அரு—கூறினுய், அது என்புத்திக்குப்போதுமானதாக இல்லை. நான் உன்னை த்யானிப்பேன் அல்லது உன்னிலிருக்கும் எல்லாசங்கதிகளையும் எவ்வாறு அறிந்துகொள்வேன். உன்சங்கதி நீயேகூறவேண்டும். (இந்த-17-சுலோகத்தில் த்வைதாத்வைதப்ரகாரம் யோகின் என்று ஸ்வாமியை விளித்துக் கூறினதுபோலவும், விசிஷ்டாத்வைதத்தில் யோகி = பக்தியோக நிஷ்டனை உன்னையெவ்வாறு அறிவேன் என்றும் அர்த்தம்.)

விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிம் ச ஜநார்தந ।
பூய: கதய த்ருப்திர்ஹி ஶ்ருண்வதோ நாஸ்தி மேঽம்ருதம் ॥ ௧௮

விஸ்தரேணாத்மனோ யோகம் விபூதிம் ச ஜனார்தன,
பூய: கதய த்ருப்திர்ஹி ஶ்ருண்வதோ நாஸ்தி மேம்ருதம். ௧௮

విస్తరేణాత్మనో యోగం విభూతిం చ జనార్దన,
భూయః కథయ తృప్తిర్హి శృణ్వతో నాస్తి మేఽమృతమ్. ౧౮

18. கிரு—அதற்கே சொல்லியிருந்தேனல்லவா.

அரு—மீண்டும் விஸ்தாரமாய்க்கூறுக. (நீ பெரிய பொருள்களைத்தெரிவிக்கும் சிலபதங்களைக்கூறியிருந்தாய். அதனுல் எனக்கேதும் பிரயோஜனம் இல்லை. அநேகசப்தங்கள் இருப்பதாகக்கூறு)

கிரு—இனிப் போதுமென்று தோன்றவில்லையா.

அரு—இது பிச்சிப்ரலங்கமென்று தோன்றினுலன்றோ எனக்குச்சரமம் என்று தோன்றும். இது உன்வாயிலிருந்துண்டாம் அமிர்தமன்றோ. அதனுல் எனக்கு எவ்வாறு திருப்தியுண்டாம்.

ஶ்ரீபகவாநுவாச.

ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்மவிபூதய: ।
ப்ராதாந்யத: குருஶ்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே ॥

ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யாஹ்யாத்மவிபூதய:,
ப்ராதாந்யத: குருஶ்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தாஸ்ய மே. ௧௯

హంత తే కథయిష్యామి దివ్యా హ్యాత్మవిభూతయః,
ప్రాధాన్యతః కురుశ్రేష్ఠ నాస్త్యంతో విస్తరస్య మే. ౧౯

ஸ்ரீபகவான் கூறுதல்.

த்வைதாத்வைதம்.

19. கிரு—நீ அவ்வாறு கேட்டதால் எனக்குப் பரமசந்தோஷம். சொல்லுகிறேன் கேள்.

விசிஷ்டாத்வைதம்.—கொஞ்சம் கூறுகிறேன்.

அரு—எல்லாம் கூறலாகாதா.

திரு—முடியாது. முடிவில்லை.

𑌅𑌹𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶! 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌶𑌯 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 |
𑌅𑌹𑌮𑌾𑌦𑌿𑌶𑍍𑌚 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌨𑍍𑌤 𑌏𑌵 𑌚 || ௨௦

அஹ மாத்மா குடாகேஶ! ஸர்வபூதாஶய ஸ்தித:,
அஹ மாதி ஶ்ச மத்யஞ்ச பூதாநா மந்த ஏவ ச. ௨௦

అహ మాత్మా గుడాకేశ! సర్వభూతాశయ స్థితః,
అహ మాది శ్చ మధ్యంచ భూతానా మంత ఏవ చ. ౨౦

20. (இது சாதாரண தர்மத்தைத்தெரிவிக்கும் ஶ்லோகம்) குடாகேஶா நான் சர்வப்பிராணிகளின் ஹிருதயத்திலிருக்கும் ஆத்மா, நான் அனைத்திற்கும் ஆதி அந்தியம், மத்யமாயிருக்கின்றேன்.

த்வைதம்.—இந்திரனுடைய உச்சைச்ரவத்தி லிருக்கின்றேன் என்று கூறப்போதலால் அங்குமாத்திரம் இருக்கின்றேனென்று பாவிக்காதே. ஆதி அந்தம் மத்யத்திலுமிருக்கிறேன். இங்கு விசேஷமாயிருப்பேன்

அத்வைதம்.—சூர்யன்முதலானவரிடத்தில் இருக்கின்றேன் என்பதால் அவர்களை உபாசி என்று கூறுகின்றேன் எனக்கொள்ளவேண்டாம் அது மந்தர்களுக்கு. மாஹாத்மாக்களுக்கு எல்லாவற்றிலும் இருப்பதாக உபாசநீயம்.

விசிஷ்டாத்வைதம்.—நானே அனைத்தும் என்பதால் அத்வைதமன்று. நான் அந்தர்யாமியாய் எங்குமிருக்கிறேன். அந்தச்சொல்லப்பட்ட வஸ்துவே நான் ஆகேன். அந்த இடங்களில் விசேஷித்திருக்கிறேன்.

𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾 𑌮𑌹𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌂 𑌰𑌵𑌿 𑌰𑌂𑌶𑍁𑌮𑌾𑌨𑍍 |
𑌮𑌰𑍀𑌚𑌿 𑌰𑍍𑌮𑌰𑍁𑌤𑌾 𑌮𑌸𑍍𑌮𑌿 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌾𑌣𑌾 𑌮𑌹𑌂 𑌶𑌶𑍀 || ௨௧

ஆதித்யாநா மஹம் விஷ்ணு ர்ஜ்யோதிஷாம் ரவி ரம்ஶுமாந்,
மரீசி ர்மருதா மஸ்மி நக்ஷத்ராணா மஹம் ஶஶீ. ௨௧

ఆదిత్యానా మహం విష్ణు ర్జ్యోతిషాం రవి రంశుమాన్,
మరీచి ర్మరుతా మస్మి నక్షత్రాణా మహం శశీ. ౨౧

21. அரு—எந்த இடங்களில் நீ இருக்கின்றாய்.

திரு—த்வாதசாதித்யரில் விஷ்ணுநான். கிரஹநக்ஷத்ராதிபிரகாசவஸ்துக்களில் மிகுந்தபிரகாசமுள்ள சூர்யன் நான். சப்தவாயுக்களில் மரீசிநான், நக்ஷத்திரங்களில் சந்திரன்நான்.

𑌵𑍇𑌦𑌾𑌨𑌾𑌂 𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾 𑌮𑌸𑍍𑌮𑌿 𑌵𑌾𑌸𑌵𑌃 |
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾 𑌮𑌸𑍍𑌮𑌿 𑌚𑍇𑌤𑌨𑌾 || ௨௨

வேதாநாம் ஸாமவேதோஸ்மி தேவாநா மஸ்மி வாஸவ:,
இந்த்ரியாணும் மநஶ்சாஸ்மி பூதாநா மஸ்மி சேதநா. ௨௨

వేదానాం సామవేదోzస్మి దేవానా మస్మి వాసవః,

ఇన్ద్రియాణాం మనశ్చాస్మి భూతానా మస్మి చేతనా. ౨౨

**22.** வேதங்களில் சாமவேதம்நான், (கர்னரூபமாயிருத்தலால் இந்தவேதம் தத் இதரவேதங்களிலும் சந்தோஷத்தைப் பிறப்பிப்பது.) தேவர்களில் இந்திரன்நான். இந்திரியங்களில் மனம்நான். பிராணிகளுக்குப் புத்திநான்.

രുദ്രാണാം ശങ്കരശ്ചാസ്മി വിത്തേശോ യക്ഷരക്ഷസാം ।
വസൂനാം പാവകശ്ചാസ്മി മേരുശ്ശിഖരിണാമഹം ॥ ௨௩

ருத்ராணும் ஶங்கரஶ்சாஸ்மி வித்தேஶோ யக்ஷாக்ஷஸாம்,
வஸூநாம் பாவகஶ்சாஸ்மி மேரு ஶ்ஶிகரிணு மஹம். ௨௩

రుద్రాణాం శంకరశ్చాస్మి విత్తేశో యక్షరక్షసామ్,

వసూనాం పావకశ్చాస్మి మేరు శ్శిఖరిణా మహమ్. ౨౩

**23.** ஏகாதசருத்ரர்களில் சங்கரன்நான், யக்ஷராக்ஷஸர்களில் குபேரன்நான் அஷ்டவசுக்களில் பாவகன்நான், பர்வதங்களில் மேருபர்வதம்நான்.

പുരോധസാം ച മുഖ്യം മാം വിദ്ധി പാർഥ ബൃഹസ്പതിം ।
സേനാനീനാമഹം സ്കന്ദഃ സരസാമസ്മി സാഗരഃ ॥ ௨௪

புரோதஸாம்ச முக்யம் மாம் வித்தி பார்த்த! ப்ருஹஸ்பதிம்,
ஸேஞநீஞ மஹம் ஸ்கந்த ஸ்ஸரஸா மஸ்மி ஸாகர:. ௨௪

పురోధసాంచ ముఖ్యం మాం విద్ధి పార్థ! బృహస్పతిమ్,

సేనానీనా మహం స్కంద స్సరసా మస్మి సాగరః. ౨౪

**24.** புரோஹிதர்களில் முக்யனான ப்ருஹஸ்பதிநான். சேநாபதிகளில் சுப்ரமண்யன்நான், ஜலாசயங்களில் சமுத்ரம்நான். (நிலைத்திருப்பது.)

മഹർഷീണാം ഭൃഗുരഹം ഗിരാമസ്മ്യേകമക്ഷരം ।
യജ്ഞാനാം ജപയജ്ഞോഽസ്മി സ്ഥാവരാണാം ഹിമാലയഃ ॥

மஹர்ஷீணும் ப்ருகுரஹம் கிரா மஸ்ம்யேக மக்ஷரம்,
யஜ்ஞாளும் ஜப யஜ்ஞோஸ்மி ஸ்த்தாவராணும் ஹிமாலய:. ௨௫

మహర్షీణాం భృగు రహం గిరా మస్మ్యేక మక్షరమ్,

యజ్ఞానాం జపయజ్ఞోzస్మి స్థావరాణాం హిమాలయః. ౨౫

**25.** மஹர்ஷிகளில் பிருகுநான், பதங்களில் பிரணவம்நான், யஞ்ஞங்களில் ஜபயஞ்ஞம்நான். (மற்றயஞ்ஞங்களில், இது வருத்தமிலாத யஞ்ஞம். 6-அத், 46-சுலோ. ஞானயோகி சிரேஷ்டனென்று கூறப்பட்டது.) ஸ்தாவரங்களில் ஹிமாலயம் (சிகரங்கள் இல்லாதது) நான்.

𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌾𑌰𑌦𑌃 ।
𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌂 𑌚𑌿𑌤𑍍𑌰𑌰𑌥𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌕𑌪𑌿𑌲𑍋 𑌮𑍁𑌨𑌿𑌃 ॥ ௨௬

அஶ்வத்த ஸ்ஸர்வவ்ருக்ஷாணாம் தேவர்ஷீணாம் ச நாரத:,
கந்தர்வாணாம் சித்ரரத ஸ்ஸித்தானாம் கபிலோ முனி:. ௨௬

అశ్వత్థ స్సర్వవృక్షాణాం దేవర్షీణాం చ నారదః,
గంధర్వాణాం చిత్రరథ స్సిద్ధానాం కపిలో మునిః, ౨౬

26. ஸர்வ விருக்ஷங்களில் அரசமரம் நான், தேவருஷிகளில் நாரதன்நான் கந்தர்வகர்ளில் சித்ரரதன்நான், சித்தர்களில் கபிலமஹர்ஷி நான்.

𑌉𑌚𑍍𑌚𑍈𑌃𑌶𑍍𑌰𑌵𑌸𑌮𑌶𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌮𑍃𑌤𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌐𑌰𑌾𑌵𑌤𑌂 𑌗𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌨𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌰𑌾𑌧𑌿𑌪𑌮𑍍 ॥

உச்சை:ஶ்ரவஸமஶ்வானாம் வித்தி மா மம்ருதோத்பவம்,
ஐராவதம் கஜேந்த்ராணாம் நாராணாம்சநராதிபம். ௨௭

ఉచ్చైఃశ్రవసమశ్వానాం విద్ధి మా మమృతోద్భవమ్,
ఐరావతం గజేన్ద్రాణాం నరాణాంచ నరాధిపమ్. ౨౭

27. அஶ்வங்களில் அமிர்தத்திலிருந்து பிறந்த (ஜலத்திலிருந்து அன்றிப் பாலிலிருந்து) பிறந்த உச்சைச்ரவம்நான், திக்கஜங்களில் ஐராவதம்நான், மனுஷ்யர்களில் அரசனும்நான் என்று தெரிந்துக்கொள்.

𑌆𑌯𑍁𑌧𑌾𑌨𑌾𑌮𑌹𑌂 𑌵𑌜𑍍𑌰𑌂 𑌧𑍇𑌨𑍂𑌨𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 ।
𑌪𑍍𑌰𑌜𑌨𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌕𑌨𑍍𑌦𑌰𑍍𑌪𑌸𑍍𑌸𑌰𑍍𑌪𑌾𑌣𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌵𑌾𑌸𑍁𑌕𑌿𑌃 ॥ ௨௮

ஆயுதானா மஹம் வஜ்ரம் தேநூநா மஸ்மி காமதுக்,
ப்ரஜநஶ்சாஸ்மி கந்தர்ப ஸ்ஸர்பாணா மஸ்மி வாஸுகி:. ௨௮

ఆయుధానా మహం వజ్రం ధేనూనా మస్మి కామధుక్,
ప్రజనశ్చాస్మి కందర్ప స్సర్పాణా మస్మి వాసుకిః. ౨౮

28. ஆயுதங்களில் வஜ்ராயுதம்நான், பசுக்களில் காமதேனுநான், ப்ராணிகோடிகளின் உற்பத்திக்கு ஹேதுவான மன்மதன்நான், ஸர்ப்பங்களில் (ஒருதலை யுள்ளவைகளில்) வாசுகிநான்.

𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌨𑌾𑌗𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍁𑌣𑍋 𑌯𑌾𑌦𑌸𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌪𑌿𑌤𑍄𑌣𑌾𑌮𑌰𑍍𑌯𑌮𑌾 𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌯𑌮𑌸𑍍𑌸𑌂𑌯𑌮𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ॥ ௨௯

அநந்தஶ்சாஸ்மி நாகாணாம் வருணோ யாதஸா மஹம்,
பித்ரூணா மர்யமாசாஸ்மி யம ஸ்ஸம்யமதாமஹம். ௨௯

అనంతశ్చాస్మి నాగానాం వరుణో యాదసా మహమ్,
పితౄణా మర్యమాచాస్మి యమ స్సంయమతామహమ్. ౨౯

29. நாகங்களில் (பலதலை யுள்ளவைகளில்) ஆதிசேஷன்நான், சலசரப்ராணிகளில் வருணன்நான், பிதுர்க்களில் அர்யமன்நான், தண்டிப்பவர்களில் யமன் நான்.

𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌦𑍈𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌾𑌲𑌃 𑌕𑌲𑌯𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌮𑍃𑌗𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌮𑍃𑌗𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋𑌽𑌹𑌂 𑌵𑍈𑌨𑌤𑍇𑌯𑌶𑍍𑌚 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍍 ॥

ப்ரஹ்லாதஶ்சாஸ்மி தைத்யாநாம் கால: கலயதா மஹம்,
ம்ருகாணாம் ச ம்ருகேந்த்ரோஹம் வைநதேயஶ்ச பக்ஷிணாம். ௩௰

ప్రహ్లాదశ్చాస్మి దైత్యానాం కాలః కలయతా మహమ్,
మృగాణాం చ మృగేంద్రోzహం వైనతేయశ్చ పక్షిణామ్.

30. அசுரர்களில் பிரஹ்லாதன்நான், ஆக்ரமிப்பவர்களில் மிருத்யுநான். மிருகங்களில் சிங்கம்நான், பக்ஷிகளில் கருடன் நான்.

𑌪𑌵𑌨𑌃 𑌪𑌵𑌤𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌰𑌾𑌮𑌃 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌭𑍃𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌝𑌷𑌾𑌣𑌾𑌂 𑌮𑌕𑌰𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌸𑍍𑌰𑍋𑌤𑌸𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀 ॥ ௩௧

பவந: பவதா மஸ்மி ராம ஶ்ஶஸ்த்ரப்ருதா மஹம்,
ஜஷாணாம் மகரஶ்சாஸ்மி ஸ்ரோதஸா மஸ்மி ஜாஹ்நவீ. ௩௧

పవనః పవతా మస్మి రామశ్శస్త్రభృతా మహమ్,
ఝషాణాం మకరశ్చాస్మి స్రోతసా మస్మి జాహ్నవీ. ౩౦

31. ஸஞ்சரிப்பவைகளில் வாயுநான், சஸ்திரதாரிகளில் ராமன்நான். (அன்றிப்பரசிராமன்நான்) பரசிராமனைச்சயித்தநான் என்று சிலவியாக்யானங்கள். மச்சங்களில் மகரம்நான், பிரவாஹங்களில் (பிரவகிப்பவைகளில்) கங்கைநான்.

𑌸𑌰𑍍𑌗𑌾𑌣𑌾𑌮𑌾𑌦𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌚𑍈𑌵𑌾𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾𑌦𑌃 𑌪𑍍𑌰𑌵𑌦𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ॥ ௩௨

ஸர்காணா மாதி ரந்தஶ்ச மத்யம் சைவாஹ மர்ஜுந,
அத்யாத்மவித்யா வித்யாநாம் வாத: ப்ரவததா மஹம். ௩௨

సర్గాణా మాది రంతశ్చ మధ్యం చైవాహ మర్జున,
అధ్యాత్మవిద్యా విద్యానాం వాదః ప్రవదతా మహమ్. ౩౨

32 அரு—அனைத்திலு மிருக்கிறாயா?

கிரு—சிருஷ்டியிலிருக்கும் வஸ்துக்களுக்கு ஆதிமத்யாந்தங்கள் நான். வித்யைகளில் பிரம்மவித்யை (வேதாந்தவித்யை) நான். வாதம் செய்பவர்களுக்கு வாதம் நான். (வாதங்களில் மூன்றுவிதமான வாதங்களுண்டு, விருதாவார்த்தைகள், சண்டைபேச்சுகள், தத்வநிர்ணயம்செய்யும் வார்த்தைகள் இதில் கடைசியானது நான்.)

𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌣𑌾𑌮𑌕𑌾𑌰𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌃 𑌸𑌾𑌮𑌾𑌸𑌿𑌕𑌸𑍍𑌯 𑌚 ।
𑌅𑌹𑌮𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌯𑌃 𑌕𑌾𑌲𑍋 𑌧𑌾𑌤𑌾𑌹𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌃 ॥

அக்ஷராணு மகாரோஸ்மி த்வந்த்வ ஸ்ஸாமாஸிகஸ்பச,
அஹ மேவாக்ஷய: காலோ தாதா ஹம் விஸ்வதோமுக:. ௩௩

అక్షరాణా మకారో஽స్మి ద్వంద్వ స్సామాసికస్యచ,
అహమేవా క్షయః కాలో ధాతాహం విశ్వతో ముఖః. 33

**33.** அக்ஷரங்களில் அகாரம் (அ-இதி ப்ரம்மம் என்று முண்டகோபநிஷத் வாக்யம்) ஸமாஸங்களில் த்வந்தஸமாஸம் (மற்றசமாசங்களில் ஒருபதத்தின் அர்த்தம் மாத்ரம் பிரதானம். இதில்மாத்ரம் எல்லாப்பதங்களின் அர்த்தம் பிரதானம். ராஜபுருஷன்வந்தான் என்பதில் புருஷன்எனும் பதம் முக்யம். பீதாம்பரதரணே ஆச்ரயி. இவ்விடத்தில் விஷ்ணு முக்யம். பிதாபுத்ரர்கள் அன்றி குருசிஷ்யர் வந்தார்கள் என்னுமிடத்து இரண்டுபதங்கள் முக்யம். இவ்வகைப்பட்ட சமாசம்) ஸ்வாமி நாசரஹிதமான காலம் நான். சதுர்முகனுன பிரமன் நான்.

𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌹𑌰𑌶𑍍𑌚𑌾𑌹𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌶𑍍𑌚 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌾𑌮𑍍 ।
𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌃 𑌶𑍍𑌰𑍀𑌰𑍍𑌵𑌾𑌕𑍍𑌚 𑌨𑌾𑌰𑍀𑌣𑌾𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌮𑍇𑌧𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 ॥

ம்ருத்யு ஸ்ஸர்வ ஹரஸ்சாஹ முத்பவஸ்ச பவிஷ்யதாம்,
கீர்தி: ஸ்ரீர்வாக்ச நாரீணும் ஸ்ம்ருதிர்மேதா த்ருதி: க்ஷமா. ௩௪

మృత్యు స్సర్వహరశ్చాహ ముద్భవశ్చ భవిష్యతామ్,
కీర్తిః శ్రీర్వాక్చ నారీణాం స్మృతి ర్మేధా ధృతిః క్షమా. 34

**34.** எல்லாவற்றையும் ஹரிக்கும் மிருத்யு நான். (இவ்விடத்தில் யமனுக்கும் மிருத்யுவிற்கும் நான் காரணம் என்று கருத்து.

அத்வைதம்.

(மிருத்யு இரண்டு விதங்கள். பிராணம்நீங்குதல், த்ரவ்யம் நீங்குதல் இந்த இரண்டும் நான் என்று கருத்து.) உண்டாகப்போதற்கு உத்பத்தி, ஸ்திரீகளில், ஸிரியும், கீர்த்தியும், வாக்கும், ஸ்மிருதியும், மேதையும், திருதியும், க்ஷமையும் நான்.

𑌬𑍃𑌹𑌤𑍍𑌸𑌾𑌮 𑌤𑌥𑌾 𑌸𑌾𑌮𑍍𑌨𑌾𑌂 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌛𑌨𑍍𑌦𑌸𑌾𑌮𑌹𑌮𑍍 ।
𑌮𑌾𑌸𑌾𑌨𑌾𑌂 𑌮𑌾𑌰𑍍𑌗𑌶𑍀𑌰𑍍𑌷𑍋𑌽𑌹𑌮𑍃𑌤𑍂𑌨𑌾𑌂 𑌕𑍁𑌸𑍁𑌮𑌾𑌕𑌰𑌃 ॥

ப்ருஹத்ஸாம ததா ஸாம்னும் காயத்ரீ சந்தஸா மஹம்,
மாஸானும் மார்கஸீர்ஷோஹ ம்ருதூனும் குஸுமாகர:. ௩௫

బృహత్సామ తథా సామ్నాం గాయత్రీ ఛందసా మహమ్,
మాసానాం మార్గశీర్షో஽హ మృతూనాం కుసుమాకరః. 35

35. ஸாமத்தில் ப்ருஹத் எனும் ஸாமம்நான், 26 சந்தஸ்ஸுகளில் காயத்ரி சந்தஸ், மாதங்களில் மார்கழிநான், (மார்கசீர்ஷத்தில் விசேஷமென்னவென்றால், (1) உத்தராயணம் தேவதைகளுக்குப்பகல், தக்ஷிணாயனம் அவர்களுக்கு இரவு, இந்த மாதம் தக்ஷிணாயனத்திற்கு கடைசியில் வருதலால் தேவதைகளின் உஷக்காலமாகிறது. உஷக்காலம் சுகமானகாலம். அப்போது எல்லாரும் நித்ரைசெய்தலால் ஸம்ஸாரமுதலிய பாதைகள் எவையும் மனதைப்பாதிக்கா, (2) ஒவ்வொருமாதங்களுக்கும் கேசவாதிகள் க்ரமக்கிரமமாய் அதிபதிகளாயிருப்பர். இந்தமாதத்திற்கு முதல்வனான கேசவன் அதிபதியாகிறான். (3) தபிக்கும் காலம்அன்று மழையை பெய்விக்கிறதற்கு சூர்யன் நீரைக்கர்ப்பாதானம் செய்யும்காலம். இந்தக்காரணங்களால் மார்க்கசீர்ஷம் விசேஷப்பட்டது. அது பகவான்.) ருதுக்களில் வசந்தருது நான். (இது மனோஹரமானகாலம் இதுவும் பகவனே.)

𑌦𑍍𑌯𑍂𑌤𑌂 𑌛𑌲𑌯𑌤𑌾 𑌮𑌸𑍍𑌮𑌿 𑌤𑍇𑌜 𑌸𑍍𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑌿𑌨𑌾 𑌮𑌹𑌮𑍍 ।
𑌜𑌯𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 ॥
த்யூதம். சலயதா மஸ்மி தேஜ ஸ்தேஜஸ்விநா மஹம்,
ஜயோஸ்மி வ்யவஸாயோஸ்மி ஸத்த்வம் ஸத்த்வவதாமஹம். ௩௬
ద్యూతం ఛలయతా మస్మి తేజ స్తేజస్వినా మహమ్,
జయోఽస్మి వ్యవసాయోఽస్మి స త్త్వం స త్త్వవతామహమ్.౩౬

36. கிரு—எப்படிப்பட்ட சாமர்த்தியனாபினும் மோசம் செய்கிறசாமர்த்தியம் ஒன்றிருக்கிறது. அது வெகுசமத்காரமானவேலை.

அரு—சாமர்த்தியர்களையும்கூட மோசம் செய்யும் அவ்வளவுசக்தியும் ஒன்றிருக்கிறதா.

கிரு—நீங்களெப்படி யிந்த ஸ்திதிக்கு வந்தீர்கள்.

அரு—சூதாடி அன்றோ.

கிரு—அந்தச்சூதில் நானிருக்கிறேன். என் ஸன்னிதானபலம்.

அரு—சூதாகி யெங்களைக்கஷ்டத்தில் தள்ளினையா.

கிரு—அவரவர்களின் கர்மானு சாரமாய்க் கார்யங்களைச் செய்வேன்.

அரு—நாங்கள் உன்பதவியில் இருக்கவில்லையா.

கிரு—அந்தத்தேஜசும் நானே

அரு—என்புத்தியால் ஜயமடைந்தேன்.

கிரு—அந்தபுத்தியும் நானே.

அரு—சத்யத்தால் ஜயமடைந்தோம்.

கிரு—அதுவும் நானே.

𑌵𑍃𑌷𑍍𑌣𑍀𑌨𑌾𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑌾𑌂 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯𑌃 ।
𑌮𑍁𑌨𑍀𑌨𑌾 𑌮𑌪𑍍𑌯𑌹𑌂 𑌵𑍍𑌯𑌾𑌸𑌃 𑌕𑌵𑍀𑌨𑌾 𑌮𑍁𑌶𑌨𑌾 𑌕𑌵𑌿𑌃 ॥ ௩௭
வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோஸ்மி பாண்டவாநாம் தநஞ்ஜய:,
முநீநா மப்யஹம் வ்யாஸ: கவீநா முஶநா கவி:. ௩௭

వృష్ణీనాం వాసుదేవోఽస్మి పాండవానాం ధనంజయః,
మునీనా మప్యహం వ్యాసః కవీనా ముశనా కవిః. ౩౭

37. அரு—என் பந்துக்களின் ஸஹாயத்தால் ஜெயித்தேன்.

கிரு—அந்த பந்துவும் (விருஷ்டிவம் சத்தவருக்கு வாசுதேவன்) நானே.

அரு—எல்லாகார்யங்களும் என்னாலே நடந்தன.

கிரு—நீயும் நானே.

அரு—நீ நான் எவ்வாறுவாய்.

கிரு—உன் தந்தையாகும் இந்திரன் நான் என்றபோது என் சும்மாவிருந்தாய்.

அரு—அவனுக்குஉன்னால் பெருந்தன்மைவாய்த்ததென்றுஎண்ணினேன்

கிரு—உனக்கும் என்னாலேயே கௌரவமென்றுநினை. இன்னும் மனனம் செய்துகொண்டு தவஞ்செய்பவர்களில் வேதங்களைச்சாகைகளாகச்செய்து வேதார்த்தங்களைத் தெரிவதற்குப் பிரம்மசூத்ரங்களைச்செய்தவியாசனும் நானே சூக்ஷ்மதர்சனம் செய்பவர்களில் சுக்ரன் நான்.

உணோ ஊயதா உஸி நீதி ரஸி ஜிமீஷதாமு ।
உௗநம் வெவாஸி மு॰ஹ்யா நாம் ஜூாநம்ஜூாநவதாஉஹமு ॥

தண்டோ தமயதா மஸ்மி நீதி ரஸ்மி ஜிகீஷதாம்,
மௌநம் சைவாஸ்மி குஹ்யாநும் ஜ்ஞாநம் ஜ்ஞாநவதா மஹம். ௩அ

దండో దమయతా మస్మి నీతి రస్మి జిగీషతామ్,
మౌనం చైవాస్మి గుహ్యానాం జ్ఞానం జ్ఞానవతా మహమ్. ౩౮

38. கிரு—தண்டிப்பவருக்குத் தண்டனை நான்.

அரு—சிலர் நீதியாலேயே ஜயம் அடைகின்றனரே.

கிரு—அந்த நீதியும் நான், ரஹஸ்யங்களுக்கு மௌனம் நான். (மூன்று பெயர்கந்தர்வர்கள் ஆகாசமார்க்கத்தில் போய்க்கொண்டிருக்கையில் தவளையை வாயில்கௌவிக்கொண்டிருந்த ஒரு பாம்பினைக்கண்டனர். அவர்களில் ஒருவன் பாம்பைப்பார்த்துப் பெரும்பாம்பே அதை.விட்டுவிடென்று கூறினான். உடனே அவன் கீழே விழுந்தான். இதைக்கண்டு மற்றொருவன் நாகாதிபனே விடாதேயென்று கூறினான். அவனும் கீழேவிழுந்தான். மூன்றாவதானவன் இவைகளைப்பார்த்து வாயை மூடிக்கொண்டிருந்து தான் போகவேண்டிய இடம் போய்ச்சேர்ந்தான். ஆகையால் மௌனம் சர்வார்த்த சாதனமாக இருக்கிறது. அப்படிப்பட்ட மௌனம் பகவான்.) ஞானவான்களுக்கு ஞானம்நான்.

யச்சாவி ஸவ஦ஹ஭ூதாநாம் வீஜம் தஉஹ உஜுந ।
ந தஉஸ்தி விநா யஸ்ஸா ந்மயா ஹூதம் வராவரமு ॥ ௩௯

யச்சாபி ஸர்வபூதாநும் பீஜம் ததஹ மர்ஜுந,
ந ததஸ்தி விநு யத்ஸ்யா ந்மயா பூதம் சராசரம். ௩௯

యచ్చాపి సర్వభూతానాం బీజం తదహ మర్జున,
న తదస్తి వినా యత్స్యా న్మయా భూతం చరాచరమ్. ౩౯

39. அரு—சர்வத்திற்கும் பிரகிருதி காரணமாயிருக்கிறதே.

கிரு—அதுவும்நானே, பிரகிருதிக்குச் சக்தியைத்தருவேன். அவ்வளவே அல்ல. என் சம்பந்தமில்லாத பொருளே இல்லை.

𑌨𑌾𑌨𑍍𑌤𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌮𑌮 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌭𑍂𑌤𑍀𑌨𑌾𑌂 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 ।
𑌏𑌷 𑌤𑍂𑌦𑍍𑌦𑍇𑌶𑌤𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍋 𑌵𑌿𑌭𑍂𑌤𑍇𑌰𑍍𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍋 𑌮𑌯𑌾

நாந்தோஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப,
ஏஷ தூத்தேசத: ப்ரோக்தோ விபூதே ர்விஸ்தரோ மயா. ௪0

నాన్తో౽స్తి మమ దివ్యానాం విభూతీనాం పరన్తప,
ఏష తూద్దేశతః ప్రోక్తో విభూతే ర్విస్తరో మయా. ౪౦

40 அரு—21-சுலோ. இல், சில சொன்னாய். நான்கேட்டதால் மற்றும் சில கூறினாய். இவ்வளவுதானா இன்னும் உன் மஹிமைகள் இருக்கின்றன.

கிரு—என் மஹிமைகள் அநேகமாயினும் கூறுதற்கசாத்யமானவை.

அரு—இப்போது சிலவற்றைக் கூறினாயன்றோ.

கிரு—இது-7-அத். பார்க்கிலும் விஸ்தாரமானது. ஆயினும் சிறிதே கூறப் பட்டது எல்லாம் கூறிமுடியாது.

𑌯𑌦𑍍𑌯𑌦𑍍𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌮𑌤𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍂𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍇𑌵 𑌵𑌾 ।
𑌤𑌤𑍍𑌤𑌦𑍇𑌵𑌾𑌵𑌗𑌚𑍍𑌛 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌮 𑌤𑍇𑌜𑍋𑌂𑌽𑌶𑌸𑌮𑍍𑌭𑌵𑌮𑍍 ॥ ௪௧

யத்ய த்விபூதிமத்ஸத்த்வம் ஸ்ரீம தூர்ஜித மேவ வா,
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ஸஸம்பவம். ௪௧

యద్య ద్విభూతిమత్స త్త్వం శ్రీమ దూర్జిత మేవ వా,
త త్తదేవావగచ్ఛ త్వం మమ తేజోంశసంభవమ్. ౪౧

41. அரு—நீ இப்போது சொல்லினதெல்லாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளமாட்டுவேன். நீசொன்ன அவற்றில் நீயிருத்தலை அறிந்து எப்படி பஜிப்பேன்.

கிரு—நான் ஒரு அடையாளம் தெரிவிக்கிறேன். அநேகர்க்கு அதிபதியாயிருத்தல் என்னாலே. சத்வம், ஐஶ்வர்யம், அன்றி உருவம், பலம், முதலானவற்றுடன் சேர்ந்த அனைத்தும் நானே. என் தேஜஸினாலேயே அனைத்தும் நடக்குமென எண்ணுக. என்னுடை அம்சமே.

𑌅𑌥𑌵𑌾 𑌬𑌹𑍁𑌨𑍈𑌤𑍇𑌨 𑌕𑌿𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍇𑌨 𑌤𑌵𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌵𑌿𑌷𑍍𑌟𑌭𑍍𑌯𑌾𑌹𑌮𑌿𑌦𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑍇𑌕𑌾𑌂𑌶𑍇𑌨 𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌜𑌗𑌤𑍍 ॥

அதவா பஹுநைதேந கிம் ஜ்ஞாநேந தவார்ஜுந,
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்ஸேந ஸ்திதோ ஜகத். ௪௨

అథవా బహునైతేన కిం జ్ఞానేన తవార్జున,
విష్టభ్యాహ మిదం కృత్స్న మేకాంశేన స్థితో జగత్. ౪౨

**42.** அரு—நீ கூறிய அடையாளங்கள் அனைத்தும் பூசிக்கத்தக்கவையே அன்றே.

கிரு—இது கீழ்வகுப்பினராகிய உபாசகர்க்குளுக்கன்றி உன்னையொத்தவர்களுக்கன்று சாரசாரங்களுக்கு ஏகரூபியான என்னை உபாசிக்கவேண்டும். உன்னையொத்த மஹாத்மாக்களுக்கு விஸ்வமூர்த்தியின் ஆராதனமே முக்யம்.

இது ஸ்ரீபகவத்கீதை உபநிஷத் பிரம்மவித்தையாகிற யோகசாஸ்திரத்தில்
கிருஷ்ணர்ச்சுன சம்வாதத்தில் விபூதியோகோநாம
பத்தாவது அத்யாயம் முற்றுப்பெற்றது.

---

# விச்வரூபஸந்தர்சன யோகம்.

## பதினோராவது அத்யாயம்.

---

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

𑌮𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌮𑍍 ।
𑌯𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑍋𑌕𑍍𑌤𑌂 𑌵𑌚𑌸𑍍𑌤𑍇𑌨 𑌮𑍋𑌹𑍋𑌽𑌯𑌂 𑌵𑌿𑌗𑌤𑍋 𑌮𑌮 ॥ ௧

மதநுக்ரஹாய பரமம் குஹ்யமத்யாத்மஸம்ஜ்ஞிதம்,
யத்த்வயோக்தம் வசஸ்தேந மோஹோயம் விகதோ மம. ௧

మదనుగ్రహాయ పరమం గుహ్యమధ్యాత్మసంజ్ఞితమ్,
యత్త్వయోక్తం వచస్తేన మోహోఽయం విగతో మమ. ౧

அருச்சுநன் கூறுதல்.

**1.** அரு—ஜீவாத்மா பரமாத்மாக்களைக்குறித்து, 2-அத். முதல் அநேகஅத்யாயங்கள் கூறினாய். என்னால் உனக்குக்கொஞ்சமும் பிரயோசனம்இல்லை ஆயினும் என்னை அநுக்ரஹிப்பதற்காக உபதேசித்தாய்.

கிரு—என் உபதேசத்தால் உனக்கேதேனும் லாபம் உண்டா.

அரு—மோஹம் விட்டது.

(கீதை உபதேசம் மோஹம் நீங்கும்பொருட்டன்றே இன்னும், 8-அ. உபதேசிக்கவேண்டியிருக்கின்றன. அருச்சுனன் இன்னும் அநேக வினாக்கள் கேட்கப்போகிறான். ஆதலால் இந்தச்சுலோகத்தில் அயம் மோஹ: = இந்த

மோஹம் என்பதற்கு கதம் பீஷ்மம் அஹம் ஸங்க்யே என்று பீஷ்மாதிகளை எவ்வாறுகொல்வேனென்று துக்கித்துக்கொண் டிருந்தானே அந்தத்துக்கம் விட்டது. இன்னும் எல்லாவிஷயத்திலும் மோஹம்விடவில்லை. பாட்டனுக்கும் எனக்கும் சம்பந்தமிருக்கிறதென்று எண்ணினேன். நான் கருத்தாவென்று எண்ணினேன் அந்தக்கருத்து விட்டதன்றி, 4-அத். 33-சுலோகம், பெரியவர்களைக்கேட்டுத் தெரிந்துகொள்ளென்று சொன்னாயே அந்த ஞானம் தெரிந்தால் வேதாந்தசம்சயம் நீங்கிப்போம் என்று கூறினாய். அந்தமோஹம் இன்னும் போகவில்லை என்று கருத்து.

(இந்த-1-முதல் சுலோகத்தின் பிரதமபாதத்தில், 6-அக்ஷரங்களிருத்தல் சுலோகத்தின் தவறன்று. சுவாமி காண்பிக்கப்போகும் ரூபம் பெரிதாகையால் இந்த அத்யாயம். விசேஷமென்று தெரிவித்தற்காக இந்தச்சுலோகம் இப்படி ஏற்பட்டது.)

𑌭𑌵𑌾𑌪𑍍𑌯𑌯𑍌 𑌹𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍌 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌶𑍋 𑌮𑌯𑌾 ।
𑌤𑍍𑌵𑌤𑍍𑌤𑌃 𑌕𑌮𑌲𑌪𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷 𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ உ

பவாப்யயௌ ஹி பூதானும் ஶ்ருதௌ விஸ்தரஶோ மயா,
த்வத்த: கமலபத்ராக்ஷ மாஹாத்ம்ய மபி சாவ்யயம். உ

భవాప్యయౌ హి భూతానాం శ్రుతౌ విస్తరశో మయా,
త్వత్తః కమలపత్రాక్ష మాహాత్మ్య మపి చావ్యయమ్. ౨

2. கிரு—10-அத். இல், ஒருவிதத்தில் ஸ்தோத்ரம்செய்தாய். இப்போது விஷயங்களைத் தெரிவித்தேனென்று சந்தோஷிக்கிறாய். விஷயங்களை அறிந்து தோத்திரம் செய்கின்றாயா, முகப்ரீதிக்காக செய்கின்றாயா.

அரு—தெரிந்தே செய்கின்றேன்.

கிரு—என்னவென்று தெரிந்துகொண்டாய்.

அரு—சொல்ல அவகாசமிருக்கிறதா.

கிரு—கொஞ்சம் சொல்.

அரு—இந்தச்சமஸ்தங்களுக்கும் பிரபு ஒருவன் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது இவைகள் அனைத்தையும் சிருட்டித்தவனே அவன் நீயே யென்று தெரிகிறது. என்எனின்-7-அத். இல் நான் சமஸ்த சராசரங்களையும் சிருட்டித்தேன் என்றுகூறினாயாதலால் நீ சிருட்டிகர்த்தாஎன்று அறிந்தேன். சிருஷ்டிலயங்கள் நீயேயென்று தெரிவித்தாய். அதுவும் தெரிந்தது.

கிரு—எல்லா விஷயங்களையும் ஸாங்கோபாங்கமாய்க் கிரஹித்தாயா.

அரு—நீ அவ்வாறு கூறினாயா? வேதங்களில் கூறப்பட்ட சகல சராசர பிரபஞ்சசிருட்டியும் உன்னால் என்றும், லயமும் உன்னால் என்று அறிந்தேன்.

𑌏𑌵𑌮𑍇𑌤𑌦𑍍𑌯𑌥𑌾𑌤𑍍𑌥 𑌤𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰 ।
𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌰𑍂𑌪𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 । ௩

ஏவ மேத த்யதா தத்த்வ மாத்மாநம் பரமேஸ்வர,
த்ரஷ்டு மிச்சாமி தே ரூப மைஸ்வரம் புருஷோத்தம. ௩

ఏవ మేత ద్యథా త్త్వ మాత్మానం పరమేశ్వర.
ద్రష్టు మిచ్ఛామి తే రూప మైశ్వరం పురుషోత్తమ. 3

3. நான்சொன்ன சொற்களால்,10-அத்.இல், சாரம் எனக்கு ஞாபகம் இருக்கிறதென்று விசதமாயிற்றல்லவா ?

கிரு—கேட்டு ஞாபகத்தில் வைத்துக்கொண்டாய், அந்தவிஷயங்களைப்பற்றி நம்பினையா சந்தேகப்பட்டையா.

அரு—செம்மையாய் நம்பினேன்.

கிரு—அப்படியானுல் இப்போது என்ன என்கிருய்.

அரு—கேட்டேன். பார்த்தால் போதுமென்று தோன்றுகிறது.

கிரு—எதை.

அரு—உன் உருவத்தை.

கிரு—பார்.

அரு—இந்தஉருவம் அன்று. இதைக்கண்டே யித்தனைநாள்மோசம் உன் ஈஸ்வரஸ்வரூபத்தைக்காட்டு, 10-அத்.கடைசியில் சொன்ன பிரப்பிரம்மத்தைக் காணக்கோருகின்றேன். நீயேயன்றோ பரப்பிரம்மம்.

மன்யஸே யதி தச்சக்யம் மயா த்ரஷ்டு மிதி ப்ரபோ ।
யோகேஶ்வர ததோ மே த்வம் தர்ஶயாத்மாந மவ்யயம் ॥ ௪

மங்யஸே யதி தச்சக்யம் மயா த்ரஷ்டு மிதி ப்ரபோ,
யோகேஸ்வர ததோ மே த்வம் தர்ஸயாத்மாந மவ்யயம். ௪

మన్యసే యది త చ్ఛక్యం మయా ద్రష్టు మితి ప్రభో,
యోగేశ్వర తతో మే త్వం దర్శయాత్మాన మవ్యయమ్. ४

4. (அருச்சுநன் இவ்வாறு கேட்கையில் பிரம்மாதிகளுக்குக்கூட பார்க்க முடியாத இந்த ரூபத்தை இவன் எவ்வாறு பார்க்கமுடியும் கிருஷ்ணன் யோசித்துக்கொண்டிருந்தான்.)

அரு—உன் அப்படிப்பட்ட பெரிய உருவத்தைப் பார்ப்பதற்கு நான் அருகன் ஆவேனுஎன்று யோசிக்கிருய். பிரபோ அதற்கு என்னைச் சமர்த்தனுய்ச் செய்யும் பாரம் உனது. ஆலோசி. உபாயங்களுக்கு நீ யீஸ்வரன். இதற்கு என்ன கார்யம் செய்யவேண்டுமோ அதை யோசித்துப்பார்.

ஸ்ரீ பகவாநுவாச.

பஶ்ய மே பார்த ரூபாணி ஶதஶோ(அ)த ஸஹஸ்ரஶ: ।
நாநாவிதாநி திவ்யாநி நாநாவர்ணாக்ருதீநி ச ॥ ௫

பஶ்ய மே பார்த ரூபாணி ஶதஶோத ஸஹஸ்ரஶ:,
நாநாவிதானி திவ்யானி நாநாவர்ணாக்ருதீனி ச. ௫

పశ్య మే పార్థ రూపాణి శతశోऽథ సహస్రశః,
నానావిధాని దివ్యాని నానావర్ణాకృతీని చ. ౫

ஸ்ரீபகவான் கூறுதல்.

5. (உனது ஈஸ்வரரூபத்தைக்காண என்னை அருகனுக்கிக்காட்டும் என்று அருச்சுனன் கேட்கையில் லோகோத்தாரணார்த்தம் அவதரித்து வேதாந்தோபதேசம் செய்திருந்த கிருஷ்ணன், தான் அந்த உருவத்தைக் காட்டாதிருக்கின் அருச்சுனனுக்கும் இனிமேல் கீதானுசந்தானம் செய்யப்போகிறவர்களுக்கும் இந்தச்சாஸ்திரத்தில் நம்பிக்கை உண்டாகாதென்று எண்ணி கிருஷ்ணன் என்ன சொல்வானே என்று அதிக ஆசையுடன் பார்த்துக்கொண்டிருக்கிற அருச்சுனனிடத்துள்ள கருணையைத் தெரிவிக்கும்படி பதில் கூறுவதற்குத் தொடக்கத்திலேயே. காணுப் என்று தொடங்கினன். சீதையின் வியோகதுக்கமனுபவித்துக்கொண்டிருந்த ஸ்ரீராமன் மனம் சிதராதிருக்கும்படி ஹநுமந்தன் சீதையைக்கண்டேன். என்பதற்குப் பதிலாககண்டேன் சீதையையென்று கூறினன். இது உத்தம தூதலக்ஷணம்.)

கிரு—பார்.

அரு—எதை?

கிரு—என் ஈஸ்வரரூபத்தை. அது பலவாக இருக்கும் பெரிதாக இருக்கும். பலவிதங்களான வர்ணங்கள். ஆக்ருதிகளாக இருக்கும்.

പശ്യാദിത്യാന് വസൂന് രുദ്രാനശ്വിനൌ മരുതസ്തഥാ।
ബഹൂന്യദൃഷ്ടപൂര്വാണി പശ്യാശ്ചര്യാണി ഭാരത ॥
ഇഹൈകസ്ഥം ജഗത്കൃത്സ്നം പശ്യാദ്യ സചരാചരം।
മമ ദേഹേ ഗുഡാകേശ യച്ചാന്യദ്ദ്രഷ്ടുമിച്ഛസി ॥ ൭

பஶ்யாதித்யான் வஸூன் ருத்ரா நஶ்விநௌ மருதஸ்ததா,
பஹூந்யத்ருஷ்டபூர்வாணி பஶ்யாஶ்சர்யாணி பாரத. ௬
இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம் பஶ்யாத்ய ஸசராசரம்,
மம தேஹே குடாகேஶ யச்சான்ய த்ரஷ்டு மிச்சஸி. ௭

పశ్యాదిత్యాన్ వసూన్ రుద్రా నశ్వినౌ మరుత స్తథా,
బహూ న్యదృష్టపూర్వాణి పశ్యాశ్చర్యాణి భారత. ౬
ఇహైకస్థం జగత్కృత్స్నం పశ్యాద్య సచరాచరమ్,
మమ దేహే గుడాకేశ యచ్చాన్య ద్ద్రష్టు మిచ్ఛసి. ౭

6, 7. அரு—உன் இந்த ரூபத்தைக் காண்பதற்குப் பரமானந்தபரிதனுகிறேன்.

கிரு—பின் அவ்விடத்துள்ள விசேஷங்களைக் காணவில்லையென்பாய் வரப்போகும் விசேஷங்களை முன்னதாகவே தெரிவிக்கிறேன். கவனிக்க நீ பா

ரதா என் ஸ்வரூபத்தில் நூறு நூறாகவும், ஆயிரம் ஆயிரமாகவும் இதற்குமுன் பார்க்கப்படாத அனேகாச்சர்யமான வஸ்துக்களையும் த்வாதசாதித்தர்களையும், அஷ்டவசுக்களையும், ஏகாதசருத்ரர்களையும் அஸ்வினிதேவர்களையும், மருத்துக்களையும் பார். இவ்வளவேயல்லாமல் சத்யலோகம் முதல் பாதாளலோகம் வரையிலுள்ள சர்வலோகங்களையும் காணக்கூடும்.

அரு—இவ்வளவு இடங்களுக்கு நான் எப்படிப்போவேன்.

கிரு—இவ்விடமே காணக்கூடும்.(நாம் இருக்கும் இடத்திலேயேயிருந்து காசி ராமேச்வரம் முதலிய தேசங்களையும் அனேகரூபங்கள் முதலியவைகளை ஒரு விதமானபெட்டியில் பார்ப்பதுபோல தன்னிடத்திலேயே அனைத்தையும் காணக்கூடுமென்று கிருஷ்ணன் அருச்சுனனுக்குத் தெரிவித்தான்.)

அரு—எப்போது காணலாம்.

கிரு—இப்போதே என் பெரியதேகத்தில் காண்பாய்.

அரு—2-அத். 6-சுலோ. ஜெயம் உண்டாகுமாஎன்று கேட்டேனே அதுவும் இவ்விடத்தில் காணக்கூடுமா.

கிரு—ஜயத்தைப்பார்.

𑌨 𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌶𑌕𑍍𑌯𑌸𑍇 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌨𑍇𑌨𑍈𑌵 𑌸𑍍𑌵𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 ।
𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌦𑌦𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ அ

நது மாம் ஶக்யஸே த்ரஷ்டு மனேநைவ ஸ்வசக்ஷுஷா:
திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்யமே யோக மைஶ்வரம். அ

నతు మాం శక్యసే ద్రష్టు మనేనైవ స్వచక్షుషా,
దివ్యం దదామి తే చక్షుః పశ్యమే యోగ మైశ్వరమ్. ప

8. உனக்கிந்த ப்ராக்ருத நேத்ரங்களால் என்னை காணமுடியாது.

அரு—அவ்வாறாயின் என் நேத்ரங்களுக்குச் சிகிச்சை செய்கிறாயா.

கிரு—உனக்கு அப்ராக்ருத திருஷ்டிகொடுக்கிறேன். இப்போது பார்.

அரு—ஆ-ஆ உன் வார்த்தைப்பிரபாவத்தால் எனக்குப் புதுப்பார்வையுண்டாயிற்று.

கிரு—என் ஈஸ்வர மஹிமையைப்பார்.

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃 ।
𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌰𑍂𑌪𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ॥ ஸ

ஏவ முக்த்வா ததோ ராஜன் மஹாயோகேஶ்வரோ ஹரி:,
தர்ஶயாமாஸ பார்தாய பரமம் ரூப மைஶ்வரம். ஸ

ఏవ ముక్త్వా తతో రాజన్ మహాయోగేశ్వరో హరిః,
దర్శయామాస పార్థాయ పరమం రూప మైశ్వరమ్. ట

9. (திருதராஷ்டிரன் இந்தச் சங்கதிகேட்டு இவ்வாறு கூறுகிறான்.)

திரு—கிருஷ்ணன் பார் என்று கூறி திவ்யதிருஷ்டிகொடுத்து அந்த ரூபத்தை காட்டினான். சஞ்சயன்—காட்டினான். (இந்த, 6-சுலோகங்களில் ஹரி: = என்றதால் யோகங்களுக்கு உபாயங்களுக்கு ப்ரபு நம்பினவர்களின் பாபங்களைப் போக்கடிப்பவன். அபக்தர்களை ஹரிப்பவன் என்று பொருள்.)

𑌅𑌨𑍇𑌕𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑌯𑌨𑌮𑌨𑍇𑌕𑌾𑌦𑍍𑌭𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ।
𑌅𑌨𑍇𑌕𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌭𑌰𑌣𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍇𑌕𑍋𑌦𑍍𑌯𑌤𑌾𑌯𑍁𑌧𑌮𑍍 ॥ ௧௦
𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑍁𑌲𑍇𑌪𑌨𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑌯𑌂 𑌦𑍇𑌵𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌮𑍍 ॥ ௧௧

அநேகவக்த்ரநயந மநேகாத்புததர்ஸநம்,
அநேகதிவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம். ௧௦
திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தா நுலேபநம்,
ஸர்வாஸ்சர்ய மயம் தேவ மநந்தம் விஸ்வதோ முகம். ௧௧

అనేకవక్త్రనయన మనేకాద్భుతదర్శనమ్,
అనేకదివ్యాభరణం దివ్యానేకోద్యతాయుధమ్. ౧౦
దివ్యమాల్యాంబరధరం దివ్యగంధానులేపనమ్,
సర్వాశ్చర్య మయం దేవ మనంతం విశ్వతో ముఖమ్. ౧౧

**10, 11.** திரு—எப்படித் தெரிவித்தான்.

அரு—(முதலில் ஒரே உருவமாக) பின் அநேக முகங்கள், அநேக நேத்ரங்கள் அநேக விலக்ஷணங்களான வஸ்துக்கள், அநேக திவ்யாபரணங்கள், திவ்யாயுதங்கள். திவ்யமால்யங்கள், திவ்யகந்தம், அநேகாஸ்சர்யபதார்த்தங்கள் இவையெல்லாமில்லாத தேஜஸ், அநேக முகங்களுள்ள திவ்யரூபத்தைக் காட்டினன்.

𑌦𑌿𑌵𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑍍𑌯 𑌭𑌵𑍇𑌦𑍍𑌯𑍁𑌗𑌪𑌦𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑌾 ।
𑌯𑌦𑌿 𑌭𑌾𑌃 𑌸𑌦𑍃𑌶𑍀 𑌸𑌾 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑌾𑌸𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥ ௧௨

திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவே த்யுகப துத்திதா,
யதி பா ஸ்ஸத்ருஸீ ஸா ஸ்யா த்பாஸ ஸ்தஸ்ய மஹாத்மந:. ௧௨

దివి సూర్యసహస్రస్య భవే ద్యుగప దుత్థితా,
యది భా స్సదృశీ సా స్యా ద్భాస స్తస్య మహాత్మనః. ౧౨

**12.** ஆகாசத்தில் சஹஸ்ரசூர்யர்கள் ஏககாலத்தில் பிரகாசித்தால் உண்டாம் பிரகாசம் அந்த மாஹாத்மாவின் தேஜஸுக்குச்சமமாகும். (சங்கரபாஷ்யத்தில் இந்தச்சுலோகத்தில், ஸ்யாத் = ஆகும், என்பதற்குபதில் ஸ்யாத் = ஆமா என்று கூறப்பட்டது. என்எனின் அவ்வகைப்பிரகாசத்திற்கு சஹஸ்ரசூர்யர்களின் காந்தி ஈடாகாதென்று கருத்து.)

𑌤𑌤𑍍𑌰𑍈𑌕𑌸𑍍𑌥𑌂 𑌜𑌗𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌮𑌨𑍇𑌕𑌧𑌾 ।
𑌅𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌸𑍍𑌤𑌦𑌾 ॥ ௧௩

தத்ரைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்நம் ப்ரவிபக்த மநேகதா,
அபஶ்ய த்தேவதேவஸ்ய ஶரீரே பாண்டவ ஸ்ததா. ௧௩

తత్రైకస్థం జగత్కృత్స్నం ప్రవిభక్త మనేకధా,
అపశ్య ద్దేవదేవస్య శరీరే పాండవ స్తదా. ౧౩

**13.** அப்போது அர்ச்சுனன் தேவதேவனுகிய பகவானுடைய அந்தச்சரீரத்தில் அநேகவித விபாகங்களுடன் கூடிய அகண்ட பிரபஞ்சம் ஒருபாகத்திலிருத்தலைப் பார்த்தான்.

𑌤𑌤 𑌸𑍍𑌸 𑌵𑌿𑌸𑍍𑌮𑌯𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌹𑍃𑌷𑍍𑌟𑌰𑍋𑌮𑌾 𑌧𑌨𑌂𑌜𑌯𑌃 ।
𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌶𑌿𑌰𑌸𑌾 𑌦𑍇𑌵𑌂 𑌕𑍃𑌤𑌾𑌞𑍍𑌜𑌲𑌿𑌰𑌭𑌾𑌷𑌤 ॥ ௧௪

தத ஸ்ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்ட ரோமா தநம்ஜய.
ப்ரணம்ய ஶிரஸா தேவம் க்ருதாஞ்ஜலி ரபாஷத. ௧௪

తత స్స విస్మయావిష్టో హృష్ట రోమా ధనంజయః,
ప్రణమ్య శిరసా దేవం కృతాంజలి రభాషత. ౧౪

**14.** பின் தனஞ்சயன் ஆச்சர்யத்தால் ஆவேசிக்கப்பட்டவனுய்ப்புளகித்து அந்தப் பகவானைச் சிரஸால்வந்தனஞ்செய்து கைகுவித்துக்கொண்டு இவ்வாறு கூறினன்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌦𑍇𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌵 𑌦𑍇𑌵𑌦𑍇𑌹𑍇
𑌸𑌰𑍍𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 𑌭𑍂𑌤𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑌙𑍍𑌘𑌾𑌨𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌮𑍀𑌶𑌂 𑌕𑌮𑌲𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌂
𑌋𑌷𑍀𑌂𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑌗𑌾𑌂𑌶𑍍𑌚 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍 ॥ ௧௫

பஶ்யாமி தேவாம் ஸ்தவ தேவதேஹே
ஸர்வாம் ஸ்ததா பூதவிஶேஷஸங்காந்,
ப்ரஹ்மாண மீஶம் கமலாஸநஸ்தம்
ருஷீம்ஶ்ச ஸர்வா நுரகாம்ஶ்ச திவ்யாந். ௧௫

పశ్యామి దేవాం స్తవ దేవదేహే సర్వాం స్తథా భూతవిశేషసంఘాన్,
బ్రహ్మాణ మీశం కమలాసనస్థం ఋషీంశ్చ సర్వా నురగాంశ్చ దివ్యాన్.

அருச்சுநன் கூறுதல்.

**15.** தேவா உன்தேஹத்தில் ஸர்வதேவர்களையும் அவ்வாறே சர்வப்பிராணிபேதங்களையும், பிரம்மாவையும் பிரம்மாவை ஆச்ரயித்திருக்கிற சிவனையும்

தேவருஷி முதலியருஷிகள் அனைவரையும் வாசுகி தக்ஷகன் முதலாகும் அநேக திவ்யமான சர்ப்பங்களையும் பார்க்கின்றேன். (ப்ரம்மாணமீசம்கமலாசனஸ்தம்.)

(த்வைதம்)—பிரம்மாவையும் அவன் தொடைமீதில் சிவனையும் பார்க்கிறேன்.

(விசிஷ்டாத்வைதம்)—பிரம்மாவையும் அவன் பக்கலில் அவனது ஆஞ்ஞையை நடத்தும் சிவனைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

(அத்வைதம்)—ஈஶ்வரனுகும் பிரமனையும் கமலாசனத்திருப்பவனுகவும், என்று ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்குக் காரகர்களாகும் பிரம்மனையும், ஈஶ்வரனையும், லக்ஷ்மியுடன் கூடிக் கருடாரூடனுயிருக்கும் விஷ்ணுவைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

𑌅𑌨𑍇𑌕𑌬𑌾𑌹𑍂𑌦𑌰𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑌂
𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋𑌽𑌨𑌨𑍍𑌤𑌰𑍂𑌪𑌮𑍍 ।
𑌨𑌾𑌨𑍍𑌤𑌂 𑌨 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌨 𑌪𑌨𑌸𑍍𑌤𑌵𑌾𑌦𑌿𑌂
𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪 ॥ க௬

அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம்
பஶ்யாமி த்வாம் ஸர்வதோநந்தரூபம்,
நாந்தம் நமத்யம் நபுநஸ்தவாதிம்
பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூப. க௬

అనేకబాహూదరవక్త్రనేత్రం పశ్యామి త్వాం సర్వతోఽనన్తరూపమ్,
నాన్తం న మధ్యం న పునస్తవాదిం పశ్యామి విశ్వేశ్వర విశ్వరూప. ౧౬

16. அநேக ஹஸ்தங்கள், அநேக உதரங்கள் அநேக நேத்ரங்கள் உண்டாய் அந்தமில்லாத ரூபங்களுடன் கூடிய உன்னை அனைத்திலும் பார்க்கிறேன்.

கிரு—முடிவைப்பார்.
அரு—ஆதிமத்யங்களே தெரியவில்லை.
கிரு—என்னை யென்னவென்று எண்ணுகிருய்.
அரு—விஶ்வேசரன் என்று விஶ்வரூபன் என்று எண்ணுகிறேன்.

𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂 𑌗𑌦𑌿𑌨𑌂 𑌚𑌕𑍍𑌰𑌿𑌣𑌂 𑌚
𑌤𑍇𑌜𑍋𑌰𑌾𑌶𑌿𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋 𑌦𑍀𑌪𑍍𑌤𑌿𑌮𑌨𑍍𑌤𑌮𑍍 ।
𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌤𑍍
𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌨𑌲𑌾𑌰𑍍𑌕𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌮𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌮𑍍 ॥ க௭

கிரீடிநம் கதிநம் சக்ரிணம்ச
தேஜோராஶிம் ஸர்வதோதீப்திமந்தம்,
பஶ்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தா
த்தீப்தாநலார்க த்யுதி மப்ரமேயம். க௭

కిరీటినం గదినం చక్రిణంచ తేజోరాశిం సర్వతోదీప్తిమంతమ్,
పశ్యామి త్వాం దుర్నిరీక్ష్యం సమన్తాద్దీప్తానలార్కద్యుతిమప్రమేయమ్.

17. தேஜோராசியாய் எல்லாதிக்குகளிலும் பிரகாசித்துக்கொண்டு காண்பதற்கு அசக்யனாய் நான்கு பக்கங்களில் ஜ்வலிக்கின்ற, அக்னி சூர்யனைபொத்த தேஜஸுள்ள அப்ரமேயனான உன்னை கிரீடம்,கதை, சக்ரம் தரித்தவனாகக் காண்கிறேன்.

𑌤𑍍𑌵𑌮𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌂
𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑌰𑌂 𑌨𑌿𑌧𑌾𑌨𑌮𑍍 ।
𑌤𑍍𑌵𑌮𑌵𑍍𑌯𑌯𑌶𑍍𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌧𑌰𑍍𑌮𑌗𑍋𑌪𑍍𑌤𑌾
𑌸𑌨𑌾𑌤𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌮𑌤𑍋 𑌮𑍇 ॥ கஅ

த்வ மக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வ மஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதாநம்.
த்வ மவ்யய ஶ்ஶாஶ்வததர்மகோப்தா
ஸநாதநஸ்த்வம் புருஷோ மதோ மே. கஅ

త్వమక్షరం పరమం వేదితవ్యం త్వమస్య విశ్వస్య పరం నిధానమ్,
త్వమవ్యయ శ్శాశ్వతధర్మగోప్తా సనాతనస్త్వం పురుషో మతో మే.

18. கிரு—பார்த்தாயா.

அரு—பார்த்தேன்.

கிரு—என்னவாகத் தோன்றுகிறது.

அரு—8-அத். 21-சுலோ. 8-அத். 3, 11, சுலோகங்களில் அக்ஷரமென்று சொன்னாய். அவ்வளவுகூறுதல் அமையாது. நீ பரமஅக்ஷரம். நீ இப்படிப்பட்டவனாக இருந்தும் ஆத்மபிரசம்ஜையாகுமென்று அக்ஷரம் என்றுமாத்திரம் சொல்லிக்கொண்டாய். தெரிந்துகொள்ள வேண்டியவைகளில் முக்யம் நீ. 9-அத். 12-சுலோ. சொன்னதுபோல நீ நிதானமல்ல. பரம் நிதானம். நாசரஹிதம், அநாதிதர்மத்தை ரக்ஷிப்பவன். அன்றி ஶாஶ்வதா, தர்மகோப்தா, 2-அத். 20-சுலோ. சொன்ன நாசரஹிதனாகிறாய். அநாதி புருஷனாகிறாய்.

கிரு—முகப்பிரீதிக்கா யிவ்வாறு கூறுகின்றாயா.

அரு—எனக்கே தெரிகிறது.

𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯
𑌮𑌨𑌨𑍍𑌤𑌬𑌾𑌹𑍁𑌂 𑌶𑌶𑌿𑌸𑍂𑌰𑍍𑌯𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍 ।
𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌹𑍁𑌤𑌾𑌶𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂
𑌸𑍍𑌵𑌤𑍇𑌜𑌸𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌪𑌨𑍍𑌤𑌮𑍍 ॥ ககூ

அநாதிமத்யாந்த மநந்தவீர்ய
மநந்தபாஹும் ஶஶிஸூர்ய நேத்ரம்,

பஶ்யாமி த்வாம் தீப்தஹுதாஶவக்த்ரம்
ஸ்வதேஜஸா விஶ்வ மிதந்தபந்தம். ௧௯

అనాదిమధ్యాన్త మనన్తవీర్య మనన్తబాహుం శశిసూర్యనేత్రమ్,
పశ్యామి త్వాం దీప్తహుతాశవక్త్రం స్వతేజసా విశ్వమిదన్తపన్తమ్.

19. கிரு—அந்தத்தைப்பார்.

அரு—அது தெரியவில்லை. அது இருக்கயில்லை. வீர்யயுக்தனுய் அநேக பாஹுக்களுடன் சூர்ய சந்திரர்களைக் கண்களாகக்கொண்டு, த்வைதம்—சூர்யசந்திரர்கள் கண்களிலிருக்கின்றனர். அத்வைதம்—சூர்யசந்திரர்கள் கண்களா யிருக்கின்றனர். விசிஷ்டாத்வைதம்—இவ்விடத்தில் அநேக கண்களிருக்கின்றன என்று தெரிதலால் ஸ்வாமிக்குச் சூர்யசந்திரர்கள் கண்கள் என்னல் சரிஅன்று பக்தர்களுக்குச் சந்திரனைப்போல் குளிர்ந்த பார்வையுடனும் சத்ருக்களுக்குச் சூர்யனைப்போல் தபிக்கச்செய்வதுபோலிருக்கும் கண்கள்பெற்று என்பது கருத்து. அக்னி வாயிலும், அத்வைதம்—அக்னிக்கு அது இடம். த்வைதம்—அக்னி முகமாயிருக்கிறது. விசிஷ்டாத்வைதம்—நெருப்பையொத்த முகம். இவ்வாருகிய தேஜஸ்ஸால் லோகங்களைக் கொளுத்துகிருய்

ദ്യാവാ പൃഥിവ്യോ രിദ മന്തരം ഹി
വ്യാപ്തം ത്വയൈകേന ദിശശ്ച സർവാഃ ।
ദൃഷ്ട്വാ ദ്ഭുതം രൂപ മുഗ്രം തവേദം
ലോകത്രയം പ്രവ്യഥിതം മഹാത്മൻ ॥ ௨௦

த்யாவா ப்ருதிவ்யோ ரித மந்தரம்ஹி
வ்யாப்தம் த்வயைகேந திஶஶ்ச ஸர்வா:,
த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன். ௨௦

ద్యావాపృథివ్యో రిద మన్తరంహి వ్యాప్తం త్వయైకేన దిశశ్చ సర్వాః,
దృష్ట్వాద్భుతం రూపముగ్రం తవేదం లోకత్రయం ప్రవ్యథితం మహాత్మన్.

20. உன் ஒருவனுல் பத்துத்திக்குகளும் வியாபித்து மஹாத்மா மூன்றுலகங்களும் ஆச்சர்யத்தையும் பயத்தையும் அடைகின்றன. பெரிய உருவமுடையவனே இதனுல் உன் உருவத்தை உபசம்மாரஞ்செய் (அருச்சுநன் ஒருவனுக்குத் தர்சனங்கொடுக்குஞ் சந்தர்ப்பத்தில் த்ரைலோக்யம் எவ்வாறு பார்க்கக்கூடும் என்பதற்குச்சமாதானம்.) (த்வைதம்)—அருச்சுந னவ்வளவு அதிகாரிகளுக்கும், பக்தர்களுக்கும் அந்த தர்சனமாயிற்று. (அத்வைதம்)—அருச்சுநனுக்குப்பயம் உண்டாயிருந்தமையால் மூன்று லோகங்களும் பயப்படும் என்று எண்ணி அவ்வாறு கூறியதாகும். (விசிஷ்டாத்வைதம்.)—மூன்றுலோகத்தவரும் பார்த்தே யிருக்கவேண்டும் ஏன்எனில் பிரமாதிகளும் கூடத், தன் உருவைக்கண்டு பயப்படுவார்களாயின் தன்பிரபாவம் அருச்சுநனுக்குச் செம்மை

யாய்த்தெரியும் என்று எண்ணி ஸ்வாமி த்ரைலோக்யங்களுக்கும் திவ்யதிருஷ்டி கொடுத்தனர்.

𑌅𑌮𑍀 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑍁𑌰𑌸𑌙𑍍𑌘𑌾 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿
𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌭𑍀𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌞𑍍𑌜𑌲𑌯𑍋 𑌗𑍃𑌣𑌨𑍍𑌤𑌿 ।
𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌙𑍍𑌘𑌾𑌃
𑌸𑍍𑌤𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌭𑌿𑌃 𑌪𑍁𑌷𑍍𑌕𑌲𑌾𑌭𑌿𑌃 ॥ உக

அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா விஶந்தி
கேசித்பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி,
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷி ஸித்தஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபிঃ. உக

అమీ హి త్వాం సురసంఘా విశంతి కేచిద్భీతాః ప్రాంజలయో గృణంతి,
స్వస్తీత్యుక్త్వా మహర్షి సిద్ధసంఘాః స్తువంతి త్వాం స్తుతిభిః పుష్కలాభిః.

21. கிரு—எல்லாரும் பயப்படுகின்றார்.

அரு—விமானத்தி லிருப்பவர்கள் உன்னில் செல்கின்றனர். சிலர் மறவான்என்று அஞ்சலிசெய்கின்றார். மஹரிஷிகள் சித்தர்கள், ஸ்வஸ்தி யென்று ஸ்தோத்ரம் செய்கின்றனர்.

𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌾 𑌵𑌸𑌵𑍋 𑌯𑍇 𑌚 𑌸𑌾𑌧𑍍𑌯𑌾
𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌽𑌶𑍍𑌵𑌿𑌨𑍌 𑌮𑌰𑍁𑌤𑌶𑍍𑌚𑍋𑌷𑍍𑌮𑌪𑌾𑌶𑍍𑌚 ।
𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌯𑌕𑍍𑌷𑌾𑌸𑍁𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌙𑍍𑌘𑌾
𑌵𑍀𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍇 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌵𑌿𑌸𑍍𑌮𑌿𑌤𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑌰𑍍𑌵𑍇 ॥ உஉ

ருத்ரா தித்யா வஸவோ யேச ஸாத்யா
விஶ்வேஶ்விநௌ மருதஶ்சோஷ்மபாஶ்ச,
கந்தர்வயக்ஷாஸுர ஸித்தஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஶ்சைவ ஸர்வே. உஉ

రుద్రాదిత్యా వసవో యేచ సాధ్యా విశ్వేఽశ్వినౌ మరుతశ్చోష్మపాశ్చ,
గంధర్వయక్షాసురసిద్ధసంఘా వీక్షంతే త్వాం విస్మితాశ్చైవ సర్వే.

22. கிரு—அவர்கள் எவர்களோ கூறு.

அரு—ருத்ரர்கள், ஆதித்யர், வசுக்கள், சாத்யர், விச்வதேவதைகள், அச்வினிதேவர்கள், மருத்துக்கள், பிதருகள் காந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தரும்கூடி எல்லாரும் ஆச்சர்யப்பட்டு உன்னைப் பார்க்கின்றனர்.

𑌰𑍂𑌪𑌂 𑌮𑌹𑌤𑍍𑌤𑍇 𑌬𑌹𑍁𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑌂
𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌬𑌹𑍁𑌬𑌾𑌹𑍂𑌰𑍁𑌪𑌾𑌦𑌮𑍍 ।

𑌬𑌹𑍂𑌦𑌰𑌂 𑌬𑌹𑍁𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌂
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌲𑍋𑌕𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌹𑌮𑍍 ॥ ௨௩

ரூபம் மஹத்தே பஹுவக்த்ரநேத்ரம்
மஹாபாஹோ பஹுபாஹூருபாதம்,
பஹூதரம் பஹுதம்ஷ்ட்ராகராளம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதா ஸ்ததாஹம். ௨.௩

రూపం మహత్తే బహువక్త్రనేత్రం
మహాబాహో బహుబాహూరుపాదమ్,
బహూదరం బహుదంష్ట్రాకరాళం
దృష్ట్వా లోకాః ప్రవ్యథితా స్తథాహమ్. ౨౩

23. கிரு—அவர்கள் பயப்படுதற்கென்ன, உனக்கேயன்றோ இந்த உருவம் காட்டப்பட்டது.

அரு—ஓ மஹாபாஹோ, அநேக முகங்கள், அநேக நேத்ரங்கள், அநேக அஸ்தங்கள், அநேகம் தொடைகள், அநேக வயிறுகள் பெற்று அநேகம் கோரப்பற்களால் பயங்கரமான உன் மஹாரூபத்தைப்பார்த்து எனக்கும் பயமாக இருக்கிறது.

𑌨𑌭𑌃𑌸𑍍𑌪𑍃𑌶𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌮𑌨𑍇𑌕𑌵𑌰𑍍𑌣𑌂
𑌵𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌾𑌨𑌨𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌵𑌿𑌶𑌾𑌲𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍 ।
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾
𑌧𑍃𑌤𑌿𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌮𑌿 𑌶𑌮𑌂 𑌚 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋 ॥ ௨௪

நபஸ்ப்ருஶம் தீப்த மநேகவர்ணம்
வ்யாத்தாநநம் தீப்தவிஶாலநேத்ரம்,
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் நவிந்தாமி ஶமஞ்ச விஷ்ணோ. ௨௪

నభస్పృశం దీప్త మనేకవర్ణం వ్యాత్తాననం దీప్తవిశాలనేత్రమ్,
దృష్ట్వాహి త్వాం ప్రవ్యథితాంతరాత్మా ధృతిం నవిందామి శమంచవిష్ణో.

24. கிரு—பயமேன், இப்படிப்பட்ட உருவத்தை எப்போதும் பார்க்கவில்லை அன்றோ.

அரு—பயமாகவேயிருக்கிறது.

கிரு—தைர்யம் செய்துகொள்.

அரு—விஷ்ணோ, ஆகாசத்தைச் சேர்ந்து ஜ்வலித்துக்கொண்டும் அநேக வர்ணங்களுடனும் வாய்திறந்துகொண்டு ஜ்வலிக்கின்ற விசாலமான நேத்ரங்களுடைய உன்னைப்பார்த்து மனம் சமாதானமாயிருக்கவில்லை.

கிரு—முகத்தைப்பார்.
அரு—தைர்யம் பொறுமை உண்டா. இல்லை.

𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌳𑌾𑌨𑌿 𑌚 𑌤𑍇 𑌮𑍁𑌖𑌾𑌨𑌿
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍈𑌵 𑌕𑌾𑌲𑌾𑌨𑌲𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌾𑌨𑌿 ।
𑌦𑌿𑌶𑍋 𑌨 𑌜𑌾𑌨𑍇 𑌨 𑌲𑌭𑍇 𑌚 𑌶𑌰𑍍𑌮
𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸 ॥ ௨௫

தம்ஷ்ட்ராகராளாநிச தே முகாநி த்ருஷ்ட்வைவ காலாநலஸந்நிபாநி,
திஶோ நஜாநே நலபேச ஶர்ம ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ. ௨௫

దంష్ట్రాకరాళానిచ తే ముఖాని దృష్ట్వైవ కాలానలసన్నిభాని,
దిశో నజానే నలభేచ శర్మ ప్రసీద దేవేశ జగన్నివాస. ౨౫

25. கிரு—அவ்வாறுயின் பக்கத்தில் திரும்பு.
அரு—திக்குத்தெரியவில்லை.
கிரு—சூர்யனைப்பார்த்து அடையாளம் கொள்ளக்கூடாதா.
அரு—(சூர்யனுக்கு முன் சந்திரன் ஒளி தெரியாததுபோல கோரப்பற்களால் பயங்கரமான பிரளயகாலாக்னியுடன் சமானமாகும் உன்முகங்களைக்கண்டமாத்திரத்தில் (சூர்யனிருக்கும் இடமே தெரியவில்லை. ஆதலால்) திக்குகள் தெரியவில்லை.
கிரு—நீ காட்டு என்றுல் காட்டுதலும், நீ சாந்தமடையென்றுல் சாந்தமாதலும் வேலையா?
அரு—தேவேசா, ஜகன்னிவாசா வேண்டுகிறேன்.

𑌅𑌮𑍀 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾
𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌹𑍈𑌵𑌾𑌵𑌨𑌿𑌪𑌾𑌲𑌸𑌙𑍍𑌘𑍈𑌃 ।
𑌭𑍀𑌷𑍍𑌮𑍋 𑌦𑍍𑌰𑍋𑌣𑌸𑍍𑌸𑍂𑌤𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑍌
𑌸𑌹𑌾𑌸𑍍𑌮𑌦𑍀𑌯𑍈𑌰𑌪𑌿 𑌯𑍋𑌧𑌮𑍁𑌖𑍍𑌯𑍈𑌃 ॥ ௨௬

𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌤𑍇 𑌤𑍍𑌵𑌰𑌮𑌾𑌣𑌾 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿
𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌳𑌾𑌨𑌿 𑌭𑌯𑌾𑌨𑌕𑌾𑌨𑌿 ।
𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌲𑌗𑍍𑌨𑌾 𑌦𑌶𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑍇𑌷𑍁
𑌸𑌂𑌦𑍃𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌚𑍂𑌰𑍍𑌣𑌿𑌤𑍈𑌰𑍁𑌤𑍍𑌤𑌮𑌾𑌙𑍍𑌗𑍈𑌃 ॥ ௨௭

அமீ ஸர்வே த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா
ஸ்ஸர்வைஸ்ஸ ஹைவாவநிபாலஸங்கை:,
பீஷ்மோ த்ரோண ஸ்ஸூதபுத்ர ஸ்ததாஸௌ
ஸஹாஸ்ம தீயைரபி யோதமுக்யை:. ௨௬

கிரு—ஆம், எல்லா இடங்களிலும் நானே. இந்தச்சுலோகத்தில் "வித்தி" என்பதால் இந்தச்சங்கதி தெரிந்துகொள்ளும். (இந்தப் பாவத்தால் நாயைமாத்திரம் பூஜைசெய்யாதே என்று கருத்து.) இவ்வாறறிதலேஞானம்.

(விசிஷ்டாத்வைதம்) அரு—க்ஷேத்ரம், அதை அநுபவிக்க க்ஷேத்ரஜ்ஞரிருக்கின்றனர். இனி நீ ஏன்.

கிரு—அவ்வாறு எண்ணாதே. க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி = க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்கள் என் சேஷங்கள் என்று எண்ணுக. அவை என் அதீனத்திலிருப்பவை.

அரு—சில உன் ஸ்வாதீனத்திலிருக்கும்; பிரம்மாதிகள்கூட உன்னிலும் குறைந்தவரா.

கிரு—சர்வக்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்கள் என்னதீனமே.

(ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் இவ்வாறிருக்கிறது.)

சுலோ. ஸ்வாபாவிகாந வதிகாதிஶயே ஶித்ருத்வம் நாராயணத்வயி, ந்ருமிருஷ்யதிவைதிக: க: ப்ரம்மா சிவஶ்ஶதமக: பரமஸ்வராடித்யே தேபி யஸ்ய மஹிமார்ணவ விப்ருஷஸ்தே.

(ஹிரண்யகர்ப்ப ஶிவஶம்புவாதி ஶப்தங்களின் சாமான்யாகாரமாய்ப் பிரதிபாதிக்கப்பட்ட ஜகத்காரணத்வரூபபரதத்வ வஸ்துவும் விசேஷவாசக நாராயண சப்தத்துடன் உச்சரித்து விசேஷத்திலேயே சேர்க்கின்ற நாராயணாநுவாக்யதாத்பர்யபூதனாய் ஈஶ்வரதத்வத்தால் பிரசித்தர்களான பிரம்மாதிகளுடைய பிரவிர்த்தி நிவர்த்திகளை ஸ்வாதீனமாகப்பெற்ற உன்னிடத்து சகல வேதாந்த தாத்பர்யார்த்தமான ஸமாஞதிக ரஹிதமானவைதிகோத்தம சம்மதமான ஶர்வேஶ்வரத்தைச் சம்மதிக்காதவன் அந்தியஜாதி ஸமுத்பூதனென்று நிச்சயிக்கப்படும்.) உத்தம மத்திம அதம க்ஷேத்ரங்களும் என்னதீனங்களே.

அரு—எல்லாம் உன்னுதீனமா.

கிரு—இது தெரிதலே வேதாந்தஞானம்.

𑌤𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌯𑌚𑍍𑌚 𑌯𑌾𑌦𑍃𑌕𑍍𑌚 𑌯𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌿 𑌯𑌤𑌶𑍍𑌚 𑌯𑌤𑍍 ।
𑌸 𑌚 𑌯𑍋 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌤𑌤𑍍𑌸𑌮𑌾𑌸𑍇𑌨 𑌮𑍇 𑌶𑍃𑌣𑍁 ॥ ௪

தத் க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத்விகாரி யதஶ்ச யத்,
ஸ ச யோ யத்ப்ரபாவஶ்ச தத்ஸமாஸேன மே ஶ்ருணு. ௪

తత్ క్షేత్రం యచ్చ యాదృక్చ యద్వికారి యతశ్చ యత్,
స చ యో యత్ప్రభావశ్చ తత్సమాసేన మే శృణు.

4. அரு—அவ்வளவு பெரியவிஷயத்தை யிரண்டு சுலோகத்தில் சுருக்கிச் சொன்னாயே.

(விசிஷ்டாத்வைதம்) அந்த க்ஷேத்ரம் எது, எப்படிப்பட்டது, எந்தப் பரிணாமம் உடையதோ, ஏன் பிறந்ததோ, எந்த உருவமா யிருக்கிறதோ, அந்த க்ஷேத்ரஞ்ஞன் எவனோ இவைகளை எப்படிப்பட்ட ஶக்திகள் உள்ளவனோ.

(அத்வைதம்) அந்த க்ஷேத்ரம் எவ்வகைப்பட்ட தர்மம் உள்ளதோ, எந்த பரிணாமம் உள்ளதோ, எதினால் எந்தக்கார்யம் பிறக்கின்றதோ, அந்த க்ஷேத்ரஞ்ஞன் எவனோ, எவ்வகைப்பட்ட வுபாதிகளால்வந்த ஶக்தியுள்ளவனோ.

(த்வைதம்) அந்த க்ஷேத்ரம் எதுவோ, எப்படிப்பட்டதோ, எந்த விகாரத்துடன் கூடினதோ, யாரால் பிரவர்த்திக்கிறதோ, அந்தப் பிரவர்த்திக்கச்செய்கிறவன் எப்படிப்பட்ட ஸ்வரூபமுள்ளவனோ, எப்படிப்பட்ட பிரபாவம் உள்ளவனோ.

கிரு—இவைகள் முழுமையும் சமக்ரமாய்ச் சொல்லச் சாத்யப்படாது. இவைகள் அனைத்தையும் சங்கிரஹமாய்க் கூறுகிறேன் கேள்.

𑌋𑌷𑌿𑌭𑌿𑌰𑍍𑌬𑌹𑍁𑌧𑌾 𑌗𑍀𑌤𑌂 𑌛𑌨𑍍𑌦𑍋𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍈𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑍂𑌤𑍍𑌰𑌪𑌦𑍈𑌶𑍍𑌚𑍈𑌵 𑌹𑍇𑌤𑍁𑌮𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍈𑌃॥

ருஷிபி ர்பஹுதா கீதம் சந்தோபி ர்விவிதை: ப்ருதக்,
ப்ரஹ்மஸூத்ரபதைஸ்சைவ ஹேதுமத்பி ர்விநிஸ்சிதை:. ௫

ఋషిభి ర్బహుధా గీతం ఛందోభి ర్వివిధైః పృథక్,
బ్రహ్మసూత్రపదై శ్చైవ హేతుమద్భి ర్వినిశ్చితైః. ౫

5. அரு—இந்தப் பெரியசங்கதியை உனக்குத் தோன்றியபடி கூறுகின்றாயா பெரியவர்கள எவரேனும் கூறினரா.

கிரு—ரிஷிகள் கூறியிருக்கின்றனர்.

அரு—ரிஷிகளுக் கெப்படி தெரியும்.

கிரு—வேதங்களால் தெரிந்துகொண்டனர்.

அரு—அவர்களுக்கு வேதார்த்தம் எப்படி தெரியும்.

கிரு—பிரம்மசூத்ர வாக்யங்களால் தெரிந்துகொண்டனர்.

அரு—சூத்ரங்கள் சிறுவாக்யங்கள், சகலார்த்தங்களையும் கர்ப்பத்தில் பெற்றிருக்கும். அவர்கள் இதின் நிஜமான பாவத்தை யெவ்வாறு தெரிந்து கொண்டனர்.

கிரு—நியாயயுக்தங்களாய், சித்தாந்த நிச்சயபர்யவசானங்களான சாஸ்திரங்களால் சூத்ரார்த்தங்களை அவர்கள் செம்மையாய் அறிந்தனர்.

𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍇𑌵 𑌚 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌦𑌶𑍈𑌕𑌂 𑌚 𑌪𑌞𑍍𑌚 𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍋𑌚𑌰𑌾𑌃 ॥ ௬

மஹாபூதா ந்யஹங்காரோ புத்தி ரவ்யக்த மேவ ச,
இந்திரியாணி தஸைகஞ்ச பஞ்சசேந்திரியகோசரா:. ௬

మహాభూతా న్యహంకారో బుద్ధి రవ్యక్త మేవ చ,
ఇంద్రియాణి దశైకంచ పంచచేంద్రియగోచరాః. ౬

6. பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் எனும் பஞ்சபூதங்கள், அஹங்காரம், புத்தி, அவ்யக்தம், கர்மேந்திரியங்களைந்து, ஞானேந்திரியங்களைந்து, மனம், இந்திரியார்த்தங்களைந்து, (சப்த ஸ்பர்ச ரூப ரஸகந்தங்கள்)

𑌇𑌚𑍍𑌛𑌾 𑌦𑍍𑌵𑍇𑌷𑌃 𑌸𑍁𑌖𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 ।
𑌏𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑌾𑌸𑍇𑌨 𑌸𑌵𑌿𑌕𑌾𑌰𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥

இச்சா த்வேஷ ஸ்ஸுகம் து:கம் ஸங்காத ஶ்சேதநா த்ருதி:,
எதத் க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகார முதாஹ்ருதம். ௭

ఇచ్ఛా ద్వేష స్సుఖం దుఃఖం సంఘాత శ్చేతనా ధృతిః,
ఏతత్ క్షేత్రం సమాసేన సవికార ముదాహృతమ్. ౭

7. இச்சை, த்வேஷம், சுகம், துக்கம்.

(த்வைதாத்வைதம்) மஹாபூதங்களின், இந்திரியங்களின் சேர்க்கை, இந்த விகாரங்கள் சேர்ந்து க்ஷேத்ரமென்று கூறப்பட்டது.

(விசிஷ்டாத்வைதம்) ஜீவாத்மாவிற்கும் ஆதாரமான சங்காதம். (எனின் மஹாபூதம் முதலியவற்றின் சேர்க்கை.) இது அதன் பரிணாமங்களுடன் கூட க்ஷேத்ரமென்று கூறப்பட்டது.

𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌮𑌦𑌮𑍍𑌭𑌿𑌤𑍍𑌵𑌮𑌹𑌿𑌂𑌸𑌾 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌾𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌂 𑌶𑍌𑌚𑌂 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥

அமாநித்வ மதம்பித்வ மஹிம்ஸா க்ஷாந்தி ரார்ஜவம்,
ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தைர்ய மாத்மவிநிக்ரஹ:. ௮

అమానిత్వ మదంభిత్వ మహింసా క్షాంతి రార్జవమ్,
ఆచార్యోపాసనం శౌచం స్థైర్య మాత్మవినిగ్రహః. ౮

8. அரு—இந்தச்சங்கதிகள் முழுதும் எப்படி செம்மையாய் அறியக்கூடும். அப்படிப்பட்ட ஞானசாதனங்களை முதலில்சொல்லு.

கிரு—அமானித்வம் = நான் என்பதுவிடவேண்டும். (வேதாந்தவிஷயம் எனக்குத் தெரியுமென்று அஹங்கரித்தால் அதைத் தெரிந்துகொள்ள சரிப்படாதாகையால் இதனை விடவேண்டும். எனக்கொன்றும் தெரியாதென்று ஆசாரியனிடம் கேட்கவேண்டும். அதம்பித்வம் = அஹங்காரி உண்மையாய்த் தனக்குச்சக்தியிருக்கிறதாக நினைப்பான். டம்பி தன்னிசஸ்திதியறிவன் மேலுக்கு அதிகமாகக் காட்டுகிறதற்குப் பிரயத்னப்படுவோன். இவ்வாறு தன் லோபத்தை யொளித்தலால் தெரியத்தகுந்தவிஷயங்கள் செம்மையாய் அறியப்படா. இது கூடாது. அஹிம்சா = மற்றவர்களுக்குத் திரிகரணங்களாலும் இம்சைகூடாது. க்ஷாந்தி = பொறுமை (உபதேசமடையுங்காலத்தில் தனக்குத் தெரியவில்லை யெனவும், மற்றவர்கள் பரிஹஸிப்பரெனவும் ஆசார்யனுக்குத் தன் மௌட்யத்திற்காகக் கோபம் உண்டாயிற்றென்றும் சிந்திக்காமல்

விஷயத்தை பொறுமையுடன் கிரஹிக்கவேண்டும்.) ஆர்ஜவம் = திரிகரணங்களும் ஒன்றாயிருக்கவேண்டும். ஆசார்யோபாசனம் 4-அத். 34-சுலோ. போல் குருசிஷ்ருஷைசெய்து விஷயத்தைக் கிரஹிக்கவேண்டும். 2-அத்.7-சுலோ. போல, உண்மையான மாணுக்கனாக இருக்கவேண்டும். ஆசார்யன்மனது உருகும்படி நடக்கவேண்டும். சௌசம் = ஜலமலவிசர்ச்சனகாலத்தில் மண், ஜலங்களால் சாஸ்திர சம்மதத்தின்படி தேகசுத்தி செய்துகொள்ளவேண்டும். மனச்சுத்தி பெற்றிருக்கவேண்டும். ஸ்தைர்யம் = விஷயங்களைக் கிரஹிக்கையில் ஸ்திரசித்தமாயிருக்கவேண்டும். கஷ்டமாயிருக்கிறதென்று விட்டுவிட்டால் ஞானம் எத்தனை ஜன்மங்களுக்கும் லபிக்காது. ஆத்மவிநிக்ரஹம் = ஆத்மாவை விசேஷமாய் நிக்ரஹிக்கவேண்டும் (அன்றி) சுவாதீனமான மனதைவிளன்று கூறப்படும் பரமாத்மாவில் சேர்க்கவேண்டும்.

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌮𑌨𑌹𑌙𑍍𑌕𑌾𑌰 𑌏𑌵 𑌚 ।
𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌜𑌰𑌾𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌦𑍁𑌃𑌖𑌦𑍋𑌷𑌾𑌨𑍁𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ॥ ௯

இந்திரியார்த்தேஷு வைராக்ய மநஹங்கார ஏவச,
ஜந்மம்ருத்யுஜராவ்யாதிது:கதோஷாநுதர்ஶநம். ௯

ఇంద్రియార్థేషు వైరాగ్య మనహంకార ఏవచ,
జన్మమృత్యుజరావ్యాధిదుఃఖదోషానుదర్శనమ్. ౯

19. இந்திரியார்த்தேஷு வைராக்யம் = இந்திரிய விஷயங்களில் வைராக்யமிருக்கவேண்டும். பகவானிடத்திலும் கிரந்தத்திலேயே மனது லயிக்கவேண்டும். அவ்வாறாகாவிடின், 2-அத். 60-சுலோ. சொன்னபடி இந்திரியங்கள் மனதை விஷயங்களில் இழுக்கும். அநஹங்காரம் = நான்யென்பது விடவேண்டும். (மானித்வத்திற்கும் அஹங்காரத்திற்கும் பேதம் என்னவென்றால் நான்சர்வஞ்ஞன் என்று எண்ணி மேலுக்குக்காட்டுதல் மானித்வம். எனின் ஆத்மச்லாக்யம் செய்துகொள்ளுதல். அஹங்காரம் மேலுக்குக்காட்டாமல் மனதிலேயே கர்வப்படுதல். இதுவும் கூடாது.

அரு—இந்திரியார்த்தங்களில் வைராக்யம் உண்டாகவேண்டுமென்றாயே அது எளிதாய்லபிக்குமா.

கிரு—ஜன்மமிருத்யு ஜராவ்யாதி து:க தோஷாநு தர்சனம் = சரீரத்தின் ஜன்மம் மிருத்யு, கிழத்தனம், வ்யாதி, துக்கம் தோஷம், இந்த ஆறினையும் சிந்தித்தலால், வைராக்யம் உண்டாமென்று ஒரு பக்ஷம். ஜன்ம, மிருத்யு, ஜராவியாதி, துக்கம், இவற்றின் தோஷங்களை யோசித்தலால் என்று மற்றொருபக்ஷம். ஜன்ம, மிருத்யு, ஜரா, வியாதி இவற்றில் உள்ளதுக்கத்தையும் தோஷத்தையும் யோசித்தலால் வைராக்யமுண்டாமென்று மற்றொருபக்ஷம்.

𑌅𑌸𑌕𑍍𑌤𑌿𑌰𑌨𑌭𑌿𑌷𑍍𑌵𑌙𑍍𑌗𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌦𑌾𑌰𑌗𑍃𑌹𑌾𑌦𑌿𑌷𑍁 ।
𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌚 𑌸𑌮𑌚𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌮𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌷𑍁 ॥ ௧௦

அஸக்தி ரநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு,
நித்யம் ச ஸமசித்தத்வ மிஷ்டாநிஷ்டோபபத்திஷு. ௧0

అసక్తి రనభిష్వంగః పుత్రదారగృహాదిషు,
నిత్యం చ సమచిత్తత్వ మిష్టానిష్టోపపత్తిషు. ౧౦

10. கிரு—தாராபுத்ராதிகளிடம் அதிக ஆசைகூடாது.

அரு—அப்படியாயின் இப்பொழுதே, தாராபுத்ராதிகளை த்யஜிக்கிறேன்.

கிரு—அவர்களை விடவேண்டுமென்று எண்ணாதே, அவர்களிடத்தில் அதிக ஆசக்திகூடாது. (பகவத்ஆஞ்ஞையால் ஒருவன் பதின்மரைக் காப்பாற்றவேண்டும் ஆனால் அவர்கள் பகவத்கைங்கர்யத்திற்கு சஹாயபூதர்களாயிருத்தற்குக்கோரி அவர்களிடத்தில் பிரீதிசெய்யவேண்டும்.)

(அத்வைதம்)—தாராபுத்ராதிகளின் கஷ்டம் தனக்கே நேர்ந்ததாக அவ்வளவாக ஆசைவைக்கக்கூடாது.

(விசிஷ்டாத்வைதம்)—அதிக ஆசைகூடாது. (சத்ரத்தில் சமயல் செய்கிறவன் ஜ்வரபீடிதனுனகாலத்தில் யஜமானன் ஔஷதங்களைக்கொடுப்பித்து அவனதுவியாதியை அதிசீக்கிரத்தில் போக்கமுயலுவன். அவனால் வேலை நடப்பதற்கல்லவா யஜமானனுக்கு அவ்வளவுஆசை. அவ்வாறே, அதிதிஅப்யாகதர்களையும், பகவானை ஆராதிப்பதற்கும், ஔபாசனாதிகார்யங்கள் நடப்பதற்கும் சககாரிகளாதற்காக தாராபுத்திராதிகளின் க்ஷேமத்தைக்கோரவேண்டும். இதற்கு மிஞ்சிஆசைகூடாது. இஷ்டாநிஷ்ட பிராப்திகளில் சமானசித்தம் உண்டாயிருக்கவேண்டும்.

മയി ചാനന്യയോഗേന ഭക്തി രവ്യഭിചാരിണീ ।
വിവിക്തദേശസേവിത്വ മരതി ർജ്ജനസംസദി ॥ ൧൧

மயி சாநந்யயோகேந பக்தி ரவ்யபிசாரிணீ,
விவிக்ததேசஸேவித்வ மரதி ர்ஜநஸம்ஸதி. ௧௧

మయి చానన్యయోగేన భక్తి రవ్యభిచారిణీ,
వివిక్తదేశసేవిత్వ మరతి ర్జనసంసది. ౧౧

11. அரு—பஹு கட்டுதிட்டம் செய்தாய் இப்படி நடந்துகொண்டால் நன்மை உண்டாகுமா.

கிரு—முக்யமானது மற்றொன்றிருக்கிறது அதைச்செய்தால் நான் உன் பக்ஷத்தில் செம்மையாயிருப்பேன்.

அரு—அது எது.

கிரு—பிரீதியுள்ளமனதாய் என்னை ஆராதி.

அரு—அவ்வாறு செய்தல் சுலபந்தானே.

கிரு—எப்படிப்பட்ட பிரீதியென்று எண்ணிக்கொண்டாய். வியபசரிக்காத பக்தியாயிருக்கவேண்டும். (வியபசாரமெனின் ஒரு இடத்திலிருப்பது

போலவே மற்றொரு இடத்தில் பிரீதிவைத்தல். என்னிடத்தில் அல்லாமல் மற்றொருஇடத்தில் பிரீதிவைக்கக்கூடாதென்று கிருஷ்ணன் கூறினன் விவிக்ததேசஸேவித்வம் = கிருமி கீடாதிகள் இல்லாமல், துர்க்கந்த ரஹித மான ஸ்தலத்திலும் ஜனங்களில்லாத இடத்திலும் நிவசிக்கவேண்டும். மனுஷ்யர் இருக்கும் இடத்தில் பிரீதி கூடாது. (மனுஷ்யர் என்றால் அசத் சகவாசம் கூடாது. 10-அத். 9-சுலோ, போல, நால்வர் கூடியபோது பரஸ்பரம் பகவத்கதைகள் சொல்லிக்கொண்டு பொழுதைப் போக்கிக்கொண் டிருக்கவேண்டும். இவ்வாறு ச்ரவணத்தால் மோக்ஷவழியில் சிரத்தையுண்டாகி வைராக்யம் உண்டாகி புன: ஜன்மம் இல்லாமல் மோக்ஷம் உண்டாம்.

𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ।
𑌏𑌤𑌤𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑌦𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌥𑌾 ॥ கஉ

அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்த்வஜ்ஞாநார்த தர்ஸநம்,
ஏதத் ஜ்ஞாந மிதி ப்ரோக்த மஜ்ஞாநம் ய ததோ௳ந்யதா. கஉ

అధ్యాత్మజ్ఞాననిత్యత్వం తత్త్వజ్ఞానార్థదర్శనమ్,
ఏతత్ జ్ఞాన మితి ప్రోక్త మజ్ఞానం య దతో௳న్యథా. ౧౨

12. அத்யாத்ம ஞான நித்யத்வம் = ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஸ்வரூபத்தைத் தெரிவிக்கும் வேதாந்தஞானம் நித்யமாயிருக்கவேண்டும். (அன்றி) ஆத்ம பரமாத்மாக்க ளிடத்தில் உண்டாம் ஞானம். இந்தக்கார்யத்தை நித்யமாய்ச் செய்துக்கொண் டிருக்கவேண்டும். தத்வஞானார்த்த தரிசனம்.

(த்வைதம்) தத்வ ஞானங்களுக்காக ச்ரவணஞ் செய்யவேண்டும். (அன்றி) யோசிக்கவேண்டும்.

(அத்வைதம்) வேதாந்த ஞானத்தை யெண்ணவேண்டும். மோக்ஷத்தை யெண்ணவேண்டும். (மோக்ஷசுகம் இப்படிப்பட்டதல்லவா வென்று தெரிதலால் அதனிடத்து ஆசை யுண்டாகுமென்று இவரது அபிப்பிராயம்.)

(விசிஷ்டாத்வைதம்) தத்வ ஞானார்த்த சிந்தனம் = வேதாந்த ஞானத்திற்கு பிரயோஜனமுண்டாம் படி விஷயம் கிரஹித்துச் சிந்திக்கவேண்டும் விஷயத்தைத் தெரிந்துகொண்டு பொருளை அறியவேண்டும். இந்த இருபது சாதனங்களைச் சம்பாதித்தால் ஞானம் உண்டாம். இதற்கு விருத்தமானது அஞ்ஞானம், ஞானவிரோதம்.

அரு—இருபது ஞான சாதனங்களைச் சமபர்திக்கவேண்டுமென்று கூறினய். இவை யொவ்வொன்றும் சாதாரணமானதல்ல. இவ்வளவு கஷ்டப்பட்டு தெரிந்துகொள்ளவேண்டி யிருத்தலால் அந்த ஞேயப்பொருள் மிகுந்த பெரியதாயிருக்கவேண்டுமென்று எண்ணுகிறேன்.

𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌽𑌮𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ।
𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌤𑍍𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ கங

ஜ்ஞேயம் யத்த த்ப்ரவக்ஷ்யாமி யத்ஜ்ஞாத்வாம்ருத மஶ்னுதே,
அநாதி மத்பரம் ப்ரஹ்ம ந ஸ த்த ந்நாஸ துச்யதே. கங

జ్ఞేయం య త్తత్ప్రవక్ష్యామి యద్జ్ఞాత్వామృత మశ్నుతే,
అనాది మత్పరం బ్రహ్మ న స త్త న్నాస దుచ్యతే. ౧౩

13. (த்வைதம்)கிரு—ஜ்ஞேயத்தைக்கூறுகிறேன்.

அரு—இப்படிப்பட்ட பெரியபொருளை நான் கிரஹிப்பதெப்படியென்று சந்தேஹம் உண்டாகிறது.

கிரு—அறிவிற்படும்படி நன்றாகக்கூறுகிறேன்.

அரு—இப்படிப்பட்ட பெரியபொருளைத் தெரிந்துகொள்வதால் உண்டாகும் லாபத்தை முதலில்கூறு.

கிரு—இதைத் தெரிந்துகொண்டால் மோக்ஷமுண்டாம்.

அரு—அப்படிஆனல் சொல்லு.

கிரு—அதுஜ்ஞேயம் = அறியப்பட்டது. அந்தஅறியப்பட்டவன் வைகுண்டத்திலிருக்கும் நாராயணன்.

அரு—அவன் எப்படியிருக்கிறுன்.

கிரு—ஜ்ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள், மனோபுத்திகளுடன் சேர்ந்ததேஹம் உத்பத்திநாசம் உண்டானவை. இப்படிப்பட்ட பிராக்ருத தேஹம் நாராயணனுக்கில்லை. அவன் அப்ராக்ருததிவ்யமங்கள விக்ரஹம். அன்றி பிரகிருதிதேஹாதிகளைப்போல உத்பத்தி நாசங்கள் நாராயணன் சரீரத்திற்கில்லை. இப்படிப்பட்ட பரப்பிரமமே ஜ்ஞேயம், இதுகார்யகாரணாத்மகமான பிரபஞ்சத்தில் சேரவில்லை. சங்கல்பத்தால் சிருட்டிநடக்கும்.

(அத்வைதம்) அரு—ஜ்ஞேயம் எது.

கிரு—சொல்லுகிறேன்.

அரு—அதைத்தெரிவதால் என்னபலன்.

கிரு—பரப்பிரம்மம் ஆகலாம்.

அரு—அது எது.

கிரு—உத்பத்தியாகும் ஜகத்தைக்காட்டிலும் விலக்ஷணமானது அன்றி முதலில்லாதது, சகுணமாகும் என்னைக்காட்டிலும் உயர்ந்தது, நிர்க்குண பிரம்மம். கடபடாதிகளுக்குப்பின்னம், கார்யகாரணமன்று.

அரு—இரண்டு மல்லாவிடின் எப்படி.

கிரு—வாக்குகளால் சொல்லப்பட்டதும், சொல்லப்படாததும், இருக்கிறதும் இல்லாததுமானவஸ்துக்களைப்போல புத்திக்கு எட்டாதது. (எனின் தெரிதல்கஷ்டம். ஒருமனுஷ்யனைத்தெரிவிக்கையில் பிராம்மணன்எனும் ஜாதியையும், சமையல்செய்கிறவன் எனும் கார்யத்தையும், வையாகரணியெனும் குணத்தையும் ராமஸ்வாமியெனும் அடையாளத்தையும் தெரிவிப்பதுபோல பரப்பிரம்மத்திற்கு இவை எவையும் இல்லாததால் சொல்லுதற்கு முடியாது. ஆதலால் சத்து அசத்து ஆகாது.)

அரு—உபதேசம், மிகுந்தநலமாயிருக்கிறது. பிரவக்ஷ்யாமி என்றுகூறி ஆரம்பிக்கையிலேயே சொல்லமுடியாதென்று கூறுகிறாய்.

கிரு—நிர்க்குணபரப்பிரம்மத்தைக்கூறுகையில் இல்லை இல்லை யென்றே கூறவேண்டும். வேதம்கூட அப்படியே கூறுகிறது. உன்புத்திக்குக் கோசரிக்கவில்லையென்று எண்ணுக. நான்சொல்வதில் லோபம் என்று எண்ணாதே.

அரு— இருக்கிறதெனும் பொருளை சொல்லுதற்கு முடியாததென்று கூறுதல் உசிதமா. பொருளே இல்லையென்று தோன்றுகிறது.

கிரு—இருக்கிறதென்று நிரூபித்துக்காட்டுகிறேன். சரீரங்கள் அனைத்திற்கும் இந்திரியங்கள் கிரஹணசக்தியிருப்பவை. பிணத்திற்கு இந்திரியங்களிருப்பினும் கிரஹணசக்தியில்லையல்லவா. ஆதலால் சகலவ்யாபாரத்திற்கும் காரணமான தேஜஸ் ஒன்றிருக்கிறதென்று அறிந்துகொள்.

அரு—ஆம் இருக்கிறது.

கிரு—அதுவே ஆத்மா.

(விசிஷ்டாத்வைதம்) அரு—இருபது சாதனங்களைச் சம்பாதித்து எதை அறியவேண்டும்.

கிரு—ஆத்மஸ்வரூபத்தை. அந்த ஞேயத்தைக்கூறுகிறேன். அதைத் தெரிந்துகொண்டால் பிரகிருதி பந்தரஹித சுத்தாத்மஸ்வரூபம் லபிக்கும். அதுபரமாத்மாவைப்போல சுத்தஸ்வரூபமாயிருக்கும். 2-அத். 12-சுலோ. போல் அதற்கு ஆதியில்லை. என்னைச்சேஷியாகப்பெற்றது. (எனின் ஆத்மா சேஷபூதமானது. (ஆத்மாவை ஸ்தோத்திரம் செய்கையில் ஸ்வாமிக்குச் சேஷபூதமானதென்பதால் அதற்குக்கௌரவம் குறையாதா. சேஷத்வம் துக்கரூபம், துக்கரூபமன்றோஎனின் முமுக்ஷுப்படியில் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது. "லோகத்திற்குச் சேஷத்வம் துக்கரூபமாய்க் காணப்படுகிறது. என்று லோகத்தை அனுசரித்துக் கூறப்பட்டது. மணவாள மஹாமுனிவர் சேஷத்வம் இரண்டு விதங்கள் என்றனர். சேஷியின் கொடுமைக்குப் பயந்துசெய்வது ஒருசேஷத்வம் அது துக்கரூபமானது. சேஷி கல்யாண குணங்களை அனுசரித்து சேஷத்வம் சம்பிரீதியுடன் வரும். அது சுகமானது. பாஷ்யத்தில் அந்த சேஷபூதமே கௌரவமாயுள்ளவன் என்றார். முமுக்ஷுப்படியில் சேஷத்வமே ஆத்மாவிற்குச் ஸ்வரூபமென்றனர். அது இல்லாதபோது ஸ்வரூபம் இல்லையென்று கூறப்பட்டிருக்கிறது. காப்பாற்றவேண்டியிருத்தலால் சேஷிக்கேச்ரமம். ஆதலால் பகவானுக்காயினும் சேஷத்வமே சிறந்தது.) அது கார்யமும் காரணமும் ஆகாது.

அரு—ஆத்மா, கார்ய காரணங்களாகாது, தந்தை காரணம், புத்ரன் கார்யமாகாது.

கிரு—அப்பேதம் சரீரத்திற்கே ஆத்மாவிற்கன்று. 2-அத். 12-சுலோ. போல ஆத்மா நித்யன், தந்தைசரீரம் காரணம், புத்ரன்சரீரம் கார்யம்.

ஸர்வத꞉ பாணிபாத³ம் தத்ஸர்வதோঽக்ஷிஶிரோமுக²ம் ।
ஸர்வத꞉ ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்ட²தி ॥ கக

𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌸𑌕𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌚𑍍𑌚𑍈𑌵 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂 𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃 𑌚 ॥
𑌬𑌹𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌚𑌰𑌂 𑌚𑌰𑌮𑍇𑌵 𑌚 ।
𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑌦𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌦𑍂𑌰𑌸𑍍𑌥𑌂 𑌚𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 𑌚 𑌤𑌤𑍍 ॥ ௧௬
𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌚 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌮𑌿𑌵 𑌚 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ।
𑌭𑍂𑌤𑌭𑌰𑍍𑌤𑍃 𑌚 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌗𑍍𑌰𑌸𑌿𑌷𑍍𑌣𑍁 𑌪𑍍𑌰𑌭𑌵𑌿𑌷𑍍𑌣𑍁 𑌚 ॥
𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌮𑌪𑌿 𑌤𑌜𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌸𑍍𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌗𑌮𑍍𑌯𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 ॥

ஸர்வத: பாணிபாதம் த த்ஸர்வதோக்ஷி ஶிரோ முகம்,
ஸர்வத: ஶ்ருதிமல்லோகே ஸர்வ மாவ்ருத்ய திஷ்டதி. ௧௪
ஸர்வேந்த்ரிய குணாபாஸம் ஸர்வேந்திரியவிவர்ஜிதம்,
அஸக்தம் ஸர்வ ப்ருச்சைவ நிர்குணம் குணபோக்த்ருச. ௧௫
பஹி ரந்தஶ்ச பூதாநா மசரம் சரமேவ ச,
ஸூக்ஷ்மத்வா த்ததவிஜ்ஞேயம் தூரஸ்தம் சாந்திகே ச தத். ௧௬
அவிபக்தம் ச பூதேஷு விபக்த மிவச ஸ்திதம்,
பூதபர்த்ரு ச தத் ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச. ௧௭
ஜ்யோதிஷா மபி த ஜ்யோதி ஸ்தமஸ: பர முச்யதே,
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாநகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம். ௧௮

సర్వతఃపాణిపాదం త త్సర్వతోzక్షిశిరోముఖమ్,
సర్వతః శ్రుతిమ ల్లోకే సర్వ మావృత్య తిష్ఠతి. ౧౪
సర్వేంద్రియగుణాభాసం సర్వేంద్రియవివర్జితమ్,
అసక్తం సర్వ భృచ్చైవ నిర్గుణం గుణభోక్తృ చ. ౧౫
బహి రంతశ్చ భూతానా మచరం చరమేవ చ,
సూక్ష్మత్వా త్తదవిజ్ఞేయం దూరస్థం చాంతికే చ తత్. ౧౬
అవిభక్తం చ భూతేషు విభక్త మివచ స్థితమ్,
భూతభర్తృ చ తత్ జ్ఞేయం గ్రసిష్ణు ప్రభవిష్ణు చ. ౧౭
జ్యోతిషా మపి త జ్జ్యోతి స్తమసః పర ముచ్యతే,
జ్ఞానం జ్ఞేయం జ్ఞానగమ్యం హృది సర్వస్య విష్ఠితమ్. ౧౮

**14, 15, 16, 17, 18.** (த்வைதம்.) (14-முதல் 18-வரையில்) அவனுக்கு எவ்விடத்தும் கரசரணங்களுண்டு நேத்ர ஶிரோமுகங்களும் எல்லாவிடங்களிலும் காதுகளும் பெற்றிருக்கிறான். (இந்திரியங்கள் அவயவங்கள் எல்லாவிட

ங்களிலும் இருப்பதாக வர்ணிக்கப்படுதலால் அவனது இந்திரியாவயவங்களுக்கு தத் இதர இந்திரியங்கள் அவயவங்களின் சக்தியுள்ளதென்று கருத்து. கண்கள் கேட்கிறதற்கு சக்தி கொண்டிருக்கும். காதுகள் பார்க்கச் சக்திகொண்டிருக்கும்.) எல்லாசக்தியுங்கொண்டு உலகத்திலனைத்தினும் நிறைந்திருக்கின்றான். சர்வஇந்திரியங்களுக்கும் அந்தந்தக் குணங்களைக்காட்டுவான். தெரிந்துகொள்ள சக்தியைக் கொடுப்பான். அவன் இந்திரியங்கள் குணங்கள் எனும் இரண்டினையும் ஏற்படுத்தித் தெரிவிப்பவன். (அன்றி) சர்வேந்திரியங்களையும் அவற்றின் குணங்களையும் தெரிபவன். தான்தெரிந்திருந்து தெரிவிப்பவன். தான் உட்கார்ந்திருந்து இவ்வளவு கார்யங்களைச் செய்வன். அவனுக்குப் பிராக்ருத இந்திரியங்களில்லை. எல்லாவற்றிலும் இருக்கினும் எதனுடனும் சம்பந்தப்படான் (இந்தச்சங்கதி 9-அத் 4-5-சுலோகங்களில் கூறப்பட்டது.)

அரு—அவன் ஆசக்தி யில்லாதவனானால் வஸ்துக்கள் எவ்வாறு நிலைத்திருக்கும். நாசம் அடையாதா.

கிரு—எல்லாவற்றையும் தாங்குவான் அன்றி விழுங்குவன், அவனுக்கு சத்வ, ரஜஸ், தமோ குணங்களில்லை. ஞானனந்தாதி குணங்களை அனுபவிப்பவன், பூதங்களுக்கு உள்ளும் புறம்பு மிருக்கிறான். அனைத்திலும் வியாபித்தலால் சரம், சூக்ஷமமாயிருத்தலால் அசரம் எனின் ஆகாசம்போல் ஒரேஇடத்திலிருந்து அசரம் ராமகிருஷ்ணாதிகளைப் போல சரம்.

அரு—இந்தச்சங்கதி அறிதல் கஷ்டமாக இருக்கிறதே.

கிரு—சூக்ஷ்மமா யிருத்தலால் தெரியாது. கஷ்டப்பட்டுத் தெரிந்துகொள்ளவேண்டியது. அவன் இந்திரிய புத்திகளுக்குக் கோசரிக்காதவன். செம்மையாகத் தெரிந்துகொள்ள அசாத்யம்.

அரு—அவனுக்கும் நமக்கும் எவ்வளவு தூரமிருக்கின்றது. இந்த தூரம் தெரிந்தாலல்லவா அவனுக்காகப் பிரயத்னப் படலாகும்.

கிரு—மேற்கூறிய இருபது சாதனங்களைச் சம்பாதித்தவர்களுக்கு அவன் சமீபத்திலேயே யிருப்பான். இல்லாதவர்களுக்கு அவன் கடுந்தூரம். எத்தனை ஜன்மம் எடுக்கினும் அடைதல் துர்லபம். ப்ரஹ்லாதனைப்போன்றவர்களுக்கு சமீபித்தவன். ஹிரண்யகசிபு போன்றவர்களுக்குத் தூரமாயிருப்பன். பரஸ்பரம் வேறுபட்டிருக்கும் பூதங்களில் பேதமில்லாம லிருக்கிறான். 5-அத் 18-சுலோ. இடப்பேதங்களே அல்றிப் பகவானுக்குப் பேதம் இல்லையென்று கூறப்பட்டது. அவன் சிருஷ்டிகாலத்தில் பிறப்பித்து, லயகாலத்தில் சங்கரித்து மத்யகாலத்தில் காப்பவன் என்று அறியவேண்டும்.

(சூர்ய சந்த்ர நக்ஷத்திரங்களினும் உயர்ந்த பிரகாசமுள்ளவன். 15 அத். 12-சுலோ. சூர்யசந்திரர்கள் பகவானுடைய அம்சத்தில் கோடியிலொரு அம்சமெனவும், லோகோத்தாரணமாக கொஞ்சம் பிரகாசத்தை சூர்யசந்திராதிகளின் வழியாய்க் காட்டுகின்றானென்று கூறப்பட்டது.) பிரகிருதிக்கு, அன்றி அஞ்ஞானத்திற்கு அன்றி ம்ருத்யுவிற்கு மேலிருக்கிறான். என்று கூறப்பட்டது. ஞானஸ்வரூபம். ஞேயம். ஞானத்தா லடையலாகும்.

அரு—எவ்விடத்தி லிருக்கிறான்.

கிரு—இருதயத்தி லிருக்கிறான். விசேஷேண இருக்கிறான், அதிஷ்டித்திருக்கிறான்.

(அத்வைதம்) எவ்விடத்திலும் கரசரணங்கள், எவ்விடத்திலும் நேத்ர சிரோமுகங்கள், எவ்விடத்திலும் காதுகள்உண்டாய் இந்தலோகத்தில் எல்லாப்பொருள்களிலும் வியாபித்திருக்கிறான்.

அரு—ஆத்மா அனைத்திலும் ஒருவனாயிருக்கிறான். என்று தெரிந்துக்கொள்ளவேண்டுமா.

கிரு—எல்லாவற்றிற்கும் ஆத்மாஒருவனாகவே இருக்கிறான்.

அரு—நீ சகுணத்தையா அன்றி நிர்க்குணத்தையா கூறத்தொடங்கினாய்,

கிரு—நிர்க்குணம்.

அரு—இவ்விடத்தில் கரசரணங்க ளிருக்கின்றன வென்று கூறினாயே. அது சகுணசங்கதியா அன்றி நிர்க்குண சங்கதியா நிர்க்குணத்தை உபதேசிக்கையில் குண சங்கதிசொல்லலாமா.

கிரு—நிர்க்குணத்தை உபாசிக்கவேண்டும். சகுணத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும். புத்திலயிப்பதற்குச் சகுணத்தையே போதிக்கவேண்டும். சர்வமித்தையென்று போதிக்கத்தொடங்கின்ஞானம் எவ்வாறு உண்டாம். ஆதலால் சகுணத்தை உபதேசித்துத்தீரவேண்டும். சகலேந்திரியகுணங்களால் தெரிந்துகொண்டதாக தோற்றும். உண்மையாய் இந்திரியங்களில்லை சம்பந்தங்களில்லை, சுமந்துகொண்டு இருக்கிறான். (இல்லாதது காணப்படுகிறபொருள்களுக்கு ஆதாரமாகையால் பரப்பிரம்மம் தாங்குகிறவனென்று கூறப்படுகிறான் என்று மிகுந்த அத்வைதம் முதிர்ந்தவர்களின் அபிப்பிராயம்.) சாத்விகராஜஸதாமய குணங்கள் இல்லாதவன். சுகதுக்க மோகங்களுக்குச் சாக்ஷிபூதனாதலால் தெரிந்தவன். பஞ்சபூதங்களுக்கும் பிராணிகளுக்கும் உள்ளும் புறம்புமாயிருக்கிறான்.ஸப்ததாதுக்களுக்குள் அந்தாயாமியாயிருக்கிறான். வெளியில் பரப்பிரம்மம் எல்லாவற்றிலுமிருக்கிறான்.சரீரசம்பந்தத்தால் சரம். எல்லாவற்றிலும் நிறைந்திருக்கையில் அசரம். சூக்ஷ்மமாதலின் அறியப்பட்டான். அஞ்ஞானிகளுக்குத் தூரஸ்தமானது. ஞானிகளுக்குச் சமீபஸ்தமானது. சர்வசரீரங்களிலும் பேதமிருப்பதுபோல இருக்கினும் ஒரே ஆத்மாவாக இருக்கிறான்.

அரு—ஒரே காலத்தில் ஒருவன் சுகமாயிருப்பான். மற்றொருவன் துக்கிப்பான். ஆத்மா ஒருவனானால் இது எப்படி சம்பவிக்கும்.

கிரு—இந்தக்கார்யங்கள் ஆத்மாவுடன் சம்பந்தப்பட்டவை அல்ல. பிரகிருதியுடன் சம்பந்தித்தவை. சிருட்டியில் பிறப்பித்து இடையில் ரக்ஷித்து லயத்தில் சங்கரிப்பான். (அஞ்ஞானத்தில் இல்லாததைகாட்டுதல் சிருஷ்டியும், நல்லஞானம் உண்டாம் அளவும் அவ்வாறே தெரிவித்தல் ஸ்திதியும், ஞானம் உண்டாகையில் அனைத்தையும் போக்குதல் லயம் இவை அனைத்திற்கும்காரணம் பரப்பிரம்மம். ஆதலால் பரப்பிரம்மம் இந்தக்கார்

யங்களைச் செய்யுமென்று கூறப்பட்டது. இது முதிர்ந்த அத்வைதம்.) சோதிக்குள் சோதியானது. பிரகிருதிக்குத் தூரமானது, ஞானஸ்வரூபமானது. ஞேயம். அடையப்பட்டது, எல்லாவற்றிலுமிருப்பது இருதயத்திலிருப்பது அத்வைதபாஷ்யத்தில் ஒரு அபிப்பிராயம் உண்டு என்னெனின், 18-சுலோகத்தின் பாதியுடன் பாவம் முடிந்ததெனவும் (எனின் பிரகிருதிக்குத் தூரமானது என்றதுடன் சரியாய்விட்டதென்றும்) வேறொரு பாதிசுலோகம் வினவிற்கு விடையெனவும் அவ்வாறு 8-சுலோகம். உத்தரார்த்தத்திற்கு வேறாய்ப்பொருள்சொன்னால் இவ்வாறு அர்த்தமாகும்.

. அரு—க்ஷேத்ர, க்ஷேத்ரஞ்ஞ, ஞான, ஞானசாதனம், ஞேயங்களைக்கூறினாய். இவைகளை அறிந்து நடந்தால் பரப்பிரம்மம் ஆகலாம் என்றாய். இவைகளெல்லாம் சாத்யமான வேலையா. எனக்கென்னமோ நிருச்சாகமாகிறது.

கிரு—ஞானம், ஞேயம், ஞானத்தால் அறியத்தகுந்த பரப்பிரம்மஸ்வரூபம் இருதயத்தில் இருக்கிறது. இருதயத்தைச்சரிப்படுத்தினால் கார்யம் சாதனம் ஆகும் பயப்படாதே (என்று அபயம் கொடுத்தார் என்றுபொருள்.)

(விசிஷ்டாத்வைதம்)கிரு—எவ்விடத்தும், காசரணங்கள், கண், தலை, முகங்கள்,காதுகள் பெற்றிருக்கிறது. எவ்விடத்தும் நிறைந்திருக்கிறது.

அரு—ஆத்மாவிற்கு இந்தச்சக்தியிருக்குமா.

கிரு—பிரகிருதிபந்தரஹித சுத்தாத்மாவிற்கே இந்தநிலைமை.

அரு—ஆத்மா அணுவாயிருக்கிறது. எல்லாவிடத்திலும் நிறைந்திருப்பதாகக் கூறக்கூடுமா.

கிரு—இரண்டுவிதங்களில் சம்பந்தங்களுண்டு, ஸ்வரூபத்துடனிறைந்திருத்தல் அன்றித்.தேஜஸால் நிறைந்திருத்தல். சூர்யசந்திரர்கள் தங்கள் தேஜஸால் சர்வதிக்குகளையும் பிரகாசிப்பிக்கிறதுபோல ஆத்மா தன் தேஜஸால் நிறைந்திருக்கிறான். இந்திரியகுணங்களின் வியாபாரங்களால் விஷயங்களையறியவும் சக்தியிருக்கிறது. இந்திரியங்களின் விருத்திகளின் அபேக்ஷயில்லாமலே அனைத்தையும் அறிந்துகொள்ளும் சக்தியிருக்கிறது. ஆத்மாவிற்கு இந்திரியங்களில்லை சர்வசரீரங்களிலிருக்கினும் சங்கமில்லை தேஹியாயிருக்கையில் சரீரத்தைத்தாங்குவான். பிரகிருதி குணங்களில்லாதது. மூன்று குணங்களின் கார்யங்களை அனுபவிப்பது. பிரகிருதிபந்த விமுக்தாத்ம பூதங்களுக்கு வெளியிலும் புறம்பும் இருக்கும். (முக்தனாய்வைகுண்டத்திலிருக்கையில் தெய்வலோக சுகங்களை அனுபவிக்கவேண்டுமென்று தோன்றும் தோன்றும் பக்ஷத்தில் தத்க்ஷணமே சரீரத்தைத் தரித்துக்கொண்டு போகமுடியும். அப்பொழுது சரீரம்உள்ளேயிருக்கும். எப்பொழுதும் வெளியிலிருக்கும்) ஸ்வபாவம் அசரம், தேஹசம் பந்தத்தால் சரம், சூக்ஷ்மமானதால் அறிதற்கு அரிதானது. இந்த, 20.குணங்கள் சம்பாதித்தவர்களுக்குச் சமீபம். இல்லாதவர்களுக்குத் தூரம். எல்லாவற்றிலும் இருப்பினும் பேதமில்லாமலிருக்கிறது. பேதமிருப்பதுபோலத்தோன்றும் (ஒரு ஆத்மாவே. எனின் அத்வைதம்போல் சர்வத்திற்கும் ஒரே ஆத்மாவல்ல. ஒரு ஆத்மாவிற்கே அநேக

ஜன்மம் வரினும் அந்தப்பேதங்கள் சரீரத்திற்கே அன்றி அந்த எல்லாச் சரீரங்களையும் அடைந்து வருகின்ற ஆத்மாவிற்கன்று.)

அரு—சரீரமே ஆத்மாவல்லவா

கிரு—பூதருபமாய்ச் சேர்ந்திருக்கும் ப்ருதிவி முதலான பூதங்களைப் போஷிப்பது ஆதலால் போஷிக்கப்பட்ட பூதங்களினும் வேருக தெரியவேண்டும். அறியக்கூடியது. பூதங்களின் விகாரமாகும் அன்னம் முதலியவற்றை விழுங்குவது. ஆதலால் விழுங்கப்பட்டவனிநும் வேறென்று அறியவேண்டும். விழுங்கப்பட்டு வேறொரு உருவமாக பரிணமித்த அன்னுதிகளுக்கு பரிணமம் உண்டாதற்கு காரணமானது. ஆதலால் அவைகளினும் வேருனதென்று தெரியத்தகுந்தது. சூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், அக்னி, இவற்றினும் ஆத்மா பிரகாசமானது.

அரு—ஜீவாத்மாவிற்கு அவ்வகை சக்தி உண்டா.

கிரு—தேஜஸ் = எனின் காட்டுவது. ஆத்மா இல்லாவிடின் சூர்யன் இருந்தென்ன சந்திரன் இருந்தென்ன. பிணத்திற்கு எத்தனை விளக்குவைக்கினும் தெரியுமா.

அரு—சூர்யாதிகளை ஏன் தேஜஸ் என்னலாகும்.

கிரு—கண்களுக்குச் சக்தியிருக்கினும், ஆத்மாவிற்கு ஜ்யோதி யிருக்கினும் இந்திரியங்களுக்கு விஷயசம்பந்தம் இருக்கவேண்டும். இவைகளுக்குப் பிரதிபந்தத்தை உண்டாக்குகிற இருட்டைப் போக்குகிறதற்கு மாத்ரமே சூர்யாதி ஜ்யோதிகளால் லாபம். வஸ்துத: தெரிவிப்பது ஆத்மஸ்வரூபமே. ஞானமில்லாதவனுக்குப் பெட்டிநிறைய புஸ்தகங்களிருக்கினும் பயன் என்ன. கண்ணில்லாதவனுக்குச் சுலோசனமிருந்து என்ன பிரயோசனம். அவ்வாறே ஆத்மா இல்லாதபொழுது சூர்யாதிகளால் பிரயோசனமில்லை. அஞ்ஞானங்களுக்குத் தூரம். ஞானம், ஞானஸ்வரூபம். (20) சாதனங்களால் அடையத்தகுந்தது.

அரு—அந்த ஆத்மா எவ்விடத்தி லிருக்கிறுன்.

கிரு—சர்வப் பிராணிகளின் இருதயத்தி லிருக்கிறுன்.

அரு—இருதயத்திலிருக்கும் பக்ஷத்தில் தத் இதரஸ்தலத்தில் பாதை உண்டானல் ஏன் தெரிகிறது.

கிரு—தேஜஸ்த்வாரா தேகமுழுதும் இருக்கிறுன். வீட்டில் ஒருஇடத்தில் விளக்குவைத்தால் ஸ்வரூபத்துடன் அந்த இடத்தில் ஒளி உண்டாயிருக்கும். தேஜஸ் த்வாரா வீடுமுழுதும் பிரகாசம் உண்டாயிருக்கும் அவ்வாறே ஆத்மா, ஸ்வரூபத்துடன் இருதயத்தி லிருப்பினும் தேஜோரூபத்தால் சரீர முழுதும் இருக்கும்.

இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத: ।
மத்பக்த ஏதத் விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே ॥ கசு

இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத:,
மத்பக்த ஏதத் த்விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே. கசு

35

ఇతి క్షేత్రం తథా జ్ఞానం జ్ఞేయం చోక్తం సమాసతః,
మద్భక్త ఏతద్విజ్ఞాయ మద్భావాయోపపద్యతే. ౧౮

19. இவ்வாறு, க்ஷேத்ரம், ஞானசாதனம், ஞேயம் கூறப்பட்டது. என்னைப் பக்திசெய்து என் அநுக்ரஹத்தை அடைந்தால் என்னை அடைய அருகனுவன்.

(த்வைதம்) என் சமீபத்தை.
(அத்வைதம்) என் ஸ்வரூபத்தை.
(விசிஷ்டாத்வைதம்) என் ஸ்வபாவத்தை அடையலாகும்.

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌚𑍈𑌵 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑌾𑌦𑍀 𑌉𑌭𑌾𑌵𑌪𑌿 ।
𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌂𑌶𑍍𑌚 𑌗𑍁𑌣𑌾𑌂𑌶𑍍𑌚𑍈𑌵 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌭𑌵𑌾𑌨𑍍 ॥

ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி,
விகாராம் ஶ்ச குணாம்ஶ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவான். ௨௦

ప్రకృతిం పురుషం చైవ విద్ధ్యనాదీ ఉభావపి,
వికారాంశ్చ గుణాంశ్చైవ విద్ధి ప్రకృతిసంభవాన్. ౨౦

20. கிரு—பிரகிருதியும், புருஷனும் அநாதிகள். 2-அத். 28-சுலோ. மண்ணுல்கடம் ஏற்படுவதுபோல பிரகிருதியால் சரீரம் ஏற்படுகிறது. 2-அத். 28-சுலோ. போல பிரகிருதியின் ஆத்யந்தங்கள் தெரியா, மத்யமாத்ரம் தெரியும். சுகதுக்கங்களை அநுபவிப்பவன் புருஷன். புருஷன் நித்யன். 2-அத். 12-சுலோ. போல, கடம் நசிக்குமேயன்றி மண்நசிக்காததுபோல, பிரகிருதி கார்யமான சரீரம் (ஸ்தூலரூபம்) நசிக்குமேயன்றி அதன் ஸூக்ஷ்மரூபம் நசிக்காது ஆதலால் பிரகிருதி அநாதி. இவற்றின் சேர்க்கையும் அநாதி (பிரகிருதியெனின் எப்படிப்பட்டதெனின் வீட்டின் கூறையிலிருக்கும் கண்ணாடியிலிருந்து பிழம்பாய்க்காணப்படும் வெயிலில் அதிசூக்ஷ்மமாய்க்காணப்படும் துகள்களில் ஆறுவதுபாகம். அவ்வளவு சூக்ஷ்மமாயிருக்கிறது. ஆத்மாவும் சூக்ஷ்மமாக இருத்தலால் இதனுடன்கூடும். ஆயினும் புருஷனுக்குப்பிரகிருதியால் மிகுந்த சிரமம் உண்டாகாது. சர்வத்ரகாற்றில் சஞ்சரிக்கும ரேணுக்கள் நமது வேஷ்டிகளில் பட்டுக்கொண்டிருக்கினும் நமக்கதுவெளிப்படாதன்றே அதனுல் கஷ்டம் தோன்றுது. அவ்வாறே புருஷனுக்கு இந்தப்பிரகிருதியால் துன்பம் அவ்வளவாயிராது.

அரு—பிரகிருதி புருஷர்களுக்கும் க்ஷேத்ர க்ஷேத்ரஞ்ஞர்களுக்கு பேதம் கூறு.

கிரு—சூக்ஷ்மரூபமாய் எங்கும் நிறைந்திருக்கையில் பிரகிருதி யெனப்படும் ஒரு ஆகாரமாய் ஏற்படுகையில் க்ஷேத்ரம் எனப்படும். விசாலமான வெளியை பூமியென்போம். அளவு ஏற்பட்டு அந்த அந்த இடத்திற்கு அத்துணவத்த போது க்ஷேத்ரமென்போம். அவ்வாறே பிரகிருதி க்ஷேத்ரங்களின் சங்கதி.

பிரகிருதியுடன் அதிகசம்பந்தம் இல்லாதபோது புருஷன் எனவும், அதனுடன் சம்பந்தப்பட்டுச் சரீரத்திலிருக்கும்போது க்ஷேத்ரஜ்ஞனெனவும் பெயர். முதலில் பிரகிருதியா யிருந்து பிறகு க்ஷேத்ரம் ஆகின்றது. முதலில் புருஷனாயிருந்து பிறகு க்ஷேத்ரஜ்ஞ னாகிறான்.

அரு—இந்தப் பிரகிருதி சம்பந்தத்தால் என்ன உண்டாம்.

(த்வைதாத்வைதம்) தேஹம், இந்திரியம், மனஸ், புத்தியும் உண்டாம். ஸத்வ ரஜஸ்தமோகுண கார்யங்களாகும் சுகதுக்க மோஹங்களுண்டாகும்.

(விசிஷ்டாத்வைதம்) இச்சா த்வேஷங்கள் இருபது குணங்களு முண்டாகும். சரீர மிருந்தாலன்றோ அமானித்வாதி சுகுணங்களைச் சம்பாதிக்கலாகும். இவற்றால் நன்மையும் தீமையும் உண்டாம்.

𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌣𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇
𑌹𑍇𑌤𑍁𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌂
𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑍇 𑌹𑍇𑌤𑍁𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ ௨௧

கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதி ருச்யதே,
புருஷ ஸ்ஸுகது:கானாம் போக்த்ருத்வே ஹேது ருச்யதே. ௨௧

కార్యకారణకర్తృత్వే హేతుః ప్రకృతి రుచ్యతే,
పురుష స్సుఖదుఃఖానాం భోక్తృత్వే హేతు రుచ్యతే. ౨౧

21. அரு—பிரகிருதி செய்யும் உபகாரம் எப்படிப்பட்டது.

திரு—பிரகிருதி, புருஷன் இருக்கச் சரீரத்தையும், கார்யங்களைச் செய்வதற்கு இந்திரியங்களையும், விஷயங்களை அறிவதற்கு ஞானேந்திரியங்களையும் செய்துகொடுக்கும். புருஷன் இதனைவைத்துக்கொண்டனுபவித்துக்கொண்டிருப்பன். இவற்றின் சேர்க்கையே சம்சாரம் எனப்படும்.

அரு—பிரகிருதியால் அல்லவா பாவவழியில் விழவரும். இதனை விடக்கூடாதா.

திரு—புருஷன் இதனைச் சம்பந்தப்பட்டாலன்றோ அவற்றின் குணங்களை அநுபவிக்கலாகும். அதனைவிட்டாலன்றி அதனால் உண்டாகும் துர்க்குணங்கள் போமேயன்றி குணங்கள் உண்டாகமாட்டா பகவத்பாகவதர்களை ஆராதிப்பதற்குச் சரீரம் போதாதா. நேத்ரம், கர்ணம் முதலிய இந்திரியங்கள் விஷயங்களில் பிரவேசிக்கின்றனவென்று இவற்றைக்கெடுத்தால் சத்கிரந்தங்களை யெவ்வாறு ஆராயலாகும். சத்கதைகளை யெவ்வாறு கேட்கலாகும். ஆகையால் பிரகிருதியிருக்கவேண்டும். ஆயினும் சரீரத்தையும் இந்திரியங்களையும் சாக்ரதையாக வைத்துக்கொள்ளவேண்டும். ("துர்லபோமானுஷோதேஹ:") எனவும் ("சரீரமாத்யங்கலுதர்மஸாதனம்" எனவும் இருக்கின்றதல்லவா) பிரகிருதி புருஷர்களின் சம்பந்தம் பாரியபர்த்தாக்களின் சம்பந்தம் போன்றிருக்கிறது. பார்யையிருக்கிறாளென்று விதிநிஷேதங்களைப்பாராட்டாமல்

அவளுடன் போகித்துக்கொண்டு சத்காரியங்களைச் செய்யாதவன் அந்தப்பார்யையால் தீயபலன்களை அநுபவிப்பன். அந்தப்பார்யையைவைத்துக்கொண்டே ஔபாசனுதி சத்கிரியைகள் அதிதி, அப்யாகதர்களுக்கு ஆதித்யங்கள் பகவதாராதனம் செய்துகொண்டிருந்தால் அவளால் சௌக்யம் அடைவன். பிரகிருதியால் தீமைஇருக்கிறதென்று விடின் அதனுல் உண்டாகவேண்டிய லாபம் உண்டாகாமல் போகுமல்லவா.

𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑍋 𑌹𑌿
𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑌾𑌨𑍍 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 ।
𑌕𑌾𑌰𑌣𑌂 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌯
𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁 ॥ ௨௨

புருஷ꞉ ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதி ஜான் குணன்,
காரணம் குணஸங்கோஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு. ௨௨

పురుషః ప్రకృతిస్థో హి భుంక్తే ప్రకృతిజాన్ గుణాన్,
కారణం గుణసంగోఽస్య సదసద్యోనిజన్మసు. ౨౨

22. அரு—எல்லாருக்கும் பிரகிருதியுண்டு. பிரகிருதியோவென்றால் ஒரே பதார்த்தம். ஒருசரீரம் பிரம்ம சரீரமாகவும், மற்றொன்று எறும்பினதாகவுமிருக்கக்காரணமென்ன.

கிரு—எல்லாருக்கும் மனைவியிருக்கினும் ஒருவன் தன்மனைவியால் சந்தோஷமடைவன். மற்றொருவன் துக்கிப்பன். அவர்களவ்வாறு சுகதுக்கங்கள் அனுபவிப்பதற்கு அவர்களின்மனைவியரின் குணங்களே பிரதானம். அவ்வாறே பிரகிருதியிடம் வெண்மை, செம்மை,கருமை என்கிற மூன்றுவர்ணங்களுண்டு. இவற்றில் எந்தப்பாகம் சம்பந்திக்கிறதோ அந்தச்சரீரம் உண்டாம். எனின் சத்வகுணத்தால் சத் = தேவஜன்மம். தமோகுணத்தால் அஸத் = திரியக்ஜன்மம். ரஜோகுணத்தால் ஸதஸத் = மனுஷ்ய ஜன்மம் உண்டாகும்.

𑌉𑌪𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌮𑌨𑍍𑌤𑌾 𑌚 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌰𑌃

உபத்ரஷ்டாநுமந்தா ச பர்தா போக்தா மஹேஸ்வர꞉,
பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேஸ்மின் புருஷ꞉ பர꞉. ௨௩

ఉపద్రష్టానుమంతా చ భర్తా భోక్తా మహేశ్వరః,
పరమాత్మేతి చాప్యుక్తో దేహేఽస్మిన్ పురుషః పరః. ౨౩

23. அரு—எவ்வாறு ஜாக்ரதையாக இருக்கவேண்டும்.

கிரு—(த்வைதம்) பிரகிருதி, புருஷன், ஈஸ்வரன் என்று மூவருண்டு. பிரகிருதி சத்வகுணத்தைத்தெரிவித்து புருஷனைச் சுகத்தில் பந்தித்துத் தன் ஸ்வாதீனம் செய்துகொள்ளும். பிறகுஅதிலேயேமனம் சேர்ந்துபோம். இவ்

வாறுபிரகிருதிவசனுய் ஈஸ்வரனை மறந்தால்இறைவனுக்குக் கோபம்உண்டாகும். (பெண்டாட்டியின் சொல்லால் தந்தையை நிர்லக்ஷ்யம் செய்பவன் என்ன நன்மை அடைவான். ஆதலால் தந்தையின் ஆக்ரஹத்திற்குப் பாத்ரனாய் தனக்குத் தந்தையால் லபிக்கவேண்டிய சாம்ராஜ்யத்தைப் போக்கடித்துக் கொள்வன். பார்யையைக் களிப்பித்துக்கொண்டு தந்தையைக் கௌரவித்துக் கொண்டிருப்பவன் சுகப்படுவன்.) அவ்வாறே பிரகிருதியால் எவ்வளவு லாபம் உண்டாகவேண்டுமோ அவ்வளவுமாத்ரம் செய்துகொண்டு பகவானை விடாம லிருக்கவெண்டும். பிரகிருதி கீழும், ஈஸ்வரன் மேலுக்கும் அழைப்பர். ஈஸ்வரன் எப்படிப்பட்டவன் எனின் மேலிருந்து பார்த்திருப்பவன். இதுசெய் இது செய்யாதே என்று பிரேரிப்பவன். பர்தா (போஷகன்) போக்தா (எனின் நாம் புசிக்கும் சாரதரம் பகவானுக்கு, சாரம் புருஷனுக்கு, திப்பி வெளியிற்போகும். இவ்வாறு சாரதரத்தைப் பகவான் பெற்றுக்கொள்வதனுல் அவன் போக்தாஎனப்படுகிருன்.) 5-அத். 29-சுலோ. 9-அத். 24-சுலோ. அவன் பரமசாரத்தைக் கிரஹிப்பவனென்று கூறப்பட்டது. இவன் மஹேச்வரன் பிரம்மாதியர் ஈச்வரர். அவன் பரமாத்மா. பிரமன்முதல் ஸ்தம்ப பர்யந்தமுள்ள பிராணிகள் ஆத்மாக்கள். சரீரத்தில் இருத்தலால் புருஷன்.

அரு—ஜீவாத்மாவுடன் சரீரத்தில் இருத்தலால் ஈஸ்வரனுக்குக் கௌரவம் குறையாதா.

கிரு—அவன்வேருயிருக்கிருன். (சிறையிலிருக்கும் திருடனுக்கே கஷ்டமல்லது அதன் அதிகாரிக்கு என்னகௌரவம்குறையும்.) பகவான் இப்படிப்பட்டவனுதலால் பிரகிருதியுடன்சேர்ந்திருந்து இவனதுகைங்கர்யஞ்செய்து கொண்டிருந்தால் அவன்காப்பன்.

(அத்வைதம்)—பிரகிருதியுடன் கூடியிருக்கும் ஜீவாத்மா விஷயத்தில் ஜாக்ரதையாயிருக்கவேண்டும். பிரகிருதியையும், புருஷனையும் யோசித்தால் ஜாக்ரதையாயிருக்க அக்கரையுண்டாகும். (புருஷன் தனக்கொன்றும் இல்லாவிடினும் ஸ்திரீக்கு சம்பாதித்து நகைநாணயங்கள்போடுவதற்கு அபிலாஷையுண்டாய் தினமுழுதும் தனக்குக்கொஞ்சமாயினும் கஷ்டமென்று எண்ணுமல் பாடுபடுவதுபோல) புருஷன் பிரகிருதியின் க்ஷேமத்தைக்கோருவன். (எனின் புஷ்பசந்தனுதிதிரவ்யங்கள் முதலிய சுகங்களையனுபவிப்பான். தான் ஜன்மத்தைவிட்டபிறகு எவ்விடம் போவானே எவ்வகைப்பட்ட பாடுகளுக்குப்பங்காவானே யோசிக்கான். ஆதலால் புருஷன் எப்படிப்பட்டவனே தெரிந்து கொண்ட பக்ஷத்தில் அவனதுக்ஷேமத்தைத் தேடலாகும்.

அரு—அவன் எப்படிப்பட்டவன்.

கிரு—அருகிலிருந்து காண்பவன். (யஞ்ஞம்செய்கையில் ஸதஸ்யன் தான் ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்திருப்பன். அதில் ஏதேனும் தவறிப்போனபொழுது நிறுத்துங்களென்று கட்டளையிட்டு இப்படிப்பட்ட லோபம் உண்டாயிற்றென்று கூறுவன். அவ்வாறே ஆத்மா, சம்பந்தமில்லாதிருந்து எல்லாவற்றையும் செய்விக்கும்.) சரீர மனேபுத்திகள் என்ன செய்யினும் முடியாது

என்று இருப்பவன். தாங்குபவன். சுகதுக்கங்களிருக்கின்றன வென்று சம்பந்தப்படுபவன். வஸ்துத: மஹேச்வரன் பரமாத்மா.

அரு—ஆத்மாவை பரமாத்மா என்னத்தகுமா.

கிரு—உபநிஷத்துக் கூறுகின்றது. தேஹத்திலிருக்கிறான். சரீர சம்பந்தத்தால் புருஷன். ஆயின் உண்மையாக தத்பரன். இப்படிப்பட்ட ஆத்மாவைக் கவனிக்கவேண்டும். சரீரத்தின் அயோக்யதையும் ஆத்மாவின் யோக்யதையும் பார்க்கவேண்டும்.

(விசிஷ்டாத்வைதம்) புதியவனுக்குத் தெரியாததை அருகிலிருந்து தெரிவிப்பது போல சரீரத்திற்குள்ளிருந்து தெரிவிப்பவன். பிரேரிப்பவன், தாங்குபவன். சுகதுக்கங்களை அநுபவிப்பவன். அந்தந்த தேஹங்களுக்கு ஈச்வரன். பரமாத்மா. (தேஹமனோ புத்யாதிகளுக்கு ஆத்மாஎன்று பெயர். இவை அனைத்திற்கும் பெரியோனாதலால் ஆத்மா பரமாத்மாவாகிறான். தேஹத்தில் இருக்கிறான். தேஹசம்பந்தத்தால் புருஷன். சரீரத்திற்குப் பரன். ஆதலால் இவ்வகைப்பட்ட பரமாத்மாவில் மனதை வைப்பவன் புத்திமானாவன்.)

യ ഏവം വേത്തി പുരുഷം പ്രകൃതിം ച ഗുണൈസ്സഹ
സർവഥാ വർത്തമാനോഽപി ന സ ഭൂയോഽഭിജായതേ ॥

ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணைஸ்ஸஹ,
ஸர்வதா வர்தமானோபி ந ஸ பூயோபிஜாயதே. உச

య ఏవం వేత్తి పురుషం ప్రకృతిం చ గుణైస్సహ,
సర్వథా వర్తమానోఽపి న స భూయోఽభిజాయతే. ౨౪

24. இவ்வாறு பிரகிருதி கார்யங்களையும், குணங்களின் கார்யங்களையும், ஜீவாத்மாவையும் தெரிந்துகொண்டால் மீண்டும் பிறவான்.

அரு—முக்தனாவானா?

கிரு—எப்படிவர்த்திக்கிறவனாயினும் வேறொன்றுமில்லை. (எவ்வளவு அஞ்ஞானி ஆயினும் இந்தச்சங்கதி கேட்டவினால் எல்லாவற்றையும் நச்வரமென்று கிரஹிப்பான்.)

ധ്യാനേനാത്മനി പശ്യന്തി കേചിദാത്മാനമാത്മനാ ।
അന്യേ സാംഖ്യേന യോഗേന കർമയോഗേന ചാപരേ ।
അന്യേ ത്വേവമജാനന്തഃ ശ്രുത്വാന്യേഭ്യ ഉപാസതേ ॥
തേഽപി ചാതിതരന്ത്യേവ മൃത്യും ശ്രുതിപരായണാഃ ॥

த்யானேநாத்மநி பஶ்யந்தி கேசிதாத்மாநமாத்மநா,
அந்யே ஸாங்க்யேந யோகேந கர்மயோகேந சாபரே. உரு
அந்யே த்வேவமஜாநந்த: ஶ்ருத்வாந்யேப்ய உபாஸதே,
தேபி சாதிதரம் த்யேவ ம்ருத்யும் ஶ்ருதி பராயணா:. உகூ

ధ్యానేనాత్మని పశ్యంతి కేచి దాత్మాన మాత్మనా,
అన్యే సాంఖ్యేన యోగేన కర్మయోగేన చాపరే. ౨౫
అన్యే త్వేవ మజానంతః శ్రుత్వా న్యేభ్య ఉపాసతే,
తేఽపి చాతితరంత్యేవ మృత్యుం శ్రుతిపరాయణాః. ౨౬

25, 26. (த்வைதாத்வைதம்) அரு—பிரகிருதிகலந்திருக்கையில் பரமாத்மாவை யெவ்வாறு அடையலாம்.

கிரு—அது யோக்யதைக்குத் தக்கபடி யிருக்கும். சிலர் சரீரத்திலுள்ள ஆத்மாவை மனதால் த்யானஞ்செய்து காண்கிறார்கள். பிறர் ஞானத்தால் அறிவர். (தியானத்திலிருக்கும் சுகம் அறியாததால் மனம்சலிக்கும். விஷயத்தை அறியாதிருப்பின் மனம் தானே நிற்கும்.

அரு—இது முடியாவிடின் எப்படி.

கிரு—வர்ணாச்ரமத்திற்குத் தக்கபடி கர்மயோகம் செய்யவேண்டும்.

அரு—தமக்கு கற்று அறிந்துகொள்ள ஞானம் இல்லாவிடின் எவ்வாறு?

கிரு—பெரியவர்களை அடுத்து அவர்களால் கேட்டுதெரிந்துகொண்டு கர்மம் செய்யவேண்டும்.

அரு—அவ்வாறு கேட்டு ஆச்ரயித்து செய்தால் பலம் உண்டா.

கிரு—ச்ரவணமே பெரிய சாதனமென்று எண்ணினும், சம்சாரசாகரத்தை தாண்டலாகும் (மேலவரிவ்வாறு நான்குவகுப்பினரேயென்றனர்.

(விசிஷ்டாத்வைதம்) அரு—கேட்டுச் செய்யவேண்டுமென்று கூறினீர். கேட்டவனுக்கு விஷயம் போதப்படவில்லை. அப்போது அவன் கதியென்ன.

கிரு—இந்தவிஷயம் போதப்படாதிருக்கினும் சிரத்தையுடன்கேட்டலால் கேட்பவர்களுக்கும் மோக்ஷம் உண்டாம். ஆயின் எப்போதோ ஒருநாள்கேட்டால் ஆகாது. நாடோறும் இருக்கவேண்டும். (தேஅபி, என்பதால் கேட்டறிந்து செய்பவர்களை அவ்வளவு ஹீனமாய்ப்பார்த்தல் ஆகாது. ஆகலால் கேட்டும் அறியாதவர்களைக் குறித்தே, தே, அபி, பிரயோகிக்கப்பட்டது என்று இவர் ஐந்தாவது வகுப்பினவர்களையும் கூடத் தெரிவித்தனர்.)

யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்த்வம் ஸ்தாவரஜங்கமம் |
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத் தத்வித்தி பரதர்ஷப ||

யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித்ஸத்த்வம் ஸ்தாவரஜங்கமம்,
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத்தத்வித்தி பரதர்ஷப. உஎ

యావత్సంజాయతే కించి త్సత్త్వం స్థావరజంగమమ్,
క్షేత్రక్షేత్రజ్ఞసంయోగా త్తద్విద్ధి భరతర్షభ. ౨౭

27. அரு—பிரகிருதி புருஷர்களின் சம்பந்தம் பார்யபர்த்தாக்களின் சம்பந்தம்போல் என்றாய். பார்யை மத்யகாலத்தில் கேடடைவள். அவளால் உண்

டான சம்சாரம் மாத்ரம் நிலைத்திருக்கும். அவ்வாறே புருஷன் சம்சாரத்தி லிருந்து பிரகிருதியை விட்டிருக்க முடியுமா.

கிரு—அந்தவிஷயம் மாத்ரம் இவ்விடத்தில் பேதமாயிருக்கிறது. இவன் மோக்ஷம் அடையும் வரையும் பிரகிருதி விடாது. புருஷன் பிரகிருதியை ஆச்ரயித்தே யிருப்பன்.

அரு—பிரகிருதியால் சரீரங்கள் ஏன் உண்டாம்.

கிரு—க்ஷேத்ர க்ஷேத்ரஞ்ஞும் யோகத்தால் உண்டாகும். புண்யபாபபல த்தினுடைய அநுபவத்திற்காக ஈஶ்வரன் பிராணி கோடிகளைப் பிறப்பிப் பன். பிரகிருதிக்குத் தகுந்தபடி ஜன்மம் உண்டாகும்.

സമം സൎവ്വേഷു ഭൂതേഷു തിഷ്ഠന്തം പരമേശ്വരം ।
വിനശ്യത്സ്വവിനശ്യന്തം യഃ പശ്യതി സ പശ്യതി ॥ உஅ

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேஶ்வரம்,
விநஶ்யத்ஸ்வவிநஶ்யந்தம் ய: பஶ்யதி ஸ பஶ்யதி. உஅ

సమం సర్వేషు భూతేషు తిష్ఠన్తం పరమేశ్వరమ్,
వినశ్యత్స్వవినశ్యన్తం యః పశ్యతి స పశ్యతి. ౨౮

28. (த்வைதம்) அரு—பிரகிருதியைத்தள்ளி யீஸ்வரனைக் கவனிக்கக்கூறி னாய். ஈஶ்வரனை யெவ்வாறு அறியலாம்.

கிரு—பிரம்மமுதல் ஸ்தம்பபர்யந்தம் உள்ள பிராணிகளில் ஈஶ்வரன் சம மாயிருக்கிறான்.

அரு—ஹீனசரீரங்களில் தன் ஶக்தியை யேன் காட்டான்.

கிரு—(ஜார்ஜ்ராஜனுக்குக் கீழ் அதிகாரிகள் அநேகர் இருப்பினும் ஒருவ னுக்கு கொலைசெய்யும் அதிகாரம் உண்டு. மற்றொருவனுக்கு இல்லை. எல்லா ரும் உத்யோகஸ்தரே யல்லவா எனின் அந்தந்த இடத்திற்குத் தகுந்தபடி எனின் தொழிலுக்குத்தக்கபடி அதிகாரத்தைப்பிரயோகிப்பர். அவ்வாறே எனும் பின்தேஹம் சகிக்காததலால் ஸ்வாமி அவ்விடம் பெரியவேலை செய் யான். இருட்டில் படிப்பதற்கு முடியாதெனின் கண்ணின் தவறு என்ன இருக்கிறது.) அவன் இருக்கும் இடத்திற்கு நாசம் உண்டு. அவனுக்கு இல்லை. அவ்வாறு அறிபவனே ஞானியாவன்.

(அத்வைதம்.) (விசிஷ்டாத்வைதம்) அரு—சரீரத்தை கவனிக்கக்கூடா தென்றாய். ஆத்மா எப்படிப்பட்டதோ கூறும்.

(அத்வைதம்) கிரு—எல்லாசரீரங்களிலும் சமமாயிருக்கிறான். (ஒருஆத்மா வே எல்லாவற்றிலும் சமமாயிருக்கிறான்.)

(விசிஷ்டாத்வைதம்)—பிரம்மாதிஸ்தம்பபர்யந்தமுள்ள எல்லாச்சரீரங்க ளை அடையினும் ஆத்மா எல்லாசரீரங்களினும் சமமாயிருக்கிறான்.

(விசிஷ்டாத்வைதம். அத்வைதம்) ஈச்வரன் = எனின் தேஹத்திற்கீஸ்வ ரன். 2-அத். 12-சுலோ, போல நித்யன் இவ்வாறு தெரியவேண்டும். இல்லாவி டின் அஞ்ஞானம்.

𑌸𑌮𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌸 𑌹𑌿𑌨𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌤𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥ ௨௯

ஸமம் பஶ்யந் ஹி ஸர்வத்ர ஸமவஸ்திதமீஶ்வரம்,
ஸ ஹிநஸ்த்யாத்மனாத்மாநம் ததோ யாதி பராம் கதிம். ௨௯

సమం పశ్యన్ హి సర్వత్ర సమవస్థిత మీశ్వరమ్,
స హినస్త్యాత్మనాత్మానం తతో యాతి పరాం గతిమ్. ౨౯

29. அரு—இவ்வாறு சமமாயிருக்கிறான் என்று அறிந்தால் என்னபலம்.

இரு—அறியவேண்டியபடி அறிந்தால் மோக்ஷம்உண்டாம், தன்னால்தான் கெடான். தன்னை இம்சிக்கான், (சங்கரபாஷ்யம், தன்னைத்தான் எவ்வாறு ஹிம்சித்துக்கொள்ளுதல் எனின் தெரியாதவன் ஆத்மயோக்யதையை அறியாமல் பிறப்பவன், மரிப்பவன், பால்யவிருத்தாப்யங்களை யனுபவிப்பவன், சுகதுக்கங்களை அநுபவிப்பவன் என்று எண்ணுதலே ஆத்மாவிற்கு இம்சையாகும். ஞானமயம், ஆனந்தமயம், ஈச்வரனைப்போல இருக்கிறது திவ்யவஸ்து என்று ஆத்மாவை எண்ணவேண்டும்.)

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑍈𑌵 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌤𑌥𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ ௩௦

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணாநி ஸர்வஶ:,
ய: பஶ்யதி ததாத்மாந மகர்தாரம் ஸ பஶ்யதி. ௩௦

ప్రకృత్యైవ చ కర్మాణి క్రియమాణాని సర్వశః,
యః పశ్యతి తథాత్మాన మకర్తారం స పశ్యతి. ౩౦

30. (த்வைதம்) அரு—சமம் என்றாய் அவ்வாறு தோன்றவில்லையே.

இரு—கார்யங்கள் பரமாத்மா செய்யான்.

அரு—வேறு யார் செய்வர்.

இரு—தான் ஸ்வயமாய்ச் செய்யான். பிரகிருதியை அநுசரித்துச் செய்வன்.

(அத்வைதம், விசிஷ்டாத்வைதம்) ஆத்மாவிற்குக் கர்த்திருத்வம் இல்லை. பிரகிருதியால் கர்மங்கள் நடக்கும்.

𑌯𑌦𑌾 𑌭𑍂𑌤𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑌾𑌵𑌮𑍇𑌕𑌸𑍍𑌥𑌮𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌤 𑌏𑌵 𑌚 𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌮𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌤𑌦𑌾 ॥ ௩௧

யதா பூதப்ருதக்பாவ மேகஸ்த மநுபஶ்யதி,
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா. ௩௧

యదా భూతపృథగ్భావ మేకస్థ మనుపశ్యతి,
తత ఏవ చ విస్తారం బ్రహ్మ సమ్పద్యతే తదా. ౩౧

31. (த்வைதம்) அரு—சமமாயிருக்கிறானென்று தெரிந்தால் போதுமா.

கிரு—அவ்வளவுமாத்ரம் தெரிந்தால்போதாது. சிருஷ்டிப்பவன், ரக்ஷிப்பவன் என்றும் அறியவேண்டும். வேறுவேருக இருக்கும் சராசரங்களை அனைத்தும் ஒன்ருகச்சேருமென்று அறிந்துகொள்ளவேண்டும். சிருஷ்டியில் எல்லாம் மீண்டும் பிறக்கும் என்று தெரிந்துகொள்ளவேண்டும். இவ்வாறு அறிந்துகொண்டால் மோக்ஷம் அடையலாம்.

(அத்வைதம்) வஸ்து சமுதாயமெல்லாம் வேருக இருக்கிறதல்லவா. இவைகள் எல்லாம் ஒரேவஸ்துவில் எனின் பரப்பிரம்மத்தில் இருக்கின்றதென்று தெரியவேண்டும். (எல்லாம் பரப்பிரமம் என்று அறிந்தபிறகு அவையெல்லாம் போம்.) அஞ்ஞானத்தில் ஆத்மாவில் எல்லாம் தோற்றும். ஞானம் உண்டானபோது அதிலேயே அவையெல்லாம் லயமாகும். இவ்வாறு அறிந்தால் பரப்பிரம்மமாவன்.

(விசிஷ்டாத்வைதம்)— பிராணிகளின்பேதம் பிரகிருதியில் சேரும். 7-அத். 8-சுலோ.இல், இந்தச்சங்கதி கூறப்பட்டது. எல்லாம் மீண்டும் தோற்றும். எல்லாவற்றிற்கும் காரணம் பிரகிருதி. இவ்வாறு அறிந்தால் பரமாத்மாவுடன் சமானமாயிருக்கும் ஆத்மாவை அடையலாகும்.

𑌅𑌨𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌤𑍍𑌵𑌾 𑌤𑍍𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌯 𑌮𑌵𑍍𑌯𑌯𑌃 |
𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑍋𑌽𑌪𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌨𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 || ௩௨

அநாதித்வா ந்நிர்குணத்வா த்பரமாத்மாய மவ்யய:,
ஶரீரஸ்தோபி கௌந்தேய ந கரோதி நலிப்யதே. ௩௨

అనాదిత్వా న్నిర్గుణత్వా త్పరమాత్మాzయ మవ్యయః,
శరీరస్థోzపి కౌన్తేయ న కరోతి నలిప్యతే. ౩౨

32. (த்வைதம்) அரு—பரமாத்மா சரீரத்தில் இருக்கிருனு.

கிரு—இருக்கிருன்.

அரு—சரீரத்தில் எவ்வளவு கஷ்டப்படுகிருனே.

கிரு—பரமாத்மா சரீரத்திலிருக்கினும் கார்யங்களைச் செய்யான். ஆத்மாவைப்போல் சங்கடப்படான். அவன் அநாதியானவன். (ஆத்மா சரீரசம்பந்தத்தால் ஆதியுள்ளவன்.) அவன் திரிகுணங்கள் இல்லாதவன். அவன் பரமாத்மா. (ஆத்மா பத்தாத்மா) அவன் நாசமில்லாதவன். (சரீரசம்பந்தத்தால் ஆத்மாவிற்கு நாசம் உண்டாம்.)

(அத்வைதம்) அரு—ஆத்மா சரீரத்திலிருக்கிருன். அவ்வாறிருத்தலால் சரீரத்தின் பாதை யில்லையா.

கிரு—இருக்கினும் சம்பந்தப்படான். அநாதி, நிர்க்குணன், பரமாத்மா, விகாரம் இல்லாதவன். அவ்வாருதலால் சரீரத்திலிருக்கினும் பாதையில்லை.

(விசிஷ்டாத்வைதம்)—இந்தமுக்யமான ஆத்மா ஆதி இல்லாதிருத்தலால் நாசமில்லாதது, சத்வரஜஸ்தமோகுணங்கள் இல்லாமையால் சரீரத்திலிருக்கினும் தான் எதையும் செய்யவில்லை. சரீரஸ்வபாவங்கள் ஆத்மாவிற்கு ஒட்டா.

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யா தாகாஶம் நோபலிப்யதே ।
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே ॥

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யா தாகாஶம் நோபலிப்யதே,
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே. ௩௩

యథా సర్వగతం సౌక్ష్మ్యా దాకాశం నోపలిప్యతే,
సర్వత్రావస్థితో దేహే తథాత్మా నోపలిప్యతే. 33

33. (த்வைதம்) அரு—ஒரு பரமாத்மா எல்லா இடத்திலும் எப்படி இருப்பன்.

கிரு—ஆகாசம் இருப்பதுபோலிருந்து தீண்டப்படான். உத்தம, மத்திம, அதம ஸ்தானங்களிலிருப்பினும் சம்பந்தம் இல்லை.

(அத்வைதம்) அரு—ஒரு ஆத்மா எல்லா இடங்களிலிருந்தால் கார்யம் நடக்குமா.

கிரு—ஆகாசம் எங்குமிருந்து குணதோஷங்களைத்தொடாததுபோல ஆக்ரமிக்கப்படுவன்.

(விசிஷ்டாத்வைதம்) அரு—ஆத்மா அணு ஆபாதமஸ்தகம் வரையில் எவ்வாறு தெரிந்துகொள்ளும்.

கிரு—ஆகாசம் நிறைந்திருப்பதுபோல ஆத்மா தேஜ:ப்பிரகாசத்தால் பாதாதிகேசபர்யந்தம் அறிவைப் பொருந்தியிருப்பன்.

யதா ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி: ।
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பாரத ॥ ௩௪

யதா ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்நம் லோக மிமம் ரவி:,
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பாரத. ௩௪

యథా ప్రకాశయ త్యేకః కృత్స్నం లోక మిమం రవిః,
క్షేత్రం క్షేత్రీ తథా కృత్స్నం ప్రకాశయతి భారత. 34

34. அரு—எனக்கு இந்த விஷயத்தில் திருப்திஉண்டாகவில்லை. ஒருவன் எல்லா இடத்திலுமிருந்து ஆஜ்ஞாபித்தல் சாத்யமாகுமா.

(த்வைதம்) கிரு—சூர்யன் லோகமனைத்தையும் பிரகாசிக்கச் செய்வதுபோல ஆத்மா எல்லா க்ஷேத்ரங்களையும் பிரகாசிக்கச்செய்வன்.

(அத்வைதம்) சூர்யனைப்போலிருக்கிறது.

(விசிஷ்டாத்வைதம்) ஒரு சூர்யனைப்போல தேஹமுழுதும் பிரகாசிக்கும். இந்தச்சுலோகத்தில் கிருஷ்ணன் பாரத என்று விளித்ததால் நீ ஒரு இடத்தில் இருக்கினும், உன் கீர்த்தி எங்கும் வியாபிக்கவில்லையா. அவ்வாறு என்று கருத்து.

க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரேவ மந்தரம் ஜ்ஞானசக்ஷுஷா ।
பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் ॥

க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ ரேவ மந்தரம் ஜ்ஞாநசக்ஷுஷா,
பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விது ர்யாந்தி தே பரம். ௩௫

క్షేత్రక్షేత్రజ్ఞయో రేవ మన్తరం జ్ఞానచక్షుషా,
భూతప్రకృతిమోక్షం చ యే విదు ర్యాన్తి తే పరమ్. ౩౫

35. அரு—இந்தவிஷயத்தை நான் ஏன் கிரஹிக்கவேண்டும்.
கிரு—க்ஷேத்ர, க்ஷேத்ரஞ்ஞ, பிரகிருதி, புருஷ, ஞான, ஞேய, ஞான சாதனங்களைத் தெரிந்துகொண்டாலும் ஞானதிருஷ்டியால் பார்த்தாலும் பிராணிகள் பிரகிருதியால் விடப்படுவர். அமானித்வாதி, 20 சாதனங்கள் சம்பாதிக்கவேண்டும். இந்தப் பதிமூன்றும் அத்யாயம். கேட்டதற்கதுவேபலம் யார் அறிந்து பிரயத்தனப் படுவார்களோ அவர்கள் பரமபதத்தை அடைவர் இந்த விஷயத்தை மனதில் வையாதவர்கள் சம்சாரசக்ரத்தில் பட்டு பரிப்ரமித்திருப்பர்.

இது ஸ்ரீபகவத்கீதை உபநிஷத் பிரம்மவித்தை யோகசாஸ்திரத்தில்
கிருஷ்ணார்ச்சுநசம்வாதத்தில் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞவிபாகயோகமெனும்
பெயருள்ள பதிமூன்றாவது அத்யாயம் முற்றுப்பெற்றது.

# குணத்ரயவிபாகயோகம்.

## பதினாலாவது அத்யாயம்.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

𑌪𑌰𑌂 𑌭𑍂𑌯𑌃 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍁𑌨𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑌰𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌿𑌤𑍋 𑌗𑌤𑌾𑌃 ॥ ௧

பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநாநாம் ஜ்ஞாந முத்தமம்,
யத்ஜ்ஞாத்வா முநய ஸ்ஸர்வே பராம் ஸித்தி மிதோ கத:. ௧

పరం భూయః ప్రవక్ష్యామి జ్ఞానానాం జ్ఞాన ముత్తమమ్,
యద్జ్ఞాత్వా మునయ స్సర్వే పరాం సిద్ధి మితో గతాః. ౧

ஸ்ரீபகவான் கூறுதல்.

1. அரு—13. அத் 22. சுலோ. இல், பிரகிருதி ஒன்றே ஆதலால் ஜன்ம பேதங்கள் ஏன் உண்டாகின்றனவென்று கேட்டேன் குணபேதங்களால் யோனிபேதங்கள் உண்டாம் என்று சொல்லி யிருந்தாய். அந்தக் குணபேதங்கள் எவை ? அவற்றின்பெயர் ஏன்ன. அவற்றின் கார்யம் எப்படிப்பட்டவை. அவற்றிற்கு அப்பெயர் ஏன் உண்டாயிற்று. நல்ல கெட்ட ஜன்மங்கள் உண்டாதற்குக் காரணமென்ன ? இதுவல்லாமலும், 27- சுலோ. சராசர பிர

பஞ்சத்திலிருக்கும் பொருள்களனைத்தும் க்ஷேத்ரக்ஷேத்ரஞ்ஞ சம்யோகத்தால் உண்டாம் என்றாய். க்ஷேத்ரக்ஷேத்ரஞ்ஞ சம்யோகமென்றால் என்ன? அவற்றின் சேர்க்கைச்சொந்தமாகவே உண்டாமா .பகவான் அவைகளை யேற்படுத்துவரா. இந்த இரண்டு சந்தேஹங்களைப் போக்குக.

கிரு—நான் இப்போது சொல்லப்போகும் சங்கதி 13.அத். இனும் வேறானது, தெரியவேண்டியவைகளில் பெரிதானது. அதைமீண்டும் கூறுகிறேன். கூறப்போம்சங்கதி சாதாரணமானதன்று. ருஷ்யாதிகள் அநேகர் அதனைஅறிந்து ஞானிகளாய் சம்சாரத்தை விட்டு மோக்ஷத்தை அடைந்திருக்கின்றனர். கூறப்போகும் விஷயம் மோக்ஷாநுகூலமானது.

𑌇𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌮𑌮 𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 ।
𑌸𑌰𑍍𑌗𑍇𑌽𑌪𑌿 𑌨𑍋𑌪𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌲𑌯𑍇 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌨𑍍𑌤𑌿 𑌚 ॥ ௨

இதம் ஜ்ஞாந முபாஸ்ரித்ய மமஸா தர்ம்ய மாகதா:,
ஸர்கேபி நோபஜாயந்தே ப்ரளயேந வ்யதந்திச. ௨

ఇదం జ్ఞాన ముపాశ్రిత్య మమ సాధర్మ్య మాగతాః,
సర్గేపి నోపజాయన్తే ప్రళయే న వ్యథన్తిచ. ౨

2\. அரு—மோக்ஷத்தை அறிந்து அதனை யடையின் என்னலாபம்.

கிரு—இதை அறிந்து என்னை அடைவர்.

(த்வைதம்)சாயுஜ்யம், ஸாரூப்யம், ஸாலோக்யம், ஸாமீப்யம் எனும் பேதங்களை அடைவர்.

(அத்வைதம்) ஐக்யம் உண்டாம்.

(விசிஷ்டாத்வைதம்)ஞானனந்தங்களில் என் சமானர்த்தத்தைஅடைவர்.

அரு—அதனால் என்ன பிரயோஜனம்.

கிரு—மீண்டும் பிறக்கத் தேவையில்லை, பிரளயத்தில் நாசமில்லை. 8-அத். 18-19-சுலோ. ஜன்ம நாசங்களில்லை. இவ்வாறு ஜனனமரணங்களில்லாதிருத்தலே சுகமென்று எண்ணு. (இரண்டு சுலோகங்களால் புகழப்படுதலால் இந்த அத்யாயம் முக்யமானதாக இருக்கிறது.)

𑌮𑌮 𑌯𑍋𑌨𑌿𑌰𑍍𑌮𑌹𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌗𑌰𑍍𑌭𑌂 𑌦𑌧𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ।
𑌸𑌂𑌭𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥ ௩
𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑌃 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌾𑌃 ।
𑌤𑌾𑌸𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌹𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌰𑌹𑌂 𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾 ॥ ௪

மம யோநி ர்மஹத்ப்ரஹ்ம தஸ்மின் கர்பம் ததாம்யஹம்,
ஸம்பவ ஸ்ஸர்வபூதானாம் ததோ பவதி பாரத. ௩
ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்தய ஸ்ஸம்பவந்தி யா:,
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோநி ரஹம் பீஜப்ரத: பிதா. ௪

మమ యోని ర్మహద్బ్రహ్మ తస్మిన్ గర్భం దధామ్యహమ్,
సమ్భవ స్సర్వభూతానాం తతో భవతి భారత. 3
సర్వయోనిషు కౌన్తేయ మూర్తయ స్సమ్భవన్తి యాః,
తాసాం బ్రహ్మ మహద్యోని రహం బీజప్రదః పితా. ౪

3, 4. அரு—அவ்வாறுயின் கூறு. இது சூசிகடாஹ நியாயம்.

(இரண்டாவதாகும் சின்ன கேள்விக்கு முதலில் சமாதானங்கூறி முதலாவதாகும் பெரிய கேள்விக்குப் பிறகு சமாதானங் கூறப்படுகிறது.)

(த்வைதம்) சிறியதைப் பெரிதாக்கல் விருத்திக்கு ஹேது. அந்தப் பிரகிருதி என்தேவி. பார்யையிடத்தில் கர்ப்பாதானம் செய்கின்றேன். ஆதலால் (லக்ஷ்மீ நாராயணர்களின் பரஸ்பர ஸம்யோகத்தால்) பிரமன்முதலாக உள்ள பிராணிகள் பிறக்கின்றனர். எல்லாசரீரங்களுக்கும் என்பார்யையான லக்ஷ்மி காரணம். நான் பீஜப்ரதன். தந்தை.

(அத்வைதம், விசிஷ்டாத்வைதம்) ஜகத்காரணமான பிரகிருதி என்னது. ஜடப்பிரகிருதியில் ஜீவப்பிரகிருதியைச் சேர்க்கிறேன். அது என் இச்சையால் நடக்கும். ஜடாஜடங்களைச் சேர்த்தலால் நால்வகைப்பட்ட யோனிகளுண்டாகும். இந்தச் சிருஷ்டியில் ஒவ்வொன்றிலும் பேதங்களுக்கு (எனின் ஒவ்வொரு சரீரங்களுக்கு) உத்பத்தி என் சங்கல்பத்தால் உண்டாம்.

அரு—இது மனுஷ்யர்களின் சங்கதியா தேவர்களின் சங்கதியா.

கிரு—எல்லாருக்கும் அந்தப்பிரகிருதியே காரணம். கர்ப்பாதானம் செய்யும் தந்தை நான். (சேதனர்களின் புண்யபாபங்களுக்குத் தக்கபடி அவர்களை நானு யோனிகளில் சேர்க்கின்றவன்.)

ஸத்த்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா: |
நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹிந மவ்யயம் || ௫

ஸத்த்வம் ரஜஸ்தம இதி குண: ப்ரக்ருதிஸம்பவா:,
நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹிந மவ்யயம். ௫

సత్త్వం రజ స్తమ ఇతి గుణాః ప్రకృతిసమ్భవాః,
నిబధ్నన్తి మహాబాహో దేహే దేహిన మవ్యయమ్. ౫

5. கிரு—ஸத்வ ரஜஸ்தமோகுணங்களென்று பிரகிருதியில் மூன்றுகுணங்கள் பிறக்கும். பூர்வ கர்மானுசாரமாய் ஜீவன் சரீரத்தில் சம்பந்தப்படுவேன். சரீரம் வருதற்குமுன் நிர்விகாரனுயிருப்பன். இப்படிப்பட்டவனுடன் பிரகிருதி சேர்ந்தவுடன் கட்டி பந்திக்கும்.

அரு—அப்படிச் சங்கடப்படுதற்கு அது அவ்வளவு சக்தியுள்ளதா.

கிரு—மஹாபாஹோ, என்தாதை, ஆசார்யர்களென்று நீயும்கூட அந்தப் பிரகிருதியால் கட்டப்பட்டு அல்லாடுகின்றுயல்லவா.

அரு—ஆம்.
கிரு—குணங்களெனும் கயிறுகளால் பிரகிருதி கட்டிவிடும்.

𑌤𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌮𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌚𑌾𑌨𑌘 ॥ ௬

தத்ர ஸத்த்வம் நிர்மலத்வா த்ப்ரகாஶக மநாமயம்,
ஸுகஸங்கேந பத்நாதி ஜ்ஞாநஸங்கேந சாநக. ௬

తత్ర సత్త్వం నిర్మలత్వా త్ప్రకాశక మనామయమ్,
సుఖసంగేన బధ్నాతి జ్ఞానసంగేన చానఘ. ౬

6. அரு—குணங்களின் கார்யங்கள் எவை.

கிரு—சத்வம் நிர்மலத்வம், அதனால் ஞானப்ரதம், தெரியாததைத் தெரிவிக்கும், துக்கத்தைப்போக்கும், ஆரோக்யத்தைக் கொடுக்கும், சுகத்தைக்கொடுக்கும் இவ்வாறு செய்து . பந்திக்கும். (ஞானம் சுகம் உண்டாதலால் புருஷனுக்குப் பிரகிருதி சம்பந்தம் வேண்டுமென்று தோற்றும்.)

அரு—பயமாகின்றது.
கிரு—அநக = நிர்த்தோஷனே உனக்கொன்றும் பயமில்லை.

𑌰𑌜𑍋 𑌰𑌾𑌗𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌸𑌙𑍍𑌗𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍 ॥ ௭

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம்,
தந்நிபத்நாதி கௌந்தேய கர்மஸங்கேந தேஹிநம். ௭

రజో రాగాత్మకం విద్ధి తృష్ణాసంగసముద్భవమ్,
తన్నిబధ్నాతి కౌన్తేయ కర్మసంగేన దేహినమ్. ౭

7. ரஜோகுணம் த்ருஷ்ணாசங்கங்களை யுண்டாக்கும். திருஷ்ண எனின் இல்லாதது உண்டாகவேண்டும் எனும் ஆசை, சங்கமெனின் இருப்பது பத்ரமாயிருக்கவேண்டுமெனும் ஆசை. ரஜோகுணம் இந்த இரண்டையும் தரும். ரஜோகுணஸ்வரூபமே ராகாத்மகம், ரங்கு போடுதற்குத் தகுந்ததென்பது சங்கரபாஷ்யம். (ரங்கு வெள்ளைத்துணியைச் செவப்பாக மாற்றுவதுபோல ரஜோகுணம் சத்வகுணத்தைத் திருப்பிவிடும்.) இவ்வாறு திருஷ்ணாசங்கங்கள், எனின் இருப்பதைக்காத்தல் இல்லாததைச் சம்பாதித்தல் எனும் ஆசை உண்டாகவே புருஷன் அதற்குத் தக்கக்கார்யங்களைச் சதா செய்துகொண்டிருப்பன். இந்தக்குணம் இவ்வாறு பந்திக்கிறது.

𑌤𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑍋𑌹𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥ ௮

